# கம்பர் காட்டும் அனுமன்




நூலாக்கம்

முனைவர் கி. சுப்பிரமணியன்

(ஐ கே எஸ்)

# "நாமமும் அனுமன் என்பேன்"

## கம்பர் காட்டும் அனுமன்

நூலாக்கம்

முனைவர்

**கி. சுப்பிரமணியன்**

(ஐகேஎஸ்)

**ஆதிரை பதிப்பகம்**

**கோவை - 45**

# நூல் விபரம்


| | | |
|---|---|---|
| வெளியீட்டு எண் | : | 12 |
| பதிப்புரிமை | : | ஆசிரியர்க்கு |
| நூல் | : | நாமமும் அனுமன் என்பேன்<br>(கம்பர் காட்டும் அனுமன்) |
| நூலாக்கம் | : | முனைவர் கி. சுப்பிரமணியன்<br>(ஐகேஎஸ்) |
| முதல் பதிப்பு | : | மார்ச்சு 2009 |
| படிகள் | : | 1000 |
| பக்கங்கள் | : | 256 + 12 |
| தாள் | : | 8 கி.கி. மேப்லித்தோ |
| அட்டை | : | 300 ஜி.எஸ்.எம். ஆர்ட் போர்டு |
| விலை | : | ரூ. 100/- |
| வெளியீடு | : | **ஆதிரை பதிப்பகம்,**<br>17, பழனியப்பா நகர்,<br>இராமநாதபுரம்,<br>கோவை - 641 045<br>தொலைபேசி : 0422-2314319 |
| அச்சிட்டோர் | | **சௌமி அச்சகம்**<br>69டி, சிறுவாணி முதன்மைச் சாலை,<br>பேரூர், கோவை - 641 010.<br>அலைபேசி : 98422 52779 |

*செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே*
*நெடியானே வேங்கடவா நின்கோயில் வாசல்*
*அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்*
*படியாக் கிடந்து உன் பவளவாய் காண்பேனே*

*- குலசேகர ஆழ்வார்*



சமய நூல்கள் எழுதி வெளியிடும் நூலாசிரியர்களுக்கு உதவி செய்யும் திருமலை. திருப்பதி தேவஸ்தானத் திட்டத்தின் நிதியுதவி பெற்று இந்நூல் வெளியாகிறது.

# பொருளடக்கம்

# முன்னுரை

தாள்படாக் கமலம் அன்ன தடங்கணான் தம்பிக்கு அம்மா
கீழ்ப்படா நின்ற நீங்கிக் கிளர்படாதாகி என்றும்
நாள்படா மறைகளாலும் நவைபடா ஞானத்தாலும்
கோள்படாப் பதமே ஐய! குரக்குருக் கொண்டது என்றான்.

காம்பை விட்டு நீங்காமல் இன்னும் செடியிலேயே அழகு குறையாமல் இருக்கும் செந்தாமரை மலர் போன்ற பெரிய கண்களை உடையவன் இராமன். அவன் தன்னுடைய தம்பியாகிய இலக்குவனிடம் சொன்னான்;

"ஐயனே! இப்போது நம்முன் நிற்கும் உருவம் கண்ணிற்குக் குரங்குபோலத் தோன்றுகிறது. ஆனால் அப்படிச்சொல்ல முடியாது. சிறுமைகள் எல்லாவற்றையும் நீக்கிவிட்டு, தன் பெருமையில் சிறிதும் குறைவில்லாத ஒளியையும் உடையதாகி, கால எல்லைகளுக்கு உட்பட்டு அழியாமல் என்றுமே வாழும் வேதங்களாலும், குற்றம் சிறிதும் இல்லாத ஞானத்தாலும் அறிவதற்கும் அரியதான ஒரு தத்துவ மேன்மைப் பொருள்தான் இப்படிக் குரங்கின் உருவத்தில் நம்முன் வந்துள்ளது."

அனுமனை முதன்முதலில் பார்த்தபோது மனிதனாக வந்த தெய்வ இராமன் கூறிய சொற்கள் இவை. இலக்குவனுக்குக் கூறியவை தாம். ஆனால் இராமாயணம் என்னும் அழியாத பெருங்காவியத்தைப் படிக்கும் எல்லாருக்கும் இந்தச் சொற்கள் அனுமன் என்ற மேன்மைப் பாத்திரத்தை அறிமுகப்படுத்துகின்றன. பெருமை உடையவன், காலத்துக்குக் கட்டுப்படாத வேதமோ மேலான ஞானமோ அறிய முடியாத தத்துவப் பொருள் என்று அறத்தின் மூர்த்தியே போற்றுகிறான் என்றால், ஆஞ்சநேயன் குரங்கு வடிவில் வந்த மேலானதொரு பொருளாகத் தான் இருக்க வேண்டும். அந்த அனுமனை மையமாக வைத்து இந்த நூல் வருகிறது.

என்றுமுள காப்பியத்தை இயம்பி இசை கொண்ட கம்பர் படைத்தபேரிலக்கியத்தில் முதன்மைப் பாத்திரங்கள், துணைப் பாத்திரங்கள், ஊன்று பாத்திரங்கள், ஒட்டுப் பாத்திரங்கள் என்பன போல எத்தனையோ பாத்திரங்கள். தெய்வமும் வருகிறது; மாந்தனும் வருகிறான். அமரனும் வருகிறான்; அரக்கனும் வருகிறான்; வேந்தனும் வேடனும் தோன்றுகிறார்கள்; ஆடவரும் பெண்டிரும் காட்சி தருகின்றனர்; விலங்கும் பறவையும் விளங்கத் தோன்றுகின்றன. இப்படி ஒரு பெருங்காப்பியத்தை இந்தியத் திருநாட்டில் அல்லாது வேறு எங்கு காணமுடியும்? பல்லாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக இமயம் முதல் குமரி வரை வேரூன்றி நிற்கும் ஒப்பற்ற இலக்கியத்தில் கூறப்படாத நீதிதான் என்ன? கம்பன் என்றொரு மானிடன் வாழ்ந்து அந்தக் கதையைச் செய்ய தமிழில் பாடி ஏற்றம் கொண்டான்; தமிழுக்கும் ஏற்றம் கொடுத்தான்.

இப்படி எல்லாரும் தெரிந்த ஒரு கதையின் பகுதியை மீண்டும் எழுதுவானேன் ? பரவலாகத் தெரிந்த இதிகாசம், ஊரெல்லாம் பெருமாள் கோயில்கள், ஆஞ்சநேயர் சந்நிதிகள், நாளும் வழிபடும் மக்கள் கூட்டம். பரவலாக அறியப்பட்ட ஒன்றை எதற்காக மீண்டும் எழுதுவது? தக்க கேள்விதான். இதற்குத் தக்க விடையும் உண்டு. சுந்தர காண்டத்தைத் தமிழில் எழுதியவர்களும் அனுமனின் வரலாற்றைச் சமஸ்கிருதத்திலிருந்து மொழி பெயர்த்தவர்களும் பெரும்பணி செய்தவர்கள் . ஐயமில்லை. ஆனாலும் கம்பர் வழி நின்று குறைக்காமல் கூட்டாமல் அனுமன் கதையைச் சொல்லவேண்டும் என்று எண்ணம் தோன்றியது. அதன் அடிப்படையில் இந்த நூல் பிறந்தது.

கம்பரில் வரும் விராடன், கருடாழ்வார் துதிகளை மையமாக வைத்து அந்த நிகழ்வுகளின் சூழலைச் சொல்லி, துதிகளின் உள்பொருளைப் பொதிந்து இன்றைய வாழ்வுக்கு அவை பயன்படக்கூடிய வகையைச் சுட்டி **“மானுடம் வென்றது”**, **“கருடாழ்வார் துதி”** என்ற இரண்டு சிறிய நூல்களை அடியேன் எழுதும் பேறு கிடைத்தது. சற்று தமிழ்படிக்கத் தெரிந்த எளிய மக்களையும் அவை சென்று அடைந்தன; பாராட்டும் பெற்றன. கம்பரின் இந்தப் பின்புலத்தில் அனுமன் கதையையும் சொல்ல வேண்டும் என்ற ஆவல் பெருகிற்று. அதன் விளைவே இந்நூல். எல்லாருக்கும் சேர வேண்டும் என்ற ஒரே நோக்கத்தைக் கொண்ட நூல்.

இந்த நூலின் தலைப்பே அனுமன் தந்தது தான். "யான் காற்றின் வேந்தற்கு அஞ்சனை வயிற்றில் வந்தேன் **நாமமும் அனுமன் என்பேன்**" என்று இராமனிடம் மிகப்பணிவாகத் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டான். (IV: 2 :15) அப்போது உருவான சொற்களே இவை.

கிட்கிந்தா காண்டத்தில் அனுமன் அறிமுகமானதிலிருந்து திருமுடி சூட்டும் படலத்தில் விடைபெற்றுப் போகின்ற வரை, கம்பர் அனுமனைப் பற்றிச் சொல்கின்ற கருத்துக்களைத் திரட்டி உரைநடையில் இந்நூல் எழுதப்பட்டுள்ளது. ஆங்காங்கும் இடையிடையேயும் உயிர்ப்பாடல்கள் மேற்கோள்களாகக் காட்டப்பட்டுள்ளன. இவற்றில் உள்ள செய்திகள் எல்லாம் கம்பருடையவை. ஒன்றுகூட என்னுடையதன்று. உரைநடையில் கம்பர் பேசுகிறார். அந்த மாற்றம் அடியேன் செய்தது, அவ்வளவே.

அனுமன் கற்றுத் தெளிந்த ஞானி. படிப்போர் கண்களில் நீரை வரவழைக்கும் வண்ணம் இராமபிரானையும் சீதாபிராட்டியையும் வழிபடும் பக்தன். அறிமுகமானதிலிருந்து இராமனின் தொண்டனாக இருப்பது தவிர வேறு எதையும் அறியாத தொழும்பு பூண்டவன். ஞானம் - பக்தி - தொண்டு மூன்றும் ஒன்றாகத் திரண்டு ஓருருவமாக- அனுமனாக - மலர்ந்த தெய்வப் பேரழகைக் கம்பர், கைவண்ணத்தால் மெருகூட்டியுள்ளார். இந்த மூன்று பண்புகளும் காவியத்தில் எங்கெங்கு எப்படி வெளிப்பட்டுள்ளன என்பதைப் புலப்படுத்தும் வண்ணம் நூல் எழுதப்பட்டுள்ளது.

காவியத்தை முதலிலிருந்து தொடர்ந்து படித்துக் கொண்டே போகும்போது இடையறாமல் இழையாக ஊடுருவி வரும் ஒரு மையக் கருத்து தானே மிளிரும். அனுமனின் வாழ்வில் பக்தியுடனும் ஞானத்துடனும் இணைந்து தொண்டு நெறி மேலோங்கியுள்ளமையே அக்கருத்து. அப்படிப் பணி செய்வதன் மூலம் உயர்நிலை அடைந்து இறையருள் பெற முடியும் என்பதும் தெளிவாகும். இந்த நூலைப் படிக்கும் சிலருடைய நெஞ்சிலாவது அப்படி ஒரு நல்விளைவு ஏற்படுமானால், நூலின் பண்பும் பயனுமாக அதுவே அமையும். அதற்குத் திருவருள் கூட்ட வேண்டும் என்று இராமபிரான் திருவடிகளை வணங்குகின்றேன்.

திருமலை திருப்பதி தேவஸ்தானம் இந்த நூல் வெளியீட்டுக்கு நிதியுதவி நல்கியிருக்கிறது. சமயஞ் சார்ந்த நல்ல நூல்கள் வெளிவர வேண்டும், பரவ வேண்டும் என்னும் ஒரே நோக்கில் தேவஸ்தானம் மொழி, மாநிலம், இனம் என்ற எல்லைகள் பாராது செய்துவரும் கொடைப்பணி பெரிது; சாலப் பெரிது. வேங்கடப்பெருமானின் மலரடிகளைக் கண்ணீரால் தொட்டு நன்றி தெரிவிக்கிறேன். அனுமனின் நூல் பெருமாளுக்கே சொந்தம் அல்லவா? திருமலை திருப்பதி தேவஸ்தான நிர்வாக அலுவலர், தலைமைப் பதிப்பாசிரியர், துணைப் பதிப்பாசிரியர் அனைவரும் என் நன்றிக்கு உரியவர்கள். நெஞ்சார்ந்த நன்றி.

தமிழகத்தில் உள்ள மிகச்சிறந்த இராமாயண அறிஞர்களில் பேராசிரியர் அ.அ.மணவாளன் அவர்கள் தலையாயவர் என்றல் சாலும். தமிழ் கற்றவர்; ஆங்கிலத்தில் துறைபோகியவர்; வடமொழி வித்தகர்; சென்னைப் பல்கலைக்கழகத்து முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர்; நூலைப் படித்து ஒரு மகிழ்வுரை தந்துள்ளார். அவருக்கு;

நூலை அழகு பொலிய அச்சிட்டுள்ள பேரூர் சௌமி அச்சக உரிமையாளர் திரு. தே. திருஞானசம்பந்தம் பாராட்டுக்குரியவர். அவருக்கு ;

எல்லார்க்கும் தெரிந்த கதையை எழுதியாயிற்று. ஆஞ்சநேயன் பற்றி எழுதவேண்டும் என உள்ளே இருந்த உந்தல் பிண்டமாய்த் திரண்டு இப்பொழுது படிப்போர் கையில் உள்ளது. இதன் வன்மை மென்மைகளை அவர்களே தெளிவாக அறிய முடியும். ஆதலால் படிப்போருக்கும்

நெஞ்சார்ந்த நன்றி.

என்றும் இறைபணியில்

***கி.சுப்பிரமணியன் (ஐ.கே.எஸ்)***

கோவை
*03.03.2009*

## மகிழ்வுரை

முனைவர் அ.அ.மணவாளன்
மேனாள் தமிழ்த்துறைத் தலைவர்
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை.

தொன்மங்கள், புராணங்கள், காப்பியங்கள் இவை இயற்கை நிகழ்வுகளோடு இயற்கை இறந்தவற்றையும் உள்ளடக்கியனவாகவே இருக்கும். அவற்றின் வடிவம் அதுதான். சில கூர்த்த ஆய்வாளர்கள் இத்தகைய நூல்களை வரம்புகடந்து எள்ளி நகையாடியும், ஏளனப்படுத்தியும் எழுதிப் பேசித் தங்களைத் தாங்களே தாழ்த்திக் கொள்வார்கள்.இந்தியாவில், தமிழகத்தில் மட்டுமல்லாது உலகெங்கும் இப்படி "அறிவார்ந்த" ஆராய்ச்சி நடப்பதும் இயல்புதான் . ஆனால் காவியங்களோ ஒரு பொழுதும் தம் நிலையிலிருந்து தாழ்வதில்லை.

சென்ற நூற்றாண்டில் இராமாயணம் அத்தகைய ஒரு தூற்றுதலுக்கு இடமானது. ஆனால் எதிர்நிலையில் , இந்தத் தூற்றுதலே கம்பராமாயணம் படிப்போரின் எண்ணிக்கையைக் கூட்டிற்று. கம்பனின் காவியம் குறித்த இந்த எழுச்சியும் உற்சாகமும் பலப்பல இலக்கியப் படைப்புகள் தோன்றக் காரணமாயின என்பதும் இலக்கிய வரலாறு ஆகும். இந்த எழுச்சியின் வரிசையில் தோன்றிய ஆய்வறிஞர்களுள் கோவையைச் சேர்ந்த டாக்டர். கி. சுப்பிரமணியனும் ஒருவர். கம்பராமாயணப் பாத்திரங்களைத் தனித்தனியாக ஆய்ந்து அவற்றின் சிறப்புகளை விளக்கும் முகமாக இதுவரை கருடாழ்வார் துதி , விராடன் துதி ஆகிய சிறந்த நூல்களைப் படைத்துள்ளார். இவ்வரிசையில் தற்போது **நாமமும் அனுமன் என்பேன்** என்னும் அரியதோர் இனிய ஆய்வு நூலைத் தமிழிலக்கிய உலகிற்கு அளித்துள்ளார்.

"வணங்குவோம் , வாழ்வோம்" என்னும் தலைப்பில் தொடங்கி, "நிறைவாக" என்னும் 27ஆவது தலைப்பில் நிறைவடையும் இந்நூல் வெற்றெனத் தொடுக்காமலும் மற்றொன்று விரிக்காமலும் அனுமனின் பண்பு நலன்களைக் கம்பன் வழிநின்று இனிதே விளக்குகின்றது.

"யார் இந்த அனுமன்?" என்னும் தலைப்பு கம்பனின் கருத்தைச் சாம்பவான் வழிநின்று பதினொரு பாடல்கள் கூறும் அனுமனின் பண்பு நலன்களை எடுத்துக் கூறுகிறது (ப.13)

அனுமனின் படைவீரத்தை வீடணன் வாயிலாக வெளிப்படுத்தும் கம்பனின் கலைத்திறத்தை ஆசிரியர் கீழ்வருமாறு விளக்குகிறார்.

> புகழ் பெற்ற வீரனே! கரன் உன் கையால் இறந்ததோ, வாலி உன்னால் கொல்லப்பட்டதோ எனக்குப் பெரிதாகத் தோன்றவில்லை. அவற்றைக் கேள்விப்பட்டு நான் இங்கு வரவும் இல்லை. ஆனால், இலங்கை எரிந்ததையும் அரக்கர் அழிந்ததையும் கண்டேன் . அதற்குக் காரணமான அனுமனின் தலைவனை அடைக்கலமாகப் புகுவதே சரி என்று கருதி வந்தேன் (ப.189).

இராமனின் முடிசூட்டு விழாவைப் பாடும் கம்பசித்திரம், இராமன் வீற்றிருக்கப் போகும் சிம்மாசனத்தைத் தாங்கி நிற்பவன் அனுமன் என்பதையும் பரதன் உட்படப் பிறரெல்லாம் வெறும் துணைவினையாளர்களாக உள்ளன, என்பதையும் கீழ்வருமாறு காட்டுகிறது.

> **அரியணை அனுமன் தாங்க** அங்கதன் உடைவாள் பற்றப்
> பரதன்வெண் குடைகவிக்க இருவரும் கவரி வீச
> விரைசெறி கமலத் தாள்சேர் வெண்ணெய்மன் சடையன் தங்கள்
> மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி
> (ப.250)

முடிசூட்டு விழாவின் முடிவில் தன் அன்பர்கள் எல்லோர்க்கும் அவரவர்க்கு ஏற்றாங்கு பதவிகளையும் பரிசுகளையும் வழங்கி மகிழ்வித்த இராமன்,

> மாருதி தன்னை ஐயன் மகிழ்ந்தினி தருளின் நோக்கி
> யார் உதவிடுதற் கொத்தார் நீயலால் அன்றுசெய்த
> பேருதவிக்கு யான்செய் செயல் பிறிதில்லை.
> போருத வியதிண் தோளாய் பொருந்துறப் புல்லுகென்றான்

எனப் புகன்றான். அதைக்கேட்ட அனுமன் நாணினன் என்பான் கம்பன். யாரும் அடைய முடியாத தெய்வத் திருமேனியைத் தழுவும் பாக்கியத்தையும் தன்னருகில் வீற்றிருந்த பேரரசி சீதாப்பிராட்டி தன் முத்துமாலையை அனுமனுக்களித்த பெருமையையும் பெருமான் அனுமனுக்கு அருளினான். அது அவன் செய்த தவம் என்று அனுமனின் அடையலாகாப் பெருமையை இந்நூலின் ஆசிரியர் மனமுருக விளக்கி நிறைவாகதத் தம் திருப்பணியை வளர்க்கிறார்,

இராமனின் பெயர் உள்ளளவும் அனுமனின் புகழ் சிறக்கும், இவ்விரண்டும் வளர வளர ஆசிரியர் சுப்பிரமணியனின் தொண்டு சிறக்கும். சிறக்க, நச்சுவார் முன் நிற்கும் நாரணன் அருள்வானாக .

அன்பன்

*12.02.2009* **அ.அ.மணவாளன்**

வையம் நீ வானு நீ மற்றுநீ மலரின்மேல்
ஐயன் நீ ஆழிநீ ஆழிவாழ் அமலன் நீ
செய்ய தீவினைதெறும் தேவுநீ நாயினேன்
உய்ய வந்து உதவினாய் உலகம்முந்து உதவினாய்

## அனுமன்

அஞ்சிலே ஒன்று பெற்றான் அஞ்சிலே ஒன்றைத் தாவி
அஞ்சிலே ஒன்று ஆறாக ஆருயிர்க்காக ஏகி
அஞ்சிலே ஒன்று பெற்ற அணங்கைக் கண்டு அயலார் ஊரில்
அஞ்சிலே ஒன்றை வைத்தான் அவன் நம்மை அளித்துக்
காபபான.

## 1. வணங்குவோம்; வாழ்வோம்

உலகமும் உலகத்தில் உள்ள பொருள்களும் - உயிரும் உயிரல்லாதனவும் - ஏதோ ஒரு மூலப் பொருளின் வடிவமும் குணமும் அமையப் பெற்ற சேர்க்கை என்று நம்முடைய சான்றோர்கள் தங்கள் மெய்யறிவால் உணர்ந்து வெளிப்படுத்தினர். மூலப்பொருள்கள் ஐந்து ஒன்றுடன் ஒன்று கலந்து திரிந்து மாறுபட்டு இந்தத் தோற்றத்தை உண்டாக்குகின்றன எனவும் அவர்கள் உணர்ந்தார்கள். ஒரு மூலப் பொருள் - எல்லையற்ற பேரருளும் ஆற்றலும் உடைய - இந்த ஐந்து பொருள்களில் வெளிப்பட்டு இந்தத் தோற்றத்தை - உலகையும் உலகப்பொருள்களையும் - உண்டாக்குகிறது. அந்த ஐந்து - பஞ்சபூதங்கள் எனச் சொல்லப்படும் நிலம், நீர், நெருப்பு, காற்று, வான்வெளி ஆகும்.

"மண் திணிந்த நிலனும்
நிலன் ஏந்திய விசும்பும்
விசும்பு தைவரு வளியும்
வளித் தலைஇய தீயும்
தீமுரணிய நீரும் என்றாங்கு
ஐம்பெரும் பூதத்து இயற்கை போல" புறம் : 2

என்ற சங்கப் பாடல் தமிழனின் இந்த மெய்யுணர்வுக் கோட்பாட்டைத் தெளிவுபடுத்தும்.

மண்ணால் திணிக்கப்பட்ட நிலம் ; நிலத்தை ஏந்தி இருக்கின்ற வானம் ; வானத்தைத் தடவி வீசும் காற்று ; காற்றில் அரும்பிப் பெரிதாய் ஒலியுடன் எரியும் தீ; தீக்கு மாறுபட்டு அதை அணைக்கும் நீர் - இவையே ஐம்பெரும் பூதங்கள் என இந்தப் புறப்பாட்டு அழகாக வரிசைப்படுத்துகிறது.

மானுடவாழ்வில் இந்த மூலப்பொருள்கள் எல்லையற்ற வலிமையுடையனவாக அமைந்து, வாழும் போக்கையே பலமுறை மாற்றிவிடுகின்றன. உயர்ந்து நிவந்து நிற்கும் மலைகள், ஓடிப் பாய்ந்து வரும் அருவிகள், வளமிக்க செறிவான காடுகள், நீலத் திரைக் கடல், பசிய தண்வயல்கள் என அழகுப் பெட்டகமாக இருக்கும் இந்தப் பூமி சிலவேளைகளில் வெடித்து, குமுறி, நெருப்பைக் கக்கி, அதிர்ந்து நகர்ந்து என்ன என்ன அழிவுகைள ஏற்படுத்துகிறது!. இதே போல நீரும், நெருப்பும், காற்றும், வான வெளியும் இயற்கை எழில் கொலுப்படங்களாக இருந்தாலும் சிலவேளை கோர தாண்டவம் ஆடுகின்றன. காரணம் என்னவாக இருக்கமுடியும்? தெரியாது.

ஆனால் ஐம்பெரும் பூதங்களின் ஆற்றலை அருளாகப் பெற்றவர்கள், அவை ஏற்படுத்தும் அழிவுகளை அல்லது இடர்களை எளிதாக எதிர்கொள்வது மட்டுமல்ல, அவற்றை நல்ல வழிக்கு மாற்றிப் பயன்படுத்திக் கொள்வார்கள். "ஐந்தின் வகை தெரிவான் கட்டே உலகு" என்று திருக்குறள் கூறும் நுட்பம் இந்த ஐம்பெரும் பூதத்தின் வகைக்கும் பொருந்தும்.

இந்த முன்னுரையை வைத்துக் கொண்டு அனுமன் வழிபாடாக இருக்கும் மேலுள்ள பாடலை மீண்டும் படியுங்கள்.

"ஐம்பெரும் பூதங்களில் ஒன்றாக இருக்கும் காற்றின் கடவுள் பெற்றவன் அனுமன். ஐம்பூதங்களில் ஒன்றான நீர் நிறைந்துள்ள கடலைத் தாவி ஐந்தில் ஒன்றாக இருக்கும் வானத்தை வழியாகக் கொண்டு "ஆரியன்" எனச் சிறப்பித்துச் சொல்லப்படும் இராமபிரானுக்காகச் சென்று, ஐந்தில் ஒன்றாகிய நிலத்துக்கு மகளாகப் பிறந்த சீதாபிராட்டியைப் பார்த்து அவள் இருந்த அயலார் ஊரில், அஞ்சிலே ஒன்றாகிய தீயை வைத்துக் கொளுத்தினான்.

அந்த அனுமன் நமக்கும் கருணை காட்டி நம்மைத் துன்பத்திலிருந்து காப்பான்".

இதுவே பாட்டின் பொருள். இது கம்பன் எழுதிய பாடல் அல்ல. சுந்தரகாண்டத்தின் தொடக்கத்தில் உள்ள சில தனிப்பாடல்களில் ஒன்றாக வருகிறது. கம்பராமாயணத்தில் இல்லை. இதை எழுதியவர் யார் என்றும் தெரியவில்லை. ஆனால் இந்தப் பாடலின் ஆழ்ந்த கருத்துக்காக எல்லாரும் இதை ஓதி மகிழ்கிறார்கள்.

அனுமன் காற்றின் மைந்தன். தாய் அஞ்சனை, "காற்றின் வேந்தற்கு அஞ்சனை வயிற்றில் வந்தேன், **நாமமும் அனுமன் என்பேன்**" என்று அவனே தன்னை இராமபிரானிடம் முதல்முதலாக அறிமுகப் படுத்திக் கொள்கிறான். ஆதலால் ஐந்து பூதங்களில் ஒன்றான காற்றின் மகனாகப் பிறந்ததால், அந்த மூலத் தனிப் பொருளின் அருளை முழுவதுமாகப் பெற்றிருத்தல் இயல்பே. மகனுக்கு அருள் செய்யாத தந்தை உண்டா என்ன!.

இப்படிக் காற்றின் புதல்வனாகப் பிறந்த அனுமன் இராமபிரானுக்காக ஒன்றைத் தாவிச் செல்கின்றான். அந்த ஒன்றும் ஐந்தில் ஒன்றுதான். அது கடல். நீர்ப்பெருக்கின் மொத்த உருவமாக உள்ள பெருங்கடல். நீந்திச்செல்வதே அரிது; அப்படி ஒரு பரப்பும் ஆழமும் உள்ள கடலைத் தாவிச் செல்கிறான் மாருதிமைந்தன். எவ்வளவு தொலைவு இடைவிடாது வானில் பறக்கவேண்டும், எவ்வளவு நாட்கள் மிதக்க வேண்டும், இவையெல்லாம் அவனுக்கு ஒரு பொருட்டே அல்ல. ஏதோ ஒரு நீரோடையை கால் வைத்துத் தாண்டுவது போலத் தாண்டிச் சென்றான் என்பது அவனுடைய ஆற்றலின் முழுமையையும் ஒருசேரப்புலப்படுத்தும் குறிப்பாகும். காற்றின் மகன் நீரைத் தன்வயமாக்கி எளிமையாக இரண்டு பூதங்களின் ஆட்சியைத் தன்னுள் ஏற்றுக்கொண்டான்.

அடுத்து வரும் அஞ்சில் ஒன்று வானம். 'அஞ்சிலே ஒன்று ஆறாக' என்னும் தொடர் அதன் மேன்மையைக் காட்டும். ஓரிடம் விட்டு இன்னொரு இடத்துக்குப் பயணம் செய்யும் போது நடந்து போகலாம்; வண்டியில் போகலாம்; இப்படிப் போக ஒரு நல்ல பாதை வேண்டும்; மேடு பள்ளமாக இருந்தால் கீழே விழுந்து அடிபடும்; உடல் உறுப்புகள் ஒடியலாம், அதற்காகத்தான் பெருஞ்செலவு செய்து அரசு மேம்பட்ட சாலைகளை அமைத்துக் கொடுக்கிறது.

ஆனால் அனுமன் அப்படி ஒரு பாதையில் செல்லவில்லை.

வானத்தையே பாதையாக மாற்றிக் கொண்டு அதில் மிதந்து போகிறான்; பறந்து போகிறான். அளப்பதற்கரிய, அணுகுவதற்கரிய, கணிப்பதற்கரிய, கருதுதற்கரிய வானமாகிய பெரும்பூதமும் அவன்வயப்படுகிறது. அவன் செய்யும் உயர்ந்த, தெய்வம் சார்ந்த பயணத்துக்காக வழிவிட்டுத் தலைவணங்குகிறது. இது மூன்றாவது பூதம் தந்த அருள்.

யாருக்காகச் செல்கிறான்? என்ன பயன் கருதி இப்படித் தாவிப் பறக்கிறான்? 'ஆரியர்க்காக' என்று விடை வருகிறது. ஆரியன் என்ற சொல்லுக்கு மிக உயர்ந்தவன்; எல்லோரிலும் மேம்பட்டவன் என்றுதான் பொருள். "தனக்குமேல் ஒருபொருளும் இல்லா மெய்ப்பொருள் வில்லும் தாங்கி வந்தது" என்று வாலியே துதிக்கும் அந்த ஆரியன் இராமபிரான் தான். இன்னாருக்காக இந்த வேலையைச் செய்கிறோம், இன்னாருடைய தொண்டன் நான் என்று சொல்வது பெருமைக்குரியதாக இருக்கவேண்டும். அந்த வகையில் அனுமன் மேலான பரம்பொருளின் முழுநம்பிக்கைக்கும் ஆளான பணியாளாய் இந்த அருஞ்செயல் முடிக்க ஏகுகிறான் என்பது நுட்பமான கருத்து.

போவதில் ஒரு பயன், நோக்கம் வேண்டும் அல்லவா? தலப்பயணமோ, சுற்றுலாப் பயணமோ, விருந்துப்பயணமோ எதுவாக இருந்தாலும் அதில் நல்லது விளைய வேண்டும். நற்பயன் கிடைக்கவேண்டும். அனுமனுடைய இந்தப் பயணம் அப்படி ஒரு மேலான பயனை உலகிற்கு எல்லாம் அளித்தது. அது வேறொன்றும் இல்லை; சீதாபிராட்டியை இலங்கையில் நேருக்கு நேராகக் கண்களால் தெரியக் கண்டது. ஏந்திழை வடிவத்தில் வந்து அசோகவனத்தில் வீற்றிருந்த பிராட்டி யார்? ஜனகமன்னனின் நிலத்தை உழுதபோது ஏர்முனை கிளறிய மண்ணில் பிறந்தவள் - அஞ்சிலே ஒன்றாகிய நிலம் பெற்ற அணங்கு. அந்தப்பிராட்டியை - பல துன்பங்களுக்கிடையே வருந்திக் கொண்டிருந்த தெய்வத்தை-பெருமானைப் பிரிந்து வாழ்வதைவிட உயிரை விட்டுவிடலாம் என்று முடிவு செய்திருந்த போது கண்டு அவள் மனவோட்டத்தை மாற்றியவன் அனுமன். அவன் செய்த தவம் அது. தெய்வம் இட்ட பணியைச் செய்யும் தொண்டுநிலை எல்லார்க்கும் வாய்க்காது. அதிலும் அந்தத் தெய்வம் ஏவாமல், ஆனால் ஒரு இடர்மிக்க சூழலில் அந்தத் தெய்வத்தையே துன்பத்திலிருந்து மீட்கும் சூழல் சிலருக்கு மட்டுமே கிடைக்கும்.

அப்படிப் பெற்றவன் அனுமன்.

காற்றின் மைந்தனாகப் பிறந்து, நீரைத் தாவி வானவழியே பறந்து, இராமபிரானுக்காக, நிலமகள் பெற்ற சீதாபிராட்டியைக் கண்ட பின்னர் அனுமன் என்ன செய்தான்?. அவள் இருந்த இடம் அயலார் ஊர். பகைவனாகிய இராவணனின் இலங்கை நகர். ஒரு குரங்கென அனுமனை இழிவாகக் கருதி அரக்கர்கள் அவனுக்குச் செய்த கொடுமைகள் பல. அவற்றை எல்லாம் எளிமையாக ஏற்றுக் கொண்ட ஆஞ்சநேயர் அவற்றால் தனக்கு எந்தத் தீங்கும் வராது காப்பாற்றிக் கொண்டதோடு அல்லாமல், தன் வாலுக்குத் தீ வைத்த அரக்கர்கள் துன்புறும்படி, தாவித் தாவிப் பறந்து அந்தத் தீயை விசிறிவிட்டு இலங்கை நகர் முழுவதையும் கொளுத்தி எரித்தான். பிறர்செய்யும் தீமைகள் 'ராம' என்னும் செம்மைசேர் நாமத்தைச் சொன்னால் அழிந்து போகும் என்று மெய்ப்பித்துக் காட்டிய பெருந்தகை அனுமன். அவனுடைய ஆணை கேட்டு தீக்கடவுள் - ஐம்பெரும் பூதங்களில் ஒன்றான நெருப்பு - "தீத்திறத்தார் பக்கம்" சென்று அழித்தது - இந்தப் பேராற்றலை உடையவன் அஞ்சனை பெற்றெடுத்த மகன்.

இத்தனையையும் வரிசையாகச் சொல்லி முடித்த இந்தப் பாடல் என்ன சொல்கிறது? கடைசியில் உள்ள நான்கு சொற்கள் இராமபிரானை வணங்கிய அனுமனை வணங்கினால் என்ன பயன் விளையும் என்று சுட்டுகின்றன. "அவன் நம்மை அளித்துக் காப்பான்". அவன் என்ற சுட்டுப் பெயர்ச்சொல் ஆழ்ந்த பொருள் உடையது. பாட்டை முதலிலிருந்து படித்து வரவேண்டும். அஞ்சிலே ஒன்று பெற்ற அவன் ; அஞ்சிலே ஒன்றைத் தாவிய அவன்; அஞ்சிலே ஒன்றை வழியாகக் கொண்ட அவன்; ஆரியர்க்காக ஏகிய அவன்; அஞ்சிலே ஒன்று பெற்ற அணங்கைக் கண்ட அவன்; அயலார் ஊரில் அஞ்சிலே ஒன்றை வைத்த அவன் என இத்தனையும் அ வ ன் என்ற மூன்று எழுத்துக்களுக்குள் பொதிந்து கிடக்கின்றன.

அத்தகைய பேராற்றல் பெற்ற அனுமன் நம்மைக் காப்பான் என்ற நம்பிக்கை தருகிறது பாடல். நம்மை என்பதை நம்மையும் என்று எடுத்துக் கொள்ளவேண்டும். பாடல் அமைப்பில் இப்படிச் சில இடங்களில் உம் மறைந்து வரும். இந்த இடத்தில் "இழிவுச் சிறப்பும்மை மறைந்து வந்தது". ஐம்பெரும் பூதங்களையும் எளிதாகத் தன்னுடைய ஆற்றலுக்குள் வைத்திருக்கும் வாயுமகன்

ஒரு பூதத்தைக் கூட வெல்ல முடியாத நம்மையும்;- எப்பொழுது பார்த்தாலும் துன்பங்களிலும் தோல்விகளிலும் துவண்டு கிடக்கும் நம்மையும்; மனத்தில் உறுதியில்லாது அமைதியிழந்து தடுமாறி வருந்தும் நம்மையும்- என்று இவ்வாறு பலவகையில் விரிந்துச் சொல்லுவதற்குத் தக்கவாறு அமைந்துள்ளது அந்தச் சொல்.

அப்படிப்பட்ட நம்மையும் எப்படிக் காப்பான்? அளித்துக் காப்பான் என்று பாடலே முடிவாக விளக்கவும் செய்கிறது. 'அளித்து' என்றால் ஒன்றைத் தந்து என்று பொருள்படும். இராமபிரானிடம் தான் பெற்ற கருணையைச் சிறிதளவு நமக்குத் தந்து என்று கொள்ளலாம். 'அளி' என்பதே இரக்கம் என்றும் பொருள்படும். கருணைகாட்டி நம்மையும் காப்பான். துன்பப்படுகிறவர்களுக்கு எல்லாம் ஆறுதல் அளித்துக் காப்பான் என்றும் விரித்துச் சொல்லலாம். "யார் எல்லாம் இராமபிரானுடைய திருநாமத்தைச் சொல்கிறார்களோ - எப்பொழுது எல்லாம் சீதாபிராட்டியின் கேள்வனை வழிபடுகிறார்களோ அவருக்கெல்லாம், அப்போதெல்லாம் அவர்கள் வழிபாட்டுக் குரலைக் கேட்டு ஓடோடி வந்து உதவி செய்து அருள்காட்டிக் காப்பான்"என்று சுருக்கமாக நிறைவு செய்யலாம்.

அந்தவகையில் இது தனிப்பாடலாக இருந்தாலும் கம்பனுடைய தெய்வத்தமிழ் முத்திரைகளைத் தாங்கியது போலக் கவிநயம், புனைதிறன், சொல்லாட்சி, பொருள் ஆழம், இலக்கணமாண்பு இத்தனையும் ஒருங்கே அமையப்பட்ட அழகுப் பாடலாகத் திகழ்கிறது. இதுதான் பாட்டின் வெற்றி. முதல் பாடலைப் படித்தாலே அதன்பின் வரும் படலத்தையும் காண்டத்தையும் படித்துப் பயன் பெற்ற நிறைவு படிப்போர் மனதுள் நிறைந்து பொங்கி வழியவேண்டும். அந்தவகையில் அந்த அற்புதத்தை இந்தப் பாடல் ஏற்படுத்துவதில் வியப்பில்லை. ஏனெனில் கருணை மறவனாகிய இராமபிரானின் சிறிய திருவடியைத் துதிக்கும் பாடல் அல்லவா!

## 2. யார் இந்த அனுமன்?....

சீதா பிராட்டியைத் தேடி வானரப் படையில் ஒரு பகுதி கிஷ்கிந்தையிலிருந்து தெற்கு நோக்கிச் சென்றது. வாலி மைந்தனாகிய அங்கதனும் சாம்பவானும் அடங்கிய அந்தப் பெரும்படையில் அனுமனும் இருந்தான்.

"மாருதி மைந்தனே! (சீதாபிராட்டி இருக்கும்) இராவணனின் பெரியநகரம் தென்திசையில் உள்ளது என்று இவ்வாறு என் அறிவு கூறுகிறது. வலிமை படைத்த அரக்கர்கள் நிறைந்த அந்தத் திசையில் சென்று அரக்கரை அழித்து வெல்லும் புகழுக்கு உரியவன் நீயே அல்லவா?" என்று அனுமனின் மன்னனாகிய சுக்ரீவன் சொன்னான்.

"தென்திசைக்கண் இராவணன் சேண் நகர்
என்று இசைக்கின்றது என்னறிவு இன்னணம்
வன் திசைக்கு இனிமாருதி நீ அலால்
வென்று இசைக்கு உரியர் பிறர் வேண்டுமோ?"

கூர்த்த அறிவும் செயல்துணிவும் கணிக்கும் திறனும் வாய்ந்தவன் கிட்கிந்தை மன்னனாகிய சுக்ரீவன் என்பதற்கு இதுசான்று. தென்திசையில் பிராட்டி இருக்கிறாள்; அரக்கர் வாழ்விடம் சென்று அவளைக் கண்டு வரும் ஆற்றல் அனுமனுக்கு மட்டுமே உண்டு என்ற சுக்ரீவன் முடிவு பழுதுபடாதது.

வானரப்படை தெற்கு நோக்கிச் சென்றது. விந்தியமலை, நருமதை ஆறு, ஏமகூடமலை, பெண்ணைஆறு, விதர்ப்ப நாடு, தண்டகாரண்யம், கோதாவரி என்று வரிசையாகக் கடந்து, வேங்கடமலை தாண்டித் தொண்டை நாடு, சோழமண்டலம், பாண்டி நாடும் கடந்து மயேந்திரமலை போய்ச் சேர்கிறார்கள். அதற்குப் பிறகு நாடில்லை, காடும் இல்லை. விரிந்து பரந்த தென்பெருங்கடலே உள்ளது. அதைத்தாண்டிப் போகவேண்டும். யார் கடப்பது?

இப்போது இதுதான் வினா. தங்களால் முடியாது எனத் தெளிவாகச் சொல்லிவிட்டனர் மிகப்பெரும் வீரர்களான நீலன்,

அங்கதன், சாம்பன் முதலானோர். தவிர அவர்களே ஆராய்ந்து அதைக் கடக்கும் ஆற்றல் பெற்றவன் - "அஞ்சிலே ஒன்றைத் தாவ"க்கூடிய வலிமை பெற்றவன் - அனுமனே என்று முடிவு செய்து அவர்கள் சார்பாகச் சாம்பன் கூறினான். இதுவரை மற்றவர்கள் அதைச் செய்ய இயலாது என மறுத்தபோதும் பேசாமல் இருந்த அனுமன்; தனக்குக் கடலைத் தாண்டும் ஆற்றல் இருந்தும் தானாக அதைக் கூற முன்வராத ஆஞ்சநேயனை நோக்கிச் சாம்பன் கூறிய பதினொரு பாடல்களில் அனுமனின் எல்லாத் தகுதிகளும் பட்டியலிடப்பட்டுள்ளன.

வாழ்க்கைக் குறிப்புகள் என்றும் தன்விபரக் குறிப்புகள் என்றும் சொல்லத்தக்க அளவு இந்தப் பாடல்களின் புதைந்துள்ள கருத்துக்கள் "யார் இந்த அனுமன்?" என்ற கேள்விக்குத் தெளிவான விடையைத் தருகின்றன. வைணவ சம்பிரதாயத்தில் மூழ்கி, ஆழ்வார் பாடல்களில் "என்று முள தென்தமிழின்" தெய்வத் தன்மையைக் கண்டு உள்ளத்தில் வாங்கிக் கொண்டு, 'என்கடன் பணிசெய்துகிடப்பதே' என்னும் தொண்டு நெறியை நெஞ்சில் நிறுத்தி, விரித்தபொருள் எல்லாவற்றுக்கும் நிலைக்களனான கம்பசித்திரத்தில் கம்பநாட்டார் அற்புதங்களை இங்கு படைக்கிறார். ஒவ்வொரு வைணவனும் - ஒவ்வொரு தமிழனும் - தமிழ்மொழியின் இந்த அழகு வீச்சைப் படித்துப் படித்துச் சுவைக்கவேண்டும்.

இராமபிரானிடம் முன்னதாக முதலில் சென்று நட்புக் கொண்ட பெருமையுடைய வானரம் அனுமனே. ஒரு செயலை எண்ணித்துணிந்து, துணிந்தபின் சோர்விலாது அதைச் செய்து முடிக்கும் உறுதி பெற்றவன் அனுமனே என்று சாம்பன் முடிவு செய்தான். 'மாருதி ஒப்பார் வேறில்லை' என்பது அவன் பெற்ற தெளிவு. எல்லாச் சிறப்புகளுக்கும் மேன்மைகளுக்கும் உடையவனாகிய வலிமை பொருந்திய தோளைப்பெற்ற அனுமனின் வீரத்தை எல்லாரும் தெரிந்து கொள்ளும் வண்ணம் சாம்பவான் அனுமனை நேரடியாகப் பார்த்துப் பேசினான்.

1. மேலை விரிஞ்சன் வீயினும் வீயா மிகை நாளீர்
நூலை நயந்து நுண்ணிது உணர்ந்தீர்; நுவல் தக்கீர்;
காலனும் அஞ்சும் காய்சின மொய்ம்பீர்; கடன் நின்றீர்;
ஆலம் நுகர்ந்தான் ஆம் என வெம்போர் அடர்கிற்பீர்

"மாருதியின் செல்வ! தாமரை மலரில் வாழும் பிரமனே இறந்தாலும் கூட, இறக்காமல் வாழும் நீண்ட வாழ்நாளை நீ பெற்றுள்ளாய். எல்லாவகையான நூல்களையும் ஆழ்ந்து படித்து அவற்றின் நுட்பங்களை உணர்ந்த அறிவாளன் நீ. அவற்றைப் பிறரும் கேட்டு மகிழும் வகையில் எளிமையாக எடுத்துரைக்கவும் வல்லவன். எமனும் கூட அஞ்சுகின்ற அளவு மிக்கசினத்தையும் உடல் வலிமையையும் உடையவன். ஏற்றுக்கொண்ட பணியைத் தலைமேல் கொண்டு செய்யவும் வல்லவன். ஆதலால் நஞ்சினை உண்ட சிவபெருமானைப் போலப் போர்செய்யும் ஆற்றலையும் பெற்றவன் நீ".

2. வெப்புறு செந்தீ நீர்வளியாலும் விளியாதீர்
செப்புறு தெய்வப் பல் படையாலும் சிதையாதீர்
ஒப்புறின் ஒப்பார் நும்மலது இல்லீர் ஒரு காலே
குப்புறின் அண்டத்து அப்புறமேயும் குதிகொள்வீர்

"மிக்கவெப்பம் கொண்ட தீயினாலும் நீராலும், வேகம் கொண்ட காற்றாலும் அழியாமல் நீ இருப்பாய். சிறப்பாகப் புகழ்ந்து பேசப்படும் பலவகைத் தெய்வங்கள் பலருக்குக் கொடுத்திருக்கும் படைக்கலங்களாலும் சிதைந்து விடாமல் இருக்கும் வல்லமை பெற்றுள்ளாய். உனக்குச் சமமானவர் என்று யாரையவாது உவமை சொல்ல வேண்டும் என்றால் யாரும் இல்லை. உனக்கு உவமை நீயே. ஒருமுறை கால்களைச் சேர்த்துத் தாவிக்குதிக்கும்போது அண்டத்துக்கு அப்பால் பாயும் திறமை கொண்டுள்ளாய்"

3. நல்லவும் ஒன்றோ தீயவும் நாடி நவைதீரச்
சொல்லவும் வல்லீர் காரியம் நீரே துணிவுற்றீர்
வெல்லவும் வல்லீர் மீளவும் வல்லீர் மிடலுண்டே
கொல்லவும் வல்லீர் தோள்வலி என்றும் குறையாதீர்

"நல்லவற்றை (பயனுள்ளவற்றை) மட்டுமல்ல தீயவற்றையும் (பயன்தராதவை) நன்றாக ஆராய்ந்து சீர்தூக்கி முடிவு செய்து குற்றம் இல்லாதவாறு சொல்கின்ற திறமை கொண்டுள்ளாய். பிறர் உதவி ஏதுமில்லாமல் - ஏதும் பெறாமல் -அரிய செயல்களையும் நீயே செய்து முடிக்க வல்லாய். எதிரிகளை எளிதில் வெல்லவும் உன்னால் முடியும். கடல் கடந்து சென்று எதிரிகளைத் துன்பப்படுத்திவிட்டு மீளும் திறமையும் உனக்கேயுண்டு. அவர்கள் உன்னுடன் போரிடவந்தால் போரில் அவர்களைக் கொல்லும் தோள் வலிமையும் உடையவன் நீ".

4. மேரு கிரிக்கும் மீதுற நிற்கும் பெருமெய்யீர்
மாரிதுளிக்கும் தாரை இடுக்கும் வரவல்லீர்
பாரை எடுக்கும் நோன்மை வலத்தீர் பழியற்றீர்
சூரியனைச் சென்று ஒன்கையகத்தும் தொடவல்லீர்

"மேருமலையை விடவும் உயர்ந்து அதன் மீது நிற்கும் பேருடலை உடையவன். மழைத்துளிகள் நுழையும் சிறு துளைகள் வழியாகக் கூடச் செல்கின்ற அளவு மிகச்சிறிய வடிவத்தையும் உன்னால் எடுக்கமுடியும். இந்தப் பெரிய பூமியை ஒரு கையால் பெயர்த்து எடுக்கும் அளவு வல்லமை உடையவன் நீ. எவ்வகையான பழிக்கும் ஆளாகாதவன். வானில் செல்லும் கதிரவனைக் கூடப்பாய்ந்து சென்று தொடக்கூடிய ஆற்றலும் உனக்குண்டு".

5. அறிந்து திறத்தாறு எண்ணி அறத்தாறு அழியாமை
மறிந்து உருள போர் வாலியை வெல்லும் மதிவல்லீர்
பொறிந்து இமையோர் கோன் வச்சிரபாணம் புகழேழ்க
எறிந்துழி இற்றோர் புன்மயிரேனும் இழவாதீர்

"தக்கவழிகளை அவற்றுக்குரிய முறைப்படி எண்ணி அறவழியை விட்டு விலகாமல் செயலாற்ற வல்லவன். யாராலும் எத்தகைய போர்முறையாலும் கொல்லமுடியாத வாலியை வெல்வதற்கும் சூழ்ச்சி சொல்லக்கூடிய வல்லமை உனக்கு மட்டும் தான் உண்டு. தேவர்களின் அரசனான இந்திரன் ஒருமுறை சினம் கொண்டு கண்களில் தீப்பொறிசிந்த வேகமாக வீசி எறிந்த வச்சிரப்படை தாக்கியபோதும் உன்னுடைய மேனியில் ஒரு சிறு முடிகூட இழக்கவில்லை. (அவ்வளவு வல்லமை உடைய கருவி உன் உடம்பில் சிறு பாதிப்பைக்கூட ஏற்படுத்த முடியவில்லை.)"

6.போர்முன் எதிர்ந்தால் மூவுலகேனும் பொருளாகா
ஓர்வில் வலம்கொண்டு ஒல்கலில் வீரத்து உயர்தோளி
பாருலகு எங்கும் பேரிருள் சீக்கும் பகலோன்முன்
தேர்முன் நடந்தே ஆரிய நூலும் தெரிவுற்றீர்

"மூன்று உலகங்களும் ஒன்று சேர்ந்து உம்மை எதிர்க்க வந்தாலும் அவற்றை ஒருபொருட்டாக மதிக்கமாட்டாய். ஒரே வில்லால் அவற்றை வீழ்த்தி வெற்றிபெறும் வல்லமை உடையவன் நீ. ஆனால் அப்போதும் உனக்குத் தளர்ச்சி ஏதும் ஏற்படுவதில்லை. குன்றாத வீரமுடைய தோளை உடையவனே! இந்தப் பரந்த உலகம் முழுவதிலும் பரந்து கவியும் பேரிருளை நீக்குகின்ற கதிரவனுக்கு

முன்னால் - ஏழுகுதிரைகள் பூட்டிய, எப்போதும் இயங்குகின்ற அவனுடனிருந்து அவனுடைய தேருக்கு முன்னால் அவனைப் பார்த்தபடி நடந்து கொண்டே எல்லா உயர்ந்த நூல்களையும் கற்றவன் நீ".

7. நீதியில் நின்றீர் வாய்மை அமைந்தீர் நினைவாலும்
மாதர் நலம் பேணாது வளர்ந்தீர் மறை எல்லாம்
ஓதியுணர்ந்தீர் ஊழிகடந்தீர் உலகு ஈனும்
ஆதியயன் தானே எனயாரும் அறைகின்றீர்.

"நீதி தவறாதவன். வாய்மையைப் போற்றி ஒழுகுபவன். மகளிர் இன்பத்தை மனதாலும் எண்ணாமல் தவம் செய்து வளர்ந்தவன் நீ. வேதங்களை எல்லாம் ஓதி ஓதிப் பொருளுணர்ந்து தெளிந்தவன். பல ஊழிக் காலம் கடந்தும் வாழும் பேறு பெற்றவன் நீயே. உலகத்தைப் படைக்கின்ற முதற் கடவுளான பிரமன் யாருமில்லை; அனுமன்தான் என்று எல்லோரும் உன்னைப் போற்றுகிறார்கள்".

8. அண்ணல் அம்மைந்தர்க்கு அன்புசிறந்தீர் அதனானே
கண்ணி உணர்ந்தீர் கருமம் நுமக்கே கடன் என்னத்
திண்ணிது அமைந்தீர் செய்து முடிப்பீர் சிதை வின்றால்
புண்ணியம் ஒன்றே என்றும் நிலைக்கும் பொருள் கொண்டீர்

"பெருமைமிக்க இராமபிரானிடத்தில் அன்பு வைத்திருப்பவர்களில் உன்னைப்போல யாரும் சிறந்தவர் இல்லை. அதனால் அவர் தொடர்பான (சீதாபிராட்டியைத் தேடும்) அருஞ் செயலை ஆழ்ந்து உணர்ந்தவன் நீயே. இதைச் செய்து முடிப்பது தான் மிகச்சிறந்த பணி என்று உறுதியாக எண்ணுகிறாய். அதைச் சிறிதும் குறையில்லாமல் செய்து நீ முடிப்பாய். ஏனெனில், புண்ணியம் ஒன்றே என்றும் நிலையாக நிற்கும் பொருள் என நீ நம்புகிறாய். இதைவிட வேறு என்ன புண்ணியச் செயல் இருக்க முடியும்?"

9. அடங்கவும் வல்லீர் காலம் அது அன்றேல் அமர் வந்தால்
மடங்கல் முனிந்தால் அன்ன வலத்தீர் மதிநாடித்
தொடங்கியது ஒன்றோ முற்றும் முடிக்கும் தொழிலல்லால்
இடம் கெட வெவ்வாய் ஊறுகிடைத்தால் இடையாதீர்

"ஒரு செயலை முடிக்கும் காலம் ஒத்துவராத போது அதைச் செய்யாமல் பொறுமையாக அடங்கிக் காத்து இருக்கிறாய். போர் என்று வந்துவிட்ட அந்தக் காலத்துக்கேற்பச் செயல்பட்டு ஒரு சிங்கம்

சினந்தது போல வீறுகொண்டு எழுந்து வெற்றிபெற வல்லவன் நீ. ஒரு செயலைச் செய்யத் தொடங்கி விட்டால், அதனுடன் தொடர்புடைய எல்லாவற்றையும் குறைவில்லாமல் செய்து முடிப்பதில் முனைந்து நிற்கும் போது, இடையே உன் முயற்சிக்கு ஏதேனும் இடையூறு வந்தால் அதற்கு அஞ்சாமல் எதிர்கொள்கிறாய்".

10. ஈண்டிய கொற்றத்து இந்திரன் என்பான் முதல் யாரும்
பூண்டு நடக்கும் நல்நெறியானும் பொறை யானும்
பாண்டிதர் நீரே பார்த்து இனிதுய்க்கும்படி வல்லீர்
வேண்டிய போதே வேண்டியது எய்தும் வினைவல்லீர்

"வெற்றிகளைப் பெற்றுக் குவித்திருக்கும் இந்திரன் முதலாக யாவரும் இப்படித்தான் வாழ வேண்டும் எனப் பின்பற்றத்தக்க ஒழுக்கத்தாலும் பொறுமையாலும் நீ சிறந்தவனாக - சான்றாளனாக - வாழந்து காட்டுகிறாய். கற்றவன் நீ. உன்னைப் பார்த்து பிற உயிர்கள் வாழத்தக்க பெருமையுடையவன். எப்பொழுது எதை விரும்பினாலும் அதை அப்பொழுது அடையும் அருஞ்செயலைச் சாதிக்கும் திறமை உன்னிடமே உண்டு".

11. ஏகுமின் ஏகி எம்முயிர்நல்கி இசை கொள்வீர்
ஓகை கொணர்ந்து உம்மன்னையும் இன்னல் குறைவில்லாச்
சாகரம் முற்றும் தாவிடும் நீர் இக்கடல் தாவும்
வேகம் அமைந்தீர் என்று விரிஞ்சன் மகன் விட்டான்.

"ஆதலால் நீதான் இந்தக்கடலைத் தாண்டிச் சென்று மங்கலம் விளைக்கவேண்டும். சீதையைப் பிரிந்து வருந்தும் மன்னனின் மனம் தேறும்படி மகிழ்ச்சியான செய்து கொண்டு வா. அப்படி வந்தால் எங்களுக்கு எல்லாம் உயிரையும் கொண்டு வந்தவன் ஆவாய். அழிவற்ற புகழையும் பெறுவாய்... பெருங்கடலைத் தாவும் வல்லமை பெற்ற உனக்கு இந்தச் சிறுகடல் பெரிதா என்ன!" என்று நான்முகன் மகனாகிய சாம்பவான் தூண்டிவிட்டான்.

ஆஞ்சநேய பக்தர்கள் நாள்தோறும் இந்தப் பாடல்களை ஓதி வழிபடலாம். பொருளுணர்ந்து சொல்லவே உரையும் தரப்பட்டுள்ளது. அற்புதமான பாராயணப் பாடல்கள்.

அனுமன் யார் என்னும் கேள்விக்கு இந்தப் பாடல்கள் தெளிவான விடையைக் கூறுகின்றன. அவற்றின் கருத்துக்களைத் தொகுத்துப் பார்த்தால் அனுமன்,

1. பிரமன் இறந்தாலும், அழியாத நீண்ட ஆயுள் பெற்றவன்

2. நிறைய நூல்களை நுட்பமாகக் கற்றவன்.

3. எமனும் அஞ்சும் வலிமை உடையவன்.

4. சிவபெருமானைப் போலப் போர்செய்யும் ஆற்றல் மிக்கவன்

5. நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் ஐந்து பூதங்களால் அழியாத வரம் பெற்றவன்

6. எந்தத் தெய்வப் படையும் அவனைச் சாகடிக்காது

7. சொல்லாற்றல் மிக்கவன்.

8. காலம், இடம் கருதி வேண்டிய அளவு தன் உருவத்தையும் பெரிதாகவோ சிறிதாகவோ மாற்றிக் கொள்பவன்.

9. பிரமசரிய விரதம் பேணியவன்.

10. ஒரு செயலைக் குறைவில்லாமல் முடிக்கும் திறமை மிக்கவன்

என்ற உயரிய பண்புகளின் மொத்த வடிவமாக அனுமன் என்ற பாத்திரத்தை அற்புதமாக வடித்திருக்கிறார் கம்பர். காப்பியப் போக்கில், கதை நிகழ்வுகள் தொடர்கின்ற போது, அந்தந்தச் சூழலில் இந்தப் பண்புகள் ஒவ்வொன்றும் தாமாக வெளிப்படுவது போலக் கவிஞர் உத்திகளைக் கையாண்டது தமிழின் ஆற்றலைக் காட்டுவதாகும். அளப்பரிய தென்தமிழை அளந்து ஆரப்பருகிய கம்பநாட்டாழ்வார் அழிவிலா வாழ்வு பெற்ற அனுமன் செய்திகளைக் கூறுவதை அவர்வழியில் நின்றே காணலாம்.

## 3. "நாமமும் அனுமன் என்பேன்"
## அனுமன் அறிமுகம்

இராம இலக்குவர் சீதா பிராட்டியைத் தேடித் காட்டில் போய்க்கொண்டிருந்தனர். வழியில் சடாயுவை - கழுகின் வேந்தனைக் கண்டார்கள். இலங்கை அரசனாகிய இராவணன் தேவியைச் சிறையெடுத்துச் சென்றதையும், தான் அவனை வழிமறித்துச் சீதையை மீட்க முயன்று வெட்டுப்பட்டதையும் விளக்கமாகக் கூறிச் சடாயு இறந்து விடுகிறார்.

வடுக்கண் வார் கூந்தலாளை இராவணன் மண்ணினோடும்
எடுத்தனன் ஏகுவானை எதிர்த்து எனதாற்றல் கொண்டு
தடுத்தனன் ஆவதெல்லாம் தவத்து அரன் தந்த வாளால்
படுத்தனன் இங்கு வீழ்ந்தேன் இது இன்று பட்டது என்றான்

அவருக்குச் செய்யவேண்டிய கடன்களை ஒரு தந்தைக்குச் செய்வது போலச் செய்து முடித்த பின்னர் கவந்தன் என்னும் அரக்கன் வாழ்ந்து வந்த வனத்தில் நுழைந்தார்கள்.

முற்பிறவியில் தனு என்னும் பெயருடன் தேவகுமாரனாக இருந்தவன், ஒரு சாபத்தால் அரக்கனாக ஆகிக் கவந்தன் என்ற வடிவில் பலருக்கும் துன்பம் செய்து வந்தான். இராம இலக்குவரையும் சாதாரண மானிடர்களாகக் கருதி அவர்களைத் துன்புறுத்தியபோது இருவரும் அவனுடைய தோள்களை வெட்டி வீழ்த்தினர். ஆளும் நாயகனாகிய இராமபிரானின் தெய்வக்கரம் பட்டவுடன் அவனுக்குச் சாப விமோசனம் கிடைத்தது. உடனே தன்னுடைய பழைய விஞ்சைய உருவை அடைந்து இராமனைத் தொழுது போற்றினான். காட்டில் எப்படி, எங்கு சென்று சீதையைத் தேடுவது என மயங்கி இருந்த இராம இலக்குவர்க்கு இந்தக் கவந்தன் தான் வழிகாட்டினான்.

"தாயினும் உயிர்க்கு நல்கும் சவரியைத் தலைப்பட்டு அன்னாள்
ஏயது ஓர் நெறியின் எய்தி இரலையின் குன்றம் ஏறி
கதிரவன் சிறுவனான கனகவாள் நிறத்தினானை
எதிர்எதிர் தழுவ............."

"பெருமானே! நீ அறியாதது ஒன்றும் இல்லை. ஆயினும் பிராட்டியைத் தேடிச் செல்லும் உன்னுடைய நோக்கம் வெற்றி பெறுவதற்கும் ஒரு வழிவேண்டும் அல்லவா? இப்படியே போ. கொஞ்சம் தூரம் போனதும் மதங்க முனிவருடைய ஆச்சிரமம் வரும் அங்கு எல்லா உயிர்களுக்கும் தாய் போலவும், தாய்க்கு மேம்பட்டும் அருள் செய்யும் சபரி என்னும் பெண் இருக்கிறாள். அவளிடம் வழிகேட்டு, சூரியகுமாரனாகிய சுக்ரீவனிடம் போய் நட்பு கொள்வாயாக. நல்லதே நடக்கும்"

என்று தொழுது வாழ்த்திக் கவந்தன் போய்விட்டான்.

இராமன் மதங்கமுனிவர் ஆச்சிரமத்தில் சபரி தந்த விருந்தை உண்டு மகிழ்வித்தான். "அளவில்லாத காலம் தன்னையே நினைந்து தவம் செய்த"சபரிக்கு மன நிறைவைத் தந்தான். அவளுக்கும் மகிழ்ச்சி. "எங்களுடைய துன்பத்தை, எங்களை நோக்கி வர இருக்கும் துயரத்தைத் தீர்த்த அம்மையே? நீ வாழ்க" என்று சபரியைப் போற்றினார்கள்.

மறுநாள் சபரி, சூரிய குமாரனகிய சுக்ரீவன் இருந்த இடத்துக்குப் போகும் வழியை விளக்கமாகக் கூறினாள். எளிய மக்களால் நினைத்துக் கூடப் பார்க்க முடியாத வழிகளைக் கடந்துதான் சுக்ரீவன் இருந்த குன்றுக்குப் போக வேண்டுமாம்! அந்த 'நெறி எலாம் நினைந்து சொன்னாள்'. அந்தக் குறிப்புகளை எல்லாம் கருத்துணர்ந்து புரிந்து கொண்டார்கள்.

சபரி தான் பெற்றிருந்த யோக வலிமையால் தன் உடலைத்துறந்து, ஒப்பற்ற பேரின்ப வீட்டை அடைந்தாள். அதைக் கண்டு இருவரும் அதிசயித்து வணங்கினார்கள். பிறகு அங்கிருந்து புறப்பட்டு காடு, மலை, ஆறு எனப் பலவாறாக இயற்கை விளக்கம் பெற்ற இடங்களைத் தாண்டிப் பம்பை என்னும் பொய்கைக் கரை சேர்ந்தனர்.

இந்தப் பகுதிக்கு அடுத்துக் கிட்கிந்தா காண்டம் (பம்பைப்படலம் என்ற தலைப்பில்) தொடங்குகிறது. அடுத்து வருவது அனுமப்படலம்.

அனுமனை இங்கு தான் கம்பர் அறிமுகப் படுத்துகிறார். ஆஞ்சநேயர் குழந்தையாக இருந்தபோது, காலையில் உதித்த இளஞ்சூரியனை நன்றாகப் பழுத்த ஒரு கனி என்று கருதி வானில் பாய்ந்து பிடிக்க முற்பட்டார். அதனைக் கண்ட இந்திரன் தன்கையில்

இருந்த வச்சிராயுதத்தால் அடித்ததால் அவர் கன்னம் வீங்கிப் போயிற்று. அநு என்றால் கன்னம் என்பது பொருள். அநுமன் - வீங்கிய கன்னம் உடையவர் என்று வரும். அனுமனின் தந்தை பெயர் கேசரி; வானர அரசன். தாயின் பெயர் அஞ்சனா தேவி. பெற்றோர் இருவரும் காற்றுக் கடவுளாகிய வாயுவை வழிபட்டு அனுமனைப் பெற்றார்கள். ஆதலால் அனுமனுக்கு மாருதி, வாயுபுத்திரன், காற்றின் மைந்தன் என்ற பெயர்களும் உண்டு.

சபரி வழிகாட்டியபடி சென்ற இராம இலக்குவர்கள் சுக்ரீவன் முதலியவர்கள் வாழ்ந்து வந்த ருசிய மூக மலைமீது ஏறிவந்தார்கள். மான்போன்ற தோற்றமுடைய மலை ஆதலால் இரலை குன்றம் என்பார் கம்பர். அவர்களை மலைமேல், மரத்தின் மேலிருந்து கண்ட சுக்ரீவன், "காற்றின் மைந்தனே! இங்கு பார்; கீழிருந்து ஏறிவரும் இந்த இருவர்கள் நீண்ட விற்களை ஏந்தியுள்ளார்கள். கரிய பெரிய மலை போலத் தோற்றம் அளிக்கிறார்கள். வாலி நம்மைக் கொல்வதற்காக ஏவப்பட்டவர்கள் என்று எனக்குத் தோன்றுகிறது" எனச் சொல்லிக்கொண்டே, பயந்து ஓடி ஒரு குகைக்குள் ஒளிந்து கொண்டான். தன் அண்ணனாகிய வாலிமீது சுக்ரீவன் கொண்டிருந்த அச்சம் இப்படி வெளிப்பட்டது. அவனுடன் தாரன், நீலன் முதலிய வீரர்களும் ஓடி ஒளிந்து கொண்டார்கள். அனுமன் ஒரு மரத்தின் மீதிருந்து, தொலைவில் மலையேறி வந்த இராம இலக்குவரை - ஞானநாதரை - தன்னுடைய ஞானத்தால் ஆராய்ந்து, வருபவர் வாலியின் ஆட்கள் அல்லர்; மனம் நொந்த நிலையில் உள்ளவர்கள் என்ற உணர்வையும் தெளிவையும் பெற்றான்.

இது மிக அற்புதமான இடம். இன்னும் நேருக்கு நேர் வரவில்லை; முழுமையான உருவத் தோற்றம் கட்புலனுக்கு - கண்ணுக்கு - தெரியவில்லை. ஆனாலும் இரண்டு செய்திகளை அனுமன் தெளிவாகப் புரிந்து கொண்டான், ஒன்று வாலியின் ஆட்கள் அல்லர், இரண்டாவது இராமனும் இலக்குவனும் தத்துவஞானம் நிறைந்தவர்கள். அறிவினால் பேரறிவை - ஞானத்தால் பரஞானத்தை உணரும் வழியைக் குறிப்பாகக் கம்பர் இப்படிக் காட்டுகிறார். அநுமனின் உயரிய பண்புகளுள் ஒன்று அவன்பெற்றிருந்த ஞானம்.

"முழு ஞான நாதரை அறிவின் நாடி மாருதி மொழியும்"
என்பது பாடல்வரி.

இராவணனை அழிக்கப் பரம்பொருளே மானிடனாக அவதாரம் எடுத்து வந்தபோது, உருத்திரக் கடவுள், தாம் அனுமனாகப் பிறப்பதாகச் சொன்னார். ஆதலால் அனுமனுக்கு உருத்திராம்சம் பெற்றவன் என்ற பெயரும் உண்டு. வானவர்கள் எல்லாம் குரங்குகளாகப் பிறந்தார்கள். இந்திரன் வாலியாகப் பிறந்தான். சூரியன் சுக்ரீவன் ஆகி வந்தான்! இந்த இடத்தில் இந்த முன்நிகழ்வை உட்கொண்டு கம்பர் ஒரு கருத்தை முன்வைக்கிறார்.

பாற்கடல் கடைந்த போது வெளிவந்த ஆலாலப் பெருநஞ்சைக் கண்டு அஞ்சி ஓடிய தேவர்களைக் காப்பதற்கு முன்வந்து நஞ்சைத் தானுண்டு தியாகராசன் ஆனார் சிவபெருமான். அதுபோல அனுமன் இப்போது வானரர்களை அஞ்சாதீர்கள் எனச் சொல்லி வானரங்களுக்கு ஆறுதல் தந்தான்.

'வெவ்விடத்தினை மறுகு தேவர் தானவர் வெருவல்
தவ்விடத் தனியருளு தாழ்சடைக் கடவுளென
இவ்விடத்து இனிது இருமின் அஞ்சல்

"இங்கு இனிமையாக இருங்கள்; அஞ்சவேண்டாம்" எனச் சடைமுடிப் பெருமான் கூறியது போல ஆதரவு கூறி நின்றான்.

பிறகு, எனினும் இப்போது வரும் இந்த இருவர் யார் என்பதைத் தெளிவாக அறிவதற்காகத் தன்னுடைய குரங்கு உருவை மாற்றி, ஒரு பிரமசாரி மாணவனாக ஆக்கிக் கொண்டு இராமனுக்கு அருகில் போய் அவனறியாமல் நின்று ஆராய்ந்தான். என்ன முன்னறிவு! ஒரு முடிவுக்கு வருவதற்கு முன்னர் தீர ஆராயும் தெளிவான சிந்தனை. இவன் தான் அனுமன். "இவர்கள் கையில் கொடிய வில்; போரில் எதிரியை அழிக்கும் ஆற்றல் உள்ளது. அதற்கேற்பக் கொடுங்கோபம் உடையவர்களாவும் இருக்கவேண்டும். இது போருக்குச் செல்லும் மன்னர்களின் தோற்றம். அது சரிதான்; ஆனால் சடைமுடி தாங்கி, மரஉரி அணிந்த கோலம் ? நீண்டு தொங்கும் இந்தச் சடைமுடியும், இலை தழைகளால் ஆன ஆடையும், முகப்பொலிவும் தவத்தில் சிறந்த முனிவர்களுக்கு உரியதல்லவா? எப்படி இந்த முரண்பாடு? என்ன என்று பார்ப்போம்" என இன்னும் நெருங்கி நின்று அனுமன் கூர்ந்து நோக்கினான்.

இவர்கள் மானிடர்கள் அல்லர் என்று தோன்றுகிறது. முப்பெருங்கடவுள் எனலாம் என்றால், இருப்பவர்களோ இருவர்

மட்டுமே. தவிர வலிமையான வில்லைக் கையில் ஏந்தியிருக்கிறார்கள். இவர்களுக்குச் சமமானவர்கள் என்று யாரைச் சொல்ல முடியும்? இவர்களால் செய்யமுடியாத செயல்தான் ஏதுள்ளது? இவர்களை யார் என்று என்னால் அறிய முடியுமா என்ன!

ஆனால் இவர்கள் மனம் ஏதாவது ஒரு கவலையால் துன்புற்று அமைதியிழந்திருக்குமோ? ஏனென்றால் மிகவும் சோர்ந்து போயிருக்கிறார்கள். ஒருவருடைய உடல் இப்படிக் களைத்துத் துவண்டு போகுமானால், அது மனக்கவலையினால் மட்டுமே நடக்கும். 'சிந்தையில் சிறிது துயர் சேர்வுறத் தெருமரலின் நொந்து அயர்த்தவர் அனையர்'. அப்படிச் சொல்லவும் முடியாது. இதுபோன்ற துன்பங்களால் இளைத்துப் போகும் சாதாரணமானவர்களாகத் தெரியவும் இல்லை. வானத்துத் தேவர்களும் அல்லர்; மானிட உருவம் தாங்கி வந்துள்ளார்கள். கூர்ந்து நோக்கினால் மனதுக்கு மிகவும் விருப்பமான, எண்ணினாலே இன்ப மயக்கம் தரக்கூடிய ஒரு பொருளைத் தேடிச் செல்பவர்கள் போல் உள்ளார்கள்.

தருமத்தையும், தகுதி என்னும் நல்ல ஒழுக்கத்தையும் பெருஞ்செல்வமாக மதிப்பவர்கள். வேறு ஒரு பொருளை அடைவதற்காக இங்கு வந்தவர்கள் போலத் தோன்றவில்லை, பின் எதற்காக என்று எண்ணிப் பார்த்தால், அமுதம் போன்றதும், இடையே கையிலிருந்து நழுவிவிட்டதுமான ஒன்றைத் தேடி இப்படி அலைந்து கொண்டிருக்கிறார்கள்.

கோபம் இல்லாதவர்கள், கருணைக் கடல் போன்றவர்கள், நனமை செய்வது ஒன்றைத் தவிர வேறு அறியாதவர்கள், இந்திரனும் அஞ்சத்தக்க வீரம் உடையவர்கள், தரும தேவதை நெருங்கப் பயப்படும் அளவுக்கு நல்லொழுக்கம் உடையவர்கள், மன்மதனும் கூசிநிற்கும் வண்ணம் அழகுடையவர்கள், எமனே அஞ்சும் வல்லமை உடையவர்கள்.

இப்படி நான்கு பாடல்கள். தொலைவிலிருந்து பார்த்து மலையேறி வருவோரின் பண்பு நலன்களைக் கொஞ்சமும் பிழையின்றிப் பட்டியலிடும் வல்லமை யாருக்கு இருக்கும்?

1. மனம் வருந்தும் அளவு துன்பப்பட்டுச் சோர்வடைந்தவர்கள்.
2. ஆனாலும் எளியரல்லர்.

3. தேவர்கள் அல்லர் : மானிடரே
4. அறவழி பிறழாதவர்கள்; ஒழுக்கமுடையவர்கள்.
5. விலைமதிப்பற்ற , அமுதம் போன்ற பொருளை இழந்து தேடி வருகின்றனர்.
6. கோபம் இலாதவர்கள்; அருளே வடிவமானவர்
7. வீரம், வல்லமை முதலியவற்றில் அவ்வவற்றுக்குரிய தேவதைகளே அஞ்சும் வண்ணம் சிறந்தவர்கள் .

என்பன போன்ற கருத்துகளை அனுமன் உணர்ந்தாகக் கம்பர் வெளிப்படுத்துகிறார். அறிஞனை இனம் காட்டும் அளவுகோல் இதுவே. முன்பின் பழகாத, இதுவரை நேரில் கண்டு பேசி அறியாத இருவர் பற்றி எப்படி ஒருவர் ஒரு முடிவுக்கு வரமுடியும்? அவர்களுடைய தோற்றம் பற்றி ஒருவாறு சொல்லலாம்: ஆனால் உள் தோற்றமாகிய; உண்மையுருவமாகிய - பண்புநலன்களை எவ்வாறு கண்டறிய முடியும்? ஆராய்ச்சி அன்று, பக்தி. இராமபிரான் மீது அவனையுமறியாமல் ஏற்பட்ட பக்தி என்னும் கண்கொண்டு தொலைநோக்குப் பார்வையாலேயே 'மானிடர் இருவரைச்' சரியாக மதிப்பீடு செய்து விடுகிறான் அனுமன்.

சுக்ரீவனுடைய பணியாளனாக - அமைச்சன் போல இருக்கும் அனுமன் வேறு; இராமபக்தனான ஆஞ்சநேயன் வேறு. இந்த எல்லைக் கோட்டைப் புரிந்து கொள்ளவேண்டும். இந்த முடிவுக்கு வருவதற்குக் காரணங்கள் உள்ளன. வந்தவர்கள் தெய்வ அவதாரங்கள் என்று அனுமனுக்கு உள்ளுணர்வு சொல்கிறது; கூடவே அவர்கள் மேலேறி வரும்போது கூட நிகழ்பவற்றையும் கண்டான். யானைகள், சிங்கங்கள் புலிகள் போன்ற கொடிய காட்டுவிலங்குகளும் இராம இலக்குவரின் பின்னால் தொடர்ந்து வந்து ஆசைமிக்கனவாய் நிற்கின்றன. காட்டில் வாழும் பேய்களும் இவர்களுக்காக மனம் இரங்கி நெகிழ்கின்றன. இவர்கள் வெயிலில் வரும்போது அவர்களுடைய திருமேனிகள் வெப்பத்தால் வாடுமே என்று இரங்கி மயில் முதலிய பறவைகள் தங்களுடைய பெரிய இறகுகளை மேலே பந்தலாக விரித்துப் பரப்பி நிழல்தந்து கூடவே வருகின்றன. வானில் தவழும் மேகங்களும் சிறுசிறு நீர்த்துளிகளைச் சிந்திக் குளிரூட்டி மிதந்து வருகின்றன. யார் நடந்தாலும் நெருப்பு போலச் சுட்டுப் பொசுக்கின்ற பருக்கைக் கற்களும் தாமரை போன்ற இவர்களுடைய திருவடிகள் படும் போதெல்லாம் தேன் நிறைந்த மலர்கள் போல நெகிழ்ந்து விடுகின்றன. இவர்களைக் காணும் பேறு பெற்ற மரம், புல் முதலிய பயிர் வர்க்கம் எல்லாம் இவர்களை

வணங்குவது போலத் தலை சாய்ந்து பணிகின்றன. என்றால் - கொடிய விலங்குகள், பறவைகள், மேகங்கள், பயிர்கள் என்ற உயிரினம் முழுதும் இப்படி இவர்களுக்காக உருகுகின்றன என்றால்- இவர்கள் யார்? தருமமே இவர்கள் வடிவம் கொண்டு வந்திருக்க வேண்டும்.

உண்மையில் இவர்கள் யார்? இந்தக் கேள்வியை மீண்டும் தனக்குள் தானே எழுப்பிக் கொண்ட அனுமன் பேசுகிறான். கம்பராமாயணத்தில் உள்ள அரியபாடல்களில் இதுவும் ஒன்று. பேரழகை நேரில் கண்ட சிற்றழகு, பேருயிரைக் கண்ட சிற்றுயிர், பேரறிவில் லயித்த சிற்றறிவின் நிலை எப்படியோ அப்படி இராமனைக் கண்ட அனுமன் நிலை. கம்பர்பாடுகிறரர்,

துன்பினைத் துடைத்து மாயத் தொல்வினை தன்னை நீக்கித்
தென்புலத் தன்றி மீளா நெறி உய்க்கும் தேவரோ தாம்
என்பு எனக்கு உருகுகின்றது இவர்கின்றது அளவில் காதல்
அன்பினுக்கு அவதியில்லை அடைவன்கொல் அறிதல் தேற்றேன்

"பிறவித் துன்பங்களைப் போக்கி, அவற்றுக்குக் காரணமாக பழவினைகளின் வேர்களை அழித்து, மீண்டும் பிறந்து துன்புறும் வண்ணம் தெற்கில் இருக்கும் எம உலகுக்கு அனுப்பாமல் மீண்டும் பிறவாத மேலான அருள் நிலையை அடையச் செய்கின்ற தெய்வ வல்லமை உடைய திருமாலே, பரம் பொருளே இவர்களாக வடிவெடுத்து வந்திருக்கவேண்டும். இவர்களைக் கண்டவுடன் என் எலும்புகள் கரைந்து உருகுகின்றன. இவர்கள்மேல் அளவிலாத அளவு காதல் பெருகிறது. நான்கொண்ட இந்த அன்புக்கு - பக்திக்கு எல்லையில்லை. இப்படி என்னுடைய உடம்பையும் உயிரையும் ஒருசேர உருக்கும் இவர்களை நான் சென்று அடைவேனோ? ஒன்றும் புரியாமல் மருள்கிறேன்".

'எல்லாம் அற என்னை இழந்த நலம்' என்று அருணகிரிநாதர் பாடும் மனநிலை இது. எப்படி அநுமன் இராமனை இவ்வாறு கண்டு கொண்டான்? தன்தலைவனை அடியான் ஒருவன் உணர்ந்து கொள்ளும் இயல்பூக்கம் இதுதான். தாயை உணரும் கன்று, யாரிடமும் கேட்டு அறிவுபெற்று ஓடிச்சென்று அணைவதில்லை. இங்கு ஒரு வேறுபாடு; பக்தனைத் தேடிப் பரம்பொருள் வந்திருக்கிறது; கன்றைத் தேடித் தாய்ப்பசு வந்திருக்கிறது.

இப்படி ஏன் அனுமன் மனம் உருகுகிறது? அதற்கு ஒரு

காரணம் உண்டு. அதை அனுமனே பின்னால் சுக்ரீவனிடத்தில் சொல்ல இருக்கிறான். அனுமனின் அருள்தந்தையான காற்றுக் கடவுள் மகனுக்கு அறிவுரை கூறுவது போலச் சில செய்திகளைச் சொல்லிவந்தபோது ஒருமுறை,

'இந்த உலகங்களை எல்லாம் படைத்த பிரம தேவனைத் தம் கொப்பூழ்க் கொடியில் தோற்றுவித்த திருமாலுக்கு நீ அடிமையாக இருந்து பணி செய்யவேண்டும். அதுவே நீ செய்யக் கூடிய மிகச்சிறந்த தவம். என் மகனே! நீ அப்படி அடிமைப்பணி செய்வாயானால், அது உனக்கும் பெரும்பதம் நல்கும். உன்னைப் பெற்ற எங்களுக்கும் உயர்கதி தரும்" என்று சொன்னான். "சரி அப்படியே செய்வேன். ஆனால் ஒரு ஐயம். அந்தப் பரம்பொருளை - தோன்றலை - இவன்தான் திருமால் என்று நான் எப்படிக் கண்டு பிடிப்பது?" என்று அனுமன் திருப்பிக் கேட்டான். வாயுபகவான் சொன்னான்,

> "யாராக இருந்தாலும், அவர்கள் வாழ்வில் துன்பம் உண்டாகும் போது தோன்றாத் துணையாக உடன்வந்து தோன்றுவான். அப்படி உன்முன் கவலை தீர்க்கும் மருந்தாக அவன் வரும் போது உன்னிடத்தில் உள்ளன்பு தானே உண்டாகும்" என்று வாயு பகவான் சொன்னான்.

> "இப்பொழுது அந்த நேரமும் அந்தக் கடவுளும் என்னைத் தேடி வந்து விட்டன போலும். மன்னவா! இப்போது எதிர் நிற்கும் தெய்வத்தைக் கண்டவுடன் என் உடம்பு மட்டுமல்ல, உள்ளிருக்கும் எலும்பும் சேர்ந்து உருகுகிறது. இது ஒன்றே போதும்"

என்று பழைய நிகழ்ச்சியைச் சுக்ரீவனுக்குச் சொன்னான்.

இந்தச் சூழலை நன்கு புரிந்து கொள்ளவேண்டும். அனுமன் இன்னும் இராம இலக்குவரிடம் சென்று சேரவில்லை ; ஒரு சொல் கூடப் பேசவில்லை. கண்ணில் கண்டதோடு சரி. அந்தக் காட்சியே அவனுடைய உள்ளத்தை ஈர்த்து, சிந்தையைத் தோயவைத்து உடம்பின் ஒவ்வொரு அணுவையும் உருக்குகிறது. மேலுள்ள கம்பர் பாடல் காப்பியப் போக்கில் வரவிருக்கும் நிகழ்வுகளுக்கு அடித்தளம் ஆவதைக் கூர்ந்து காணல்வேண்டும். "கூட்டு ஒருவரையும் வேண்டாக் கொற்றவா" என்று இராமபிரானைப் பிறகு வாலி பேச உள்ளான். தன்னுடைய தொழில், போர் ,பணி இவற்றுக்கு யாருடைய துணையும் வேண்டாத தனி வீரன் என்பது

இதற்குப் பொருள். அசகாய சூரன் என்று மூல நூல் கூறுகிறதாம். அந்த ஒப்பற்ற தனி வீரன் கவந்தன் சொல்லியபடி, சபரி வழிகாட்டியபடி கிஷ்கிந்தை வந்து சுக்ரீவன் துணையை நாடப்போகிறான். அதற்கு வாயிலாக இருப்பவன் அனுமன். தலைவாசல் நன்றாக இருந்தால் மாளிகையும் கோபுரமும் நன்றாகத் தான் இருக்கும். புதிய ஊருக்குள் நுழையும் போது யார் முகத்தில் முதல் முதலில் விழிக்கிறோமோ, அதைப்பொருத்தே தொடர்நிகழ்ச்சிகளும் வரும் என்பது நம்பிக்கையல்லவா! இராமபிரான் தன் உண்மையான பக்தனை முதலில் காணப்போகிறான்.

இருவரும் வந்தார்கள். மேற்கூறியவாறு கடவுள் அருள் பார்வை பெற்றவனான செவ்வழி உள்ளமுடைய அனுமனைக் கண்டார்கள். அவன் தான் ஓடிப்போய் முதலில் வணங்குகிறான். "உங்கள் வரவு துன்பமில்லாத நல்வரவாக ஆகுக" என்று கூறி வரவேற்றான். இதுநாள் வரை அவர்கள் பட்டு வந்த துன்பங்கள் இனி இருக்காது என்று குறிப்பாகக் கூறினான் போலும் ! ஏனெனில் அவர்கள் சுமையைப் பகிர்ந்து கொள்ள மாருதியின் தோள்கள் எந்நேரமும் தயாராக இருக்கும் அல்லவா? நல்ல வரவேற்பைத் தந்த அனுமனைக் கண்டு இராமன், "நீ எங்கிருந்து வருகிறாய்? யார் நீ?" என்று கேட்டான்.

"செந்தாமரை போன்ற, அழகிய கண்களை உடையவனே! என்தந்தை காற்று வேந்தன் ; என் தாய் அஞ்சனை. வாயுபகவானின் அருளால் என்தாய் தன் வயிற்றில் தாங்கினாள். **என்பெயர் அனுமன்.** இந்த மலைமீது வாழ்கின்ற சூரியகுமாரனாகிய சுக்ரீவனுக்கு ஏவல் செய்யும் அடியவன். நீங்கள் வருவதைக் கண்டு கலக்கம் அடைந்த சுக்ரீவன், என்னை இங்கு வந்து விசாரித்து வரும்படி அனுப்பினான். இதுதான் நான் இங்கு வந்த காரணம்" இது அனுமன் கூறிய விடை.

இவைதாம் அனுமன்பேசிய சொற்கள். தன்னை யார் என்று அறிமுகப்படுத்திக் கொண்டான். பிறகு தன் தலைவனை இராமபிரானிடம் சுட்டிக்காட்டினான். இவ்வளவே. ஆனால் அனுமன் பேசிய நயம், அணுகிய மேற்கொண்ட விநயம், தெளிந்த கருத்து வெளிப்பாடு இராமபிரானை ஈர்த்தது போலும்! அவன் நெஞ்சில் எண்ணங்கள் உருண்டன.

அனுமன் சொற்களைக் கேட்ட சக்ரவர்த்தித் திருமகன், "இங்கு வந்துள்ள இவனைக் காட்டிலும் மேலான நற்குணம் உள்ளவர்கள் வேறு எந்த உலகிலும் இருக்க முடியாது. ஆற்றல், முழுமைபெற்ற அடக்கம், கல்வியின் இசைவு, ஞானம் என்கின்ற இந்தப் பண்புகளுக்கும் இவனுக்கும் வேற்றுமையில்லை'' என்று உறுதியாகக் கணித்தபின்னர் இலக்குவனிடம் பேசினான்.

இதுவரை கதைப் போக்கில் அனுமன் எப்படி அறிமுகமானான் என்று பார்த்து வந்தோம். ஆனால் அவற்றுக்கு மேலாக எந்தப் பரம்பொருளுக்குத் தொண்டு செய்யக் காற்றுக்கடவுள் அனுமன் ஆகப்பிறந்தானோ, அந்தத் தெய்வமே மூன்று பாடல்களில் அனுமன் யார் என்று இலக்குவனுக்கு அறிமுகப்படுத்திய அழகு இன்றும் என்றும் படித்து மகிழத் தக்கது.

1. இல்லாத உலகத்து எங்கும் ஈங்குஇவன் இசைகள் கூரக்
கல்லாத கலையும் வேதக் கடலுமே என்னும் காட்சி
சொல்லாலே தோன்றிற்றன்றே யார்கொல்
இச்சொல்லின்செல்வன்?
வில்லார்தோள் இளையவீர விரிஞ்சனோ விடைவல்லானோ.

"வில்லைத் தோளில் கட்டிய இளைய வீரனே! இலக்குவா! இங்கு வந்திருக்கும் இவன், புகழ் மிகுதியாகும்படியாக, கற்காத கலைகளும் வேதங்களாகிய கடலும் எல்லா உலகத்தில் தேடினாலும் இல்லை.(எல்லாவற்றையும் கற்றவன்). இவன் பேசிய சொல்லினாலேயே இந்த அவனுடைய அறிவும் ஆற்றலும் வெளிப்பட்டது அல்லவா? தம்பி! இந்தச் சொல்லின் செல்வன் யார்? பிரமனா, நந்தி மீது ஏறிவரும் சிவபெருமானா?'' ஆயிரமாயிரம் ஆண்டுகள் கழித்தும் நல்ல இலக்கியங்களும் நல்லபாடல்களும் தலைநாள் போலவே உயிரோடு வாழுமாம்! "சொல்லின் செல்வன்'' என்று இராமபிரான் அனுமனுக்குத் தந்த இந்தப்பட்டம் காலவெள்ளத்தைக் கடந்து இன்றும் வாழ்கிறது. என்ன அற்புதமான கணிப்பு!. சொல்லின் செல்வன் என்ற அந்தத் தொடர் ஞாயிறும் திங்களும் இருக்கும் காலம் எல்லாம் இருக்கும்.

இவன் பிரமனா, சிவபெருமானா என்று கேட்ட இராமன் ஏன் திருமாலா என்று கேட்கவில்லை? தான் திருமாலின் அவதாரமாகப் பிறந்தவன் என்ற தன்னுணர்வு அவனுக்கு இருந்தது என்று உரையாசிரியர்கள் நுட்பமாக எழுதியுள்ளார்கள்.

பிரமனைப் போன்ற அறிவும், உருத்திரன் போன்ற ஆற்றலும் பெற்றதோடு சொல்லாண்மையும் உடையவன் அனுமன் என்று தன் தம்பிக்குத் - சினத்தின் வடிவமாக இருந்த இலக்குவனுக்கு - தெரியச் சொல்லி அனுமனிடம் எப்படி நடந்து கொள்ளவேண்டும் என்று குறிப்பாக அறிவுரை கூறுவது போல இராமன் பேசினான்.

அனுமன் கற்றவை என்ன என்ன என்ற கருத்தும் இதில் உள்ளது. கலைகள், சாஸ்திரங்கள், வேதங்கள், நான்கு மறைகள். எண்ணெண் கலை என்று சிறப்பிக்கப்படும் அறுபத்து நான்கு கலைகளையும், வேதங்களையும் முழுமையாகக் கற்றவன். சூரியன் பின்னால் நடந்து சென்று, தாழ்ந்து நின்று, அடங்கி ஏங்கிக் கற்றுக் கொண்டவன். இனி இவன் கற்க வேண்டியது ஏதும் இல்லை. இவன் அறிவின் வடிவமாக நிற்கின்றான். ஒருவன் கற்றவனா இல்லையா என்பதை அவனுடைய யாக்கையாகிய உடம்புகாட்டாது; வாக்காகிய சொல்லின் திறம் தான் காட்டும். "நீ வில்லைத் தோளில் ஏந்திய மாவீரன். அது உன் உடல் வலிமைக்கு அடையாளம். ஆனால் இலக்குவ, இவன் சொல்லை நாவில் ஏந்திய ஞானி, இது இவனுடைய அறிவின் அடையாளம்" என்று இராமபிரான் மிகநுட்பமாக நயத்துடன் இலக்குவனுக்குக் கூறினான். இது ஒரு அறிமுகம்.

> 2. மாணியாம் படிவம் அன்று மற்றிவன் வடிவம் அமைந்த
> ஆணி இவ்வுலகுக்கு எல்லாம் என்னலாம் ஆற்றற்கு ஏற்ற
> சேணுயர் பெருமை தன்னைச் சிக்கறத் தெளிந்தேன் பின்னாக்
> காணுதி மெய்ம்மை என்று தம்பிக்குக் கழறிக் கண்ணன்

"இளையவனே! நம்முன் நிற்கும் இவன் வடிவம். சாதாரண பிரமசாரி வடிவமன்று; இந்த உலகங்களுக்கு எல்லாம் அச்சாணியாக இருக்கக் கூடிய பேராற்றல் வடிவம் என்று சொல்லல் தகும். வானளாவ உயர்ந்த பெருமையை உடையவன் இவன். இதைச் சிறிதுகூட ஐயத்துக்கு இடமில்லாமல் நான் தெளிவாகப் புரிந்து கொண்டேன். அந்த உண்மையை நீயும் இனிமேல் கட்டாயம் காணப்போகிறாய்".

கண்முன் தோன்றும் உருவக் காட்சியைக் கடந்து உண்மை உருவைக் கண்ட இராமபிரான் சொற்கள் இவை. இவன் சாதாரணமானவன் அல்ல; பிரமசாரியும் அல்ல; உலகைத் தாங்கும் ஆற்றல் உள்ளவன். வண்டியின் பாரம் முழுமையும் தாங்கும்

ஆணிபோன்றவன். தம்முடைய அவதார நோக்கச் சுமையை இவன் மீது இறக்கி வைக்கலாம் என்ற முடிவை இராமன் பெற்றுவிட்டான். "சேணுயர் தருமத்தின் தேவை, செம்மையின் ஆணியை" என்று பரதனை முன்னர்ப் பாராட்டிப் பேசியதும் இராமனே. வானளாவப் புகழ் பெற்ற அறத்தின் கடவுளாகவும், நடுவுநிலை பிறழாத செம்மையைத் தாங்கும் அச்சாணியாகவும் இருக்கின்ற பரதன் என இதே இலக்குவனிடம் தான் சொன்னான். இங்கு இன்னொரு ஆணி. இவ்வுலகுக்கு எல்லாம் ஆணி; அங்கு சேணுயர் தருமம் இங்கு சேணுயர் பெருமை; கூர்ந்து கவனிக்கத் தக்க சொற்கள். பரதனுக்கு இணையாக அனுமனை மதித்து இராமன் பேசினான். சுக்ரீவனைத் தம்பியாக ஏற்றுக் கொள்ளவதற்கு முன்னரே இந்த அனுமத் தம்பியைத் தழுவிய அடையாளம் இன்னொரு அறிமுகம்.

3. மற்றும் இவ்வுலகத்துள்ள முனிவர்வானவர்கள் ஆர்இச்
சொற்றிறம் உடையார்? மற்றுச் சுருதியின் தொகுதி யாவும்
முற்றறிதரும் இம்மாணி மொழிக்கு எதிர் முதல்வராய
பெற்றியர் மூவர்க்கேயும் பேராற்றல் அரிது மன்னோ

"தம்பீ! இன்னொன்று. இந்த உலகத்தில் கற்றறிந்த தவமுடைய முனிவர்பலர் இருக்கிறார்கள். மேலுலகில் அமரத் தன்மைவாய்ந்த தேவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் எல்லோரிலும் இது போலச் சொல்திறமுடையவர்கள் யார்? வேதங்கள் முழுவதையும் கற்றுத் தெளிந்த இந்தப் பிரமசாரியின் சொல்லுக்கு எதிராகப் பேசக் கூடிய வல்லமை முப்பெருங் கடவுள்களுக்கும் இருக்குமா என்பது ஐயமே. இருந்தால் அது அரிதான செயல்"

மேல்பாட்டில் விரிஞ்சனோ, விடைவல்லானோ என்று தன்னை விலக்கி நின்று கேட்ட இராமபிரான், இங்கு தன்னையும் உள்ளடக்கிக் கொண்டு பிரமன், திருமால், சிவன் என்னும் மூவராலும் கூட அனுமன் போல இவ்வளவு தெளிவாகவும் செறிவாகவும் பேசமுடியாது எனக் கூறினான். இது உயர்வு நவிற்சி. இலக்குவனுக்குப் புரியவைப்பதற்காக. ஆக, அனுமனுக்கு ஈடானவர் மண்ணிலும் இல்லை; வானினும் இல்லை. இந்த மூன்று பாடல்களிலும் அறிவின் ஆற்றலை, அனுமனின் சொல்லாற்றலையே இராமன் முன் நிறுத்தி இலக்குவனுக்கு அறிமுகப் படுத்தினான். பின்னால், சீதாபிராட்டியிடம் இவனை அனுப்பும் போதும், இலங்கை மன்னனிடம் செல்லும் போதும் யாரிடம், எதை, எந்த அளவு பேசுவது, எதை பேசாமல் இருப்பது

என்பதை வரையறையோடு புரிந்த ஒருவன் கிடைத்துவிட்டான் என்ற மகிழ்ச்சி இராமபிரானுக்குத் தோன்றியிருக்க வேண்டும். மூவருடைய ஆற்றலையும் ஒருங்கே பெற்றவன் அனுமன் என்ற குறிப்பு நோக்கத்தக்கது. இது அவனுடைய தெய்வத் தன்மை பற்றிய அறிமுகம்.

எப்படி இராமபிரான் அனுமனை இப்படி அறிந்து கொண்டான் என்ற கேள்வி எழுவது இயல்பு. இராம இலக்குவரை அடையாளாம் கண்டு கொண்ட அனுமனின் முன்னுணர்வு போன்றது எனச் சொல்வது பிழை. யாரைக் கண்டால் உன்னுடைய உடலும் உள்ளமும் உருகுமோ, அவர்தான் திருமால்; அவருக்கு அடிமை செய் என்று வாயுபகவான் அனுமனிடம் சொன்னதைச் சோதிப்பது போல இராமன் இங்கு வந்து அனுமன் முன் நின்றிருப்பான் போலும். நான்தான் திருமால், உன்னால் உணர முடிகிறதா? என்று கேட்பது போல. இந்த நுட்பமும் கூர்ந்து காணத் தக்கது. இராமன் அடிமை கொண்டான். அனுமன் அடிமை பூண்டான் என்பது தான் இந்த அறிமுகத்தில் வெளிப்படும் அடிப்படை. ஒரு பெரிய பணிக்கு - எல்லா வல்லமையும் உடைய இராவணனை எதிர்த்து நடத்த இருக்கும் போருக்கு (என்னதான் கடவுளாக இருந்தாலும் எடுபிடி வேலை செய்யவாவது ஆட்கள் தேவைப்படுமே, அதிலும் முழுநம்பிக்கைக்கும் உரியவனாக ஓர் பணியாளன் அமைவது பேறல்லவா?) - அந்த முயற்சிக்கு இறுதிவரை உறுதுணையாக இருக்கப் போகின்ற தொண்டனை அடையாளம் காட்டியவன் இராமபிரான்.

அனுமனின் அறிவு, ஆற்றல், செயல் திறன் அத்தனையையும் இலக்குவனுக்கு வெளிப்படுத்துவது மட்டும் இராமனின் நோக்கமாக இருக்கலாம்; கூடவே பிறருக்கும் - இராவணன் போன்ற பகைவர்களுக்கும் - காப்பியத்தைச் சுவைத்து வரும் அன்பர்களுக்கும் உணர்த்துவதும் நோக்கம் எனக் கொள்ளவேண்டும். பொதுவாக, இராமன் மற்றவர்களைப் புகழ்ந்து அதிகமாகப் பேசுவதில்லை. சில சொற்கள் பேசுவான்; செறிவாக இருக்கும். அனுமனின் இந்தப் பேற்றினை இப்பொழுது முதல் முதலில் உலகுக்கு அறிவித்த இராமபிரான், காப்பிய நிறைவிலும் அதைச் சுட்டிக்காட்டி மகுடம் சூட்டுவான். பிறகு பார்க்கலாம்.

## 4. நண்பனைக் கொணர்ந்த நம்பி

அனுமன் வந்தான், வணங்கினான். அவனுடைய பணிவு, விநயம், அறிவு, ஆற்றல் இவற்றை இலக்குவனுக்கு விளக்கமாகச் சொன்ன இராமன், அனுமனைப் பார்த்து "நீ இப்பொழுது குறிப்பிட்ட வானரர்களுக்கு அரசனாகிய சுக்ரீவன் இப்பொழுது எங்கு உள்ளான்? அவனைக் காண வேண்டுமென்று ஆசைப்பட்டுத் தான் நாங்கள் இங்கு வந்துள்ளோம். இடையில் உன்னைச் சந்தித்ததில் மகிழ்ச்சி. இப்பொழுது பேசினாயே, அந்த நல்ல மனத்தையுடைய சுக்ரீவனை எங்களுக்குக் காட்டுவாயா" என்று வேண்டிக் கொண்டான். அனுமன் கூறினான்.

"இந்த நிலவுலகத்தை தாங்குகின்ற மலை போன்ற தோள்களையுடைய வீரர்களே! எட்டுத்திக்கிலும் சுற்றி வளைத்துப் பரந்து கிடக்கும் சக்ரவாள மலை தழுவிய இந்த உலகில் உங்களைப் போன்ற தூயகுணம் உடையவர்கள் யாருள்ளார்கள்? தமக்கு ஒப்பில்லாத நீங்களே அந்தச் சுக்ரீவனைப் பார்க்கவேண்டி அன்புகொண்டு தேடிவந்தீர்கள் என்றால் அது அவன் செய்த தவம். பல பிறவிகளில் அவன் ஆற்றிய நல்வினைகளே உங்களைப் போன்றவரின் நட்புகிடைக்க வழிவகுத்துள்ளது"

"மலைபோன்ற, மலையிலும் பெரிதாக வளர்ந்திருக்கின்ற தோள்களை உடையவர்களே! சுக்ரீவன் சூரியனின் புதல்வன். அவனை இந்திரனின் மகனாகிய வாலி என்ற அண்ணன் கோபித்துக் கொஞ்சமும் இரக்கமில்லாமல் துரத்திவிட்டான். சுக்ரீவன் இங்கு தனியாக வந்து சேர்ந்தான். நாங்கள் அவனுடன் தங்கியிருக்கிறோம் அவனுக்குச் செல்வம் வந்து சேரும் நேரம் போலும்! நீங்கள் வந்துள்ளீர்கள்"

"இந்த உலகில் பிற உயிர்கள் விரும்பியவற்றைத் தானமாகக் கொடுப்பதும், யாகம், தவம் செய்வோரைக் காத்து உதவிசெய்வதும் பெரிய செயல்கள் தாம். இதற்கு எந்த ஐயமும் இல்லை. ஆனால் இதைவிட மேம்பட்ட தருமம் ஒன்றுண்டு; நீங்கள் அறியாததல்ல. தன்னைக் கொல்லவந்த எமன் போன்ற பகைவனுக்கு அஞ்சி

அடைக்கலம் கேட்டு வந்தவர்களுக்கு 'அஞ்சாதே' என்று கூறி அருள்செய்வதைக் காட்டிலும் வேறு அறம் என்ன உண்டு?

மூன்று உலகங்களையும் காக்க வல்ல முதன்மைக் கடவுளர் போன்றவர் நீங்கள். அசையும், அசையாப் பொருள்களின் காவலர்கள். முருகனைப் போன்ற அழகும் ஆற்றலும் படைத்தவர்கள். தேவர்களுக்கும் புகலிடம் தருபவர்கள் என்றால் எங்களைக் காக்க வந்தவர்கள் என்று சொல்வது எளிமை தான்! உங்களைச் சரணமாக அடைந்த எங்களுக்கு இதைவிட வேறு நன்மை என்ன உண்டு?. வீரர்களே! நீங்கள் யார் என்று எப்படி என் தலைவனாகிய சுக்ரீவனுக்குச் சொல்வேன்?"

இவற்றிலிருந்து சில செய்திகளை இராமஇலக்குவருக்குத் தெளிவாக அனுமன் புலப்படுத்திவிட்டான்

1. சுக்ரீவனும் வாலியும் சகோதரர்கள்; முன்னவன் சூரியகுமாரன்; பின்னவன் இந்திரன் புதல்வன்.
2. வாலியால் விரட்டப்பட்ட சுக்ரீவன் அனுமன் உள்ளிட்ட சிலரோடு மலையில் ஒளிந்து வாழ்ந்தான்.
3. அவர்களைக் காக்க வந்த கடவுள்கள் போல இராம இலக்குவர் வந்துள்ளார்கள்.
4. அவர்களை அடைக்கலமாகச் சுக்ரீவன் உள்ளிட்டோர் சேர உள்ளார்கள்.
5. அப்படிச் சரண் அடைந்தாரைக் காப்பது மிகப்பெரிய தருமம்.

இவை சுருக்கமான குறிப்புகள். சுக்ரீவனைக் கேளாமலேயே, இராம இலக்குவர்கள் உண்மையில் யார் என்று அவர்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ளாமலேயே அனுமன் சரணடையும் முடிவை எடுத்துள்ளான். அது சரியா தவறா என்று ஆராய்ச்சியில் ஈடுபடத் தேவையில்லை. நல்ல தொண்டன் ஒருவன் தன்னுடைய தலைவனுக்கு நன்மை நிகழக் கூடிய ஒரு உடன்பாடு செய்ய/பணியை மேற்கொள்ளத் தலைவனின் இசைவைப் பெறவேண்டியது கூட இல்லை என்றே நூல்கள் கூறுகின்றன. மனம், மொழி, மெய் மூன்றிலும் ஒரு சேர இணைந்து தலைவனின் வாழ்வுக்குப் பாடுபடும் அடியான் ஒருவன் பெற்ற பேறு இது. காப்பியம் முழுவதிலும் அனுமனின் இந்த ஆற்றல்/இதே முன் உத்தி வெளிப்பட்டு வருவதைக் காணமுடியும்.

இன்னும் வாய்திறந்து இராமனோ இலக்குவனோ தங்களை யார் என்று அறிமுகப்படுத்திக் கொள்ளவில்லை. அதற்குள்ளாகவே

அவர்களுடைய கடவுட் தன்மை, உயிர்களைக் காக்கின்ற பண்பு, அடைக்கலமாக வருபவர்களை ஏற்கும் மனம் என்ற உயரியனவற்றை அனுமன் எவ்வாறு கண்டு பிடித்தான்? அதுதான் நல்ல தொண்டனின் அடையாளம். "நீங்கள் யார்? என்று என் தலைவனிடம் என்ன சொல்லட்டும்" என்பது கூட ஒரு முகமனே தவிர வேறில்லை. அவன் அவர்களை அனுமானத்தால் அறிந்தவன் தான்.

இந்தக் கேள்விக்கு விடையாக இலக்குவன் அயோத்தி தொடங்கி நடந்த நிகழ்ச்சிகளை மிகச்சுருக்கமாக - இரத்தினச் சுருக்கமாகக் - சொல்லித் தயரதனாகிய அயோத்தி வேந்தனின்

அன்னவன் சிறுவனாம் இவ் ஆண்தகை அன்னை ஏவத்
தன்னுடை உரிமைச் செல்வம் தம்பிக்குத் தகவின் நல்கி
நன்னெடும் கானம் சேர்ந்தான் நாமமும் இராமன் என்பான்
இன்நெடும் சிலைவலானுக்கு ஏவல்செய் அடியன் யானே

என்று நிறைவு செய்தான். தன்னைத் தம்பி எனச் சொல்லாமல் ஏவல்செய்யும் அடியன் என அனுமனிடம் இலக்குவன் கூறியது ஓர் அடியானிடம் இன்னொருவன் அன்பு மிகுதியால் கூறியது போலாம். நாமமும் அனுமன் என்றான் ஆஞ்சநேயன்; தலைவனின் நாமமும் இராமன் என்பான் இலக்குவன். என்ன அறிமுகம்!

இராமன் பிறந்தது முதல், காட்டுக்கு வந்தது, இராவணண் சூழ்ச்சி, சீதையை இழந்தது. கவந்தனைக் கண்டது, சபரிகாட்ட அங்கு வந்தது என எல்லாவற்றையும் சொல்லி முடித்தான். இராமபிரானின் திருவடியில் அனுமன் வீழ்ந்து வணங்கினான்.

இராமன் ஒரு கணம் அதிர்ந்து போனான். நான்கு மறைகளையும் கற்ற ஒரு அந்தணன் தன்காலில் விழுந்து வணங்குவதா? "கேள்வி நூல்களை நன்றாகக் கற்றுத் தேர்ந்த வேதவல்லுநனே! இது தருமமல்ல என் காலில் விழாதே" என்று சொல்லித் தடுக்க முற்பட்டான். "தாமரைக் கண்ணனே! நானும் ஒரு குரங்குதான்" என்று சொல்லிக் கொண்டே, அந்தண உருவம் நீங்கிப் பெரியதொரு வானர உருவம் எடுத்து நிமிர்ந்தான். யார்? அனுமன். எந்த அனுமன்?

கம்பனுக்கு இன்னும் ஆசை தீரவில்லை. ஆஞ்சநேயனின் முழுமையான பண்புகள் இன்னும் வெளிப்படவில்லை என்று

கருதியிருப்பாரோ கவிஞர்?

தனிமை கொண்டு, துணையின்றித் தவிக்கும் தருமதேவதையின் துணையாக வந்து துன்பம் தீர்ப்பவன்; மின்னல் ஒன்று வில்லாக வந்ததுபோன்ற வேகம் கொண்ட வில்லை ஏந்திய இராமஇலக்குவரே வியக்கும் அளவு உருஎடுத்தவன்; வேதமும் பிற அறநூல்களும் ஒரு உருவம் எடுத்து வந்தாலும் அதைவிடப் பெரிதாகக் கொண்ட தோற்றம் உடையவன் ; பொன் நிறம் கொண்ட மேருமலை அவனுடைய ஒரு தோளுக்கு ஈடாகாது என்று சொல்லத்தக்க மாபேருருவம் எடுத்தவன் - இதுதான் கம்பசித்திரம். பாட்டைப் படியுங்கள்

மின்உருக் கொண்ட வில்லோர் வியப்புற வேத நன்னூல்
பின் உருக் கொண்டது என்னும் பெருமையாம் பொருளும் தாழப்
பொன்உருக் கொண்ட மேரு புயத்திற்கும் உவமை போதாத்
தன்னுருக் கொண்டு நின்றான் தருமத்தின் தனிமை தீர்ப்பான்.

தருமம் என்ற அறக்கடவுள் நற்பேற்றை இழந்து தனிமையில் வாடித்தவிக்கிறதாம். அந்தத் தனிமைத் துன்பத்தைத் தீர்ப்பதற்காக வந்தவன் அனுமன் என்கிறார் கம்பர். 'தருமத்தின் தேவு' என்றும் 'அறவாழி' என்றும் இராமனைக் கம்பர் பல இடங்களில் கூறுகிறார். அந்தத் தருமதேவதை-அறக்கடல் ஆகிய இராமன் இப்பொழுது தனிமையில் துன்புற்று வந்தான். அந்த வருத்தத்தைத் தீர்ப்பதற்கு குரங்குருவில் இராமன் முன்னால் அனுமன் வந்து, தனக்கு அந்த ஆற்றல் உள்ளது என்பதை மெய்ப்பிக்க மாபேருருவம் - விசுவரூபம் - எடுத்துக் காட்டினான். இராமன் தனியாக இல்லையே, அவனுடைய நிழல் போல இலக்குவன் கூடவே தொடர்கிறானே என்ற வினா எழும். உண்மைதான். ஆனாலும் சீதாபிராட்டியைப் பிரிந்து துன்புற்ற தலைவன் தன் மன உணர்வுகளைத் தம்பியிடம் கூடச் சொல்ல முடியாதே? இன்னும் நெருக்கமான - ஆனால் உறவினன் அல்லாத ஒருவன் வேண்டும் - என்று இராமன் காத்திருந்தான் போலும்? அந்த வேளையில் அனுமன் வந்து தன்னுருக் கொண்டு நின்றான்.

எத்தகையது அந்த உருவம்? மூன்று உலகங்களையும் திரிவிக்கிரம அவதார காலத்தில் தம்முடைய திருவடிகளால் அளந்து தனதாக்கிக் கொண்டவன் செந்தாமரைக் கண்களையும் திருவாழியாகிய சக்கரத்தையும் உடைய காத்தல் கடவுளாகிய

இராமபிரான். அந்தத் தெய்வத்தால் கூட, பொன்னால் ஆன குண்டலங்களை அணிந்த அனுமனின் முகத்தைக் காண முடியவில்லை என்றால் அந்தப் பேருருவம் இப்படிப்பட்டது என்று சொல்லமுடியுமா?. கதிரவனின் பின்னால் நடந்து சென்று வணங்கிப் பணிந்து பழைமையான நூல்களை எல்லாம் படித்துணர்ந்த அனுமன் எடுத்த உருவம் அப்படி. தேவைப்படும்போது, தகுந்த சூழ் நிலையில் அவர்களுடைய உண்மை உருவம் வெளிப்படும் என்பதைத் கம்பர் குறிப்பாகச் சுட்டுகிறார் போலும்!

தான் தெய்வமாக இருந்தும் அனுமன் கொண்ட பேருருவம் ஒரு கணம் இராமனை மலைக்கச் செய்தது. பொய்கையில் பூத்து, காம்பிலிருந்து நீங்காது இன்னும் பொலிவுடன் மலர்ந்து இருக்கும் செந்தாமரை போன்ற கண்களை உடையவன் இராமன். அந்தக் கண்கள் வியப்பால் இன்னும் விரிந்தன. தம்பியைப் பார்த்துச் சொன்னான். "ஐய! இது பெரிய அற்புதமாக இருக்கிறதல்லவா? ஒருவனை அழிக்கும் தன்மையுள்ள கீழ்மைக் குணங்களாகிய ராஜசம், தாமசம் நீங்கி, ஒளிமிக்க மேலான குணமான சுத்த சாத்விகமே இந்த உரு எடுத்து வந்திருக்குமோ? என்றும் அழியாதிருக்கும் வேதங்களாலும் ஐயம் திரிபு இல்லாத தத்துவஞானத்தாலும் கூட அறியப்பட முடியாத பரம்பொருளே இப்படிக் குரங்காக உருவெடுத்து வந்திருக்கும் போலும்" என்று கூறினான்.

தாள்படாக் கமலம் அன்ன தடங்கணான் தம்பிக்கு அம்மா
கீழ்ப்படா நின்ற நீங்கிக் கிளர்படாதாகி என்றும்
நாள்படா மறைகளாலும் நவைபடா ஞானத்தாலும்
கோள்படாப் பதமே ஐய குரக்குருக் கொண்டது என்றான்

அனுமனைப் பற்றி இலக்குவனுக்கு இராமன் செய்யும் இன்னொரு அறிமுகம் இது. வேதங்களாலும், தத்துவஞானநூல்களும் அறிய முடியாதது எதுவாக இருக்கும்? அது மூலப்பரம் பொருளே. மூவரில் உருத்திரன் அம்சமாக வந்த அனுமனுக்கு இது பொருந்தும்.

"தம்பீ! இனி நமக்கு நல்லதே நடக்கும் என்பதற்கு அடையாளமாக நிமித்தம் பெற்றுள்ளோம். அதன் ஒரு குறிப்பு தான், மேம்பட்ட இந்த அனுமனை அடைந்தது. இனிமேல் நமக்குத் துன்பம் இல்லை. இனி வருவதெல்லாம் இன்பம் தருவதே ஆகும்.

வில்லேந்திய இலக்குவ! பேருரு எடுக்க வல்ல இந்த அனுமன் போன்ற பெருவீரன் குரங்குக் கூட்டத் தலைவனாகிய சுக்ரீவன் கட்டளைக்குப் பணிந்து குற்றேவல் செய்வான் என்றால் அந்த அரசனாகிய சுக்ரீவன் நிலையைச் சொல்ல முடியுமா?"

இப்படிச் சொல்லிச் சொல்லி மகிழ்ந்தான் இராமபிரான். அகமும் முகமும் ஒருசேர உவகைக் கடலில் மூழ்கின. அந்த மகிழ்ச்சித் திளைப்பைக்கண்ட அனுமன், "வெற்றியுடையவர்களே! நீங்கள் சற்று இப்படி இங்கு இருங்கள். நான் போய்க் குரங்கு அரசனை - சுக்ரீவனை - உங்களிடம் அழைத்து வருகிறேன்" என்று விரைந்து போய்விட்டான்.

ஒரு நீண்ட அறிமுகமாகப் போய்விட்டது. அனுமன் யார், அவன் அறிவும் ஆற்றலும் எத்தகையன என்று கவிஞன் பேசுவதை விடக் காப்பியத் தலைவனைக் கொண்டே அறிமுகம் செய்யும் அழகுப் படைப்பைக் கம்பர் இப்படிச் செய்து முடித்தார். மூவருக்கும் முதற்பொருளாக இருக்கும் தனிப்பரம்பொருளே உல கத்துயிர்களுக்கு அருள் காட்டும் வண்ணம் ஒவ்வொரு தடவை ஒவ் வொரு உரு எடுத்து வருகிறது. இதைப் பார்க்கவும் உணரவும் கூட ஒரு ஞானம் வேண்டும். தெய்வம் தரும் வரமும் வேண்டும். தன்னு டன் கூட இருக்கும் இலக்குவனுக்கு ஒன்றும் புரியவில்லை. அண்ணன் சொல்கிறார். அதை ஏற்றுக் கொள்ளவேண்டும். இது அவன் கற்றுக் கொண்ட வாழ்க்கை நெறி. அது பின்னரும் கூறப்படும்

இராம இலக்குவர் இன்னார் என்று தெரிந்து அவர்களுடன் உரையாடி, அவர்களுக்குத் தன் ஆற்றலையும் காட்டிய அனுமன் திரும்பிச் சென்று சுக்ரீவனைக் கண்டான். மனுக்குலத்தின் வரிசையில் மங்கல குணங்களின் வடிவாக வந்த இராமன், அவன் நெஞ்சில் நிறைந்து நின்றான். குரங்குக் கூட்டமும் இந்த உலகும் இனி பிழைத்துவிடும் என்ற நம்பிக்கை அவனுக்கு ஏற்பட்டது. அந்த உறுதியுடன் சுக்ரீவனிடம்,

"அரசே! மணம்மிக்க மாலை சூடியவனும் வாலி என்று சிறப்பித்து எல்லோரும் போற்றும் அளவிலா வலிமையுடையவனுமான உன் அண்ணனின் உயிரைப் போக்க எமன் வந்து விட்டான். இனி துன்பக்கடலை நாம் கடந்துவிடுவோம்" என்று சொல்லி கொண்டே ஆலால நஞ்சை உண்ட உருத்திரன்

போலக் கூத்தாடினான். சுக்ரீவனுக்கு ஒன்றும் புரியவில்லை. அனுமன் முகத்தையே கூர்ந்து பார்த்தான். அனுமன் பல பாடல்களில் இராம இலக்குவர் யார் என்பதைப் பற்றி விளக்கமாக சுக்ரீவன் மனம் கொள்ளுமாறும் கூறிவிட்டான்.

"இவர்கள் இருவரும் மண், விண், மற்றை உலகங்கள் எட்டுத்திசைகள் என எங்கும் நிரம்பியுள்ளவர்களைக் காக்க வந்தவர்கள். பகைவர்களால் பட்ட துன்பங்களை நீக்க அமுதம் போல வந்தவர்கள். பகைமன்னர் வீழ்ந்து வணங்கும் வலிமை மிக்க தயரத மாமன்னனின் புதல்வர்கள். பேரறிவு படைத்தவர்கள். பேரழகு மிக்கவர்கள்; உனக்கு உரிமையுடைய அரசைப் பெற்றுத் தர வந்தவர்கள்.

நீதி பிறழாதவர்கள். கருணைக் கடல் போன்றவர்கள். அறநெறியில் நிலைத்தவர்கள். எவருக்கும் மேலான பெருமை உடையவர்கள்; யாராலும் கற்பிக்கப்படாத ஞானத் தெளிவு பெற்றவர்கள். இவர்கள் பெற்ற புகழுக்கு அளவில்லை. விசுவாமித்திர முனிவர் அருளிய கொடிய வெம்படை கொண்டவர்கள்" என்ற அறிமுகத்துடன் இராமனும் இலக்குவனும் அதுவரை ஆற்றி வந்த வீரச்செயல்களை (இலக்குவன் வாயால் முன்பு கேட்டபடி) வரிசையாகச் சொல்லி முடித்தான்.

தாடகை வதம், அவள் மகன் சுபாகு அழிவு, அகலிகைக்குத் தந்த விமோசனம், சிவன் வில்லை வளைத்துச் சீதையை மணந்தது, தந்தை ஏவலால் தாய்சொல்ல அரசு துறந்து காடுபோனது, பரசுராமன் தோற்றது, கரன் முதலிய அரக்கர் அழிந்தது, சூர்ப்பநகையின் மூக்கு அரிந்தது, மாயமானின் சூழ்ச்சியால் தேவியைப் பிரிந்தது, விராடன், கவந்தனை அழித்தது, இப்போது சீதையைத் தேடிப்போகும் வழியில் இங்கு வந்தது என எல்லாவற்றையும் சுருக்கமாகவும் ஒன்று விடாமலும் சொன்னான். முனிவர்கள் தவம் செய்து இடைவிடாமல் பலகாலம் காண விரும் பும் இராம இலக்குவர் இப்பொழுது தாமே தம்மிடம் வந்துள்ளார்கள். அவர்களுடன் நட்பு கொள்ள வேண்டும் என அனுமன் கூறி முடித்தான்.

சுக்ரீவன் அனுமன் பேசியதை உற்றுக் கேட்டான். அனுமன் சொற்கள் ஒரு நம்பிக்கையை ஊட்டின. "பொன்னுக்குச் சமமானவனே! உன்னைத் துணையாக அடைந்த எனக்கு என்ன

குறை! அடையமுடியாத பொருள் எது உண்டு? வா போகலாம்" என்று சொல்லிக் கொண்டு இராமபிரானிடம் வந்தான். வந்து, இராமபிரானைக் கண்டான் என்று சொல்ல முடியாது. பின் என்ன?

கதிரவன் மைந்தனாகிய சுக்ரீவன் தாமரை மலர்கள் மலரப்பூத்த அழகும், காளமேகம் ஒன்று அதைத் தழுவிய எழிலும், இவற்றுக்கிடையில் குளிர்ச்சி பொருந்திய நிலா உதயமாகின்ற மரகதமலை போன்றவனாகிய இராமனை அழகிய குண்டலங்கள் இல்லாமல், துறவுக் கோலம் பூண்டும் இனிமையாக இருக்கும் திருமுகத்தையும் குளிர்ச்சிதரும் கண்களையும் உடைய இராமனைப் பார்த்தான். அரிய பாடல்; பெருமானின் திருமேனி அழகைச் சிலையில் செதுக்கியது போன்ற சொற்கட்டு; 'பச்சைமாமலை போல் மேனி' என்னும் ஆழ்வார் பாடலை நினைவூட்டும் பாட்டு; படியுங்கள்.

> கண்டனன் என்ப மன்னோ கதிரவன் சிறுவன் காமர்க்
> குண்டலம் துறந்த கோல வதனமும் குளிர்க்கும் கண்ணும்
> புண்டரிகங்கள் பூத்துப் புயல் தழீஇப் பொலிந்த தங்கள்
> மண்டலம் உதயம் செய்த மரகதக் கிரியன்னானை

சுக்ரீவனுக்கு மகிழ்ச்சி; வியப்பு. உலகம் தோன்றிய நாளிலிருந்து அன்றுவரை உலகத்திலிருந்த நல்வினைகள் எல்லாம் ஒன்று திரண்டு இரண்டு உருவங்களாக வந்தன போல இருந்த அக்காட்சி அவனைத் தெய்வத்திருமுன் ஓர் அடியார் உருகுவது போல உருகச் செய்தது. கூர்ந்து நோக்க நோக்கப் பரம்பொருளின் தெய்வ முழுமை சுக்ரீவன் கண்ணிற்குத் தென்பட்டிருக்க வேண்டும். "தன்னின் மேலொரு பொருளும் இல்லா மெய்ப்பொருள் வில்லும் தாங்கிக் கால்தரை தோய நின்று கண்புலனுக்கு உற்றது அம்மா" என்று அவன் அண்ணன் வாலி பின்னால் உணர இருப்பதை முன்கூட்டியே காட்சியாகப் பெறும் பேறு சுக்ரீவனுக்குக் கிட்டியது. மானிடனாக இப்படி ஒருவன் தன்முன்னால் நிற்பதை அவனால் நம்பமுடியவில்லை. வேறு வேறு உயிரினங்கள், தேவகணங்கள் என்ற இவற்றை எல்லாம் இராமன் மானிடனாகப் பிறந்ததாலேயே மானுடம் வென்றுவிட்டது என வியந்து போனான். எல்லாரும் அடிக்கடி மேற்கோளாகக் காட்டும் கம்பனின் இந்த அற்புதச் சொல்லாட்சி, சுக்ரீவன் வாயில் வெளிப்பட்டது என்பதை உணர வேண்டும்

தேறினன் அமரர்க்கு எல்லாம் தேவராம் தேவரன்றே
மாறிஇப் பிறப்பில் வந்தார் மானுடாரகி மன்னோ
ஆறுகொள் சடிலத்தானும் அயனும் என்று இவர்கள் ஆதி
வேறுள குழுவையெல்லாம் மானுடம் வென்றது அன்றே

சடைமுடிதாங்கிய சிவபெருமானும் பிரமனும் மற்ற தேவர்களும் ஒருங்கு சேர்ந்து மானிட இராமனாக வந்ததைக் கண்ணுற்ற சுக்ரீவன், அவனை நெருங்கினான். இராமன் தன் கையை நீட்டி அவனை அருகில் அமருமாறு வேண்டினான்.

அறத்தைக் காத்து நிறுத்துவதற்காக இருவரும் ஒன்று சேர்ந்து இருந்தது போலத் தோன்றினார்கள். இருவரும் தத்தம் செய்திகளையும் நிலைமையையும் பேசிக்கொண்டார்கள். சுக்ரீவன் தன் அண்ணனின் கொடுமையைச் சொல்லி, தன்னை காக்குமாறு இராமனிடம் அடைக்கலம் புகுந்தான். "சரண் உனைப் புகுந்தேன் என்னைத் தாங்குதல் தருமம்" என்றான். அதை ஏற்றுக் கொண்ட இராமன் அவனை உயிர்த்துணைவனாகக் கொண்டான். எல்லாரும் அதைக் கேட்டு மகிழ்ந்தார்கள். அனுமன் சுக்ரீவன் இருந்த இடத்துக்கு எழுந்தருளவேண்டும் என இராமனிடம் விண்ணப்பித்தான். அதற்கு உடன்பட்டு இராம இலக்குவர்கள் சுக்ரீவன் தங்கியிருந்த அழகிய சோலையைச் சென்று சேர்ந்தார்கள். இராமன் நீராடி விருந்துண்டு முடித்தான். மலர்ப்படுக்கையில் அமர்ந்து கொண்டு இராமனும் சுக்ரீவனும் பேசிக் கொண்டிருந்தார்கள்

இராமன் சுக்ரீவனைப் பார்த்து "என்னைப் போல நீயும் மனைவியைப் பிரிந்து வருகிறாயா என்ன?" என்று கேட்டான். அதற்கு அனுமன் தான் விடை சொன்னான். கிஷ்கிந்தையில் வாலிக்கும் சுக்ரீவனுக்கும் நடந்த போராட்டத்தை விளக்கமாக எடுத்துக் கூறினான். அண்ணனுக்குத் தோற்று அஞ்சி, அந்த மலையில் வாழ்ந்து வருவததோடு வாலி சுக்ரீவனுடைய மனைவியான உருமையையும் பறித்துக் கொண்டு விட்டான். இதுவே அதன் சுருக்கம். எல்லாவற்றையும் கேட்ட இராமனுக்குக் கோபம் பொங்கியது. தம்பி மனைவியைக்கவர்ந்த வாலியைக் கொன்று, அரசையும் மீட்டுத் தருவதாகச் சுக்ரீவனுக்கு உறுதி கூறி னான். அதைக் கேட்டு மகிழ்ந்த சுக்ரீவன் தன் வீரர்களுடன் பேசி முடிவெடுக்கக் காலம் வேண்டினான்.

வாலி அளவிலா ஆற்றல் பெற்றவன்; தன்முன் எதிரில் யார் நின்றாலும் அவர்களின் வீரத்தில் பாதியைத் தான் பெற்றுக் கொள்ளும் வரம் வாங்கியவன். சிறந்த சிவபக்தன். சிவன் பேரருளை முழுமையாகப் பெற்றவன். அந்த வாலியை இராமனால் கொல்லமுடியுமா? என்பதே சுக்ரீவன் ஐயம். அதற்கு விடை சொன்னான் அனுமன்.

“வலிமையுடைய வேந்தே! உன் மனத்தில் ஓடும் எண்ணத்தை நான் அறிந்து கொண்டேன். மகாவீரனாகிய வாலியைக் கொல்லக் கூடிய வல்லமை இந்த இருவரிடமும் இல்லை என்று நீ ஐயப்படுகிறாய். நான் சொல்வதைக் கேள்

இராமனை நெருங்கிப் பார்த்தபோது ஒன்று கவனித்தேன். அவனுடைய திருவடிகளிலும் திருக்கரங்களிலும் சங்கு சக்கரக் குறிகள் பொருந்தியுள்ளன. ஓர் ஆடவருக்கு இருக்க வேண்டிய முழுமையான உடலமைப்பு இலக்கணம் வேறு யார்க்கும் இல்லை. சிவந்த கண்ணணாய், வில்லைக் கையிலேந்தி இங்கு வந்திருக்கும் இராமன், காக்கும் கடவுளாகிய திருமாலே தவிர வேறு யாரும் இல்லை. அறத்தை அழியாமல் நிலை நிறுத்துவதற்காக இப்படி வந்துள்ளான்

முப்புரங்களையும் அவை தீயில் அழிந்துபோகும்படி சினந்து சிரித்துச் சாய்த்தவன் சிவபெருமான். அதே கடவுள் மார்க்கண்டனுக்காகக் காலனாகிய எமனையும் எட்டி உதைத்துத் தன் வலிமையை வெளிப்படுத்தினான். அந்தப் புனிதன் தந்த பொன்னிறமான சிவதனுசை-வில்லை - யாரால் முரிக்கமுடியும்? பரசுராமன் கையிலிருந்து அதை வாங்கி முரித்த வல்லமை திருமாலாகிய இராமனுக்கே உண்டு.

“என்னுடைய தந்தையான காற்றுக்கடவுள் யாரைக் கண்டால் பேரன்பு உண்டாகி எலும்பும் கூட உருகும் அளவு நீ நெகிழ்வாயோ; அவனே திருமால்; அவனுக்கு அடிமை செய்” என்று சொல்லியிருந்தான். இப்பொழுது என் மனமும் உடலும் அந்நிலையில் உள்ளன. ஆதலால் வந்தவன் மானுடன் அல்லன்; திருமாலே.

இன்னும உனக்கு ஐயம் நீங்கவில்லையானால் ஒன்று செய்யலாம். இதோ நின்று வளர்ந்த இந்த மாமரங்கள் ஏழினுள்

ஒன்றை, இராமனுடைய அம்பு ஊடுருவிச் செல்லுமாறு ஏவச் செய்யலாம். அப்பொழுது உனக்குத் தெளிவு உண்டாகும்" என்று நுட்பமான அறிவுடன் பேசினான் அனுமன்.

சுக்ரீவனுக்கு இந்தச் சொற்கள் அளவிலா மகிழ்ச்சியைத் தந்தன. நல்லது "நல்லது சொன்னாய்" என்று கூறிக் கொண்டே அனுமனைக் கட்டித் தழுவிக் கொண்டான். பின்னர் இராமனிடம் சென்று, "உம்மிடம் ஒரு விண்ணப்பம்" என்று சொல்லி மாமரங்கள் நின்ற இடத்துக்கு இராமனை அழைத்துப் போய் "இங்குள்ள ஏழு மரங்களில் ஒன்றை ஊடுருவுமாறு நீங்கள் அம்பைச் செலுத்த வேண்டும்; அப்போதுதான் என் மனத்திலுள்ள துன்பமும் நீங்கும்" என்று கேட்டுக் கொண்டான்.

இராமனுக்கு சிரிப்புத்தான் வந்தது. வானவருடைய இறைவனுக்கு இதெல்லாம் பெரிய செயலா? ஏற்கெனவே விராடனுடன் நடந்த போரில் மராமரத்தை அழித்தவனாயிற்றே! மராமரங்கள் வளர்ந்திருந்த இடத்துக்கு அருகில் சென்று, வில்லை வளைத்து நாணை ஏற்றினான். சாதாரண மரங்கள் அல்ல; எந்தத் தாவரவியல் அறிவினாலும் அறியமுடியாத அருமையுடைய மரங்கள். உயர்ந்து வளர்ந்தவை; உறுதியாக ஊன்றி நின்றவை; ஊழிதோறும் அழியாது இருப்பவை. ஏழுமலைகளே மரங்கள் ஆனவை போல்பவை. அத்தகைய மரங்கள் முன்நின்று இராமன் நாண்ஒலி எழுப்பினான். உலகத்தின் இறுதிக் காலம் வந்ததுபோல அண்டங்கள் அதிர்ந்தன. அனுமன் உள்ளிட்டோர் இராமனின் வில்லாற்றலைக் காண்பதற்காகக் கூடி நின்றார்கள். "வெய்ய வாளியை ஆளுடை வில்லியும் விட்டான்". எல்லா உயிர்களையும் அடியார்களையும் ஆளாக உடைய வில்வீரன் அம்பை ஏவினான்.

ஒரு மரத்தை ஊடுருவிச் சென்றால் போதும் என்பதே சுக்ரீவன் விண்ணப்பம். ஆனால் வீரன் அம்போ ஏழு மரங்களையும் துளைத்தது. அதோடு நின்றுவிடவில்லை. பூமிக்குக் கீழே இருந்த ஏழு உலகங்களையும் ஊடுருவியது. அண்டம் முழுவதும் சுற்றிப் பார்த்து "ஏழு ஏழாக எது இருந்தாலும் ஊடுருவலாம்" என்று தேடியபின்னர் அப்படி ஏதும் இல்லாததால் இராமபிரானிடமே மீண்டுவிட்டது. ஏழு கடல், மேல் ஏழுஉலகம், ஏழுமலை, ஏழுமுனிவர், ஏழு குதிரைகள், ஏழுகன்னிமார்கள் இவர்கள் தப்பிப்பிழைத்தனர் தாம்கொண்ட தெய்வ பக்தியால்.

சுக்ரீவன் நெடுஞ்சாண் கிடையாக இராமன் காலடியில் வீழ்ந்து வணங்கினான். பலப்பல சொல்லிச் சொல்லி நெகிழ்ந்து போனான் 'இவை இவை செப்பும்' என்பார் கம்பர். ஆனால் ஒருபாடல் படிப்பதற்கும் பாராயணத்துக்கும் துதிப்பதற்கும் தொழுவதற்கும் உரியது. சுக்ரீவன் சொன்னான்;

வையம் நீ வானு நீ மற்றுநீ மலரின்மேல்
ஐயன் நீ ஆழிநீ ஆழிவாழ் அமலன் நீ
செய்ய தீவினைதெறும் தேவுநீ நாயினேன்
உய்ய வந்து உதவினாய் உலகம்முந்து உதவினாய்

"பெருமானே! நீதான் முன்பு உலகங்களை எல்லாம் உண்டாக்கிய பெருங்கடவுள். இந்த நிலவுலகமும் நீயே; வானும் நீயே; மற்றுள்ள நீர், நெருப்பு, காற்று ஆகிய பூதங்களும் உன்வடிவங்களே. தாமரைமீது பள்ளிகொள்ளும் பிரமன் நீ. உலகத்தைச் சூழந்து பரந்துள்ள கடலும் நீ! திருப்பாற் கடலில் பள்ளி கொண்டுள்ள திருமாலும் நீயே; தீவினைகளை எல்லாம் அழிக்கத் தோன்றிய தருமதேவதையும் நீயே; நாய்போன்ற, கடைப்பட்ட நிலையில் இருக்கும் என்னைக் கடைத்தேற்றி அருளுமாறு வந்த தெய்வமே! உன்னை வணங்குகிறேன். உன்னுடைய ஆற்றலைச் சோதிக்க முற்பட்டது என்குற்றம்; என் அறியாமை. நீ மன்னவர்க்கரசன். நான் உன் அடியாருக்கும் அடியான்"

என்று சொல்லி மன்னிப்புக்கேட்கும் குரலில் தொழுதான் சுக்ரீவன்.

அருமையான பாடல் இது. இராமபிரானின் எல்லாமாக இருக்கும் பரம்பொருள் தன்மையையும் தீமைகளை அழிக்கத் தேடிவரும் அருளோட்டத்தையும் பூரணமாகப் பதித்துள்ள பாடல். "**நாயினேன் உய்யவந்து உதவினாய்**" என்று ஒரு குரங்கு உருகுவது தனக்காக அல்ல; இந்த உலகுக்காக, மானிடர்க்காகவும் தான். இதை ஓதியும் உணர்ந்தும் அடங்கியும் அறிந்தும் பயன்பெறவேண்டியது மனிதனே!

முதலில் பார்த்தபோது கவிக்குலத்து அரசனாக இருந்து இராமபிரானுக்கு அருகில் அமர்ந்த சுக்ரீவன் வேறு; இப்பொழுது பேராற்றல் கொண்ட திருமாலின் தோற்றம் கண்டு வணங்கும் பக்தனாக மாறிவிட்டான். அதனால் தான் தன்னை ஒப்புடைய உன் அடியாருக்கு அடியன் யான் என்று அடைக்கலம் புகுந்தான்

"அடியார்க்கும் அடியேன்" என்ற தொடர் தமிழ்ப் பக்தி இயக்கத்தின் ஆணிவேர் என்பது வரலாறு காட்டும் பாடம்.

இராம சுக்ரீவ நட்பு உறுதிப்பட்டது. இராவணன் சீதாபிராட்டியை எடுத்துச் சென்றபோது, பிராட்டி அந்த மலையில் கீழே வீசி எறிந்த அணிகலன்களையெல்லாம் சுக்ரீவன் காட்டினான். அவற்றைக் கண்ட இராமனுக்குப் பழைய நினைவுகள் தோன்றி வருத்தின; மயக்கம் அடைந்தான். சுக்ரீவன் தாங்கி, ஆறுதல் கூறித் தேற்றினான். அந்தச் சமயத்தில் அருகில் இருந்த அனுமனும் இராமபிரானுக்கு நம்பிக்கையூட்டும் சொற்களைப் பேசினான்.

"பெரிய மலைபோன்ற தோளுடையவனே! உன்னிடம் ஒரு விண்ணப்பம்; ஏற்றருளவேண்டும். நாம் செய்யக்கூடியது முதலில் கொடிய வாலியை அழிக்கவேண்டும்; பிறகு சுக்ரீவனைக் கோமகனாக முடிசூட்டவேண்டும். வானரப்படைகளை ஒன்று திரட்டி அவர்கள் மூலம் இராவணன் இருக்குமிடத்தைத் தேடிக்காண வேண்டும். இதைவிட்டு வேறுவழியில்லை.

வண்டுகள் மொய்க்கும் மாலையணிந்த பெருமானே! இராவணன் இருக்கும் இடம் மண்மீதா மலைமீதா விண்ணிலா அல்லது பாதாள உலகத்திலா என்று மானிடவடிவம் தாங்கிய காரணத்தால் அறிய முடியவில்லை.

அரக்கர்களோ மாய ஆற்றல் பெற்றவர்கள். ஒரு நொடிப்பொழுதில் எல்லா உலகங்களிலும் சென்று சேர்வார்கள். அங்கு தங்களுக்குப் பிடித்தமான பொருள் எதுவாக இருந்தாலும் கைப்பற்றிக் கொள்வார்கள். உயிர்களின் முன்செய்த கருமவினையே உருவெடுத்து வந்தால் போலத் துன்புறுத்துவார்கள். வினை ஓய்ந்து திரும்புவது போல இவர்களும் சென்று விடுவார்கள். ஆதலால் அவர்கள் எங்கிருக்கிறார்கள் என எளிதில் அறிய முடியாது?

ஒரே சமயத்தில் பல இடங்களுக்கும் வீரர்களை அனுப்பித் திருமகளாகிய பிராட்டி உறையும் இடத்தைக் கண்டறிய வேண்டும். அதைவிட்டு விட்டு வரிசையாக ஓரிடம் பார்த்த பின்னர், இன்னொரு இடம் தேடிச் செல்வது எளிதன்று. உலகம் பரந்து கிடக்கிறது. முழுமையாக அப்படித் தேடுவதில் துன்பம் உள்ளது. தவிர அளவில்லாத காலம் ஆண்டுகளாகச் செலவாகும்.

எங்களுடைய வானரசேனை எழுபது வெள்ளம் என்ற பெருந்தொகையை உடையது. ஏவிய உடனே, ஊழிக்கால வெள்ளம் போல உலகம் எல்லாம் பரந்து மூடிவிடும். கடலைக்

குடித்து முடியுங்கள் என்றோ, பிரமன் படைத்த அண்டத்தைத் தலைகீழாகப் புரட்டுங்கள் என்றோ கட்டளையிட்டால் போதும்; தவறாது செய்து முடிப்பார்கள்".

தெளிந்த சொற்கள்; தீர்க்கமான முடிவு. முதலில் வாலிவதம்; சுக்ரீவனுக்கு மகுடம்; கடைசியில் படை திரட்டல் என்ற இந்த வரிசை அனுமனின் மேலாண்மை ஆற்றலைக் காட்டும். வாலிக்கும் சுக்ரீவனுக்குமான போரில் பிளவுபட்டு நிற்கின்றனர் வானர வீரர்கள். இருவரில் மூத்தவனும் வல்லவனுமான வாலி இறந்தால் தான் வீரர்கள் ஒன்று சேர்வர். அப்படி அவர்களைத் திரட்ட இன்னொரு நல்ல மன்னன் வேண்டும். அது சுக்ரீவனைத் தவிர வேறு யாரால் முடியும்? என்று இந்த நோக்கில் தன் சிந்தனைகளைக் கொட்டினான் அனுமன். ஒரு சிக்கலை எப்படி அணுகுவது எப்படித் தீர்ப்பது எனத் திட்டமிடும் முன்னோக்கு வெளிப்பட்ட இடங்களில் இதுவும் ஒன்று.

"நீதிநெறி பிறழாத தெய்வமே! இப்படிச் செய்வது தான் நல்லது என நான் நினைத்தேன்" என்று கூறி முடித்தான். 'ஆம், நீ சொன்னதே சரியானது " என்று இராமபிரானும் ஏற்றுக்கொண்டானாம். எல்லாரும் வாலியைத் தேடிப் போனார்கள்

**"ஆதலால் அன்னதே அமைவதாம் என**
**நீதியாய் நினைந்தனென் என நிகழ்த்தினான்**
**சாதுவாம் என்று அத் தனுவின் செல்வனும்**
**போதுநாம் வாலிபால் என்னப் போயினார் "**

## 5. வாலி மறைந்தான்

ஒரு மலைச்சாரலின் வழியே எல்லாரும் வாலியிருக்கும் இடம் நோக்கி நடந்தார்கள். இயற்கை கொலுவிருக்கும் அழகுமலை; பரந்து நிழல் தரும் சுரபுன்னை, ஆச்சா, மா முதலிய மரங்கள்; மணம் வீசும் ஏலம், மிளகு முதலிய கொடிகள்; வாழை, மா முதலிய கனிதரும் மரங்கள்; சண்பகம் சந்தனம் முதலிய நறுமணம் வீசும் அடர்ந்த மலை. யானைகள், குரங்குகள், சிங்கங்கள், பாம்புகள் உலாவிய மலை. அருவிகள், வீழ்ச்சிகள், பொய்கை பரந்த மலை எனப்பல பாடல்களில் கம்பர் இயற்கைத் தாயின் அழகு ஓவியத்தை வரைந்திருக்கிறார். இந்த வழியில் போய் வாலியின் இடத்தில் நின்றார்கள். அதுதான் கிஷ்கிந்த மலை. அந்த இடத்தில் நின்றுகொண்டு இராமன் சுக்ரீவனிடம் சொன்னான்;

> "நீ பெருங்குரல் எடுத்து வாலியைப் போருக்கு அழை. அவன் வந்து உன்னிடம் போர் செய்யும் போது, நான் வேறோர் இடத்தில் நின்று, வாலிமேல் அம்பு எய்து கொல்வதாக முடிவு செய்துள்ளேன். இது என் தீர்க்கமான கருத்து"

இதைவிட வேறு என்ன அருளை இராமன் சுக்ரீவனுக்குத் தரமுடியும்? அந்தச் சொற்களைக்கேட்டு அவன் ஆரவாரம் செய்தான். நீர்பொங்கும் அலைகடல் அஞ்சும்படி, நீலமேகங்களின் இடிமுழக்கம் நாணமடையும்படி, நிலத்தில் வாழ்ந்தவர்கள் உடல் வியர்க்க இங்கும் அங்கும் ஓடும்படி, மேலுலகில் இருந்தவர்கள் அச்சத்தால் விம்மும்படி - சுக்ரீவன் ஆர்ப்பரித்தானாம்!

அந்த ஆர்ப்பொலியை வாலியும் கேட்டான். வானும் மண்ணும் எதிரொலித்த பேரொலி அவன் காதில் விழாமலா போகும்! சிரித்தான்; தோளை உதறினான்; கோபம் பொங்கத் தன்கைகளைத் தட்டினான். எப்படி? மேல் சொன்னது போலவே. பூமியைக் காவல் செய்யும் எட்டுத் திசை யானைகள் தம் மதச்செருக்கை ஒழிந்தன. இடிகள் தம் வலிமை அழிந்தன. மேலுலகில் தேவர்கள் அஞ்சினர்; நிலத்திலோ குன்றுகள் நெரிந்தன, பொடிப்பொடியாயின.

வாலிவந்தான்; தன் மனைவி தாரை தடுத்து அறிவுரை

சொல்லியதைக் கேட்காமல் வந்தான்; தன் வலிமையையே பெரிதாக எண்ணி அவன் ஆணவப்பட்டபோது, சுக்ரீவனுக்குத் துணையாக வந்திருப்பவன் "இராமன் என்பவன் உன்னுயிர்கோடலுக்கு உடன்வந்தான்" எனத் தெளிவாகச் சொன்னபிறகும் வாலி வந்தான். தருமதேவதையைக் குறை சொன்ன பாவி என்றும், பெண்ணாக இருந்ததால் அறியாமையால் அப்படிச் சொன்னதால் பிழைத்தாள் என்றும் அவளைக் குறைப்பட்டுக் கொண்டானே தவிர, தன் சாநாள் வந்துவிட்டது என்று உணராமல் வாலி வந்தான்.

கீழ்த்திசையில் காலையில் உதயமாகும் சிவந்த சூரியன் போன்று வாலி வருவதைப் பார்த்த இராமனே ஒரு கணம் அதிர்ந்து போனான். தன்னால் கொல்லப்பட இருக்கிற ஒருகுரங்கு என்று அவன் நினைக்கவில்லை; சுக்ரீவனுக்கு உறுதி தந்தபடி அவனுடைய எதிரியான இவன் தனக்கும் எதிரி என்பது ஒரு கணம் மறந்துபோயிற்று. தம்பியிடம் சொன்னான்.

> "இலக்குவா! உன்னுடைய கண்களைக் கூர்மையாக ஆக்கிக் கொண்டு நேரே பார்ப்பாயாக. அசுரர்கள், தேவர்கள் எல்லாம் ஒருபுறம் கிடக்கட்டும். எந்தக்கடல், எந்த ஊழிக் கொடுந்தீ இந்த வாலியின் உடம்புக்கு உவமையாக இருக்கும்? நாம் சொல்ல முடியும்?"

இராமன் வியப்பு கம்பனின் உள்ளத்தையும் அதிரவைத்தது. ஒரு மாவீரனே பார்த்துத் திகைக்கும் இன்னொரு மாவீரனின் வீரத்தோற்றத்தை என்றுமுள தென்தமிழின் செஞ்சுவையில் தோய்த்து எழுதுகிறார்.

> "அவ்வேலை இராமனும் அன்புடைத் தம்பிக்கு 'ஐய'
> செவ்வே செலநோக்குதி தானவர் தேவர் நிற்க
> எவ்வேலை எம்மேகம் எக்கால் எக்கால வெந்தீ
> வெவ்வேறு உலகத்து இவன்மேனியை மானும்" என்றான்

அனுமனின் தீர்க்கதரிசனம் அப்பொழுது தான் இராமனுக்குப் புரிந்தது. வாலியை அழித்தால் தான் சீதையை தேடிக்காண வழிபிறக்கும் என்று முன்கூட்டியே அனுமன் கணித்தது சரிதான் என்று தெளிவாயிற்று.

போர் தொடங்கியது. இருவரும் சளைக்காமல் போரிட்டார்கள். ஒரு கட்டத்தில் சுக்ரீவனைக் கொல்வதற்காக அவனை வாலி, தன் இரண்டு கைகளாலும் மேலே தூக்கினான். அப்படி இருந்த

நிலையில், அவனுடைய மார்பில் இராமனின் அம்பு பாய்ந்தது. குருதி ஊற்றாகக் கொப்பளித்துப் பெருகி ஓட, தம்பியைக் கீழே எறிந்து விட்டு தன் மீது அம்பை ஏவியவனைக் கண்கள் தேட யாரும்தெரியாத நிலையில், யார் இதைப் போட்டிருக்க முடியும் எனக் குனிந்து 'வீரனின் சுடுசரத்தை' - யாராலும் தடுக்க முடியாத அம்பைப் பறித்துச் சோதித்தான். அதில் தான் அந்த அற்புதத் தெய்வத்தின் அற்புத நாமம் பொறிக்கப்பட்டிருப்பதைக் கண்டான்.

இராமனின் அடியார்கள் நாளும் ஓதிஉருகும் தெய்வ அருள் நிறைந்த பாடலை வாலியின் உணர்வால் கம்பர் பாடுகிறார். சுக்ரீவனுடைய துதி முன்வந்தது. இது வாலியின் துதி அல்ல. ஆனால் மெய்யுணர்வு தலைப்பட்ட நேரத்தில் வாலிக்கு இப்படித் தோன்றியிருக்குமோ என்று குழைந்த கம்பரின் நெஞ்சத் திரையில் மலர்ந்த ஓவியம்.

> மும்மை சால் உலகுக்கு எல்லாம் மூலமந்திரத்தை முற்றும்
> தம்மையே தமர்க்கு நல்கும் தனிபெரும் பதத்தைத் தானே
> இம்மையே எழுமை நோய்க்கு மருந்தினை 'இராம' என்னும்
> செம்மை சேர் நாமம் தன்னைக் கண்களில் தெரியக் கண்டான்

நெஞ்சுருக்கும் பாடல். "இராம" என்னும் திருப்பெயரைக் கண்ணில் காணும் பேறு ஒரு குரங்குக்கு கிடைத்தது. என்ன திருப்பெயர் அது?

1. மூவுலகு மூவுலகு என்று பேசுகிறார்களே, அந்த உலகங்கள் எல்லாம் தியானிக்கும் மூலமந்திரம் எதுவோ அது.
2. அப்படிச் சொல்லித் தன்னைத் தியானிக்கும் அடியார்களுக்கு முற்றிலுமாகத் தன்னையே பேரின்பமாகத் தருகின்ற ஒப்பற்ற பெருமந்திரம் எதுவோ அது;
3. ஏழேழு பிறப்பில் ஒருவன்செய்த தீவினைகளாகிய நோய்களை இந்த ஒரு பிறவியிலேயே அறுத்து எறிகின்ற ஆற்றல் மிக்க மந்திரம் எதுவோ அது ;
4. செம்மையாகிய உயர் நிலைதரக்கூடிய மந்திரம் எதுவோ அது;

அந்த 'ராம' என்னும் திருப்பெயர் தன் கண்ணுக்கு புலப்படுமாறு அம்பில் பொறிக்கப் பட்டிருப்பதை வாலி கண்டானாம், 'இராம இராம' என்று ஒருமுறை சொன்னால் கூடப்போதும் நல்வினைகள் கிட்டும் என்று அடியார்களுக்கு வழியும் தெளிவும் ஆறுதலும் காட்டும் பாடல். ஓதி மகிழுங்கள்.

வாலிக்கும் இராமனுக்கும் தொடர்ந்து நடந்த சொற்போர் யாரும் அறிந்தது. அது இங்கே விரிக்கப்பட்டவில்லை. சிறிதுநேரம் கழித்து, பரம்பொருளாகிய இராமபிரான் இப்படித் தன்னைக் கொல்ல முற்பட்டதற்கு ஒரு நோக்கம் இருந்திருக்க வேண்டும் என உணர்ந்தான். "அவியுறு மனத்தனாகி அறத்திறன் அழியச் செய்யான்" இராமன் என்று நம்பினான். இந்த உணர்வு வந்தவுடன் இராமனைப் பல பாடல்களில் துதித்து வணங்கினான். பிறகு இராமனிடம் சுக்ரீவன், அனுமன் முதலியோருடைய இயல்புகளைக் கூறினான். அனுமன் பற்றிய வாலியின் அறிமுகம் சிந்தனைக்குரியது.

> "பெருமானே! பிராட்டியை எடுத்துச் சென்ற இராவணனை என்வாலால் இறுக்கிக்கட்டிக் கொண்டுவந்து உன்முன்னால் போட்டுக் குரங்கு போடும் ஆட்டத்தைக் காட்டவும் எனக்கு ஆசை; ஆனால் இப்போது என்னால் முடியாது. அதுபோன்ற பிறசெயல்கள் செய்வதற்கு மிகவும் தகுதி வாய்ந்தவன் இந்த அனுமன்.
>
> அனுமன் என்ற இவனை வெறும் குரங்கு என நீ கருதாதே. ஐயனே! உன்னுடைய சிவந்த கரத்தில் ஏந்தி இருக்கிறாயே ஒரு வில், அது போன்றவன்; அல்லது அந்த வில்லே அனுமனாகப் பிறப்பு எடுத்து வந்தது என்று நீ கருதவேண்டும்.

"அனுமன் என்பவனை ஆழிஐய நின் செய்ய செங்கைத்
தனு என நினைதி"

அனுமனுடைய ஆற்றல் முழுதையும் இந்த வரி சுட்டுகிறது. இராமனுடைய வில்லுக்கு இருந்த அத்தனைச் சிறப்புகளும் அனுமனுக்கும் இருந்தன என்பதைக் காப்பியத்தைக் கூர்ந்து கற்கும் போது தெரியலாம்.

வாலியின் உயிர்போயிற்று. தாரை வந்து புலம்பினாள்; வானரவீரர்கள் அதிர்ந்து நின்றார்கள். துன்ப ஓலம் அடங்கியதும் அனுமன் வானரமகளிர்களை ஏவித் தாரையை அந்தப்புரத்தில் சேர்த்தான். கூடவே அங்கதனைக் கொண்டு வாலிக்குச் செய்ய வேண்டிய நீத்தார் கடன்களைச் செவ்விதாகச் செய்தும் முடித்தான். துன்பம் சூழ்ந்த நேரத்திலும் "நடந்தது நடந்துவிட்டது. இறப்பு இறப்புதான். அதையே எண்ணி வருந்துவதில் பயனில்லை. செய்ய வேண்டியதைப் பார்க்கவேண்டும்" என்ற தெளிவை அனுமன் பெற்றிருந்ததைக் கம்பர் காட்டுகிறார்.

## 6. அரசனாகச் சுக்ரீவன்

வாலிமறைந்தான். கிட்கிந்தைப் பேரரசுக்கு மன்னனாகச் சுக்ரீவனுக்கு இலக்குவன், இராமன் ஆணையை ஏற்று, மணிமுடி சூட்டினான். அங்கதன் இளவரசப் பட்டம் சூட்டப்பெற்றான். எல்லாரும் கிஷ்கிந்தை திரும்பினார்கள். இராம இலக்குவர்கள் அங்குபோக மறுத்தார்கள். பதினான்கு ஆண்டுகள் காடுறை வாழ்க்கை என்ற அன்னை கட்டளையை அவர்கள் மீறத் தயாராக இல்லை. சுக்ரீவன் அழைத்த போது இந்தக் காரணம் காட்டியே மறுத்தார்கள்.

அனுமன் காட்டிலேயே இராமஇலக்குவருடன் இருந்து பணிசெய்ய விரும்பித்தன் ஆவலைத் தெரிவித்தான். "இங்கேயே ஒரு நாய்போல அடியனாக இருந்து நீங்கள் ஏவியதைத் தெரிந்தவகையில் செய்ய ஆணையிடவேண்டும்'' எனக் கேட்டபின், அதற்கு அவனிடம் இராமன் கூறிய மாற்றத்தை இரண்டு பாடல்களில் எழுதி, இராமபிரான் அனுமனை எந்த அளவுக்கு அறிந்தும் உணர்ந்தும் போற்றியிருக்கிறான் எனப்புலப்படுத்துகிறார் கம்பர்.

"நிரம்பினான் ஒருவன் காத்த நிறையரசு இறுதி நின்ற
வரம்பிலாத அதனை மற்றோர் தலைமகன் வலிதில் கொண்டால்
அரும்புவ நலனும் தீங்கும் ஆகலின் ஐய! நின்போல்
பெரும்பொறை அறிவினோரால் நிலையினைப் பெறுவதம்மா.

ஆன்றவற்கு உரியவாய அரசினை நிறுவி அப்பால்
ஏன்றெனக்கு உரியதாய கருமமும் இயற்றற்கு ஒத்த
சான்றவர் நின்னின் இல்லை ஆகலால் தருமம்தானே
போன்ற நீ யானேவேண்ட அத்தலை போதி என்றான்

"அனுமனே! என்மீது அன்பு கொண்ட ஐயனே! (நீ இங்கிருந்து எனக்குப் பணிவிடை செய்வதாகக் கூறியது மகிழ்ச்சியைத் தருகிறது. ஆனால் அதைவிட அரிய செயலை நீ ஆற்றவேண்டும்) அறிவு, ஆண்மை, பெருமை, வல்லமை ஆகியன நிரம்பியவன் வாலி. அவன் ஆட்சி செய்த முழுமையான பேரரசு கிட்கிந்தை. இது நீ

அறியாததன்று. அதிலிருக்கும் வளமும் பொருளும் அளவில்லாதவை. அதை மற்றொரு அரசனாகச் சுக்ரீவன் ஆட்சிசெய்யப் போகிறான். முறைமையான வழியில் இந்த ஆட்சி இவனுக்கு வரவில்லை. ஆதலால் அவன் மன்னனாக இருக்கும் போது நாட்டில் நல்லதும் நடக்கும்; கெட்டதும் நடக்கலாம். அப்படி ஒரு நெருக்கடி ஏற்படும்போது அதைத் தீர்ப்பதற்குத் தகுதியுடையவர்கள் வேண்டுமல்லவா? ஆட்சிசெய்ய அடிப்படைத் தேவை பொறுமையும் அறிவுத் திறனும். அவற்றை நிரம்பப் பெற்றவன் நீ. உன்போன்ற தகுதியானவர்கள் அங்கிருந்தால் தான் ஆட்சியை நிலை நிறுத்த முடியும்.

அதைச் செய்வதே உன்னுடைய முதல்பணியாக இருக்கவேண்டும். இன்னொன்று; நீ என்னுடன் காட்டில் இருந்து எனக்கு உதவிசெய்வதைக் காட்டிலும், நான் இப்போது உள்ள சூழ்நிலையில் மன்னனிடம் நகருள் இருந்து அடிக்கடி அவனுக்கு நினைவுபடுத்தி எனக்கு வேண்டியவற்றைச் செய்யவேண்டும். **தருமத்தின் வடிவாக வந்தவனே!** அதற்குத் தகுதியானவரும் உனையல்லாது வேறொருவர் இல்லை. ஆதலால் நீ அங்கே போய் நான் சொல்லியவாறு செய்".

என்று இராமன் கூறினான். இந்தச் சொற்களின் பொருள் தெளிவானது. 'ஐய' என்றும், "தருமம் தானே போன்ற நீ என்றும் அனுமனை இராமன் புகழ்வது வெற்றுரைகள் அல்ல. அறத்தின் மூர்த்தி வந்து அவதரித்தான் என்று இராமனின் பிறப்பைக் கொண்டாடினார்கள். அதே அறத்தின் மூர்த்தி இங்கு அனுமனைத் தருமத்தின் வடிவம் என்று போற்றினான். 'ஐய' என்னும் சொல் பல இடங்களில் பலவாறு காப்பியத்தில் வந்திருந்தாலும் அன்பின் நெருக்கத்தை, உள்ளத்தின் நெகிழ்ச்சியைக் காட்டுவதற்காக வந்த சில இடங்களில் இதுவும் ஒன்று. முன்பே அனுமன் யார் என்பதை நன்றாகத் தெளிந்த இராமபிரான் இந்தப் பாடல்களின் மூலம் வெளிப்படுத்தினான். இது அனுமனுக்கும் புரிய வேண்டும் அல்லவா?.

அனுமன் இராமனின் கட்டளையை ஏற்றுக்கொண்டு கிஷ்கிந்தைக்குப் போனான். சுக்ரீவன் ஆட்சி நடந்து வந்தது. கார்காலம் தொடங்கியது. இயற்கையின் களியாட்டத்தைப் பலப்பல பாடல்களில் கம்பர் பதியவைத்து அழகு ஓவியமாக்கியுள்ளார். எல்லாம் இன்பமயம் தான். ஆனால் இராமபிரானுக்கோ அந்த இயற்கை நிகழ்வுகள் பிராட்டியை நினைவூட்டும்

துன்பக்காட்சிகளாக இருந்தன. கூட இருந்த இலக்குவன் 'நல்லதே நடக்கும்; பிராட்டியை மீட்போம்' என்று இராமனுக்கு நம்பிகையூட்டினான்.

பொதுவாக இலக்குவன் தன் அண்ணனாகிய இராமனைத் தவிர யாரையும் எளிதில் நம்பவும் மாட்டான்; ஏற்றுக்கொள்ளவும் மாட்டான்; பரதனுடன் சண்டைக்குப் போனவன் அல்லவா அவன்? சுக்ரீவனுக்கு அடைக்கலம் இராமன் தந்தபோதும் முதலில் மறுப்பு தெரிவித்தவன். ஆனால் இந்த இடத்தில் அனுமன் மீதும் அங்கதன் உள்ளிட்ட வானரர் மீதும் அவன் நம்பிக்கை வைத்துப் பேசுவதும அண்ணனுக்கு ஆறுதல் கூறுவதும் வியப்பாக இருக்கிறது.

"அறிஞனே! அனுமன் என்பவன் அளவு அறிந்தனம்" என்பது அவன்கையாண்ட தொடர். என்ன அளவு? அவனுடைய அறிவு, செயலாற்றும் தன்மை, பெருவடிவு கொள்ளும் திறமை, வினை செய்யும் அணுகுமுறை போன்ற இவையெல்லாம் அளவு என்னும் ஒரு சொல்லில் அடங்கிவிடுகின்றன. அனுமனின் இந்தப் பண்புகளை 'நாம் அறிந்தனம்' என்றால், இலக்குவன் அவற்றை இராமனுடன் சேர்ந்து ஏற்றுக் கொண்டான் என்பது பொருள். இல்லை என்றால் சிக்கல் விளையும். இராமனுக்குத் தொண்டன். ஆனால் நல்லவனா என்று இலக்குவன் சந்தேகக் கண்ணுடனேயே பார்ப்பான். அது அவன் இயல்பு; பிழை என்று சொல்லவதற்கில்லை. தாயையும், மனைவியையும், அரசவாழ்வையும் துறந்து யாரும் ஏவாமல் அண்ணனே உயிர் என்று வந்த உத்தம நாயகன் அவன். விழிப்புடன் இருப்பது நல்லதே. அவனும் கூட அனுமனை மனதார ஏற்றுக் கொண்டான் என்று கம்பர் உறுதிப்படுத்துகிறார்.

இன்னொன்று; இந்தப்பாட்டின் இறுதியில் "தனு எனும் திரு நுதலி வந்தனள் சரதம்" என இலக்குவன் இராமனுக்கு உறுதி கூறினான். வில்போன்ற அழகிய நெற்றியுடைய திருமகள் அனைய பிராட்டி வந்துவிட்டாள் என்று நீ உறுதியாக நம்பலாம்" என்பது பொருள். கதைப்போக்கில் ஒன்றைக் கூர்ந்து காணவேண்டும். வாலி, இராமனிடம் பலவற்றைக் கூறியபோது, "அனுமனை உன்கையில் இருக்கும் வில் என்றே நீ நினைக்க வேண்டும்" எனத் தெளிவுபடுத்தினான். அதாவது இராமன் தன் செங்கையில் உள்ள வில்லில் நாணேற்றி அம்பைத் தொடுத்தால் எப்படி அது தவறாது இலக்கைத் தாக்கி வெற்றிபெறுமோ, அது போல அனுமனின் செயல்

திறமும் வெற்றியில் முடியும் என்பது குறிப்பு. "அந்தச் செங்கைத்" ''தனுவென'' இருக்கும் அனுமன் இப்பொழுது 'தனு எனும் திருநுதலியை'க் கட்டாயம் மீட்டு வருவான் ''என்பதையும் உட்கிடக்கையாகக் கொண்டு இலக்குவன் இராமனுக்கு ஆறுதல் சொன்னான். இந்த அழகிய கருத்தோட்டம் கம்பரின் கைவண்ணம். இலக்குவன் சொற்கள் இராமனைத் தேற்றின. கார்காலம் தொடங்கிற்று. தொடர்மழைக்காலம் அது. இடைவிடாது பலநாள்கள் மழை பொழிந்தது. குளம், ஏரி முதலிய நீர்நிலைகள் நிறைந்து பொங்கி வழிந்தன. குளிரும், கொடுமையும் சேர்ந்து வந்தன போல அந்தப் பருவம் துன்பம் தந்தது. பிரிவு வேதனை இராமனை வாட்டியது.

நான்குமாதங்கள் கழிந்தன. "புதிதாக அரசை ஏற்றபின் செய்ய வேண்டியவற்றைச் செய்து முடித்து, வானரப் படையைத் திரட்டிக் கொண்டு வா'' என்று இராமன் சுக்ரீவனை அனுப்பியபின்னர் அப்படிச் சொல்லிய காலத்துக்கும் அதிகமாகவே இராம இலக்குவர் காட்டிற்குள் சுக்ரீவனுக்குக் காத்துக் கொண்டிருந்தார்கள். அவன் வரவில்லை. இராமனுக்கு அடங்காத சினம் தோன்றியது. செய்நன்றி மறந்து புதிதாக வந்த அரசபோகத்தில் கிடக்கும் அவனுக்கு அறத்தை நினைவூட்டி வருமாறும், வாலியைக் கொன்ற வில்லும் அம்பும் இன்னும் தன்னிடம் இருப்பதைச் சொல்லிவருமாறும் இலக்குவனைக் கிட்கிந்தைக்கு இராமன் அனுப்பினான். இதைவிட மகிழ்ச்சியான ஏவல் இலக்குவனுக்கு வேறு எது கிடைக்கும்? அதுவும் இராமனே சினந்து ஏவினான் என்றால், ஏற்கனவே கோபத்தின் வடிவமாய்ச் சீறிக் கொண்டு இருந்த இலக்குவனுக்கு இது நல்ல வாய்ப்பாகப் போயிற்று. மலை அதிர யானை செல்வது போலக் கிட்கிந்தை போனான்.

அவன் வந்த வேகத்தையும் அவனிருந்த கோபத்தோற்றத்தையும் கண்ட வானரக்கூட்டம் அஞ்சிநடுங்கியது. ஓடிப் போய் அங்கதனிடம் குரங்குகள் செய்தி சொல்லி நடுங்கின. அங்கதன் சுக்ரீவனிடம் ஓடினான். சிற்றப்பன் இருந்த கோலமோ அருவருப்பு ஊட்டுவதாக இருந்தது. கள்ளும் பெண்டிரும் தந்த போதையும் காமமும் ஆகிய கடலில் அவன் மூழ்கிக் கிடந்தான். அங்கதன் சொற்கள் அவன் காதில் ஏறவில்லை. பிறகு, அவன் அனுமனையும் அழைத்துக் கொண்டு தாயாகிய தாரையிடம் போனான். அவள் சுக்ரீவனையும், அங்கதன் உள்ளிட்டோரையும்

நன்றி கொன்ற செயலுக்காகத் திட்டித் தீர்த்து விட்டாள். அவளுக்கும் என்ன செய்வது என்று புரியவில்லை. அப்பொழுது அனுமன் தான் தன் கூர்த்த மதிகொண்டு ஒரு வழியைச் சொன்னான்.

"தாயே! ஒன்று செய்யலாம், நீங்கள் அரண்மனை வாசலில் போய் நின்றால், கோபித்து வருகின்ற இலக்குவனைத் தடுத்து நிறுத்தவும் முடியும்; அவருடைய மனத்தை நாம் ஆராயவும் முடியும்" என்று சொன்னான். அற்புதமான கருத்து. இலக்குவன் வீரம் மிகுந்தவன்; எதிரிகளைக் கருணையில்லாமல் கொன்று குவிப்பதில் தேர்ந்தவன்; ஐயமில்லை. ஆனால் அவன் மனம் பூ போன்றது. பெண்கள் முன்னால் ஏறெடுத்தும் பார்க்காத அளவு பெண்ணை மதிக்கும் பேராண்மை உடையவன். ஆதலால் தாரை அப்படி அவன் சொல்லியது போலச்·செய்தால் தடுக்க முடியும், என்பது அனுமனின் கணிப்பு.

அது முற்றிலும் சரியே. வானரவீரர்களின் காவலைத் தகர்த்து எறிந்து கதவுகளையும் கற்களையும் உடைத்துக் கொண்டு இலக்குவன் உள்ளே வந்தான். எதிர்த்த குரங்குகள் அஞ்சிச் சிதறி அங்கும் இங்கும் ஓடின. வேகமும் கோபமும் கொண்டவனாக இரண்டிலொன்று பார்த்துவிடுவது என்ற நோக்கில் இலக்குவன் கிட்கிந்தையில் நுழைந்தான். தன்னையாரும் இம்மியளவு கூடத் தடுக்கமுடியாது என்பது அவன் கொண்ட உறுதி. ஆனால் யானை போல் வந்த அவனை, மயில்போல வாசலில் நின்று தாரை தடுத்தாள். அவள் தனியாக இல்லை. அவளை விலக்கிவிட்டு உள்ளே செல்லலாம் என்றால் வானரமங்கையர் கூட்டம் சுற்றி நின்றது.

இந்த இடத்தில் இலக்குவன் மனநிலையை ஓவியம் ஆக்குகிறார் கம்பர். அனுமனின் கூர்த்த அறிவு இந்த நிகழ்வின் மூலம் வெளிப்பட்டது. எவராலும் தணிக்க முடியாத இலக்குவனின் கோபமும் தணிந்தது. நேரடியாகப் பெண்களைப் பார்ப்பதற்கு அஞ்சியவனாக முகத்தைத் திருப்பிக்கொண்டான். ஒழுக்கநெறி தவறாத அவன் பண்பாடு, பிறபெண்களை ஏறெடுத்தும் பார்க்காத அவன் திட்பம் இப்படி வெளிப்பட அனுமனின் சூழ்ச்சியே காரணமாகிறது.

தாரை அனுமனின் அறிவுரைப்படி நடந்து கொண்ட தோடல்லாமல் பேசினாள்; "மகனே! நின் திருவடி தோய நீ இங்கு

வந்திருப்பது நாங்கள் செய்த தவம். நாங்கள் இனிமையாக வாழ்வோம் என்பதற்கு இதைவிடச் சான்று வேண்டா. இராமபிரான் திருவடிகளைச் சிறிதும் பிரியாத நீ, இப்படிக் கோபமாக வந்தாயே, எதற்காக?" என்று இனிமையும் அமைதியும் தழுவிய குரலில் தாரை கேட்டாள். இலக்குவனுக்குக் கோபம் தணிந்தது மட்டுமல்ல; தன்தாயின் நினைவும் வந்ததாம்.

"தார்குலாம் அலங்கல் மார்பன் தாயரை நினைந்து நைந்தான்" என்பது கம்பர் வரி. **எந்தப் பெண்ணொருத்தி ஓர் ஆடவன் முன்னால், அவனைப் பெற்ற தாயை நினைவூட்டும் வண்ணம் நிற்பாளோ அத்தகைய பெண்கள் இருக்கும் வரை உலகமும் வாழும்** என்பது கம்பர் கருத்து போலும்! சுமித்திரை உள்ளிட்ட தன் தாய்மார் மூவர்க்கும் இப்போது நிற்கும் தாரைக்கும் ஒரு வேறுபாடும் காணோம். கழுத்தில் மங்கல அணி இல்லை; உடம்பு முழுதும் மணிகளோ மாணிக்கங்களோ அணியோ ஏதும் இல்லை. மணம்மிக்க பூமாலைகள் கழுத்தில் இல்லை. மார்பில் சந்தனமோ குங்குமமோ பூசக் காணோம். மேலாடையை உடம்பு முழுவதும் மறையும்படி போர்த்தியபடி நின்றாள். இலக்குவனுக்கு அந்தத் தோற்றம் பழைய நினைவுகளைக் கிளறியது. கண்களில் அவனறியாமல் நீர் அரும்பியது. மன உருக்கம் சினம் வடிந்ததற்கு அடையாளம். வந்த காரணத்தை இலக்குவன் தாரையிடம் சொன்னான். சேனைதிரட்டக் காலமாயிற்றே தவிர, நன்றி மறந்த செயலன்று என விளக்கிய தாரை, காலம் தாழ்த்தியமைக்கு 'மன்னிப்பும் கேட்டுக் கொண்டாள்.

இலக்குவன் பொறுமையின் வடிவமாக மாறினான். மாருதிமைந்தனாகிய அனுமன் அருகில் வந்தான்; இலக்குவனைத் தொழுது எழுந்தான் "அளவில்லாத நூல்களைக் கற்றும் கேட்டும் தெளிந்த **நீயும் கூடவா** நடந்தவற்றை மறந்தாய்"? என இலக்குவன் கேட்டான். 'அந்தமில் கேள்வி நீயும் அயர்த்தனை' என்ற வரி அட்சரலட்சம் பெறும். **நீயும்** என்பதில் உள்ள 'உம்' ஓராயிரம் பொருளுடையது. அனுமனின் அறிவு, முன்நோக்கு, செயலாற்றும் திட்பம் எல்லாவற்றையும் குறிப்பாகச் சுட்டுவது 'நீ இருந்தும் இப்படி நடக்க விட்டுவிட்டாயே!' என்பது இலக்குவனின் நேரடித் தாக்குதல்.

அனுமன் விடைசொல்லித்தான் ஆகவேண்டும். தன்னை எவ்வளவு உயர்வாக இலக்குவன் கருதியிருக்கிறான் என்பதையும்

அந்த மதிப்பீட்டிலிருந்து தாழாது காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்ற பொறுப்பையும் அனுமன் உணர்ந்து கொண்டான். அவன் இலக்குவனிடம் கூறிய விடை தான், இன்று வரை செய்ந்நன்றி மறவாத தலையான பண்பின் மேன்மையைப் பறை சாற்றுகின்ற கட்டளைக்கல். பலர் பல இடங்களில் மேற்கோளாகக்காட்டிய பெருமையுடையது.

சிதைவகல் காதல் தாயைத் தந்தையைக் குழுவைத் தெய்வப்
பதவி அந்தணரை ஆவைப் பாலரைப் பாவைமாரை
வதை புரிகுநர்க்கும் உண்டாம் மாற்றலாம் ஆற்றல் மாயா
உதவி கொன்றார்க்கு ஒன்றேனும் ஒழிக்கலாம் உபாயமுண்டோ

"எந்தையே! கெடுதலில்லாத அன்பை உடைய தாயையும் தந்தையையும் ஆசிரியனையும், அந்தணரையும், பசுவையும் குழந்தையையும் பெண்களையும் கொன்றவர்களுக்குக் கூட, அந்தக் கொலையால் ஏற்படும் பாவத்தைப் போக்கிக் கொள்ளக்கழுவாய் உண்டு. ஆனால் ஒருவர் செய்த உதவியை மறந்தவர்க்கு அந்தத் தீவினையிலிருந்து நீங்க எந்த வழியும் இல்லை.

தலைவனே! உங்களுக்கும் எங்கள் அரசனாகிய சுக்ரீவனுக்கும் ஏற்பட்ட நட்புக்கு மாறாக அவன் அப்படி ஏதும் நடந்து கொண்டால் அதனால் வரும்பாவம் நட்பை ஏற்படுத்திய என்னையும் சாரும் அல்லவா?

எங்களை மட்டுமல்ல, மூவுலகையும் தேவர் உள்ளிட்ட அனைவரையும் காக்கும் அருள்பெற்றவர்கள் நீங்கள். உங்கள் கோபத்திற்கு ஆளாகிய நாங்கள் தப்பிப்பிழைக்கமுடியுமா என்ன!

எங்கள் மன்னன் கொடுத்த வாக்குறுதியை மறந்தவன் அல்லன். வானரப்படைகளை அழைத்துவர ஏவிய தூதர்கள் வரவுக்காகக் காத்திருந்து காலம் தாழ்த்தினான். அவ்வளவே! நன்றி மறக்கும் பேச்சுக்கு இடமில்லை. உங்களுக்காகப் போர்க்களம் புகுந்து பகைவரைத் தாக்கி அழிப்பான்; அன்றி, தான் மடிந்து வீழ்வான். செய்யாமல் நீங்கள் செய்த உதவியை ஒருபோதும் அவன் மறக்கமாட்டான். இது சத்தியம்"

என்று பலவாறாக இலக்குவனை அமைதிப்படுத்தினான் அனுமன். இலக்குவனைச் சுக்ரீவனிடம் அழைத்துப் போனான். ஊழித்தீயின் வேகத்தைக் கூடத் தணித்து விடலாம்; ஆனால் இலக்குவனின் கோபத்தீயை அவிப்பது அவ்வளவு எளிதல்ல.

ஆனாலும் அனுமனின் அணுகுமுறை - தாரையை முன் நிறுத்தியது, தான் சாமார்த்தியமாகப் பேசியதுமான - அனுகுமுறை இலக்குவனை மாற்றிவிட்டது.

சுக்ரீவனிடத்தில் அங்கதன் - வாலியின் மைந்தன் - இலக்குவன் வருகைபற்றிச் சொன்னான். நடந்த நிகழ்ச்சிகளை விளக்கினான். தான் கள்ளுண்டு மயங்கிக் கிடந்து, நன்றி மறந்ததுக்கு நாணப்பட்டான். மதுவின் தீயவிளைவுகள் பற்றி அவன் அப்போது பேசியவை இன்றைய நாகரிகஉலகத்துக்கு எச்சரிக்கை மணியாக ஒலிப்பதைக் காதுள்ளோர் கேட்டுத் தெளியவேண்டும்: கண்ணுள்ளோர் படித்து உய்திபெற வேண்டும். அவ்வளவு பொருளுள்ள சொற்கள்.

"எல்லாப் படைகளையும் திரட்டிக் கொண்டு நீ, பின்னால் வா. நான் இப்பொழுதுதே போய் இராமபிரானிடம் மன்னிப்பு கேட்டுக்கொண்டு ஆவன பற்றியும் பேசுகிறேன்" என்று அனுமனிடம் சொல்லிவிட்டு இராமனிடம் போனான். இராமனை எண்ணிய போதே அவன் நெஞ்சம் நெகிழ்ந்தது. அண்ணல் அடிதொழ வேண்டும் என்ற அன்பு உந்தப் போன சுக்ரீவன் யார் போல இருந்தான்? கம்பர் கூறுகிறார்.

"கவிக்குலத்தரசன் நாள்தொறும் புண்ணியன் தொழுகழல் பரதன் போன்றனன்". புண்ணியமிக்க இராமனின் திருக்கழல்களையே நாளும் நெஞ்சில் வழிபட்டு உருகும் பரதன் போன்று இருந்தானாம்! தன்னுடன் பிறந்த தம்பிகளுள் ஒருவராகக் குகனையும் பின்னர் சுக்ரீவனையும் ஏற்றுக்கொண்ட இராமபிரானின் செயலை, தம்பியர் ஏற்கவேண்டும் அல்லவா? அதனால்தான் "பரதன் போன்றவன் சுக்ரீவன்" என்று நயமாகக் குறிக்கிறார் கம்பநாட்டாழ்வார்.

சுக்ரீவன் இராமனிடம் சேர்ந்து அவன் திருவடியில் விழுந்து வணங்கினான். தான் அணிந்திருந்த மாணிக்க மாலைகளும் முத்துமாலைகளும் பூமியில் படும்படி அரசன் பெருமானின் காலில் வீழ்ந்தான். அவனை அப்படியே மார்போடு சேர்த்துத் தழுவிக்கொண்டான் இராமன். தன் தவற்றுக்கு வருந்திப் பலவற்றை சொன்ன சுக்ரீவனைப் பார்த்து,

"பரதன் நீ இனையன பகர்தியோ" என்றான். பரதன் வேறு நீவேறு அல்ல இருவரும் ஒன்றே என்பது பொருள். கம்பருடைய

கவிக்கூற்றுக்கு ஆதாரம் இராமன் வாயாலேயே வெளிப்பட்டது.

இராமன் சுற்றிலும் பார்த்தான்; அனுமனைக் காணவில்லை எங்கே மாருதி மைந்தன்? சுக்ரீவன் சொன்னான் "நீர் பொங்கும் கடல் போன்ற படைகளைத் திரட்டிக்கொண்டு அனுமன் வருவான்" என்றான். இங்கு ஒரு குறிப்பு "என்னிடம் பெரும்பொறுப்பை நீ ஒப்படைத்தாய், நான் பிழைசெய்து மதுவின் மயக்கத்தால் தவறு செய்துவிட்டேன். இப்போது படைகளைத் திரட்டும் பொறுப்பு அனுமனுக்கு விடப்பட்டுள்ளது. அவன் என் போன்றவன் அல்ல; செய்ததை, நினைத்ததை முடிக்கும் வீரன். வெற்றியைத் தரும் பெரும் படையுடன் இன்றோ நாளையோ அவன் வருவது உறுதி" என்று சுக்ரீவனின் எண்ணங்கள் ஓடின போலும். "நான்பிழை செய்யலாம்; அனுமன் செய்ய மாட்டான்" என்பது சரியான மதிப்பீடு. எல்லாப்படைகளும் வந்த பின்னர் இனிச்செய்ய வேண்டுவன பற்றித் திட்டமிடலாம் என்று சொல்லி இராமன் எல்லாரையும் கிஷ்கிந்தைக்கே அனுப்பிவிட்டான். படைகளுக்காக இராமன் காத்திருந்தது மெய்யே! ஆனால் அவனுக்குப் படையின் துணை வேண்டுமா? 'கூட்டு ஒருவரையும் வேண்டாக் கொற்றவன்' என வாலியே கூறிய வீரம் உடையவன் ஆயிற்றே! அனுமனுக்காகக் காத்திருந்தான். அனுமன் மீது அவன் கொண்ட நம்பிக்கை அத்தகையது.

வானரப்படை திரண்டுவிட்டது. நளன், அனுமன், சதவலி, கேசரி, தூமிரன், நீலன், சாம்பவான், துமிந்தன், குமுதன் முதலிய தளபதிகளின் கீழ் பெருங்கடல்கள் ஒவ்வொன்றும் பொங்கிவந்தன போல வானரப்படை திரண்டு விட்டது. படைத்தளபதிகள் தங்கள் தலைவனாகிய சுக்ரீவனை வணங்கி நின்றார்கள். அவன் போய் இராமனை அழைத்து வந்து படையின் திரட்சியைப் பார்க்கச் சொன்னான். ஒரு மலைமீது நின்று இராமஇலக்குவர் அந்தப்படை வெள்ளத்தைப் பார்த்து வியந்தனர். வெற்றி உறுதி என்ற தெளிவும் பெற்றனர்.

சுக்ரீவன் இராமனின் ஆணையை ஏற்று வானரவீரர்களை நாலுதிசைகளுக்குமாகப் பிரித்து அனுப்பினான். சீதையைத் தேடிக் கண்டுபிடித்து அவர்கள் வந்து செய்தி சொல்லவேண்டும் என்பது கட்டளை. தென்திசை அனுமனுக்கு; சுக்ரீவன் அனுமனிடம் சொன்னான்.

"ஐயனே! நீ பேராற்றல் உடையவன். உன் தந்தையாகிய வாயுபகவான் போல மூன்று உலகங்களிலும் வேண்டும் போது வேண்டியபடி இயங்கும் ஆற்றல் பெற்றவன். இதற்குள் நீயே போய்ப் பிராட்டி இருக்குமிடத்தைக் கண்டிருக்கவேண்டும், எதற்காகவோ காலம் தாழ்க்கிறாய்.

நீ பழைய ஆற்றலைப்பெற வேண்டும். உன்வேகம் வெளிப்படும் நேரம் வந்துவிட்டது. நீ சென்று சீதாபிராட்டியைத் தேடிக் காண வேண்டும். அன்னை இருக்குமிடம் பாதாள உலகமாயினும் நான்கு திசைகளிலும் பரந்துள்ள நிலஉலகமாயினும், போகபூமி எனப்படும் வானுலகாயினும் - எங்கிருந்தாலும் காணவேண்டியது உன் கடன்".

இராவணன் பிராட்டியைத் தூக்கிச் சென்ற திசை தெற்கு. அந்த வழியில் தான் அவன் சென்றிருக்கிறான். பிராட்டி அங்குதான் இருக்கிறார் என்று என் அறிவு சொல்கிறது. அங்கு சென்று அரக்கரை அழித்து உலகம் புகழும் பெருமையை அடையும் வல்லமை உன்னைத்தவிர வேறு யாருக்கு உண்டு?

அங்கதன், சாம்பன் முதலாகிய வீரர்களையும் சேர்த்துக் கொள் ஒரு பெரும்படையுடன் தென்திசைநோக்கிப்போ; வெற்றி பெற்று வா"

என முடித்தான். கூடவே செல்லும் வழிகளைப் பற்றி விளக்கமாக எடுத்துரைத்தான். மலை, குன்று, ஆறு, அருவி, முனிவர் வாழிடம், பிறர் இருக்கும் ஊர்கள் இவற்றின் விரிவெல்லாம் புவியியல் பாடத்தில் வருவது போன்ற தெளிவான குறிப்புகளுடன் வருகின்றன. சுக்ரீவனுடைய அறிவா, கம்பருடைய கவிதைச் சிறப்பா, எதுமேலோங்கியது என வியக்கும் அளவு இந்த விபரம் சொல்லப்படுகிறது.

நீண்ட பேச்சு; சுக்ரீவன் பேசி முடித்த பின்னர் இராமன் அனுமனைத் தனியாக அழைத்துச் சென்று சீதாபிராட்டியைக் கண்டுகொள்ளத் தேவையான அடையாளங்களைக் கூறினான். பாதம் தொடங்கித் தலைஉச்சி வரை -அடி முதல் முடி வரையிலான - உடல் அழகுகள் விவரிக்கப்பட்டுள்ளன. புதிதாகச் சென்று ஒருவரைத் தேடும் போது சிறுமயக்கம் கூட வரலாகாது என்பதற்காக 33 பாடல்களில் இராமபிரான் பிராட்டியின் உருவ அமைப்பை ஓவியமாக்கினான்.

அனுமன் ஓர் அந்நியன் என்று கருதாமல், நம்பத்தகுந்தவன் என்ற உறுதியில் இராமபிரான் இவற்றைச் சொன்னான். கூடவே புலனழுக்கற்ற நைஷ்டிகப் பிரமசாரியாக அனுமன் இருந்தான் என்பதும் காப்பியம் கூறும் மேன்மை. அதையும் இராமன் உணர்ந்தே தன் துணைவியின் பேரழகை இப்படி வருணித்தான். கண்டு மகிழ அல்ல; அடையாளம் கண்டு கொண்டு பணிந்து தொழுவதற்காக. இதை அனுமனே பின்னால் சொல்ல இருக்கிறான்.

"நல்லியலாளுக்கு எல்லா நலனன்றிப் பிறிதுண்டு அன்றால்"
..............................தேவரும் வணங்கும் தெய்வக்
குயிலுக்கு ஒன்றும் குறைவிலை குறியும் அஃதே"

அவளிடம் இருப்பன நல்லனவாகிய எல்லா நலங்களுமே; வேறு எதுவும் இல்லை. தேவர்களும் வணங்கும் தெய்வச் சிறப்புடையவள்; எந்தக் குறையும் இல்லை என்று இராமன் கூறி, சீதையைக் காணும் முன்னும், கண்டபின்னரும் நடந்த சில நிகழ்ச்சிகளை விவரித்து அவற்றைப் பிராட்டிக்குச் சொன்னால், வந்த தூதுவன் உண்மையில் நம்பத்தகுந்தவன் தான் என்ற உறுதி ஏற்படும் வகையில் அனுமன் நடந்து கொள்ள வழிகாட்டினான். கூடவே தன்னுடைய தூதுவன் என்பதற்கு அடையாளமாக சிறந்த ரத்தினங்கள் பதித்து வேலைப்பாடு மிக்கதாய்ச் செய்யப்பட்ட அழகிய மோதிரத்தையும் தந்தான். "அறிஞனே! நீ மேற்கொண்ட செயல் இடையூறில்லாமல் முடிவதாகுக" என வாழ்த்தி அனுப்பினான். 'அறிஞனே' என்று இராமன் அனுமனை அழைத்ததில் ஆழ்ந்த பொருளுண்டு. போகும் செயல் அரியதொன்று; சிக்கலானதும் கூட; உணர்ச்சிகளுக்கு இடம் கொடாமல் கூர்ந்து எண்ணிச் செயல்படவேண்டும். சிறுதவறு நேர்ந்தாலும் பிராட்டியின் உயிருக்கும் கேடு நிகழ்ந்துவிடும். துன்பங்கள் வரலாம்; அவற்றைப் பொறுத்துக் கொள்ளவேண்டும். **துன்பம் பொறுத்தலும், சிந்தித்துச் செயல்படுவதும், உணர்ச்சிக்கு இடம்தராமல் இருப்பதும் தான் உண்மையான அறிவுடையவனுக்கு அடையாளம்.** அனுமன் அத்தகைய கூர்த்த அறிவு உடையவன் தான். அதை நினைவூட்டுவது போலவும், அவனுடைய முயற்சி வெற்றிபெறத் தன்னுடைய அருளும் முழுதாக அவனுக்கு உண்டு என்பதைக் குறிக்கவும் தான், "அறிஞ நின் வினையெலாம் முடிக" என்று விடை கொடுத்து அருளினான். பிரானைத் தொழுது அனுமன் புறப்பட்டான்.

## 7. சீதையைத் தேடிய செம்மல்

அனுமனின் தேடல் தொடங்கி விட்டது. தெற்குத் திசை தவம் செய்த திசையல்லவா? "குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி, வடதிசை பின்புகாட்டித் தென்திசை இலங்கை நோக்கிய" பெருமானுக்கு உகந்த திசை. அதை எண்ணிய போதே கம்பருக்குத் தித்திருக்கும் போலும்! "வண் தமிழுடைத் தென்திசை" என்று பெருமைப்படுத்துகிறார். வளமான தமிழ், கோலோச்சும் நிலப்பகுதி என்பது பொருள். "சிறந்த தொண்டர்கள் பலர் கடவுளைத் துதித்தது தமிழினாலே ஆதலாலும் செவிக்கு இனிய செஞ்சொல் உடைமையாலும் வண்தமிழ் எனப்பட்டது" என உரைகாரர் எழுதியது எண்ணற்குரியது.

தென்திசைச் செலவில் முதலில் வந்தது விந்திய மலை. அதைத்தாண்டி நருமதை நதியையும் கடந்தனர் அனுமன் உள்ளிட்ட வீரர்கள். ஏமகூடமலை வந்தது. அதைத் தாண்டியபின் ஒரு பாலைவனம். அதன் வெம்மை தாங்காது ஒரு குகையுள் நுழைந்து விட்டனர். இருள்செறிந்த குகை அது. வானரர் அஞ்சித் தம்மைக்காக்க வேண்டும் என அனுமனை வேண்டினர். தன் கையைப் பற்றிக் கொண்டு தொடர்ந்து வருமாறு அனுமன் அவர்களுக்கு அறிவுரை சொல்லிய பின்னர் முன்னே போனான்; பல காத தூரம் சென்ற பின்னர் அங்கு ஒரு நகரம் தென்பட்டது. இந்திரனுடைய தலைநகரம் போலச் சிறப்புடையது. பொன்னாலும் மணியாலும் இழைத்துச் செய்யப்பட்டது. பொய்கைகள், சோலைகள், மாடங்கள், மாளிகைகள் நிறைந்தது. அங்கெல்லாம் பிராட்டியைத் தேடினார்கள்; காணமுடியவில்லை. ஆனால் அவர்களுக்குத் திகைப்பும் அச்சமும் ஏற்பட்டன. எப்படி அங்கிருந்து வெளியேறுவது என்று மயங்கினார்கள்.

அந்தநேரத்தில் சுயம்பிரபை என்னும் தெய்வமங்கை அங்கு வந்தாள். இந்திரன் சாபத்தால் அங்கு வாழ்வதாகவும், இராமன் தூதர்களாக வானர வீரர்கள் அங்கு வரும்போது விடுதலை கிடைக்கும் என்று இந்திரன் சொன்னதாகவும் சொல்லி அவர்களை வரவேற்று அவள் உபசரித்தாள். அந்தக் குகையுலகை விட்டு

வெளியே வர அனுமனே உதவிசெய்ய வேண்டும் என எல்லாரும் வேண்டினர்.

"அஞ்சாதீர்கள்" என்று சொல்லிச் சிரித்தான்; ஆண்சிங்கம் மூரி முழுக்கமிட்டு எழுவதுபோல எழுந்து நிமிர்ந்தான்; தன்னுடைய இரண்டு கரங்களையும் மேல் உயர்த்தி உந்தி மாபேருருவம் எடுத்தான். குகையின் சுவர்கள் இற்று இடிந்து விழுந்தன. நீட்டிய இரண்டு கரங்களும் கோரப்பற்களாக நீண்டு பொலிய, நாகலோகத்தைப் பிளந்து உள்ளே சென்று தன்னுடைய கோரப்பற்களால் நிலவுலகை மீட்டிய திருமால் எடுத்த வராக அவதாரம் போலவே இருந்தான் என்கிறார் கம்பர். அதேபோல மகாபலி மன்னனிடம், குள்ளவடிவில் வந்து மூன்றடி மண் கேட்டு நிமிர்ந்த திருமாலின் பேருருவம் போலவும் அந்தத் தோற்றம் இருந்ததாம். திருமாலின் ஒப்பற்ற சிவந்த திருவடியை ஒத்து நின்றானாம். "பூவுடைப்பொருவில் சேவடி புரைந்தான்" என்பது கம்பனின் சொல்லாட்சி. 'சிறிய திருவடி' என வைணவ உலகம் போற்றும் அனுமனுக்கு ஏன் அப்பெயர் வந்தது என்ற தத்துவக் குறிப்பை இங்கு காண்கிறோம். அனுமனின் செயல்கள் மட்டும் அல்ல, தோற்றம் கூடத் தன்னுடைய நாயகனாகிய திருமாலின் தெய்வத்தன்மை பொருந்தியது என்பதைக் கம்பர் மறக்காமல் அங்கங்கு பதியவைக்கிறார். எல்லாரும் நலமுடன் வெளியே வந்தனர். சுயம்பிரபை அனுமனுக்கு நன்றி சொல்லிப்புகழ்ந்த பின்னர் பொன்னுலகம் போனாள்.

வானரர்கள் தம் பணியைத் தொடர்ந்தனர். பெண்ணை ஆறு கடந்து விதர்ப்பநாடு சென்று சீதையைத் தேடினர். தண்டகாரணியம், முண்டகத்துறை, பாண்டுமலை, கோதாவரி, சுவணநதி, அருந்ததி மலை என நாடு, மலை, ஆறு, காடு, பொய்கை என்பன போல எந்த இடத்தையும் விட்டு வைக்காமல் பிராட்டியைத் தேடிக் கொண்டே வேங்கடமலையை அடைந்தனர். அங்குத் திருமாலை வழிபடும் அடியாரின் திருவடிகளைத் தங்கள் முடியில் சூடிப்பணிந்தனர்.

தொண்டைநாடு சேர்ந்தனர்; பிறகு சோழநாடு, பாண்டியநாடு என்று காப்பியம் கூறும் பயணப்பாதை, அறிவியல், புவியியல் கூறும் செய்திகளுக்கு ஏற்ப, பலநூறு ஆண்டுகளுக்கு முன்னரே கூறப்பட்டிருப்பது வியப்பைத் தருகிறது.

மகேந்திரமலை போய்ச் சேர்ந்தனர். ஏமகூடத்தில் பிரிந்த வானர

வீரர்களும் அங்கு இதுவரை பிராட்டியைக் காணாத தங்கள் வருத்தத்தைத் தெரிவித்து என்ன செய்யலாம் என்று கவலைப்பட்டனர். அங்கதன், சாம்பவான் தத்தம் கருத்துக்களை வலியுறுத்தினர். சீதையைக் கண்டுபிடிக்க முடியாத நாம் இருந்து பயனில்லை; சாவதே மேல் என்று வானரர்கள் முடிவுசெய்தனர்.

அப்போது அனுமன் தன்னுடைய தெளிவான சிந்தனையை முன்வைத்துச் சொன்னான்.

"கதிரவன் போல வேகமாகச் செல்லும் ஆற்றல் மிக்கவர்களே! பூமியில் ஒரு பக்கத்தில் கூட முழுமையாக நாம் போய் அன்னையைத் தேடவில்லை. அப்படித் தேடும் வலிமை இல்லாதவர் போலவும், சிந்தனை இலாதவர் போலும் நீங்கள் சலிப்படைந்து பேசுவது இசைவாயில்லை.

கீழுலகத்திலும், வானுலகிலும், பொன்னிற உச்சியை உடைய மேருமலையின் மீதும், இவற்றைத் தாண்டிய பிற அண்டங்களின் உள்ளேயும் தேடிப் பிராட்டியை நாம் காண்போமானால், சுக்ரீவன் குறித்த நாள் கழிந்தாலும் குற்றமில்லை; சோர்ந்துவிட வேண்டாம்; பிராட்டியைத் தேடுவதே நல்லது. எல்லா இடங்களிலும் பார்த்த பின்னரும் பிராட்டியைக் கண்டுபிடிக்க முடியவில்லை என்றால் இராவணனுடன் பிராட்டிக்காகப் போரிட்டு மாய்ந்த சடாயுபோல நாமும் உயிர்விடுவோம்; அது பெருமைக்கு உரியது. அதைவிட்டு இப்போது சாவது தீராப்பழியைக் கொண்டு வரும்"

"செய்; அல்லது செத்துமடி" என்பது வீரப் பேச்சுதான்; பாராட்டுக்குரியது தான். ஆனால் அரைகுறை நிலையில் ஒருசெயலை விட்டுவிடுவது வீரத்துக்கு அழகன்று என்ற அனுமனின் தெளிவு இன்றும் பயன்படும்.

சடாயு உயிர் நீத்தான் என்று அனுமன் கூறிய சொற்கள் கழுகுகளின் வேந்தனாகிய சம்பாதியின் காதில் விழுந்தன. அவன் சடாயுவின் அண்ணன். தம்பியின் சாவு அவன் நெஞ்சைப் புண்டுத்தியது. பெரியமலை அசைந்து வருவது போல அங்குவந்து, சாடயுவைக் கொன்றது யார் என்று வினவினான். அனுமன் நடந்த செய்திகளை விளக்கமாகச் சொன்னான். தம்பியின் இறப்புக்கு வருந்தியும், ஆனால் பிராட்டிக்காக உயிர் விட்டதை எண்ணி வியந்தும் புகழ்ந்தான். பிறகு தம்பிக்குச் செய்யவேண்டிய நீர்க்கடன்

செய்து முடித்தான். "ராம ராம" என்று வானர வீரர்கள் மூலமந்திரத்தை ஓதுமாறு வேண்டிக் கொண்டான்.

"எல்லீரும் அவ் இராமநாமமே
சொல்லீர் சொல்ல எனக்கோர் சோர்விலா
நல் ஈரப் பயன் நண்ணும்"

என்ற சொற்கள் எல்லோருக்கும் பயன்படும். நல்ல, ஈரமான அன்புப் பயன்களைத் தரக்கூடியது ராமநாமம் என்பது கழுகுக்கும் தெரிந்திருக்கிறது. வானரம், கழுகு இவற்றிடமிருந்து மனிதன் கற்றுக் கொள்ளவேண்டிய பாடம் இது.

வானரவீரர்கள் கேட்டதற்கிணங்கத் தன்னுடைய வரலாற்றை விளக்கமாகக் சொன்ன சம்பாதி இராவணன் சீதாபிராட்டியைத் தூக்கிச்சென்று இலங்கையில் சிறை வைத்துள்ளதையும் நெருப்பையும் எரிக்கும் நெருப்பான இராவணனின் இலங்கையை அடைவது அவ்வளவு எளிதான செயலன்று ஏன்பதையும் சொல்லிய பிறகு தெளிவாக ஒன்றைக் கூறினான்.

"நீங்கள் எல்லோரும் அந்த இலங்கை நகரை அடைந்து விடமுடியும் என்று எண்ண வேண்டாம். அது துன்பத்தில் தான் முடியும். உங்களில் வல்லமை மிக்க ஒருவன் மட்டும் அங்கு போய் மறைந்து இருந்து கவனித்து, பிராட்டியை எவ்வழியிலானும் கண்டு இராமபிரானின் முயற்சிகளைச் சொல்லித் துன்பம் தணிவித்துத் தெளிவையும் ஏற்படுத்த வேண்டும். இது முடியாது என்று தோன்றினால் இராமபிரானிடம் நான் சொன்ன இவற்றைத் தெரிவியுங்கள்" என்று சொல்லிப் பறந்து போனான்.

அவர்களுடைய தேடுதல் முயற்சிக்கு ஒரு நல்ல திருப்பத்தை ஏற்படுத்தித் தந்து நம்பிக்கை என்னும் பாலையும் வார்த்தவன் சம்பாதியே. இருண்ட காட்டில், குருட்டுக் கண்களுடன் தேடுவது போன்ற நிலை மாறி, ஒளிமிக்க பாதை ஒன்று அவர்களுக்குத் தென்பட்டது. சரி கடல்தாண்டிச் செல்லக் கூடிய அந்த ஒருவன் யார்? இந்த நூலின் தொடக்கத்தில் "யார் இந்த அனுமன்?" என்ற தலைப்பில் எழுதப்பட்டவற்றை மீண்டும் படியுங்கள். தக்க காரணங்களைக் காட்டி மற்ற வானர வீரர்கள் அனுமனே தனி ஒருவனாக இலங்கை செல்லத் தக்கவன் என முடிவு செய்தனர். அனுமனும் உடன்பட்டான். தம் உள்ளத்துறுதியை அனுமன்

அப்போது வெளிப்படுத்தினான். தன்னம்பிக்கையும் இராமன்மீது அவன் கொண்ட பக்தியின் உறைப்பையும் வெளிப்படும் சொற்கள் அவை.

"இலங்கை சென்று பிராட்டியை மீட்டுவரும் ஆற்றல் பெற்றவர் பலர் இங்கிருக்குமபோது நீங்கள் இந்தப் பணியைச் செய்ய என்னைத் தேர்வு செய்தது நான் செய்த பேறு! எவ்வளவு புண்ணியம் நான்செய்திருக்கவேண்டும்! இலங்கையை வேரோடு பிடுங்கி இங்கு கொண்டுவா என்றாலும், அப்படிச் செய்யும் போது இடையூறு செய்யக் கூடிய அரக்கர்களை எல்லாம் கொன்று அழித்தும் பிராட்டியை இங்கு கொண்டுவா என்று சொன்னாலும் நீங்கள் சொன்னபடியே செய்து முடிப்பேன். நீங்கள் கொஞ்சமும் கலங்க வேண்டாம். நீங்கள் சொன்னதைச் செய்து முடிப்பேன். விரைவி லேயே தெரிந்து கொள்வீர்கள்.

திருமால் தம்முடைய திருவடியால் உலகத்தை அளந்தது போல, இங்கிருந்து இலங்கை வரைக்கும் உள்ள ஒரு நூறு யோசனை தூரம் பரவியிருக்கும் பெருங்கடலை எளிதாகத் தாண்டிவிடுவேன். இந்திரன் உள்ளிட்டவர்கள் அரக்கர்களுக்குத் துணையாக வந்தாலும் அவர்களை எல்லாம் கொன்று குவிப்பேன்.

கடலால் சூழப்பட்ட உலக முழுவதையும் மூழ்கச் செய்து அழிக்கும் பொருட்டுக் கடல்நீர் பொங்கி எழுந்து வந்தாலும், இந்த உலக உருண்டை உடைந்துபோய் வானில் சென்றாலும், சிறிதும் கலங்காமல் இருந்து இந்தக் கடலைக் கடப்பேன்; காண்பீர்களாக. அப்படிக் கடப்பதற்கு எனக்கு இருபுறமும் சிறகுகள் வேண்டுமல்லவா? அவை வேறில்லை; உங்கள் அருள் ஒருபுறம்; இராமபிரான் ஏவல் மறுபுறம்; அவ்வளவே".

"முற்றுநீர் உலகம் முற்றும் விழுங்குவான் முழங்கி முந்நீர்
உற்றதே என்னும் அண்டம் உடைந்துபோய் உயர்ந்ததேனும்
இற்றை நும் அருளும் எங்கோன் ஏவலும் இரண்டு பாலும்
கற்றைவார் சிறைகளாகக் கலுழனில் கடப்பன் காண்பிர்"

தன்னையும் தன் ஆற்றலையும் உணர்ந்து நம்பிக்கையுடன் வெளிப்பட்ட சொற்கள் இவை. ஆனாலும் அனுமனுக்கே உரிய அடக்கம். அந்த அருஞ்செயலை முடிக்கப் பிறருடைய அருளும் இராமபிரானின் ஏவலுமே தூண்டல்கள்; தோன்றாத் துணையாக இருக்கும் ஒளிக்கீற்றுகள். "செயற்கரிய செய்வர் பெரியர்",

"பெருக்கத்து வேண்டும் பணிதல்" என்ற திருக்குறள் வரிகள் கம்பர் நெஞ்சில் நிழலாடியிருக்க வேண்டும்.

மயேந்திர மலையின் மீது ஏறிக் கடல் கடக்கச் சித்தமாகிப் பேருருவம் கொண்டு அனுமன் நின்றான். இதுவரை அனுமன் பேசியதைக் கேட்டவர்களுக்கு மெய்ம்மையாக ஒரு நம்பிக்கையை ஊட்டவேண்டும் அல்லவா? அந்த நம்பிக்கையைப் பேருருவம் செய்தது. எப்படி இருந்தது அந்த மாபெருவடிவம்?

மூவுலகங்களையும் தாவியளந்த திரிவிக்கிரம அவதாரம் எடுத்த திருமாலின் வான்தொட்ட திருவடி போல எது இருந்திருக்கும்? அதைப்போல இந்த அனுமன் தோற்றம். சிறியதிருவடி என வைணவ உலகம் போற்றும் பெரியவரின் பேருருவத்தில் கம்பர் திளைக்கிறார்.

பொருவரு வேலை தாவும் புந்தியால் புவனம் தாய
பெருவடிவு உயர்ந்த மாயோன் மேக்குறப் பெயர்ந்த தாள்போல்
உருவு அறிவடிவின் உம்பர் ஓங்கினன் உவமையாலும்
**"திருவடி'** என்னும் தன்மை யாவர்க்கும் தெரிய நின்றான்.

திருமாலின் அவதாரத் தோற்றங்களுடன் இணைத்துக் கம்பர் அனுமனின் உருவைச் சொல்லோவியமாக்கி, அவதாரங்களின் நோக்கம் நிறைவேறியது போல இப்பொழுது அனுமனின் பணியும் செம்மையாய் நிறைவுறும் என்று குறிப்பாக அருளும் கவிநயம் அழகுடையது.

# 8. இலங்கையில் அனுமன்

இலங்கையைத் தேடி வானளாவ உயர்ந்த அனுமன், தன் பேருருவத்தை மற்ற வானரர்களுக்குக் காட்டித் தன் ஆற்றலைப் புலப்படுத்தினான். உயர்ந்து வளர்ந்து மேலே போன அவன் வானுலகில் சீதா பிராட்டி இல்லை என்பதையும் தெளிவாக அறிந்து கொண்டான் . அப்படி நின்ற போது தான் கீழே, தொலைவில் அழகிய நகரம் அவன் கண்களில் பட்டது.

நறுமணம் வீசும் சோலைகள்; பொன்மயமான ஒளி; பலவகையாகக் கட்டப்பட்ட மதில்கள்; வெற்றிக்கொடிகள் அலைபாயும் வாயில்கள்; மணிக்கற்கள், முத்து, பொன் இவற்றை இழைத்துச் செய்யப்பட்ட மாடிகளையுடைய வீடுகள்; வீடுகளின் வரிசைகளுக்கு இடையே நீண்டு பரந்த வீதிகள்; இவை போல இன்னும் இன்னும் பலவற்றை அவன் கண்டான். இந்தச் செல்வச் செழிப்பும் அழகும் வேறு எந்த நகருக்கு இருக்க முடியும்? இதுதான் இலங்கையாக இருக்கவேண்டும். அந்த எண்ணமே பெரிய ''கிழ்ச்சியை அவனுக்குத் தந்தது. கைகொட்டிச் சிரித்தான்.

"அண்டமும் திசைகள் எட்டும் நடுங்கத் தோள் கொட்டி ஆர்த்தான்"

அனுமனின் சிரிப்போசை கேட்டு அண்டங்களும் எட்டுத் திசைகளும் நடுங்கின; எல்லா வளங்களும் நிறைந்து விளங்கிய அந்த இலங்கைத் திருநகரும் நடுங்கிற்று. தேவர் முதலியோர் மலர்தூவி அவனை வாழ்த்தினர். அவனுடைய பெருந்தோற்றம், ஆர்ப்பரிப்பு, தன்னம்பிக்கை, ஆற்றல் எல்லாம் மகிழ்ச்சி தந்தன. ஆனாலும் அவன் முடிப்பதற்குச் செல்கின்ற செயல் எளிதானதன்று. அருகில் இருந்த அங்கதன் உள்ளிட்ட நண்பர்கள் எச்சரித்தார்கள். அவர்களும் எளிய வானரர்கள் அல்ல; ஆற்றல் மிக்கவர்கள். அவர்கள் கூறியது சரியாகத் தான் இருந்திருக்கும். அனுமனும் உடன்பட்டானாம்.

"வெற்றியைத் தருகின்ற மலைபோன்ற தோள்களை உடைய வீரனே! அகத்திய முனிவர் தம்முடைய ஒரு கையால் அள்ளிக்

குடித்த சிறுமை உடையது இந்தக்கடல். இதை நாம் இந்தப் பேருருவத்துடன் கடப்பதில் என்ன பெருமை வந்து விடப் போகிறது என்று குறைவாக மதித்துத் தவறாகக் கணக்குப் போட்டுவிடாதே! இந்த எண்ணத்தில் உன் நெஞ்சைப் பதிதநுச் செல்வாயாக" என்று அறிவுரை கூறினார்கள். மலைபோன்ற வீர அனுமனும் இசைந்தான். ஆற்றவேண்டிய செயல் எளிமையானது போலத் தோன்றும்; செயல் புரிவோனுடைய வினையாளும் பண்புகள் மேலானவையாகவும் இருக்கலாம்; ஆனாலும் 'தன்வலியும் வினைவலியும்' இன்னவை எனப் புரிந்து செயலாற்ற வேண்டும் என்ற திருக்குறள் சிந்தனை இந்த வரிகளில் காணப்படுகிறது.

அனுமன் மயேந்திர மலையை உந்தி மேல் எழுந்தான். அனுமன் போவது ஓர் உயர்ந்த நோக்கம் கருதி; அதுநிறைவேற வேண்டும் என்று கருதி மரங்களும் விலங்குகளும் தாமும் மேலே எழுந்தன. அனுமனின் வேகம் - அதனால் ஏற்பட்ட காற்றின் முடுக்கம் அவற்றை அப்படி எழச்செய்தன - என்பதைக் கம்பர் கவிநயத்துடன் கூறி மகழ்கிறார்.

அனுமன் வானில் மிதந்து கொண்டு இலங்கை நோக்கிப் பறந்தான். மலைகள் உருண்டு, மரங்கள் வேரோடு பிடுங்கப்பட்டு, உயிரினங்கள் வானில் மிதக்க, மண்ணும் விண்ணும் அஞ்சுமாறு அவன் கடல்மேல் பறந்தான். வழியில் சிறுசிறு சோதனைகள். மைநாகமலை கடலுள்ளிருந்து மேல் வந்து அவனை வணங்கி உபசரிக்க எண்ணியபோது, முதலில் ஐயுற்றுப் பின்பு தெளிந்து அந்த அன்புக்கு உருகிப் பயணத்தைத் தொடர்ந்தான். இத்தனை நடந்த பின்னரும் தேவர்களுக்கு அனுமனின் வலிமையைப் பற்றி ஐயம் இருந்தது. சுரசை என்ற நாகலோகப் பெண்ணை அரக்கிபோல ஏவி, அவள் அனுமனைத் தின்பதற்காக வாயைத் திறந்தவுடன், உள்ளே புகுந்து பேருருவம் எடுத்துத் தன் ஆற்றலை வெளிப்படுத்தினான். பிறகு அங்காரதாரை என்னும் கொடிய அரக்கி அவனை விழுங்க வந்த போது உள்புகுந்து அவளுடலைக் கிழித்து அழித்தான்.

அனுமன் தானே வலிமை மிக்கவன்; தந்தையாகிய காற்றுக் கடவுளின் அருளும் பெற்றவன்; கற்ற கலைகள் நுட்பமாகப் போதித்த அறிவுக் கூர்மையும் உள்ளவன். வினைசெயல் திறமும் கூடியவன். இத்தனை இருந்தும் தற்செருக்கு கொள்ளவில்லை.

வழியில் தமக்கு வந்த துன்பங்களை எல்லாம் எளிதாகத் தீர்த்துக் கட்டியது தன்னுடைய திறமையால் என்ற ஆணவம் சிறிதும் இல்லாமல் அஞ்சனை மைந்தன் பேசினான்.

**ஊறு கடிது ஊறுவன ஊறில் அறம் உன்னாத்**
**தேறல் இல் அரக்கர்புரி தீமையவை தீர**
**ஏறுவகை யாண்டைய இராமன் என எல்லாம்**
**மாறும் அதில்மாறு பிறிதில் என வலித்தான்**

"செல்லும் வழியில் ஒன்றன் பின் ஒன்றாக வரிசையாக வரும் இடையூறுகளும் அறத்தை நினையாது அரக்கர்கள் செய்கின்ற தீமைகளும் நம்மைப் பாதிக்காதவாறு நீங்க என்னவழி? எங்குள்ளது?. "இராம" என்று ஒரே ஒரு தடவை சொன்னால் கூடப்போதும்; எல்லாத் துன்பங்களும் அடியோடு அழிந்துவிடும். அதற்கும் மேலான மந்திரமோ வழியோ வேறில்லை. 'அஞ்சிலே ஒன்றைத் தாவிய' அனுமன் 'ஆரியர்க்காக ஏகிய'போது பெற்ற தெளிவும் உறுதியும் இதுவே. 'வலித்தான்' என்ற சொல் ஐயம்திரிபு இல்லாமல் அனுமன் கண்ட மேலான முடிவு இதுதான் என்று தெளிவுபடுத்துகிறது. அனுமனுக்கே துன்பங்கள் அடுக்கடுக்காக வந்தபோது சாதாரண மானிடர்களாகிய நமக்கு வராதா?. அதுபோன்ற சூழ்நிலைகளில், சுற்றிலும் நெருப்பு எரிவது போல உடலும் மனமும் ஒருசேர வருந்துகின்ற போது நம்மைக்காக்கும் மூலமந்திரம், எழுமைநோய்க்கு மருந்து 'இராம' என்னும் நாமம் என்பதை அனுமன் வாயிலாகக் கம்பர் மீண்டும் நினைவுபடுத்துகிறார். உய்திபெறுவது நம் கடன்.

இலங்கையில் பவளமலை மீது அனுமன் பாய்ந்து இறங்கினான். சற்று தொலைவில் நகரம் அவன் கண்ணில் பட்டது. அழகான நகரம், வளமுடையது என்றெல்லாம் சொல்வதால் அதன் சிறப்பு நிறைவடையப் போவதில்லை.

"விண்ணிடை உலகம் என்னும் மெல்லியல் மேனிநோக்கக்
கண்ணடி வைத்தது அன்ன இலங்கையைத் தெரியக் கண்டான்"

வானுலகத்துக்கு நேர்கீழாக ஒரு கண்ணாடி; விண்மகள் தன் முக அழகை எல்லாம் பார்த்துச் சுவைப்பதற்கு ஏற்பவைத்த ஒரு கண்ணாடிபோல இலங்கை இருந்ததாம்!

அண்டங்களை எல்லாம் வென்று ஆட்சி புரிந்த இராவணன் தலைநகரம் இலங்கை. அதை இந்திரனின் அமராவதி நகருக்கு ஈடானது என்று சொல்வது கூடக் குற்றமாகிவிடும். ஏனென்றால் அந்த இந்திரலோகத்தையும் இராவணன் தானே ஆட்சி செய்துவந்தான்!. யார் எதை எதை விரும்புகிறார்களோ, அதை அப்படியே தரக்கூடியது இலங்கைமாநகரம். பொன்னும் மணியும் மாணிக்கக் கற்களையும் முத்தையும் கொண்டு இழைக்கப்பட்ட மாடமாளிகைகள் நகரம் முழுவதும்நிறைந்து இருந்தன. வீதிகள் அகன்றும், செவ்வையாக அமைக்கப்பட்டும் இருந்தன. எல்லா இடங்களிலும் மகிழ்ச்சிப் பெருக்கு. குழல், யாழ் இவற்றின் இசை. ஆடலும் பாடலும் அழகும் இனிமையும் குடிகொண்டு இருந்த தேவலோகம் என்று சொல்லுவதே பொருந்தும். 'செம்பிட்டுச் செய்த இஞ்சித்திருநகர்' என்பன கம்பன் சொற்கள். அதவாது இலங்கை நகர்ப்புறத்துக் கோட்டை மதில்சுவரைச் செம்பை உருக்கி ஊற்றிக் கட்டியுள்ளார்களாம்!

செல்வ வளமும் கலைவனப்பும் இன்பக்களிப்பும் அழகின் விரிப்பும் ஒன்றாகச் சேர்ந்து இலங்கையைச் சுவர்க்கபுரியாக மாற்றியிருந்தன. எல்லாரும் எல்லாமும் பெற்ற நிறைவாழ்வு அங்கிருந்தது. அனுமனின் வியப்புக்கு அளவில்லை. அரக்கன், அவன் ஆளுகைகட்கு உட்பட்ட அரக்க அரக்கியர்கள், அவன் கவர்ந்து கொண்டுவந்து அடிமைகளாய் வைத்துள்ள தேவர்கள் என்று இப்படிக் கற்பனை செய்து, கொடுங்கோலன் ஆளும் நாட்டின் துன்பநிலை தான் கண்ணில்படும் என்று பார்க்கப்போன அனுமனுக்கு அதிர்ச்சிமேல் அதிர்ச்சியாக அமைதியும் இன்பமும் அழகும் கலையும் தாண்டவமாடும் நாடாக இலங்கை இருந்தது அவனுக்கு வியப்பு ; வியப்பால் விரிந்த விழிகள்; நெஞ்சில் வடிந்த சொற்கள்.

> பளிக்கு மாளிகைத் தலம்தொறும் இடந்தொறும் பசுந்தேன்
> துளிக்கும் கற்பகத் தண்ணரும் சோலைகள் தோறும்
> அளிக்கும் தேறலுண்டு ஆடுநர் பாடுநராகிக்
> களிக்கின்றார் அலால் கவல்கின்றார் ஒருவரைக் காணேன்

இது அனுமனின் வாக்குமூலம். பளிங்கால் ஆகிய மாளிகைகளில் - தேன்துளிக்கும் மலர்கள் நிறைந்த சோலைகளில் கள்ளுண்டு ஆடுவதும் பாடுவதும் களிப்புடன் வாழ்வதுமாக இவர்கள் இருக்கிறார்களே! கவலைப்பட்டு வருந்தி நிற்கும்

ஒருவரைக் கூட என்னால் காணமுடியவில்லையே! (எவ்வளவு தேர்ந்த ஆட்சி நடைபெற்றால் இந்தப் பேரின்பம் விளையும்?)

தான் தேடி வந்திருக்கும் பிராட்டியைச் சிறைவைத்திருப்பவன் முழுவதுமே தீயகுணங்களை உடையவனாக இருக்க முடியாது என்ற முடிவுக்கு அனுமன் வந்தான். வினை வலி, தன் வலியை உணர்ந்த அவன் இப்பொழுது மாற்றானாகிய இராவண அரக்கன் வலிமையையும் உணர்ந்து கொள்ள வாய்ப்பு ஏற்பட்டுவிட்டது. எளிதாக அந்தத் தீர்மானத்துக்கு அவன் வந்துவிடவில்லை. ஊர்முழுவதும் சுற்றிப்பார்த்தான். சோலைகள், வீடுகள், பாசறைகள், கலைக்கூடங்கள், அரண்மனைகள், மாளிகைகள் என்று பற்பல இடங்களையும் உலாவி அறிந்தபின்னர் தான் அந்தத் தெளிவைப் பெற்றான். நன்கு ஆட்சிசெய்யும் அரசன், அவன் கீழ் மகிழ்ச்சியோடு வாழும் மக்கள், குன்றாத விளைவைத்தரும் நாடு, கற்ற அறிஞர்கள் நிறைந்த சபை என்று இவ்வாறு தன்னிடத்தில் வலிமை வாய்ந்த துணைக்கருவிகளைப் பெற்றிருந்த பகைவன் நாட்டில் பிராட்டியைக் காணவேண்டும்.

நாடும் மக்களும் இப்படி இருக்கும்போது படைப் பெருக்கம், படைவீரர் தன்மை இவற்றில் ஏதேனும் தொய்வு இருந்தால் எதிரியை வீழ்த்த வாய்ப்பு ஏற்படும். அப்படி எதுவும் இருக்குமா என்று அனுமன் பார்த்தான். இலங்கையிலிருந்து திரும்பிச்சென்று கண்ட உண்மைகளை இராமபிரானிடம் சொல்ல வேண்டும்? ஆனால் அங்கும் அவனுக்கு வியப்பே காத்திருந்தது.

வில்படை பெரிதென்கேனோ வேல்படை பெரிதென்கேனோ
மல்படை உடைத்தென்கேனோ வாள்படை வலிதென் கேனோ
கற்பணம் தண்டு பிண்டி பாலம் என்றினைய காந்தும்
நல்படை மிகுமென்கேனோ நாயகற்கு உரைக்கு நாளில்

இராவணன் படைக்கு ஒன்றும் குறைவில்லை. வில், வேல், வாள் வீரர்கள் அல்லாமல் தண்டு போன்ற கருவிகளை வீசி எறியும் ஆள்களுக்கும் குறைவில்லை. எதிரியின் படைபற்றிய அனுமனின் கணிப்பு இது. நகருள் நுழைந்தான்.

இவ்வாறு பலவற்றைப் பார்த்தும், என்ன செய்வது என எண்ணியும் அனுமன் இலங்கை நகருக்குள் செல்ல முயன்றான். பெருவழியில் - முதன்மை வாசலில் - யாராலும் உள்ளே நுழைய

முடியாத வண்ணம் காவல் இருந்தது. அங்கிருந்த வீரர்களோ மிகவும் வல்லமை படைத்தவர்களாகவும் பேருருவம் உடையவர்களாகவும் இருந்தார்கள். ஆதலால் அந்த வழியே நுழையாமல் மதிலைக்கடக்க முற்பட்டான். அப்பொழுது இலங்கைக்குக் காவல் தெய்வமாக இருந்த இலங்காதேவி அவனை வழிமறித்தாள். எட்டுத்தோள்கள்; நான்கு முகங்கள்; ஏழுலகிலும் போய் மீளும் ஒளிமிக்க உடலில் வட்டமிடும் கண்கள்; காவல் வல்லவள் அந்த இலங்கா தேவி. 'நான் இந்த ஊரின் அழகைப் பார்ப்பதற்காக வந்த புதியவன். எளியவன். இதனால் உனக்கு என்ன இழப்பு? ஏன் என்னைத் தடுக்கிறாய்?' என்று அனுமன் கேட்டான். 'முப்புரம் எரித்த சிவன் கூட இங்கு நுழைவதற்கு அஞ்சுவான். நீ யார்? என்ன துணிவு உனக்கு? நீ வந்து சுற்றிப்பார்க்க இது என்ன காவலற்ற இடமா? உயிர் மீது ஆசையிருந்தால் தப்பிப்போய்விடு' என்று எச்சரித்தாள். அனுமன் அஞ்சவில்லை. கண்ணுதற் கடவுள்போலக் கலங்காது நின்றான். இலங்காதேவியும் துணுக்குற்றாள். எமனும் பார்க்க அஞ்சும் இலங்காதேவியும் அனுமனைக் கண்டு ஒருகணம் கலங்கினாள். 'இவனைக் கொல்லாமல் விட்டுவிட்டால் ஊரை இவன் அழித்துவிடுவான்' என்று முடிவு செய்த இலங்காதேவி அவன் மீது சூலத்தை எறிந்தாள். அனுமன் அந்தச் சூலத்தை மட்டுமல்ல, தொடர்ந்து அவள் வீசிய கருவிகளை ஒடித்தும், அழித்தும் செயலிழக்கச் செய்தான். கைகளால் அடிக்க வந்த அவளுடைய கைகளை மடக்கி வீழ்த்தினான். அனுமன் கரம் பட்டதும் - இராமபிரானின் அருள் தொண்டனின் தெய்வக்கரம் பட்டதும் - அவளுடைய மெய்வடிவம் தோன்றியது. அவள் சொன்னாள்;

> "ஐயா ! நான் சொல்வதைச் சிறிது கேட்பாயாக; படைப்புக் கடவுளாகிய பிரமனின் கட்டளைப்படி இந்த ஊரைக் காத்து வருகிறேன். என்பெயர் இலங்காதேவி. உனக்கு நான் செய்த சிறுமையைப் பொறுக்கவேண்டும். 'எவ்வளவு காலம் இந்த ஊருக்குக் காவல் செய்ய வேண்டும்?' என்று பிரமனைக் கேட்டபோது. 'வலிமையுடைய ஒரு குரங்கு உன்னைத் தன் கைகளால் அடித்தவுடன், நீ என்னிடம் திரும்பி வருவாய். பிறகு அந்தநகரம் அழிவது உறுதி' எனச் சொன்னான். அது இப்போது நடந்துவிட்டது. நான் வருகிறேன்" என்று கூறி உடனே மறைந்தும் போனாள்.

அனுமன் மிக எளிதாக நகருக்குள் தாவினான். எதிரியின் கோட்டைக்குள் நுழையும் முன், இராமபிரானின் தாமரைத் திருவடிகளை நெஞ்சில் நினைத்து வணங்கினான். 'அரியன்

கமலபாதம் அகத்துற வணங்கி' என்று கம்பர் பாடுகிறார். அரியசெயலை - ஏன் எந்தச் செயல் ஆனாலும் - ஆற்றப்புகுவதற்கு முன் 'கடவுள் முன்நிற்க' என அருள்வேண்டும் தமிழ்ப்பண்பாட்டு நெறியை ஒரு குரங்கும் கூடப் பின்பற்றியது.

நூற்றுக்கணக்கான மாளிகைகள்; ரத்தினங்கள், மாணிக்கக் கற்கள் பதிக்கப்பட்ட மாடங்கள்; சூரியன் உதித்தது போன்ற பேரொளி வெளிச்சம். அந்த நகரின் ஓர் ஓரமாக அனுமன் நடந்து சென்றான். அந்த மணிக்கற்களின் ஒளிபட்டுப் பிரதிபலித்து அனுமன் உடல்நிறம் ஒவ்வொரு நேரத்துக்கும் வேறு வேறு நிறம் காட்டிற்று.

> பெரிய நாள்ஒளிகொள் நானாவித மணிப்பித்தி பத்தி
> சொரியுமா நிகழ்கள் ஆங்குச் சுற்றலால் காலின்தோன்றல்
> கரியனாய் வெளியனாகிச் செய்யனாய்க் காட்டும் காண்டற்கு
> அரியனாய் எளியனாய்த் தன் அகத்துறை அழகனே போல்

அனுமன் உள்ளத்துள்ளே பரந்து பொலிந்த இராமபிரானின் திருமேனி அழகு போலவே அனுமனும் இருந்தான். தன் தலைவனுக்கு ஈடான ஆற்றல் மட்டும் அல்ல; அழகையும் அனுமன் பெற்று இருந்தான் என்பது குறிப்பு.

அனுமன் நடந்தான். வழியில் பலர் அவனைக் கடந்து போனார்கள். அரக்கியர்கள், பணிப்பெண்கள், கந்தர்வ ஆடல் மங்கையர், தெய்வங்களை மலர்தூவி வழிபடுவோர், மங்கல இசைபாடும் நங்கையர் என்றவாறு பலரையும் பார்த்துக் கொண்டே சென்ற அனுமன், கும்பகர்ணனின் மாளிகையைச் சேர்ந்தான். பேருறக்கத்தில் ஆழ்ந்து கிடந்த அவனைக் கண்டு அப்பால் போனான். அடுத்து வந்தது வீடணன் அரண்மனை. அங்கு பளிங்கு மாளிகையில் தருமதேவதை வாழ்வது போல் அவன் உறங்குவதைக் கண்டான். ஏதோ ஒரு உள்ளுணர்வு அனுமனுக்கு 'இவன் குற்றமில்லாதவன்; நற்குணங்கள் உடையவன்' என்று சொல் லிற்றாம்.

இந்திரசித்துவின் மாளிகை உள்புகுந்து இந்திரனை வென்ற மேகநாதனை, இலங்கை அரசனின் இளவரசை, சிங்கக் குட்டிகளோடு குழந்தைப் பருவத்தில் விளையாடி வளர்ந்த பெருவீரனைத் தன் "கண்களால்' அனுமன் கண்டான். எதிர்வரும்

போரில் இராமனின் அணிக்குப் பெரிய எதிரியாக இருக்கக் கூடிய அவனை அனுமன் பார்வையாலேயே கணித்தான். வீரரை யாரே வியவாதார்? என்று கம்பர் முன்னர்ப் பாடினார். அப்படி ஒரு பெருவீரனை இன்னொரு பெருவீரன் பார்த்து வியந்து போனான். அதைவிட இந்திரசித்துவின் மீது அனுமனுக்குப் பெருமதிப்பு ஏற்பட்டது.

"இவன் யார்? மலைக் குகையில் வாழ்கின்ற சிங்கம் போன்ற இவன், வளைந்திருக்கும் கோரப்பற்களைக் கொண்ட அரக்கன் மகனா? மழுவைத் தன் கரங்களில் ஏந்திய சிவ பெருமானின் திருமகனாகிய முருகப் பெருமான் தானோ? எனக்குத் தெரியவில்லை. ஆனால் ஒன்று தெரிகிறது; இளைய பெருமாளாகிய இலக்குவனும் தலைவனாகிய இராமபிரானும் பலப்பல நாள்கள் வருந்திப் போர் செய்து தான் இவனை வெல்ல முடியும். எளிதில் இவனை அழிக்க முடியாது".

வளையும் வாள் எயிற்று அரக்கனோ கணிச்சியான் மகனோ
அளையில் வாளரி அனையவன் யாவனோ அறியேன்
இளைய வீரனும் ஏந்தலும் இருவரும் பலநாள்
உளைய உள்ளபோர் இவனொடும் உளதென உணர்ந்தான்

என்பது கம்பர் பாட்டு. எதிரியைத் தெய்வகுமாரன் என்று சொல்கின்ற மனம் எல்லோருக்கும் வந்து விடாது. மனம் முதிர்ந்த நிலையில் ஒவ்வொருவரிடமும் ஒருசிறப்பு இருக்கிறது; அதை மதிக்கவேண்டும் என்ற தெளிவு பெற்றவர்க்கே இது முடியும். அனுமனின் மதிப்பீடு துல்லியமானது. வர இருக்கும் போரில் அவ்வளவு எளிதாக இராவணனை வெல்ல முடியாது. ஏன்? இராம இலக்குவராகிய வில்லாளிகள் இருவரும் ஒன்று சேர்ந்து பலநாள் வருந்திப் போர்செய்து தான் இந்திரசித்தையே அழிக்கவேண்டும். இந்த உண்மையை இராமனிடம் சொல்லவும் வேண்டும் என்ற சிந்தனைகள் அனுமனிடம் தோன்றுகின்றன.

"இப்படி ஒரு வீர மகனைப் போர்க்குத் துணையாகப் பெற்றுள்ள இராவணன், தானும் போர் புரிவதில் வல்லவனான இராவணன் மூன்று உலகங்களையும் வென்று ஆட்சிபுரிகிறான் என்று சொல்வதில் என்ன பெருமை இருக்கிறது? அதற்கு மேம்பட்ட புகழும் பெருமிதமும் அல்லவா அவன் வாழ்வில் உள்ளன. சிவபெருமானையும், நான்முகனாகிய பிரமனையும், நெடுமாலாகிய பெருந் தெய்வத்தையும் இந்த இராவணனுக்குச் சமம் என்று சொல்லலாமே

தவிர, வேறு ஒருவர் இவனுக்கு இணை என்று சொல்வது பெரும்பிழை; அறிவற்ற செயலாகும்"

இவனை இன்துணை உடையபோர் இராவணன் என்னே
புவனம் மூன்றையும் வென்றதோர் பொருளெனப் புகறல்
சிவனை நான்முகத்து ஒருவனைத் திருநெடுமாலாம்
அவனை அல்லவர் நிகர்ப்பவர் என்பதும் அறிவோ

இந்திரசித்துவைத் தெய்வத்தின் மகன் என்று குறித்தபின்னர் அவனைப் பெற்ற இராவணனை அந்த மூல தெய்வங்களுக்குச் சமமாகக் கருதுவது தான் சரி; இயற்கையானது. ஆதலால் திருமாலின் அவதாரமாக வந்துள்ள இராமபிரானுக்கு எதிரியாக உள்ளவன் கடவுளின் பேராற்றலுடைய ஒருவன் தான் என்ற தெளிவை அனுமன் பெற்றான். இதையும் இராமனுக்குச் சொல்ல வேண்டும. தான் கண்டது, தான் உணர்ந்தது இவற்றின் மெய்ம்மையைத் தலைவனுக்குப் புலப்படுத்துவது தொண்டனின் தலையாய கடமை. அந்த வகையில் அனுமனின் இந்த முடிவு அவனுடைய மேன்மையை இன்னும் கூட்டுகிறது. பட்டனன் என்றபோது எளிமையில் படுகிலேன் என்றும், நாசம் வந்துற்றபோது நல்லதோர் பகையைப் பெற்றேன் என்றும் பின்னால் இராவணன் வாக்குமூலம் தர உள்ளான் என்பதையும் எண்ண வேண்டும்.

சரி, எவ்வளவு நேரம் இங்கு நின்று இப்படி வியந்து காலத்தைப் போக்குவது. அது வீண்செயல் என்று கருதி அனுமன் அங்கிருந்து போனான். அட்சகுமாரன், அதிகாயன் என்ற இளவரசர்கள் (இந்திரசித்துவின் தம்பியர்) மாளிகைகளைக் கடந்து போனான். நடு அகழியைக் கடந்து ஊர் நடுவுள் சென்றான். வழக்கமான பணிகளைச் செய்து முடித்தபின்னர் எல்லாரும் உறங்கிக் கொண்டிருந்த நேரம் போகிகளும் துயின்றார்கள்; யோகிகளும் துயின்றார்கள். சித்தரும் உறங்கினர்; பித்தரும் உறங்கினர்.

அனுமனின் தேடல் தொடர்ந்தது. இயக்கியர்கள் வாழ்ந்த இடங்களைக் கடந்து அரக்கியர் பகுதிகளிலும் தேடினான். பிராட்டியைக் காணவில்லை. சித்தமாதர் வீதியையும் வித்யாதர மகளிர் வாழ்விடத்தையும் பார்த்துப் போனான். மண்டோதரி வாழ்ந்த பெருமாளிகையை அடைந்தான். அங்கு அந்தப் பேரரசியின் கம்பீரத்தையும் அழகையும் பார்த்து வியந்தான். அரம்பை, மேனகை, ஊர்வசி, திலோத்தமை உள்ளிட்ட தெய்வ மங்கையர்

கால்வருடவும், சாமரம் வீசவும், உயர்ந்த இசைகளை வீணையிலும் வாயாலும் ஏற்படுத்தியும், மயக்குகின்ற சூழலில் மண்டோதரி - மயன் மகள் - படுத்துக் கொணடிருந்தாள். இவள் சீதையாக இருக்குமோ என்று ஐயம்; ஒரு சிறுகணம் அனுமனின் நெஞ்சம் துணுக்குற்றது. உயிரே போவதுபோல வேதனைப்பட்டான். ஆனால் இராமபிரான் தனக்குச் சொன்ன சீதையின் இலக்கணங்கள் இவளுக்குப் பொருந்திவரவில்லை. மாறாக வேறுசில அறிகுறிகள் வரப்போகும் பெரும்துன்பத்தை - பேரழிவைக் காட்டுவனவாக இருந்தன. "இவள் தூக்கத்தில் வாய்குளறி ஏதேதோ பேசுகிறாள். மலர் சூடிய கரிய கூந்தல் அவிழ்ந்து கிடக்கிறது. இந்தப் பெரிய நகரமும் இவள் கணவனும் விரைவில் அழிந்து போவது உறுதி". இது அனுமனின் கணிப்பு. வருவதை முன்னதாக உணர்ந்த ஆற்றல் இப்படி வெளிப்பட்டது. ஒரு காலத்தில், 'சாமுத்ரிகா லட்சணம்' என்ற நூலில் கூறியிருந்த இலக்கணங்களை வைத்துக் கொண்டு ஒருவருடைய பண்பு நலன்களையும், அவர்கள் வாழ்வில் ஏற்படக்கூடிய நிகழ்வுகளையும் சொல்லக்கூடிய வல்லவர்கள் வாழ்ந்த காலத்தில் - அனுமனும் இருந்திருப்பான்.

அனுமன் இராவணன் மாளிகையினுள் புகுந்தான். உடனேயே அங்கு சில தீய அறிகுறிகள் தோன்றின. பூகம்பம் ஏற்பட்டது போல நிலம் அதிர்ந்தது; மலைகள் பொடியாக உதிர்ந்தன. பெண்களின் கண்களும் புருவங்களும் வலப்புறம் துடித்தன. திக்குகளும் நடுங்கின. வானில் மின்னல் இல்லை; ஆனால் இடிமுழக்கம் கேட்டது. மங்கலமான பூரணகும்பங்கள் வெடித்துச் சிதறின.

அனுமன் இவற்றைப் பார்த்தான்; தன் அறிவு கொண்டு நிகழ இருப்பதை உய்த்து அறிந்தான். அவனுடைய நெஞ்சு நெக்குடைந்து உருகியது. "ஐயோ! இந்த அழகிய பெரிய நகரத்தை விட்டுத் திருமகள் நீங்குவாளே! எந்தக்குலத்தில் பிறந்த யாராயினும் அவரவர் செய்த புண்ணியபாவங்கள் பயன்தருவது சமமாகவே. ஊழ்வினையை விட உலகில் வேறு வலிமையானது எது உள்ளது? எதுவும் இல்லை" என்ற தெளிவு பெற்று வருந்தினான்.

"புக்கு நின்று தன்புலன் கொடு நோக்கினன் பொருவரும் திருவுள்ளம்
நெக்கு நின்றனன் நீங்கும் அந்தோ இந்தநெடுநகர் திரு என்னா
எக்குலங்களின் யாவரே ஆயினும் இருவினை எல்லோர்க்கும்
ஒக்கும் ஊழ்முறை அல்லது வலியது ஒன்று இல்லென
உணர்வுற்றான்"

பகைவனையும் அவனுடைய நாட்டையும் ஊரையும் அழித்துத் தேவியை மீட்டுச் செல்ல வழிவகையை ஆராய்ந்த அனுமனுக்கு, ஒரு தனிமனிதனின் ஆணவத்துக்கும், ஒழுக்கக் கேட்டுக்கும் ஒரு நாடே அழிகிறதே என்னும் கழிவிரக்கம் ஏற்பட்டது வியப்பன்று. நல்லவர் நெஞ்சம் அப்படித்தான் நோகும். ஆனால் என்செய்ய முடியும்? அதைத் தடுக்கும் வலிமை யாருக்கு உண்டு? அது ஊழ் என்னும் விதியின் கோரக்கூத்து ஆயிற்றே! இன்றும்-இந்த இருபத்தொன்றாம் நூற்றாண்டிலும் தனிமனிதச் செருக்கால் பல நாடுகள் அழிவது நடக்கிறதே! 'நீங்கும் அந்தோ இந்த நெடுநகர் திரு' என்று வருந்தவே முடிகிறது.

படுத்து உறங்கிக் கொண்டிருந்த இராவணனை அனுமன் பார்த்தான். நிறையப் படித்த அனுமன், பிறரிடம் கேட்டுக் கேட்டுக் கேள்விஞானம் மிக்க அனுமன் பார்த்தான். அப்போது இராவணன் தோற்றம் அனுமனை வியப்பில் ஆழ்த்தியது.

இராவணன் மாளிகை வெள்ளை வைரக்கற்களால் கட்டப்பட்டது. அதன் நடுவில் பத்துத்தலைகளுடன் கரியநிறஅரக்க வேந்தன் படுத்திருந்தான். பாற்கடலில் ஆதிசேடப்பாம்பின் மீது கருநிறத்து அழகனாகிய திருமால் படுத்திருப்பது போல இருந்தது அந்தத் தோற்றம்.

"பாற்பெருங்கடல் பன்மணிப் பஃறலைப் பாம்பணை அதன்மீது
மால்கருங்கடல் வதிந்ததே அனையதோர் வனப்பினன்
துயில்வான்"

பகைவன் என்பது கூட அனுமனுக்கு மறந்து போயிற்று. தன் தெய்வமாகிய திருமாலே படுத்திருப்பது போலத் தோன்றியது. அழகிய கருநிற உடலும் வெள்ளை மாளிகையும் அனுமனை மயக்கின. கரிய பெரிய மலையில் ஒளிநிறக் கதிரவன் உதயமாவது போன்றன அவன் தலையில் இருந்த மணி முடிகள். பிறைசூடிய பெருமானின் கயிலை மலையைத் தூக்கிய தோள்கள்; திசையானைகளின் தந்தக் கொம்புகள் ஏற்படுத்திய புண்களைத் தாங்கிய மார்பு; கற்ற கல்வியால் பொலிந்த முகம்; காமக்கிளர்ச்சியால் கருகும் உணர்வுகள்......இப்படி இராவணன் படுத்திருந்தான் என்று கம்பர் விரிவாகப் பாடுகிறார்.

இன்னும் குள்ளவடிவத்தில் நின்ற வண்ணம் பத்துத் தலைகொண்ட இராவணனைக் கண்ட அனுமன் கோபத்தால் பொங்கினான். இது ஒரு நல்ல வாய்ப்பு - பிராட்டியை வஞ்சனையால் தூக்கிவந்த அரக்கனை அழிப்பதற்கு; இதை விட்டால் வேறு வாய்ப்பு கிட்டாது. இராமபிரானின் தொண்டன் என்று சொல்லிப் பெருமைப்படுவதற்கு இதைவிட வேறு என்ன வேண்டும்? இந்த வாய்ப்பை நழுவவிட்டுவிட்டால்,

> "என்னுடைய தோளாற்றலால் என்ன பயன்? எப்படியும் சீதையைக் கண்டு வருவேன் என்று சொன்ன என் சொல்லினால் தான் என்னபயன்? இதோ, உறங்கிக் கொண்டிருக்கும் இந்த வஞ்சகனின் மணிமுடிகளை என்னுடைய காலை வீசித் தகர்த்துப் பத்துத் தலைகளையும் சிதைத்து வீரத்தைக் காட்டவில்லை என்றால் என்னுடைய அடிமைத்திறத்தை எப்படிப் புலப்படுத்துவது?"

தோளாற்றல் என்னாகும் மேல் நிற்கும் சொல் என்னாம்
வாளாற்று கண்ணாளை வஞ்சித்தான் மணிமுடி என்
தாளாற்றலால் இடித்துத் தலைபத்தும் தகர்த்து என்றன்
ஆளாற்றல் காட்டேனேல் அடியேனாய் முடியேனே.

இவை அனுமனின் சினத்தால் விளைந்த வல்லுணர்ச்சி. ஆனால் சிந்திக்கும் அறிவுடைய ஆஞ்சநேயருக்கு இப்படி அவசரப்படுவது சரியன்று எனத் தோன்றியது. பற்களைக் கடித்துக் கைகளை ஒன்றோடு ஒன்று தேய்த்து நெரித்துச் சீறியவனின் அறிவு சொல்லிற்று. "இவனைக் கொன்றுவா என்று சக்கராயுதம் ஏந்திய கடவுளாகிய இராமன் சொல்லவில்லை; தவிர, ஒரு செயலைச் செய்வதற்குத் தொடங்கி இன்னொன்றைச் செய்தல் நல்ல அறிவுடையவர்க்கு அழகன்று; நன்கு எண்ணிப் பார்த்தால் இப்படிப் பிறழ்ந்து ஏதேனும் செய்வது பின்னால் பெரிய குற்றத்தை ஏற்படுத்திவிடக் கூடும்" என்று முடிவு செய்தான்.

அறிவும் உணர்ச்சியும் ஒன்றுடன் ஒன்று முரண்படும்போது அவசரமாக முடிவுசெய்யாமல் தீர்க்கமாக எண்ணி முடிவு கொள்ள வேண்டும். நல்ல தலைவன், நல்ல தொண்டன் செய்யக் கூடியது அதுவே. தவிர ஒன்றைச் செய்ய முற்பட்டு, அதை விட்டு விட்டு அல்லது மறந்து விட்டு இன்னொன்றில் ஈடுபடுவதும் அறிவுடையவனுக்கு அழகல்ல. அப்படிச் செய்வது 'சாலப் பிழையாகும்'. பெரும் குற்றமாகிப் பெரும்துன்பங்களையே

கொண்டு வரும். இந்தத் தெளிவை அனுமன் பெற்றவன் தான். ஆனால் ஒருகணம் அவன் மனம் தடுமாறிவிட்டது. பிறகு தேறி அமைதிபெற்றபின் இருந்த அவனுடைய நிலையை-அறிவால் தெளிவு பெற்றபின் அடங்கியிருந்த தோற்றத்தை - கம்பர் காட்டும் பாடல் மனித குலம் முழுமைக்கும் என்றும் பயன்படக் கூடிய பொருள் பொதிந்தது.

ஆலம்பார்த்து உண்டவன்போல் ஆற்றல் அமைந்துளர் எனினும்
சீலம்பார்க்(க) உரியோர்கள் எண்ணாது செய்பவோ
மூலம்பார்க்குறின் உலகை முற்றுவிக்கும் முறைதெரினும்
காலம்பார்த்து இறைவேலை கடவாத கடல் ஒத்தான்

கடலில் எழுந்த கடு நஞ்சை உண்ட சிவபெருமான் போல் ஆற்றல் பெற்றவராக இருந்தாலும், ஒழுக்க நெறி தவறக்கூடாது என்று உறுதியில் நிற்கும் பெரியவர்கள் ஆராயாமல் ஒரு செயலைச் செய்வார்களா? உலகை ஒரு நொடியில் அழிக்கும் பேராற்றல் தனக்கிருந்தாலும், அதற்குரிய காலம் வரும் வரை காத்திருக்கும் கடல்போல - கரையாகிய எல்லையைத் தாண்டிக் கடக்காத - பெருங்கடல் போல அனுமன் இருந்தான். எல்லோரும் பெரியவரே; வலியவரே; அந்தப் பெருமையையும் வலிமையையும் உணர்ச்சிகளுக்கு இரையாகாமல், வீணடிக்காமல் அறிவால் சிந்தித்துத் தக்ககாலம் வரும்வரை காத்திருந்து பயன்படுத்தவேண்டும். அப்பொழுது தான் பெருமையும் வலிமையும் அவற்றுக்குரிய சிறப்பு பெறும். செயலும் நிறைவாகக் குறைவில்லாமல் முடிவு பெறும். இது அல்லாமல், உணர்ச்சிகளுக்கு ஆளாகிவிட்டால் யாதும் பயனில்லை; செயல் ஆற்ற முடியாமலும் போய்விடும் என்ற கருத்துக்களை இந்தப் பாடல் சொல்கிறது.

## 9. கண்டனன் சீதையை

இராவணனுடைய அரண்மனை முழுவதும் அனுமன் சுற்றிப் பார்த்தும் பிராட்டியைக் காண முடியவில்லை. எங்கு இருப்பார் தேவி? ஒருவேளை இராவணன் கொன்றிருப்பானோ? வேறிடத்தில் சிறை வைத்திருப்பானோ? என்று பரவலாக எண்ணி வருந்தினான். அவன் சிந்தை குழம்பியது.

"இராமபிரான் எப்படியும் பிராட்டியை நான் கண்டுபிடித்து வருவேன் என்று நம்பி எனக்காகக் காத்திருப்பார். குரங்கினத்து அரசனாகிய என் தலைவன் சுக்ரீவன் கட்டாயம் பிராட்டியை மீட்டு நேரில் கொண்டு வந்து தருவேன் என்று நம்பியிருப்பார். ஆனால் இதுவரை நான் செய்த செயல் எல்லாம் பயனற்றனவாய் வீணாகப்போயின. தாமரைக் கண்ணனிடம் வெறுங்கையுடன் சென்று நிற்க என்மனம் ஒப்பவில்லை. பிராட்டியைக் காணாததால் உயிர்விட முயன்ற பிற வானரர்களைப் போல நானும் சாகத் தான் வேண்டும்.

ஒரு மாத காலத்திற்குள் பிராட்டியைத் தேடிவர வேண்டும் என்று சுக்ரிவன் குறித்த நாள் முடிந்து விட்டது. தேவியைக் காணவில்லை. இறந்துவிடலாம் என்று முடிவு செய்திருந்த அங்கதன் முதலியோரைத் தடுத்து, 'நான் கண்டு வருவேன்' என்று சூளுரைத்து வந்ததும் பொய்த்துப் போயிற்று. நல்வினை என்னிட மிருந்து நீங்கிவிட்டதோ? நான் எதற்கு இனி உயிர்வாழவேண்டும்?

கழுகுகளுக்குத் தலைவனாகிய சம்பாதி, 'இலங்கைத் திருநகரில் சீதையைக் கண்டேன்' என்று சொன்னாரே, அது கூடப் பொய்யாகப் போயிற்றே! அப்படி இங்கு தேவி இருப்பது உறுதியானால் அந்த மறைவிடத்தோடு சேர்த்து இந்த இலங்கையைக் கடலில் கரைத்துப் பிராட்டியைக் காணாமல் உடம்பைத் தாங்கிப் பிழைத்துள்ளேன். இது நன்றாக இருக்கிறது! பலப்பல பேசிப் புலம்பிப் பயனில்லை. வானும் மண்ணும் அறியப் பிராட்டியைச் சிறை பிடித்து வந்த இராவணனைக் கொன்ற பின்பே நான் இறக்க வேண்டும்; அதற்கு முன்னர் இலங்கை நகரைக் கடலுள் மூழ்கச் செய்ய வேண்டும். அதுவரை நான் இறக்கக் கூடாது"

இவ்வாறு சிந்தனைகளில் மூழ்கியவனாய் அலைந்தான் அனுமன். எல்லா இடங்களிலும் நுழைந்து நுழைந்து பார்த்தாகிவிட்டது. பார்க்காத இடமில்லை; தேடாத பொருளில்லை. கம்பநாட்டாழ்வார் திருமால் மீது கொண்ட தன்னுடைய அளவற்ற பக்தியை இதுபோன்ற இடங்களில் பதித்து வைத்திருக்கும் அழகைப் படித்து அனுபவிப்பவர்கள் கொடுத்து வைத்தவர்கள். எப்படி அனுமன் பிராட்டியைத் தேடினான்?

"எள்ளுறையும் ஒழியாமல் யாண்டையினும் உளனாய்த் தன்
உள்ளுறையும் அழகனைப்போல் எம்மருங்கும் உலாவினான்"

எள்ளளவு இடம் கூடத் தப்பாமல் எல்லாப் பொருளிலும் எல்லா இடத்திலும் பரந்து கலந்துள்ள திருமால் போல, அனுமனுடைய உள்ளத்துள்ளேயே வீற்றிருக்கும் அழகனாகிய இராமனைப் போல அனுமனும் எல்லா இடத்தும் உலவினான் - இதுவே மேலுள்ள இரண்டு வரிகளின் பொருள். "மண்ணு நீ விண்ணு நீ மற்று நீ மலரின் மேல் ஐயன் நீ ஆழி நீ" என்றெல்லாம் சுக்ரீவன் போற்றினானே, அந்த இராமபிரானின் பரத்துவத்தைத் தானும் சிறிது பெற்றவன் அனுமன் என்று எங்கும் உள்ள தெய்வத்தன்மையை எல்லா இடத்திலும தேடிய அனுமனின் முயற்சியுடன் ஒப்பிடும் அழகு கவிநயம் மிக்கது.

அந்தக் கணத்தில் தான், தேன்சொரியும் பூக்கள் நிறைந்த அழகுப் பூஞ்சோலை ஒன்றை - அசோக வனத்தை - அனுமன் கண்டான். அது 'மணிமலர்ச் சோலை! அழகிய மலர்கள் உள்ள சோலை என்பது நேரான கருத்து. செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருவாகிய பிராட்டி மலராக அங்கு உள்ளார் என்பது குறிப்பு. அதுபோல மணி என்பது விலையுயர்ந்த, மதிப்பிடமுடியாத மாணிக்கம் என்ற பொருள் கொண்டு, தனக்கு யாரும் ஒப்பில்லாத மணியாகிய கற்பின் கனல் அந்தச் சோலையின் உள்ளே தான் இருக்கிறார் என்ற உட்குறிப்பையும் மணிமலர்ச் சோலை என்ற தொடரில் கண்டு அநுபவிக்கலாம். அங்குதான் உள்ளாள் பிராட்டி என்று அநுமன் உள்ளம் கூறியிருக்கும்.

பிராட்டி அங்கு மெலிந்து, வருந்தி, உருமாறித் துன்ப வடிவாய் இருந்த சோக ஓவியத்தை இருபத்தேழு பாடல்களில் கம்பர் தீட்டுகிறார். படிப்போர் நெஞ்சை உருக்கும் வண்ணம் சொற்கள் பாய்ந்து வருகின்றன. 'பொன்னின் ஒளி பூவின்வெறி சாந்து பொதி

சீதம்' என்று ஒளியும் மணமும், குளிர்ச்சியுமாக இருந்த அ[illegible]ந்க் கோலம் மாறி உணங்கிய - வாடிய - நங்கையாய், புலிக்கூட்[illegible]ந்து நடுவே ஒரு மான்போல அரக்கியர் நடுவில் இருந்தாள். அழு[illegible]தும் விழுவதுமாய் தொழுவதும் சோர்வதுமாய்த் துன்பத்தின் விளிம்பில் இருந்தாள். இராமபிரான்-'சுருதி நாயகன் - வரும் வரும்' என்ற ஒரே நம்பிக்கையில் அந்த அருமருந்தின் இளங்கொடி உயிர் பிழைத்து இருந்தது, மன்மதன் தீட்டிய அழகு ஓவியம் புகைபடிந்தது போலத் தோற்றம்.

பிராட்டியின் உள்ளத்தில் பலவகையான குழப்பம். "மாயமானுக்குப் பின்னால் போன இராமபிரானை இலக்குவன் காணவில்லையோ? இலங்கை என ஓரூர் இருப்பது தெரியாதோ? என்னுடைய உயிரைக் காக்க முற்பட்ட ஜடாயு ஒரு வேளை இறந்து போயிருக்குமோ? தன் சொல்லை மீறி இளவலை விரட்டி அனுப்பியது குறித்து இராமன் கோபித்து என்னைத் தேடாமல் விட்டுவிட்டானோ? இராமபிரானுக்கு உண்ண அருகிருந்து யார் இலை தழை உணவு எடுத்து வைப்பார்கள்? தன்னைத் தேடிக்காட்டுக்குள் கூட விருந்தினர் வந்து விட்டால் இராமன் எப்படித் துன்பப்படுவனோ? சிறைஎடுத்துப் போன அரக்கர்கள் இத்தனை நாளும் வைத்திருக்க மாட்டார்கள்; தின்றிருப்பார்கள் எனத் தேடுவதை விட்டு விட்டார்களா? அல்லது அயோத்தியிலிருந்து தாயார் மூவரும் தம்பியர் இருவரும் காடு வந்து கூட்டிப்போய் இருப்பார்களோ? ஆனால் தான் சொன்ன சொல்லை - பதினான்கு ஆண்டுகள் காட்டில் வாழ்ந்த பின்னே வருவேன் என்று சொன்னதை இராமன் மீறமாட்டாரே? பிறகு என்ன நடந்திருக்கும்? ஒருவேளை இராம இலக்குவருக்குக் காட்டுள் ஏதேனும் தீங்கு நிகழ்ந்திருக்குமோ?"

இவைபோலப் பலவற்றையும் எண்ணிப் பிராட்டி குழம்பினாள். எந்தச் செய்தித் தொடர்புக்கும் வழியில்லாத அந்தக்கால நிலையில் 'அங்குயிரும் இங்குடலும் ஆன கொடுங்காலத்தில், இருதலை ஒருயிர்ப்பறவை பட்ட வேதனையைக் கம்பர் பாட்டில் வரைவதைப் படித்தால் கல்நெஞ்சும் உருகும். பழைய நினைவுகள் எல்லாம் தேவியின் நெஞ்சுள் ஓடுகின்றன. அந்த அழகிய செந்தாமரை முகம்; தாமரையைக் காட்டிலும் மூன்று மடங்கு பொலிந்த முகம்; இந்த நிலவுலகம் உன்னுடையது என்று தயரதன் சொன்னபோதும், இது உனக்கில்லை, பரதனுக்கே என்று கைகேயி சொன்னபோதும் ஓவியமாக வரையப்பட்ட அழகுத் தாமரை போல வாடாதிருந்த

முகம் அவளை வருத்தியது. பிரானுடைய வீரத் தோள்கள், பகைவரை வீழ்த்தும் ஆற்றல், வேடனையும் தோழனாகக் கொண்ட மேன்மை என்று பல அரிய குணங்களை எண்ணி உருகினாள். திருமணம், இல்லற வாழ்வு, பிரிவு, அரசபதவித் துறவு, காடுறைவாழ்க்கை, விராடனுடன் நடந்த போர்........ இவை போலப் பலநிகழ்வுகள் அவளுடைய நெஞ்சுள் நினைவுகளாக ஓடின.

அரக்கியர்கள் கூட்டம் பலவகையிலும் அச்சுறுத்தி வந்த நேரம். ஓய்ந்து போய் அவர்கள் தூக்கத்தில் ஆழ்ந்துகிடந்தனர். வீடணன் மகளாகிய திரிசடை மட்டும் - துன்பத்துக்கு உற்ற தோழியாகக் கூட இருந்தாள். பிராட்டி உயிரோடு அங்கிருந்ததற்குக் காரணமே திரிசடையின் இனிய சொற்களும் அவை தந்த ஆறுதலுமே. ஒவ்வொரு முறையும் மனம் தளர்ந்து தேவி சோர்வுற்ற போதெல்லாம் திரிசடையே ஆதரவுத் தூண்போல இருந்து காப்பாற்றினாள். அதனால் தான் கம்பர் திரிசடையை, 'இன்சொலில் திருநதினாள்' என்று போற்றுகிறார். சீதை தான் தோழியிடம் பேசினாள்.

"அன்புடைய தோழி! தாயினும் இனியவளே! தூய்மையின் வடிவமாக உள்ளவளே! கேட்பாயாக. என்னுடைய இடது கண்ணும் புருவமும் துடிக்கின்றன. ஏதோ நல்லது நிகழப் போகிறது என்று எனக்குத் தோன்றுகிறது. விசுவாமித்திரனுடன் இராமன் மிதிலைக்கு வந்தபோது இப்படித்தான் நிகழ்ந்தன. என் தெய்வமாகிய இராமன் தம்பிக்காகப் பட்டம் துறந்து காட்டுக்குள் நுழைந்தபோது வலக்கண்ணும் புருவமும் துடித்தன. அதேபோல இராவணன் வஞ்சனையுடன் என்னைத் தூக்க வந்த போதும் வலமே துடித்தது. வலம் துடித்தால் துன்பம்; இடம் துடித்தால் இன்பம் என்ற என் வாழ்வு அநுபவத்தைப் பார்த்தால் நல்லதே நடக்கும் என்று தோன்றுகிறது".

திரிசடை அதைக் கேட்டு மனம் தேறியவளாய்ப் பிராட்டியிடம் சொன்னாள். "தேவி! நீ அஞ்சவேண்டாம். நல்ல செய்தி ஒன்று உனக்கு விரைவில் வரும். உன்னுடைய உயிர் திரும்ப வருவதுபோல. உன்னுடைய உடல், உள்ளங்களின் வருத்தம் நீங்குமாறு ஒன்று நடக்கப் போகிறது. பொன்னிறமான வண்டு ஒன்று இப்போது இங்கு வந்து, நம்முடைய காதுகளைச் சுற்றி வட்டமிட்டு இனிய இசையை ஏற்படுத்திப் போனதே! ஏன் அது அப்படிச் செய்தது என்று ஆராய்ந்து பார்த்தேன். உன்னுடைய

உயிர்போன்ற கணவனின் தூதுவன் இப்பொழுது இங்கு வருவது உறுதி. உனக்குத் துன்பம் தந்த தீயவர் அழிவதும் உறுதி. நீ தூங்காது இருப்பதால் கனவு ஏற்படுவதில்லை. ஆனால் எனக்கு வந்தவற்றைக் கேட்பாயாக" என்று தொடங்கி இலங்கையில் ஏற்படக் கூடிய தீய அழிவுகளை வரிசையாகக் கூறினாள். இராவணன் தெற்கு நோக்கி ஏகினான்; அவன் வளர்த்த வேள்வித்தீச் சுடர்கள் அணைந்து போயின. தூண்டாமணி விளக்குகள் தொடர்ந்து சுடர்விடும் அவனுடைய அரண்மனை இடிவிழுந்தது போலப் பொடிப் பொடியாகப் போயிற்று. வானத்தில் மேகம் இல்லாதபோதும் இடிமுழக்கம் கேட்டது. இரவிலே கூட வானவில் தோன்றிற்று என்பன போலப் பலப்பல தீய அறிகுறிகளைத் திரிசடை கூறினாள். தவிர, இரண்டு ஆண் சிங்கங்கள், புலிகளின் கூட்டத்தோடு மலைக்கு வந்து அதைச் சுற்றித் தாக்கி விலங்குகளைக் கொன்றன. அங்கிருந்த மயில் ஒன்று தப்பிப் பறந்து போனது. ஆயிரம் விளக்குகளை ஒன்றாக எரியவிட்டது போன்ற பெரியசோதி சிந்தும் பெருவிளக்கு ஒன்றைக் கையில் ஏந்திக் கொண்டவளாய், சிவந்த நிறத்தை உடைய திருமகள், இராவணன் அரண்மனையிலிருந்து நீங்கி வீடணன் மாளிகைக்குள் நுழைந்தாள். அவள் அப்படி நுழைந்தவுடன், 'இனி என்ன நடக்குமோ என்று ஆவலுடன் நான் எதிர்பார்த்தபோது பிராட்டி! நீ என் தூக்கத்தைக் கலைத்து விட்டாய்' என்று திரிசடை - வரும் முன் உரைக்கும் ஆற்றல் பெற்ற தீர்க்கதரிசியாக ஒன்று விடாமல் எல்லாவற்றையும் கூறினாள்.

தீயது, நல்லது எது நடந்தாலும், நடப்பதாக இருந்தாலும் முன்கூட்டியே சில அறிகுறிகள் தோன்றும் என்பது மனித நம்பிக்கை. கதைகள், புராணங்களில் மட்டும் அல்லாது கண்முன்னால் வாழ்ந்த பெரியவர்களின் வாழ்க்கையிலும் இவைபோன்று நிகழ்ந்துள்ளதை மானிட வரலாறு பதிவு செய்துள்ளது. ஏற்படும் அறிகுறிகளை வைத்து நடக்கப்போவதை உய்த்து அறிவதற்குத் தான் பகுத்தறிவு வேண்டும்; தெய்வ நம்பிக்கை கூடத் தேவையில்லை. தெய்வம் இந்த அறிகுறிகளின் மூலம் செய்தி தருகிறது. அதைப் படித்துப் புரிந்து கொள்ளவேண்டியது மனிதன் கடமை. சிலவேளைகளில் சிலர் மூலம், சில பொருள்கள் அல்லது நிகழ்வுகள் மூலம் 'வரஉள்ளவை' உணர்த்தப் படுகின்றன என்பதைக் கம்பர் இந்தப் பகுதியில் அழுத்தமாகப் பதிவு செய்துள்ளார். தவிர, திரிசடை அவற்றை நுணுகி

ஆய்ந்து பிராட்டிக்கு இனி நல்லதே நடக்கும் என்பதையும் தெளிவுபடுத்தினாள். அவளுடைய கூர்த்த அறிவு பாராட்டுக்குரியது; அந்த அறிவே தேவியின் உயிரை இலங்கையில் காத்தது என்பதைப் படிப்போர் உணரலாம்.

இதுதான் சூழல்; அனுமன் அசோக வனத்துக்குள் நுழைந்த போது சீதாபிராட்டியும் திரிசடையும் இருந்த நிலைமை. நம்பிக்கை இழந்தவளாய் இருந்த தேவியைத் திரிசடை தேற்றிக் கொண்டிருந்த சமயம் அங்குவந்தான் அனுமன். உறக்கத்திலிருந்து விழித்து எழுந்த அரக்கியர்கள் சீதையைச் சூழ்ந்து பலவகை ஆயுதங்களைக் காட்டி அச்சுறுத்திக் கொண்டிருந்த நிலையை அனுமன் கண்டான். 'கண்டனன்' என்ற சொல்லை அழுத்தமாகப் பயன்படுத்தி அப்போது இருந்த அனுமனின் மகிழ்ச்சியையும் மனநிலையும் கம்பர் பாடும் அழகு படித்துக் சுவைக்கத் தக்க கவிநயமாகும்.

சுற்றிலும் இருக்கும் அரக்கியர்கள் கரிய, பெரிய உருவங்களை உடையவர்கள். கார்மேகங்கள் ஒன்று கூடியது போல அவர்களின் நடுவில், பிராட்டி அந்த மேகங்களைக் கிழித்துச் சீறிப்பாயும் மின்னல் போல இருந்தாள். ஏற்கெனவே கருநிறத்து ஒரு தனி மேகமாகிய இராமபிரானின் மலை போன்ற தோளில் தங்கிய சிவந்த நிற மேகம் இது - இப்போது மின்னலாக ஒளிவிடுகிறதாம்!

விரிமழைக் குலம் கிழித்து ஒளிரும் மின்எனக்
கருநிறத்து அரக்கியர் குழுவில் கண்டனன்
குரு நிறத்து ஒருதனிக் கொண்டலாம் எனாக்
கருநிறத்து அழகனுக்கு அமைந்த காந்தையை.

ஓர் அன்னப் பறவை தடாகத்து நீர் நடுவே இருப்பது போலத் தன்னைச் சுற்றித் தானே சிந்திய கண்ணீர் வெள்ளத்தில் பிராட்டி இருந்தாள். அனுமனின் உள்ளுணர்வு 'அவளே சீதை' என்று சொல்லியது. அவன் பெற்ற மகிழ்ச்சிக்கு அளவில்லை. இங்கும் அங்குமாய் ஓடினான்; ஆடினான்; பாடினான். தேடித்தேடி அலைந்தபின் தன் தேடல் பெற்ற வெற்றியால் மகிழ்ச்சிக் கூத்தாடினான். தனக்குத் தானே பலவற்றைச் சொல்லி மகிழ்ந்தான். அவை யாவை? பல பாடல்களில் அவன் மனநிலையையும் பேசியவற்றையும் பாடுகிறார் கம்பர்.

"வீடினது அன்று அறன் யானும் வீகலேன்
தேடினன் கண்டனன் தேவியே"

"அறம் இன்னும் அழியவில்லை. யானும் இனிச் சாகமாட்டேன். தேடித் திரிந்த நான் தேவியைக் கண்டுகொண்டேன். செந்தாமரைக் கண்ணனாகிய இராமபிரானின் உள்ளத்தில் வாழும் உயிர்போன்ற சீதாபிராட்டி இவரே. கண்டுபிடிப்பதற்கு வசதியாக இராமன் சொன்ன இலக்கணங்களுக்கும் இவருக்கும் சிறிதும் வேறுபாடு இல்லை. ஆதிசேடப் பாம்பிலிருந்து நீங்கி அவதரித்துள்ள பரம்பொருள் தேவனே அந்த இராமன்; இந்தத் தேவியோ வேறுயாருமில்லை. அவன் உடனிருக்கும் பேறுபெற்ற திருமகளே.

அழகிய மணி ஒன்று மாசுபடிந்து மங்கியிருப்பது போலும், குளிர்ந்த வெண்மையான முழுநிலவு தன் ஒளிக்கதிரை இழந்தது போலும், நலம் குறைந்து தென்படும் இந்த நங்கையின் கற்போ காவலோ ஒரு சிறிதும் மாசுபடவில்லை. இந்தச் சூழலிலும் இந்த உறுதியான நிலைப்பாடு இவருக்கு எப்படி வந்திருக்கும்? வீரக் கழல் அணைந்த இராமபிரானின் பொன்போன்ற திருத்தோளா, பெண்களின் திலகமாகிய இந்தச் சீதையின் மனத்துடைய சிறப்பா அல்லது தேவி தோன்றி வளர்ந்த சனகப் பேரரசின் வீரக்குலமா, எது இந்த உறுதிக்குக் காரணம்?

தங்களைக் காக்கவேண்டும் என்று தவம் செய்துவரும் தேவர்கள் இனி உயிர் பிழைப்பார்கள். தெய்வத்தைப் பரவும் வேதம் படித்த அந்தணரும் பிழைத்தார்கள். அறத்துக்கும் அழிவில்லை. என்னுடைய தலைவனாகிய இராமபிரானுக்கு இனிச் செய்வதற்கு அரியது என்ன உண்டு? எல்லாம் எளிமையானது தான். அவருக்குத் தொண்டனாகச் செயல்புரியத் தவம் செய்த நானும் சிறப்புடையவன் தான்.

பிராட்டிக்கு ஒரு சிறிது களங்கம் நேர்ந்தாலும் இந்த உலகம் முழுவதும் இராமபிரானின் கோபத்தால் - ஊழிக்காலப் பெருந்தீ போன்ற கோபத்தால் - அழிந்துவிடும் என்று அஞ்சியிருந்தேன். நல்ல வேளை, பிராட்டி நலமாக இருக்கிறார். உலகில் வாழ்பவர்கள் பல்லாண்டு பல்லாண்டு வாழட்டும்!

எது தவம்? காட்டுக்குள் செந்தீ வளர்த்து, புனலில் மூழ்கிக் குளித்து, உண்ணவேண்டுபவற்றையும் பருகவேண்டுபவற்றையும் விட்டு விட்டுத் தவம் செய்யும் துறவிகள் பெருமைக்குரியவர்கள். ஐயமில்லை. ஆனால் மாசில்லாத குலத்தில் தோன்றி மறுவில்லாத கற்பையும் உடையவராக இருக்கின்ற பிராட்டி செய்யும் தவத்திற்கு அவர்கள் தவம் ஈடாகாது.

பிராட்டி தவம் செய்து வருகிறார் என்று சொல்வது கூடப் பிழை.

இவர் இப்படி இருப்பதற்காக நல்ல குடும்பப்பிறப்பும், மேன்மைப் பண்பும், மங்கல நற் குணங்களாகிய பெண்மையும் நாணமும் தவம் செய்து பேறு பெற்றிருக்க வேண்டும். இத்தனைச் சிறப்புகளுடன் பிராட்டி தன்னை வருத்திக்கொண்டு தவம்செய்யும் அருட்கோலத்தைத் தாமரைக் கண்களால் காண இராமபிரான் தவம் செய்யவில்லையே!

அரக்கியர்கள் சூழ்ந்து கொடுமை செய்யும் இந்த நிலையிலும் தன்னையும், தன்னுடைய உயர்பண்புகளையும் பேணிக்காக்கும் அளவு பிராட்டியைக் காத்துத் துணை நின்றது எது? தருமதேவதையாகிய அறக்கடவுளா? சனகப் பேரரசன் செய்திருக்கக் கூடிய நற்செயல்களாக இருக்குமா? யார் இவ்வாறு 'தற்காப்பு' செய்யும் உறுதியுடையவர்? இது அருமையே".

இவையும் இவை போல்வனவுமான சிந்தனைகளைக் கொண்டவனாய் அனுமன் ஒரு மரக்கிளையில் மறைந்து நின்று கொண்டான். அப்போது இராவணன் தோன்றினான்.

இந்தச் செய்திகளை வரிசையாகக் கூறும் பகுதிக்குக் கம்பர் 'காட்சிப் படலம்' என்றே பெயர் கொடுத்துள்ளார். காட்சி என்ற சொல் காணுதல் என்று சாதாரணமாகப் பொருள்படும். கண்ணால் பார்த்தல் ஒருவகை. அறிவுக்கண் கொண்டு கூர்ந்துநோக்கலும் காட்சி தான். இது ஒருவகை ஞானம். 'மாசறு காட்சியவர்' என்று திருவள்ளுவர் இதைப் பல இடங்களில் குறிப்பிடுகிறார். குற்றமற்ற தெளிந்த நல்லறிவு இது. கூர்த்த மதியால் கணிக்க கூடிய நுட்பம். வெறும் கல்வியால் மட்டும் வந்துவிடாது. அதற்குப் பயிற்சி வேண்டும்; ஞானம் வேண்டும். கதிரவனின் பின்னால் நடந்து சென்று எல்லாக் கலைகளையும் கற்றுத் தேர்ந்த ஆஞ்சநேயனுக்கு இயற்கையாக இந்த ஆற்றல் அமைந்து கிடந்தது. காப்பியம் முழுவதும் இதை அங்கங்கே வெளிப்படுத்துகிறார் கம்பர்.

இராவணனை முதன்முதலில் நேராகப் பார்க்கிறான் அனுமன். இருபது பாடல்களால் இராவணனின் உருவத்தோற்றத்தைக் கம்பர் புனைந்துரைக்கிறார். பல மலைகள் ஒன்றாகத் திரண்டன போன்ற தோள்கள்; பல சூரியன்கள் ஒரே சமயத்தில் தோன்றுவது போன்ற மணிமகுடங்கள்; தேவமங்கையர்கள் சுற்றிலும் பணிவிடை செய்து தொடர்ந்து வந்தார்கள்; நறுமணங்கள் கமழ்ந்தன; உடல் முழுவதும் காமத்தீ அவனைச் சுட்டு எரித்தது. இனி என்ன ஆகுமோ என்று வானத்தவர் அஞ்சினர்.

ஆற்றல் மிக்க பேருருவம், நீலநிற மலைபோல. அதிலிருந்து கீழே இறங்கி வேகமாக ஓடிவரும் வெள்ளை நிற அருவிபோலப் பட்டுமேலாடை; கழுத்தில் பசும்பொன்னால் ஆன மாலைகள். அவற்றில் சுடர்விடும் நவரத்னக் கற்கள். கரிய, திரண்ட, பெரிய மேகம் ஒன்றை நடுவில் கிழித்துத் தோன்றும் ஒரு மின்னலைப் போல, அவன் மார்பின் நடுவில் அழகிய பூணூல் அசைந்தது.

இசைவாணர்கள் குழலிலும் யாழிலும் வாசித்துக் கொண்டுவர, மங்கையர் இன்னிசை பாடிவந்தனர். அழகிய பெண்கள் ஆலவட்டம் வீசினர். இவற்றுக்கு ஏற்ப ஆடல்மகளிரும் நடனம் செய்துவந்தனர். அவன் நடந்தான். எப்படி? கம்பருடைய கற்பனைக்கு எல்லையுண்டா என்ன! கால்களை மாறிமாறி வைத்து அவன் நடந்தபோது இலங்கைத் திருநகர் தாழ்ந்து இறங்க, கடல்நீர் உள்ளே புகுந்தது. பூமியின் பாரத்தைத் தாங்கி நின்ற ஆதிசேஷப் பாம்பும் முடியாமல் தளர்ந்து போனான். நிலமகளோ பாரம் பொறுக்க முடியாமல் வாய்விட்டு அலறினாள்.

காமத்தீ அவனைப் பொசுக்கியது. அதன் வெம்மை தாங்காது அசோக வனத்து மரங்கள் தீய்ந்து போயின. இப்படியே அவனைப் பற்றிய வருணனை தொடர்கிறது. காமவிரகன் சீதாபிராட்டியை அடைய வந்தபோது கூட, சுற்றிலும் ஆடலும் பாடலுமாகத் தொழில் புரியும் தெய்வ மங்கையர்கள் என்றால் அவனுடைய 'காமநோயின்' கொடுமை - கரக்க வந்த காம நோயின் கொடுமை - இந்தப்பகுதியில் விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளது. இவனைப் பிராட்டி எதிர் கொள்ளவேண்டும்; அனுமன் காத்திருந்தான்.

ஆசைப்பெருக்கால் அறிவிழந்து வந்த இராவணன்; என்ன நடக்குமோ என்று அஞ்சியவளாய், அவனுடைய காமவிகாரத் தோற்றம் கண்டு கூசியவளாய்ப் பிராட்டி. இதைத் தன் கண்கள் இரண்டும் சாட்சியாகக் கண்டான் அனுமன். சாதாரணக் கண்கள் அல்ல; குற்றமற்றவை. 'காசில் கண்' என்பார் கம்பர். இந்தச் சூழலில், தான் செய்யக் கூடியது என்ன? இராவணனால் ஏதேனும் தீமை நேருமோ என்ற கலக்கம் ஒருபுறம்; தேவி இராவணன் வன்முறைக்கு அஞ்சி ஏதேனும் செய்து கொள்ளவாரோ என்று அச்சம் ஒருபுறம்; என்ன செய்யலாம்? வாழ்த்துவோம். எந்தத் தீமையும் நடக்கக் கூடாது என வாழ்த்துவோம் என்று முடிவு செய்தான் மென்மேலும் வளர்கின்ற புகழையுடைய அனுமன்.

வாழி சானகி வாழி ராகவன்
வாழி நான்மறை வாழியர் அந்தணர்
வாழி நல்லறம் என்றென்று வாழ்த்தினான்
ஊழி தோறும் உயர்வுறும் சீர்த்தியான்

"சீதா பிராட்டி எவ்விதத் தீங்கும் இல்லாது வாழ்க! அப்படித் தேவியை வாழவைக்க ராகவனாகிய இராமபிரானும் பல்லாண்டு வாழ்க! 'பிரான்-பிராட்டி' என்று நாள்தோறும் அவர்கள் பெருமை பேசும் நான்மறைகளும் வாழ்க! அந்த வேதங்களின் உட்பொருளை உணர்ந்து ஓதும் உண்மை அந்தணர்கள் வாழ்க. இந்த உலகில் இதுவரை நின்று நிலவி, பாவங்களை வேரறுக்கும் நல்ல அறங்கள் இனியும் வாழ்க; பாவங்களைப் போக்குக".

இதுவே அனுமனின் வழிபாடு; வாழ்த்து. இந்தப்பாடலைச் சற்று கூர்ந்து படித்தால் அனுமனுடைய அப்போதைய மனநிலையை முழுமையாகப் புரிந்து கொள்ளலாம். தேவிவாழவேண்டும்; தேவியைக் காக்க இராமன் வாழவேண்டும்; இவர்கள் இருவரும் வாழ நான்மறைகளும் நல்லறங்களும் துணையாக வேண்டும் என்ற சிந்தனைகள் பிரான் - பிராட்டி மீது வைத்த பக்தியால் மட்டுமல்ல, அரக்கனாகிய இராவணனின் வலிமையை, பேராற்றலை நேரடியாகக் கண்டதால் விளைந்த துடிப்புகளாலும் ஆகும்.

இராவணன் சீதையிடம் சென்று தன்னுடைய ஆசைக்கு இணங்கவேண்டும் எனப் பலப்பலவாறாக் கெஞ்சி வேண்டினான். மூன்று உலகங்களையும் ஒருசேரக் கட்டியாளும் தன்னுடைய பேராற்றல்; ஆட்சிப்பரப்பு, செல்வம், வளம் இவற்றோடு ஒப்பிட்டால் அற்ப மானுடனாகிய இராமனின் நாடும் செல்வமும் சிறுமைக்குரியன; தன்னைப் பகையரசரும் வீரர்களும் மட்டும் பணிந்து போற்றவில்லை. தவம்செய்யும் யோகிகளும், நூல்கள் பல கற்ற அறிஞர்களும் கூட அவனுடன் இருப்பதைத் தேவலோக இன்பத்துக்கு இணையானது என்று கருதினார்கள். 'சீதா! இலக்குவா என்று கூவிக்கொண்டே மாயமானின் பின்னால் போய் மாண்டு போன கணவனாகிய இராமன் வருவான் என்று எதிர்பார்ப்பது பேதைமை; மூவுலகங்களையும் குடியாகக் கொண்டு ஆட்சி புரியும் எல்லா வல்லமையும் பெற்ற என்னை உன் அடிமையாக ஏற்றுக்கொண்டு அருள்புரிதல் வேண்டும்'' என்று சொல்லிக் கொண்டு தன் கைகளைத் தலைக்குமேல் தூக்கிக் கும்பிட்டுக்

கொண்டே மண்ணில் விழுந்தான்.

பிராட்டி அவனை ஒரு புழுவைப் பார்ப்பது போலப் பார்த்தாள். மனத்திலும் முகத்திலும் கோபம் பொங்கியது. மூவுலகையும் வெற்றி கொண்டவன் என்று தன்னை உயர்வாகத் தானே போற்றிக் கொண்ட இராவணனைத் 'துரும்பு போன்றவனே' என சொல்லிப் பிராட்டி இருபது பாடல்களில் அவனுக்கு விடை கூறினாள். அருமையான பாடல்கள். இராமபிரானின் வில்லாற்றல் முழுவதும் வெளிப்படும் வண்ணம் நடந்த நிகழ்ச்சிகளை எல்லாம் தொகுத்து அற்புதமாக அவன் உள்ளத்தில் பதியுமாறு எடுத்துக் சொன்னாள்.

மேருமலையை ஊடுருவும் விண்ணகத்தைப் பிளக்கவும், பதினான்கு உலகங்களை அழிக்கவும் வல்லது இராமபிரானின் ஒரே அம்பு. அதற்கு அஞ்சித்தான் இராவணன் வஞ்சகனாய், மாயமானை ஏவி ஏமாற்றி அவளைச் சிறையெடுத்து வந்தான். ஜடாயுவுடன் நடந்த சிறுபோரிலேயே அவன் இறக்கையில் அடி பட்டுக் கீழே விழுந்த இராவணன் தன் ஆற்றலைப் பற்றிப் பேசலா காது. சிவபெருமான் தந்துள்ள வரமும் வாளும் தாம் அவனைக் காப்பாற்றின; அவனுடைய தோளாற்றலோ வாளாற்றலோ அல்ல. அவன் பெற்றுள்ள வலிமை வரம், ஆட்சி, செல்வம், நீண்ட வாழ்நாள் எல்லாம், விளக்கின் முன்னே எவ்வளவு திரண்டு வந்தாலும் இருள் அழிவது போல விரைவில் அழிந்துவிடும். மலை எடுத்த தன்னுடைய பெருமையைப் பேசிக் கொள்ளும் இராவணன், ஒரு பெண்ணாகிய தன்னை எடுக்க இளையவீரனாகிய இலக்குவன் இல்லாத போது வந்த கோழைமை; இவனை அழிப்பதற்காகப் பிரான் விடும் அம்பினால் உலகத்துயிர்களும் வீணாக அழியுமே என்று தான் கொண்ட அச்சம், இரக்கம்; மானிடர் இருவர் என்று அவன் பேசும் ஏளனத்தால் அழியப் போகும் அவன் வாழ்வு; யாரே ஆயினும் - தேவரோ அரக்கரோ மானிடரோ - தாம் செய்யும் பாவவினைகளுக்குத் துன்பம் அனுபவித்தே தீர வேண்டும் என்ற உறுதி, அவன் செய்த பெருந்தவத்தைப் பாராட்டியே சிவபெருமானாகிய ஈசன் அழிவிலா வரம் தந்தான், அதை அழிவிற்கு உள்ளாக்கும் இராவணன் பேதைமை; இராவணனைத் தோற்கடித்த கார்த்தவீரியார்ச்சுனனை வென்ற பரசுராமனை வீழ்த்திய இராமபிரானின் அம்பு; பாம்பு கூட மந்திரத்துக்குக் கட்டுப்படும்; ஆனால் தக்க அறிவுரை கூறி அவனை வழிநடத்தச் சான்றோரில்லாத அவலம் - என்று இவற்றை எல்லாம் மிக விரிவாக எடுத்துரைத்தாள்.

இவற்றைக் கேட்டுச் சினத்தின் உச்சநிலைக்குப் போனான் இராவணன்; என்றாலும் பிராட்டி மீது வைத்த காதல்வெறி அவன் மேன்மையை அழித்து மறுபடியும் கெஞ்சச் செய்தது.

இப்படி இருவர்க்கிடையே நடந்த உரையாடலை முழுதும் கேட்டுக் கொதித்துப் போனான் அனுமன். "அருந்ததி போன்ற கற்புடையவளும் என்னை ஆளாகக் கொண்ட நாயகன் தேவியுமாகிய சீதாபிராட்டியிடம் தீய சொற்களைச் சொன்ன இழிவான இராவணனின் கை, பிராட்டியை நோக்கி நீள்வதற்கு முன்பே, அதை ஒடித்துத் துவைத்துத் தேய்த்து அழிப்பேன். அரக்கனின் பத்துத் தலைகளும் சிந்துமாறு மோதித் தாக்கி இலங்கைக் கடலுள் கொண்டுபோய் வீழ்த்திய பின்னர் தூய்மையின் வடிவமாகவும், மாதவம் புரிந்த பிராட்டியாகவும் இருக்கும் தேவியைச் சுமந்து கொண்டு இராமபிரானிடம் போவேன்" என்றவாறு அவன் எண்ணங்கள் ஓடின.

இராவணன் விடுவதாக இல்லை. பிராட்டி சொன்ன செய்திகளுக்கு எல்லாம் மறுப்பு தெரிவித்துப் பேசினான். மாயமானைத் தொடர்ந்து இராமனைப் போகச் செய்ததற்குக் காரணம், நேரடியாகப் போரில் கொன்று தேவியைப் பிடிக்க வந்தால் கணவன் இறந்த பின்னர் தானும் இறந்துவிடுவாள் என்று கருதியே. பிராட்டியைக் கவர்ந்தது இராவணன் என்றால் இராமஇலக்குவர் அஞ்சித் தேடிவரமாட்டார்கள். பிரமன் உள்ளிட்ட முப்பெருந் தெய்வங்களும் இந்த அரக்கனை விட்டு ஒதுங்கிவிட்டார்கள். அவளுக்காகத் தான் அந்த மானிடர் இருவரைக் கொல்லாது விட்டான். கயிலை மலையை எடுத்தவனுக்கு அற்பமானிடரை அழிப்பது பெரிதா? தேவியைத் தனக்கெனத் தரப்போகும் மானிடரைக் கொல்வது அறமல்ல என்பன போன்று கூறி அவளுக்குக் காவலாக இருந்த அரக்கியரிடம் எப்படியாவது சீதையைப் பணியச் செய்யவேண்டும் எனக் கட்டளையிட்டும் போனான்.

அவர்களும் தங்கள் அரசன் ஆணையைத் தலைமேல் கொண்டு தேவியைப் பலவகைகளிலும் துன்புறுத்தினார்கள்; கொடிய சொற்களைப் பேசி அச்சுறுத்தினார்கள். பிராட்டி தன்நிலைமைக்கு மிகவும் வருந்தினாள். அப்பொழுது முச்சடை இளவரசியாகிய திரிசடை சீதையைத் தேற்றித் தான் கண்ட கனவையும்

நினைவூட்டினாள். தவிர வேறு ஒரு செயலையும் அரக்கியரிடம் சொன்னாள். இனி இலங்கையில் நடக்கப்போகும் நிகழ்ச்சிகளை வரும் முன் உணர்ந்தவளாய் அவர்களிடம் எல்லாவற்றையும் கூறிப் பிராட்டியைத் துன்புறுத்த வேண்டாம் என அறிவுறுத்தினாள். அவர்களும் அதை ஏற்று அமைதியானார்கள். பாலைவனத்தில் ஒரு சிறு நீரூற்றாய், துன்பங்கள் சூழ்ந்த இருளில் ஒரு அகல்விளக்குச் சுடராக இருந்து பிராட்டியைக் காப்பாற்றிய பெருமை திரிசடைக்கே உரியது. வீடணன் மகளாக இருந்து, அது அவள் செய்த தவம்.

## 10. அணங்கும் அனுமனும்

சீதாபிராட்டியைக் கண்டு நாயகன் செய்தி எல்லாம் சொல்ல இதுவே நல்ல வாய்ப்பு என்று கருதிய அனுமன், ஒரு மந்திரத்தை ஒலித்து அரக்கியர்களை எல்லாம் பேருறக்கத்தில் ஆழ்த்தினான். பிராட்டி தனித்து விடப்பட்டாள். கொடுமையே செய்பவராயினும் சுற்றிலும் உயிரியக்கம் இருந்தால் தனிமைக் கொடுமை இருக்காது. யாரும் இல்லாத இடத்தில் துன்பம் இன்னும் அதிகமாகவே வருத்தும். அயலார் ஊர்; தெரிந்தமுகம் ஒன்று கூட இல்லை என்றால் சொல்லவே வேண்டாம். அதுவும் அரக்கனும் அரக்கியருமாகச் சேர்ந்து அச்சுறுத்தியிருக்கும் நேரம். பிராட்டித் தன் நிலைக்கு இரங்கிப் புலம்பினாள்.

இராமபிரான் - வல்வில் ஏந்திய நாயகன் வருவானா? வானையும் நிலவையும் இரவையும் இருளையும் கொடியையும் மரத்தையும் நோக்கி இந்தக் கேள்வியைக் கேட்டுப் புலம்பினாள். ஓராயிரம் கோடித் துன்பத்தைத் தான் தாங்கி நிற்பதற்குக் காரணம் நாராயணனாகிய பெருமான் - காக்கும் கடவுள் - என்றாவது ஒருநாள் வருவான் என்னும் துணிவு பற்றியே. அரக்கர் சிறையில் தனித்திருந்த தன்னை இராமன் ஏற்றுக்கொள்ள மாட்டான். கணவன் அல்லாத ஒருவன் தன்னை விரும்பினான் என்று அறிந்தும் உயிர்விடாத தன் மானக்குறைவு பற்றியும் வருத்தப்பட்டாள். இவ்வாறு பலப்பலவற்றைத் தனக்குள் பேசிக் கொண்டு ஒரு முடிவுக்கு வந்தாள்.

அன்பழி சிந்தையர் ஆய ஆடவர்
வன்பழி சுமக்கினும் சுமக்க மற்றியான்
துன்பழி பெரும்புகழ்க் குலத்தில் தோன்றினேன்
என்பழி துடைப்பவர் என்னின் யாவரே.

"என்மீது ஏற்பட்டிருக்கும் பழி இழிவானது. மாற்றான் ஒருவன் என்னைத் தூக்கிவந்து சிறைப்படுத்தித் துன்புறுத்துகிறான். என்கையைப் பற்றித் திருமணம் செய்து கொண்ட இராமன் என்னைக் காப்பாற்ற இதுவரை முன்வரவில்லை. தவிர இளவலாகிய

இலக்குவனும் எந்த முயற்சியும் எடுத்ததாகத் தெரியவில்லை. மானத்தைப் போற்றும் உயர்குலத்தில் தோன்றியவள் நான். இனியும் பழிசுமந்து வாழ்வதில் பொருளில்லை.

மாயமான் பின்னால் கணவனை அனுப்பிய பாவி நான். அவனைத் தேடுமாறு இலக்குவனையும் நானே விரட்டினேன். இந்தத் துன்பம் இனி, நான் விடுதலை பெற்று அயோத்தி சென்றாலும் கூடப் பெண்கள் எல்லாம் பகைவன் ஊரில் இருந்தவள் என்றே எள்ளி நகையாடுவார்கள். ஒருவேளை என்னை இராமன் வந்து சிறையிலிருந்து மீட்டாலும், அயோத்திக்கு வர உனக்குத் தகுதியில்லை என்று சொல்லிவிட்டால், என் கற்புநெறியை, அழியா மேன்மையை எப்படி உணர்த்துவேன்? ஆதலால் இங்கு உயிர்விடுவதே மேல்"

என்று முடிவு செய்த பிராட்டி அருகில் இருந்த ஒரு மாதவிப் புதருக்குப் பக்கத்தில் போனாள். அனுமனுக்குத் தேவியின் மனநிலை புரிந்தது. அவனுடைய உள்ளம் துணுக்குற்றது. அவள் எதிரில் குதித்து நின்று,

"அண்டர் நாயகன் அருள் தூதன் யான்"

என்று சொல்லிக் கொண்டே அவளைக் கை கூப்பித் தொழுதான். தேவர்களுக்குத் தலைவனாகிய இராமபிரான் அருள்கொண்டு. வந்துள்ள தூதன் என்று தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டான். இந்த ஒரு தொடரில் உயிரே இருக்கிறது. பலவகையாகக் கவலைப்பட்டுக் கொண்டிருந்த பிராட்டிக்கு இரண்டு சந்தேகங்கள் தொடர்ந்து இருந்தன. இராம இலக்குவர் உயிரோடு இன்னும் இருப்பார்களா? இருந்தால் அவர்கள் ஏன் தன்னைக் காப்பாற்ற வரவில்லை? இந்த ஐயங்களை நீக்கியது மேலுள்ள தொடர். "அண்டர் நாயகனாகப் பெருமான் இன்னும் இருக்கிறார். அவன் தம்பியுடன் உன்னைத் தேடி வந்து கொண்டிருக்கிறான். அதற்கும் முன்பாகப் போய் இந்தச் செய்தியைச் சொல்லுமாறு பிராட்டியின் மீது அருள் கொண்டு என்னைத் தூதனாக அனுப்பியுள்ளான். ஆதலால் நீங்கள் இனி அஞ்சவேண்டா" என்ற குறிப்புகளைத் தேவி புரிந்து கொண்டாள். இந்தச் சொற்களைச் சொல்லியது யார் என்று நிமிர்ந்து பார்த்தாள். கூடவே அவள் உள்ளத்தில் ஒரு கேள்வியும் எழுந்தது. "ஏன் இதுவரை தன்னைத் தேடும் முயற்சியில் இராமன் ஈடுபடவில்லை"?

ஆயகலைகளை அறிந்து கற்ற அனுமனுக்கு இந்த எண்ண

ஓட்டங்கள் தெரியாமலா போகும். அவன் சொன்னான்;

"பிராட்டியே! இராமபிரானின் ஆணையைத் தலைமேல் கொண்டு நான் இங்கு வந்துள்ளேன். இந்த நிலவுலகத்தில் தங்களைத் தேடிப் பார்க்குமாறு எட்டுத் திசைகளுக்கும் எண்ணிலாத அளவு வானரர்களை இராமபிரானும் என்னுடைய மன்னனாகிய சுக்ரீவனும் அனுப்பியுள்ளார்கள். அப்படித் தென்திசை நோக்கி வந்தவன் நான். என்ன தவம் செய்தேனோ? உங்கள் சிவந்த பாததாமரைகளைக் காணும் பேறு பெற்றேன்.

ஏன் இத்தனை நாளும் இராமபிரான் வரவில்லை என்று நீங்கள் ஐயுறுவது சரியே. ஆனால் நீங்கள் இங்குதான் இருக்கிறீர்கள் என்று கமலக்கண்ணனாகிய இராமனுக்கு எப்படித் தெரியும்?. தெரிந்திருந்தால் அரக்கர் குலத்தை விட்டுவைத்திருப்பானா? இப்படி இவர்கள் நடமாடுவதிலிருந்தே அரக்கர் சிறையில் நீங்கள் இருப்பது இராமனுக்குத் தெரியாது என்று புரிந்து கொள்ளலாம்.

என்னைச் சந்தேகப்படவேண்டாம். தங்களுக்கு அடையாளமாகக் கொடுக்கச்சொல்லிப் பெருமான் தந்திருக்கும் மோதிரம் என் கையில் இருக்கிறது. தவிர, தங்களை அடையாளம் கண்டுகொள்ள வசதியாக இராமன் கூறிய குறிப்புகளும் உள்ளன. விளக்கு போன்று குளிர்ந்த ஒளியை வழங்கும் தாயே! இனி நடக்கப் போகின்ற எல்லாவற்றையும் உள்ளங்கை நெல்லிக் கனிபோல நீயே தெரிந்து கொள்வாய்"

மூன்று பாடல்கள் தான். சொல்லின் செல்வன் அனுமானின் வாயிலிருந்து வந்ததால் பெரிய மாற்றத்தை அவை ஏற்படுத்தின. ஒன்று பிராட்டியைக் காப்பாற்றியது; இரண்டு இராம இலக்குவர் வருகின்றனர், அஞ்சவேண்டியதில்லை எனத் தெளிவுறுத்தியது, 'சொல்லின் பொருளுணர்ந்து சொல்லுவதில் வல்லவன் அனுமன்' என்பதற்கு இதுவும் தக்க சான்று.

பிராட்டி நிமிர்ந்து பார்த்தாள். தன்னை வணங்கி நின்றவன் மாயவடிவில் வந்த இராவணனாக இருக்கலாமோ என்ற ஐயத்தால் அவளுக்குச் சினம் ஏற்பட்டது. ஆனால் கூர்ந்து நோக்க, நோக்க - இராமன் என்னும் சொல்லை, வந்தவன் ஒலித்ததைக் கேட்டுக் கேட்டு அவள் உள்ளே கருணையே வழிந்தது. சினமும் இரக்கமுமாக மனநிலை துவண்டது. தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள்;

"இப்பொழுது என் எதிரில் நிற்பவன் அரக்கன் அல்லன். நல்லொழுக்கத்தில் தவறாது நின்று ஐந்து பொறிகளையும் அடக்கி வென்ற தவமுனிவனாகவே தோன்றுகிறான். ஏனெனில் இவனுடைய சொற்கள் இவனுடைய நல்லறிவைப் புலப்படுத்தின. கூடவே தூயவனாகவும் தென்படுகிறான். இவனிடம் எந்தக் குற்றமும் இருப்பதாகத் தெரியவில்லை".

"என்றவன் இறைஞ்ச நோக்கி இரக்கமும் முனிவும் எய்தி
நின்றவன் நிருதன் அல்லன் நெறி நின்று புலன்கள் ஐந்தும்
வென்றவன்; அல்லன் ஆகில் விண்ணவன் ஆக வேண்டும்.
நன்று உணர்வு உரையின் தூயன் நவையிலன்"

அனுமனின் பண்பு நலன்களைப் பலர் பலவாறு வியந்து கூறி இருக்கிறார்கள். இராமாயணக் காப்பியம் முழுவதிலும் இத்தகைய குறிப்புகள் நிறைய உள்ளன. ஆனாலும் காப்பியத் தலைவியாகிய எம்பிராட்டி, தம்முடைய நாயகனான இராமபிரானின் அடிமைத் தொண்டனை முதன் முதலில் பார்த்தபோது, உள்ளத்தில் கொண்ட எண்ணங்கள் மிகவும் உயர்ந்தவை. ஆளைப் பார்த்தாலே, அவருடைய குண நலன்களைப் புரிந்து கொள்ளலாம் என்பது மெய்தான் போலும்!.

இவன் அரக்கன் அல்ல; அறிவு மேம்பட்டவன்; ஐம்புலன்களை வென்றவன். தேவகுமாரன் போன்றவன். நல்ல சொற்கள் பேசுபவன்; தூயவன். எல்லாவற்றுக்கும் மேலாகக் குற்றம் என்பது சிறிதும் இல்லாதவன்.

இவைதாம் அனுமனைப் பற்றிப் பிராட்டி கொண்ட கருத்தோட்டம்; கணிப்பு. அவை முழுவதும் பொருந்தும் என்பதும் படிப்போருக்குத் தெரியும். ஆனாலும் ஒரு ஐயம். முதன்முதலில் அனுமனைப் பார்க்கின்ற பிராட்டிக்கு வெறும் 'இராமன் தூதன் நான்' என்று மட்டுமே சொல்லியிருந்த அனுமனை எப்படி இவ்வளவு துல்லியமாக எடைபோட முடிந்தது? தெய்வநங்கை தன்னுடைய தொழுகுலத்து ஒருவனை அடையாளம் காண வேறு என்ன வேண்டும்? ஒரே ஒரு பார்வை வீச்சு போதும். அனுமனின் உத்தம நற்குணங்களைத்தேவி நிறைவாகப் புரிந்துகொண்ட பாங்கு தான் காப்பிய அழகு.

அடுத்தபாட்டு கம்பராமாயணத்தின் உயிர்நிலைப் பாடல்களில் ஒன்று. தெய்வ நம்பிக்கை கொண்டவர்கள் வேறு எதனாலும்,

வேதனையாலும் சோதனையாலும் ஏதுக்களாலும் எடுத்த மொழிகளாலும் சுடர்விட்டுள்ள சோதியைச் சோதிக்கக் கூடாது .

'இராமா' என்ற பெயரைச் சொல்லி ஒருவன் இங்கு வந்துவிட்டான். அது தாரகமந்திரம்; எல்லார்க்கும் எல்லாவற்றையும் தருகின்ற மந்திரம். அதைச் சொல்லிக்கொண்டு, ஒலிக்கக் கூவிக் கொண்டு ஒருவன் இங்கே வந்து விட்டான். அவன் அரக்கன் ஆகவே இருக்கட்டும்; அல்லது அமரராகிய தேவர்களில் ஒருவனாக இருக்கட்டும். குரங்குகளின் தலைவனாக இருந்து போகட்டும். அல்லது தீமையே இப்படிக் குரங்கு வடிவத்தில் வந்ததாகவே இருக்கட்டும். எதுவானால் என்ன? "என்மீது கொண்ட இரக்கத்தால், (அந்த இரக்கமே இப்படிக் குரங்கு வடிவமாக வந்திருக்குமோ?) இங்கு வந்து என்னுடைய தலைவனாகிய இராமபிரானின் திருப்பெயரைச் சொல்லி, என்னுடைய உணர்வை எல்லாம் உருக்கி விட்டான்; சென்றுவிட்டது என நான் கருதியிருந்த உயிரையும் மீட்டுக் கொடுத்துள்ளான். இந்தச் சூழ்நிலையில் இதைவிட எந்தப் பேருதவியை யார் செய்ய முடியும்?"

கையறு நிலையில், உயிரை விட்டு விடலாம் எனத் தேவி முடிவு செய்திருந்த போது பிராட்டியையும் அதன் மூலம் உலகையும் காப்பாற்றிய அனுமன் செயல் காலத்தினால் செய்த பேருதவி. அதனால் தான் தேவியின் மனம் அப்படி உருகிக் குழைந்தது. இந்த அற்புதத்தை விளைத்த பாட்டைப்படியுங்கள்!

**அரக்கனே ஆக வேறோர் அமரனே ஆக அன்றிஇக்**
**குரக்கினத் தலைவனே தான் ஆகுக கொடுமை ஆக**
**இரக்கமே ஆகவந்து இங்கு எம்பிரான் நாமம் சொல்லி**
**உருக்கினன் உணர்வைத் தந்தான் உயிர்இதின் உதவிஉண்டோ**

இவ்வாறாக ஒருவகையில் எண்ணிப் பார்த்த தேவியார் சிந்தனை குவிந்தது. தன்னைத் தேடிவந்து சேர்வதற்குள், அரக்கர்களிடம் எவ்வளவு துன்பப்பட்டானோ; வந்தவழியில் என்ன என்ன இடையூறுகளை எதிர்கொண்டானோ என அனுமனுக்காக இரங்கினாள். கள்ள மனத்துடன் அரக்கர்கள் வஞ்சகமாகப் பேசும் சொற்கள் போல இவனுடைய சொற்கள் இல்லை. மாறாக நல்ல நினைவை நெஞ்சில் ஏற்படுத்தும் சொற்கள்; இராமபிரானை நினைவுட்டும் நல்ல சொற்கள். தன் தலைவனாகிய இராமன் அனுமனைச் 'சொல்லின் செல்வன்' என்று குறிப்பிட்டான். அவனுடைய வழியில் நின்ற பிராட்டி நல்ல நினைவுடைய

சொற்களைப் பேசுவதில் வல்லவன் என்று நுட்பமாகப் பேசும் அழகு காணத்தக்கது. அவற்றைச் சொல்லும் போதே இவன் கண்களிலிருந்து நீர் சிந்தி நிலத்தை நனைக்கிறது. இத்தனையும் வைத்துப் பார்த்தால் இவனைப் பற்றி வினவி அறிவதே நல்லது.

என்றெல்லாம் மனதில் முடிவு செய்த பிராட்டி "வீரனே! நீ யார்"? என்று கேட்டாள். இந்த இரண்டு சொற்களைச் சொல்வதற்கு இவ்வளவு நேரம் ஆகியிருக்கிறது. அரச குடும்பத்து மரபும் வளர்ப்பும் அத்தகையது. எடுத்தவுடன் ஒரு முடிவுக்கு வருவதோ ஒரு சொல்லைப் பேசுவதோ உயர்குடியில் பிறந்தவர்களுக்கு ஏற்றதன்று. ஆதலால் அனுமனின் தன்மை பற்றிப் பார்த்தும் எண்ணியும் உற்று நோக்கியும் ஒரு முடிவுக்கு வந்தவளாய், அனுமனின் தோற்றத்தை வைத்தே, இவன் தனக்கும் இராமபிரானுக்கும் துணையாக நிற்கக்கூடிய தகுதியும் வீரமும் உடையவன் தான் என்று கணித்த பின்னர் அனுமனை இப்படிக் கேட்டாள்.

இந்தச் சொல் பிராட்டியின் வாயிலிருந்து வரவேண்டும் என்று காத்திருந்த அனுமனுக்கு இதைவிட வேறென்ன தேவை? பிராட்டி ஒருவேளை தன்னை மறுதளித்து விடுவாளோ, தான் வந்த செய்தியைச் சொல்ல வாய்ப்பே தரமாட்டாளோ என்றெல்லாம் ஐயப்பட்டுக் கொண்டிருந்த அனுமனுக்குப் பிராட்டியின் கேள்வி பால்வார்த்தது போலாயிற்று. அதைக் கேட்டவுடன் அவனுடைய அழகிய கைகள் மேலே எழுந்து கூப்பித் தொழுதன; பிராட்டியையும் அவள் சொன்ன சொல்லையும்.

அனுமன் சொல்லத் தொடங்கினான்;

"தாயே! தூயவனாகிய இராமபிரான் உன்னைவிட்டுப் பிரிந்த பின்னர், காட்டில் உன்னைத் தேடி அலைந்த போது காட்டில் ஒரு நல்ல நண்பனை - துணையைக் கண்டு பிடித்தான் - அவன் வேறுயாருமில்லை, குரங்குகளின் தலைவனாகிய என்னுடைய அரசன்; பெயர் சுக்ரீவன்: சூரியனின் மகனாகப் பிறந்த தெய்வத் தன்மையுடையவன். ஒரு சிறிய களங்கமும் இல்லாத அளவு சிறந்தவன்.

என்னுடைய தலைவனாகிய சுக்ரீவனுக்கு ஒரு அண்ணன் இருந்தான். பெயர் வாலி. இந்தப் பத்துத் தலைகளையுடைய இராவணனை, ஒரு சமயம் தன் வாலால் இறுகக் கட்டித் திசைகள்

எட்டும் அப்படியே சுற்றிவந்த பெருவலிமையுடையவன். அதே போலத் தேவர்களும் அசுரர்களும் தேவாமிர்தம் வேண்டிப் பாற்கடலைக் கடைந்த போது வெறும் கைகளால் தனி ஒருவனாகப் பாம்பாகிய வாசுகி மெலியும் படி கடைத்து அமுதம் கொடுத்த பெருவலிமை உடையவன்.

அவ்வளவு பேராற்றல் கொண்ட வாலியை உமது நாயகனாகிய இராமபிரான் அம்பு ஒன்றினாலேயே கொன்றான். பிறகு கிட்கிந்தைப் பேரரசனாக என்தலைவன் சுக்ரீவனுக்குப் பட்டம் கொடுத்து ஆட்சியில் அமர்த்தினான். அன்றிலிருந்து இருவரும் நெருங்கிய நண்பர்கள் ஆனார்கள். எங்கள் மன்னவன் தனக்கு ஆலோசனை சொல்லும் மந்திரக் கிழவர்களில் அடியேனும் ஒருவன். வானில் உலவும் காற்றுக் கடவுளின் - நல்ல நீண்ட தெய்வத்தின் - தெய்வத்தன்மை பொருந்திய மகன்; **என் பெயர் அனுமன்.**

இராமபிரான் கிட்கிந்தை வந்த பிறகு என்ன செய்யலாம் என்று ஆய்ந்தபோது, முதலில் நாலாத்திசைகளிலும் வானரர்களை அனுப்பிச் சீதையைத் தேடுவது; பிறகு அரக்கனுடன் போர் செய்வது என முடிவு செய்தார்கள். சுக்ரீவன் படையில் உள்ள வானரர் எண்ணிக்கை மிகவும் பெரியது. எழுபது வெள்ளம் என்று சொல்வதற்கு மேலும் அதிகமானது. எல்லா உலகங்களையும் ஒரே சமயத்தில் கைகளால் எடுக்க வல்லமையுடையவர்கள் வானரவீரர்கள். பெருங்கடல்களைக் கூடத் தனித்தனியாகக் கடக்கவல்ல கால்களை உடையவர்கள். உன்நாயகன் என்ன செய்யலாம் என்று நினைக்கிறாரோ, அந்த எண்ணத்தைக் குறிப்பால் உணர்ந்து, குற்றம் ஏதும் இல்லாமல் அந்தச் செயலைச் செய்து முடிக்கும் திறமை உடையவர்கள்.

அவர்களை எல்லா இடங்களுக்கும் என்னுடைய வேந்தன் அனுப்பியுள்ளான். ஏழுகடல்கள், ஏழு உலகங்கள், கீழ் உலகம், இந்தப் பூமி எல்லா இடங்களுக்கும் உன்னைத் தேடிக் காண அவர்கள் போயுள்ளார்கள். ஒருவேளை மேற்சொன்ன இடங்களில் உன்னைக் காண முடியவில்லை என்றால், இந்த அண்டத்துக்கு அப்பாலுள்ள பிற அண்டங்களிலும் தேடவல்லவர்கள்.

இழி தொழிலையுடைய அரக்கனாகிய இராவணன் உன்னை எடுத்துவந்த பொழுதில், நீ பின்னால், உன்னுடைய ஆடையில் முடிந்து உன் அணிமணிகளைக் கீழே வீசினாய் போலும்; அவற்றில் சில எங்களுடைய மலைப்பகுதிகளில் கிடைத்தன. அவற்றை நான் எடுத்துப் பெருமானுக்குத் தந்தேன். என்னைத் தனியாக அழைத்துப் போய்ப் பிரான் சில குறிப்புகளை எனக்குச் சொன்னார். தவிர

தெற்குநோக்கிச் செல் என்று எனக்குக் கட்டளையுமிட்டார். பெருமானின் திரு அருள் குறைவுபடுமோ? இங்கு உன்னைக் காணும் பேறு பெற்றேன்.

தாயே! நீ அணிந்திருந்த அணிமணிகளை வெற்றிபொருந்திய வேந்தனாகிய இராமபிரானுக்குக் கொடுத்த போது, அவற்றைக் கண்டவுடன் அவருள்ளத்தில் ஏற்பட்ட உணர்ச்சிக் குமுறல்களை நான் என்னவென்று சொல்வேன்! நேரில் பார்த்திருந்தால் மட்டுமே அவற்றை உணரமுடியும். அவருடைய உயிர் போகாமல் நிலை நிறுத்தியவை அந்த அணிகளே அல்லாமல் வேறு என்ன காரணம் என்று நினைக்கிறீர்கள்? **நீ சில அணிகளைக் கழற்றி வீசி எறிந்ததனால் உன் கழுத்தில் உள்ள மங்கல அணி கழலாமல் காப்பாற்றிக் கொண்டாய்.**

இப்படி ஒரு துன்பமிக்க சூழ்நிலையில் இராமபிரான் இருந்த நிலை இப்போது மாறிவிட்டது. வாலியின் மைந்தனாகிய அங்கதன், இராமபிரான் கட்டளைப்படி சுக்ரீவனால் ஏவப்பட்டான். இரண்டு வெள்ளவானர வீரர்களுடன் அங்கதன் தென்திசை நோக்கிவந்தான். அவர்களில் அடியேனும் ஒருவன். வந்த போது இந்தப் பெருங்கடல் குறுக்கிட்டது. வானரர்கள் அஞ்சி நின்ற போது அங்கதன் இலங்கைக்குப் போய்ப் பிராட்டியைத் தேடுமாறு என்னைப் பணித்தான். இதுவே நான் இங்கு வந்து சேர்ந்த வரலாறு".

அனுமன் சொற்கள் பிராட்டிக்குப் புத்துயிர் ஊட்டின. நாயகன் இருக்கிறான். நல்ல நண்பனைத் துணையாகப் பெற்று தன்னை மீட்பதற்கான முயற்சிகளில் ஈடுபட்டுள்ளான். அந்தப் பணியில் அங்கதன் தலைமையில் ஒரு மிகப்பெரிய வானரப்படை எட்டுத் திசைகளிலும் சென்று தேடிக் கொண்டுள்ளார்கள். தென்திசை நோக்கி வந்தவன் அங்கதன். அவனுக்கு உற்ற தளபதி போல இருப்பவன் அனுமன்; ஆற்றல் மிக்கவன். இராவணனை அடக்கிய வாலியையும் இராமன் கொன்றுள்ளான். ஆதலால் அரக்கனை வெல்வது எளிது என்ற இத்தனை செய்திகளையும் அனுமன் மேலுள்ளவாறு உரைத்து முடித்ததைக் கேட்டாள் பிராட்டி.

சீதை பெரிதும் மகிழ்ச்சியடைந்தாள். உவகைப் பெருக்கு மடை திறந்து கண்ணீராக வழிந்தது. தன்னுடைய நாயகனின் திருவுருவம் - "இராமனின் திருமேனி பற்றி நீ எப்படி அறிவாய்? விளக்கமாகச் சொல்வாயாக" என்று கேட்டாள். தன் கணவனின் அழகுகளைப் பிறர் கூறக் கேட்டு மனதில் திருமேனியைக் காணலாம் என்ற ஆசை

பிராட்டியை அப்படி வினவ வைத்தது. "படி எடுத்து உரைத்துக் காட்டும் படித்தன்று - ஓர் உவமானம் சொல்லி அதுபோல என்று விளக்கிக் காட்டும் வடிவம் அன்று பெருமானுடையது. ஆனாலும் சொல்கிறேன்" என்று தொடங்கி அனுமன் இருபது பாடல்களில் இராமபிரானின் அழகுத் தோற்றத்தை - திருவடி முதல் திருமுடி நிறைவாகச் சொல்லி மகிழ்ந்தான்.

சிவந்த இதழுடைய தாமரை போன்ற திருவடிகள்; மரங்களில் தோன்றும் செவ்வரும்புகள், பவளக்கொடி, சூரியனின் செங்கதிர்கள் போன்ற கால்விரல்கள்; களங்கமில்லாத நிலவுகள் போன்ற நகங்கள்; புத்தகச் சுவடி போன்ற புறவடிகள்; அம்பறாத் தூணி போன்ற கணைக்கால்; யானைத் துதிக்கையை ஒத்த தொடை; கங்கையின் நீர்ச்சுழி, மகிழம்பூ இவை போல இருக்கும் திருவுந்தி; திருமகள் விரும்பித் தங்கும் மார்போ மலை போன்றது; ஐராவத யானையின் தந்தங்களைத் திருக்கரங்களுக்கு உவமையாகச் சொல்லலாம்; நரசிம்ம அவதாரம் எடுத்து இரணியன் மார்பைப் பிளந்தபோது வெளிப்பட்ட இரத்தத்தால் சிவந்தது போன்ற நகங்கள் திருக்கரத்தில்; மகாமேரு மலையின் அம்சமான சிவதனுசை மிதிலையில் ஒடித்த வலிமையுடைய தோள்கள்; சங்கும் கமுகும் போன்ற வெண்ணிறக் கழுத்து.

**அண்ணல் திருமுகம் கமலமாம் எனில்**
**கண்ணினுக்கு உவமை வேறுயாது காட்டுகேன்**
**தண்மதியாம் என உரைக்கத் தக்கதோ**
**வெண்மதி பொலிந்தது மெலிந்து தேயுமால்**

பெருமானின் திருமுகத்துக்கு உவமை எனத் தாமரையைச் சொல்லலாம். ஆனால் பிறகு கண்களுக்கு எதனை உவமை சொல்வது? சரி; நிலவு போன்ற முகம் எனச் சொன்னால், வெளுத்துத் தேய்ந்து மறைந்து போகும் நிலா ஈடாகாது. தாமரைத் திருவாய்; பவளத்தை ஒத்த இதழ்கள்; முத்தன்ன பற்கள். இந்திரகோவப்பூச்சி போன்ற அழகிய சிவந்த மூக்கு; பிரானின் கண்புருவத்துக்கு என்ன சொல்ல முடியும்?

எதிரிகளை ஒரு நொடியில் அழிக்க வல்ல சினத்தை வெளிப்படுத்தும் புருவத்துக்கு இணை ஏதும் இல்லை. எட்டாம் நாள் நிலாப் போன்ற, ஆனால் மாசுமறுவற்ற நெற்றி. நீண்டு,

திரண்டு, கறுத்து, மினுமினுத்து, அடர்ந்து, தாழ்ந்து, நுனிசுருண்டு பூமணம் கமழும் மயிர்க்கற்றையைக் கருமேகம் எனச் சொல்வது தவறு. இவை எல்லாவற்றையும் விட இராமபிரானின் நடையே அனுமனை ஆட்கொண்டது. திருமகளும் நிலமகளும் ஒருசேரத் தங்கியிருக்கும் அயோத்திப் பேரரசை ஏற்கவேண்டித் தயரதன் சொல்லுக்கு அடங்கிய போதும், அதை விட்டு விட்டுக் காட்டில் பிராட்டியோடும் தம்பியோடும் நடந்த போதும் கொஞ்சமும் மாறாத கம்பீரமான நடை.

மெய்த் திருப்பதம் மேவும் என்ற போதினும்
இத்திரு துறந்து ஏகு என்ற போதினும்
சித்திரத்தில் அலர்ந்த செந்தாமரை

போன்ற முகம் உடையவன் இராமபிரான் என்று தேவியே பல முறையும் அவனுடைய திட்பத்தில் ஆழ்ந்து போயிருந்தாள். அதே கருத்தை இராமனின் நடைமேல் வைத்து அனுமன் கூறியது பிராட்டியின் உள்ளுணர்வை ஒலிப்பதாகவே இருந்தது.

"புல்லல் ஏற்ற திருமகளும் பூவும் பொருந்தப் புவியேழும்
எல்லை அற்ற நெடுஞ் செல்வம் எதிர்ந்த ஞான்றும் அஃதின்றி
அல்லல் ஏற்ற கானகத்தும் அழியா நடை"
என்பது கம்பர் பாட்டு.

## 11. கணையாழி தந்த களிப்பு

மேற் சொன்னவை சீதை கேட்க, அனுமன் இராமன் திருவுருவம் பற்றிக் கூறியவை. இவை மட்டும் போதாது. ஆழ்ந்த குறிப்புடைய சிலவற்றைச் சொன்னால்தான் பிராட்டிக்கு முழுதாக நம்பிக்கை தோன்றும் என அனுமனே கருதினான். இராமன் காட்டிற்குச் செல்லப் புறப்பட்ட போது உடன்வர முயன்ற சீதையிடம், காட்டுவழி கொடுமையானது; நடப்பது துன்பம்; தவிர, அரண்மனையில் இருந்து பெருந்தாயர் மூவர்க்கும் பணி செய்யவேண்டும் என்று கூறியபொழுது சீதைகொண்ட சினம்; புறப்பட்டு அயோத்தி நகரின் வாசலைக் கூடக் கடப்பதற்கு முன்னாலேயே காடு எங்குள்ளது எனச் சீதை கேட்ட குழந்தை மனம்; திருப்பி அழைத்துச் செல்லச் சுமந்திரன் முதலியவர்கள் வந்தபோது தான் வளர்த்த பறவைகளைக் கவனத்துடன் பார்த்துக் கொள்ளுமாறு சொன்ன அன்பு, இவற்றைவரிசையாகக் கூறிவந்த அனுமன் இனிச் சொல்வதற்கு ஏதுமில்லை எனத் தெளிந்து இராமனின் கணையாழியை - மோதிரத்தைப் பிராட்டியிடம் தந்தான். இராமபிரானின் திருப்பெயர் பொறிக்கப்பட்டதும், நுட்பமாகச் செதுக்கப்பட்ட வேலைப்பாடுகள் மிக்கதுமான அந்தக் கணையாழியை "நேராகச் சீதை கையில் கொடுப்பாயாக" என்று நாயகன் சொன்னபடி அனுமன் செய்தான். அதை வாங்கிய பின்னர் சீதையின் மனநிலை என்னவாறு இருந்திருக்கும்? எண்ணக் கடலில் உணர்வுகளைப் பிசைந்து தமிழில் தோய்த்து ஓவியமாக்குகிறார் கம்பமகாகவி.

இறந்தவர் பிறந்தபயன் எய்தினர் கொல் என்கோ
மறந்தவர் அறிந்துணர்வு வந்தனர்கொல் என்கோ
துறந்தவுயிர் வந்திடை தொடர்ந்ததுகொல் என்கோ
திறந்தெரிவது என்னைகொல் நன்னுதலி செய்கை.

"அழகிய நெற்றியை உடைய பிராட்டி, மோதிரத்தைப் பெற்றபின் அடைந்த இந்தச் செய்கையும் மாற்றமும், நல்லனவற்றைச் செய்யாமல் காலத்தைக் கடத்தியவர்கள், அறம்செய்யாமலேயே பிறப்பு அறுக்கும் பேரின்ப நிலை அடைந்தது

போல என்பதா; ஒரு பெரிய ஞானத்தை உணர்ந்து மறந்தவர்கள் திடீரென்று அது நினைவுக்கு வரப் பெற்ற இன்பம் போல என்பதா; உடம்பை விட்டுச் சென்ற உயிர் ஒன்று மீண்டும் திரும்பிவந்து அந்தத் தொடர்பைப் பிணித்தது என்பதா? எப்படிப் பிராட்டி பெற்ற இன்ப அதிர்ச்சி மனநிலையைச் சொல்வது?"

தான் வைத்து இரைதேடிப்போன பாம்பு ஒன்று, இழந்துவிட்ட அருமணியை மீண்டும் பெற்றது போல, ஏதோ ஒரு காரணத்தால் பழைய செல்வங்களை இழந்தவர்கள் அவற்றைத் திருப்பி அடைந்தது போல, மலடியாகவே இருந்து ஏளனப்பட்ட ஒரு மலடி குழந்தை பெற்றது போல, கண்ணில்லாது வருந்தித் துன்பப்பட்ட ஓர் உடம்பு கண்பார்வை அடைந்த மகிழ்ச்சி போலச் சீதையின் நிலை இருந்தது.

சொல்லமுடியாத மனக்கிளர்ச்சியுடன் மோதிரத்தைப் பெற்ற பிராட்டி அதை மார்பில் வைத்தாள்; தலைமீது வைத்தாள். மலர் போன்ற கண்கள் மீது வைத்து வைத்து ஒற்றிக் கொண்டாள். அவளுடைய மெலிந்த தோள் பருத்து வீங்கியது; உடம்பு குளிர்ந்து சூடாகி மாறிமாறித் துடித்தது. பெருமூச்சு விட்டு வெதும்பினாள்.

தன்னுடைய மூக்கின் நுனியில் வைத்து மோதிரத்தை முகந்து பார்த்தாள். மார்புற இறுகத் தழுவிக்கொண்டாள். வழியும் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு தெளிவாக மீண்டும் மோதிரத்தை உற்று நோக்கினாள்; இன்பக் கண்ணீர் தொடர்ந்து வழிந்தது. அதைப் பார்த்து ஏதோ சொல்ல வாயைத் திறக்க முற்பட்டு, ஆனால் சொல்ல வராது விம்மினாள்; வாயில் போட்டு அப்படியே விழுங்கிக் கொள்ளலாமா என்றும் எண்ணினாள்.

ஏற்கெனவே 'பொன்னின் ஒளி பூவின் வெறி சாந்துபொதி சீதம்' என்று ஒளி, நறுமணம், குளிர்ச்சி என்ற மூன்றையும் உடையவளாக இருந்த பிராட்டியின் திருமேனி முழுதும் மோதிரத்தில் இருந்து வெளிப்பட்ட ஒளிக்கதிரால் இன்னும் அழகுடையதாயிற்று. ஆண்தகையாகிய இராமபிரானின் மோதிரம் தெய்வத் தன்மை உடையது. அதைத் தீண்டும் எல்லாப் பொருளுக்கும் ஒளியூட்டக் கூடிய ரசவாதவித்தை செய்யக் கூடியது.

பசித்துன்பம் தாங்கமுடியாது மெலிந்து வேதனைப் பட்டவர்களுக்கு அமுதமே அருந்தக் கிடைத்தால் எப்படி இருக்கும்; நல்லற நெறியில் நிற்கும் இல்லறத்தாரைத் தாமே தேடி விருந்தினர்

வந்தால் எப்படி மகிழ்ச்சி பெருகும்; போய்க் கொண்டிருக்கும் உயிர் ஒன்றைத் தடுத்து நிறுத்தும் மருந்து எப்படி இருக்கும்; இப்படியெல்லாம் அற்புத மாற்றங்களைத் தேவியிடம் அந்தக் கணையாழி ஏற்படுத்தியது. அதனால் - பிராட்டியின் உயிரைக் காத்ததனால், வாடிய பயிரைத் தழைக்கச் செய்ததால், துன்பம் நீக்கி இன்பக் கடலுள் ஆழச் செய்ததால் கம்பநாட்டாழ்வார் இந்த அற்புதங்களைச் செய்த மோதிரத்துக்கு வாழ்த்து கூறுகிறார். "வாழி மணி ஆழி"- அழகும் ஒளியும் மிக்க அந்த மோதிரம் வாழ்வதாக.

தன்னுடைய உணர்ச்சிகளைப் பிராட்டி வெளிப்படுத்தினாள். மேல் சொன்னவாறு கொண்ட மகிழ்ச்சியால் பல நாள்கள் கழித்து அரக்கனின் நகரில் முதல் முதலாகக் குறுநகை தோன்ற மெள்ளச் சிரித்தாள். கூடவே கண்களிலிருந்து இன்பக் கண்ணீரும் வழிந்து அவள் மார்பை நனைத்தது. அனுமனைப் பார்த்துச் சொன்னாள்;

> "உயிர் தந்தவனே! உத்தமா! உலகம் முழுவதையும் படைத்த பிரம்மனுக்கும் தெய்வமான திருமாலின் தூதுவனாக வந்து, கணையாழியைத் தந்து உயிரை மீட்டிக் கொடுத்தவனே! உனக்கு நான் எப்படி நன்றி செலுத்துவது? அது எளிய செயலா? அம்மையாய் அப்பனாய் வந்த அருளே உருக்கொண்டது போல் வந்தவனே! இந்தப் பிறப்பு மறுமை இரண்டிலும் புகழையும் சேர்த்துத் தந்து என்னைக் காப்பாற்றினாய்".

> மும்மையால் உலகம் தந்த முதல்வற்கு முதல்வன் தூதாய்ச்
> செம்மையால் உயிர் தந்தாய்க்குச் செயல் என்னால் எளியதுண்டே
> அம்மையாய் அப்பனாய அத்தனே அருளின் வாழ்வே
> இம்மையே மறுமை தானும் நல்கினை இசையோடு என்றாள்.

"வலிமை பொருந்திய பருத்த தோள்களை உடையவனே! வீரனே! ஒரு துணையுமில்லாது வருந்திய என்னுடைய துன்பத்தைத் தீர்த்த வள்ளலே! ஒன்று சொல்கிறேன்; இது சத்தியம்; என்னுடைய வாய்மொழி. நான் களங்கமில்லாத மனத்தையுடையவள் என்பது உண்மையானால்,

நீ! யுககாலம் பலவற்றையும் ஒரு நாள் என்று சொல்லப்படுகிற பிரமனுடைய ஆண்டுகள் எல்லாவற்றிலும் பதினான்கு உலகங்கள் அழிவுறும் பிரளய காலத்தின் போதும் இப்பொழுது, இந்த நாளில் எப்படி இருக்கிறாயோ அப்படியே என்றும் வாழ்ந்திருப்பாயாக"

பாழிய பணைத்தோள் வீர துணையிலேன் பரிவுதீர்த்த
வாழிய வள்ளலே யான் மறுவிலா மனத்தள் என்னின்
ஊழியோர் பகலாய் ஓதும் ஆண்டெலாம் உலகம் ஏழும்
ஏழும் வீவுற்ற ஞான்றும் இன்றென இருத்தி என்றாள்.

திருமகளின் அவதாரமாகிய சீதா பிராட்டியால் "நீ என்றும் வாழ்க (சிரஞ்சீவியாய் இரு)" என்று வாழ்த்தப்பெறும் திருவருள் பேறு அனுமன் பெற்றது. உயரிய தவமும் ஒழுக்கமும் பணிவும் ஞானமுமாக அவன் இருந்த பெருமையால் வாய்த்தது. காக்கும் கடவுளாகிய திருமாலின் மார்பில் வீற்றிருக்கும் செந்திருவே வாழ்த்தியாயிற்று. யார் பெறுவார் இந்தப்பேறு?

தேவி தொடர்ந்து, "மிகச்சிறந்த நற்குணங்களை உடையவனே! பெருவீரனாகிய இராமபிரான் எங்குள்ளான்? தம்பியாகிய இலக்குவனுடன் சேர்ந்து இப்பொழுது எந்த இடத்தை அடைந் துள்ளான்? என்னுடைய துன்ப நிலையை எல்லாம் ஆண்தகையாகிய ஐயனுக்கு யார் சொன்னார்கள்? எப்படி நான் இங்கிருப்பதை அறிந்தான்?" என்று தொடர்ந்து கேள்விகள் கேட்டாள். அவற்றின் தொனி அவளுடைய பரபரப்பையும் உணர்ச்சிக் குமுறலையும் எதிர்பார்ப்பையும், ஆவலையும் ஒரு சேர வெளிப்படுத்தின

இருபத்தொரு பாடல்களில் நீண்ட உரை நிகழ்த்துவது போல அதுவரை நடந்தவற்றை எல்லாம் ஒன்று விடாமல் சொன்னான் அனுமன்.

மாயமானாக மாரீசன் வந்தது; அதைப்பிடித்துத் தருமாறு தேவிகேட்டது; இராமன் அம்பால் அடிபட்டு வீழ்ந்த போது 'இலட்சுமணா' என்று பொய்யாய்க் கதறியது; அதுகேட்டு, பிராட்டி காவலுக்கு நின்ற இளையவனை விரட்டியது; தம்பியோடு திரும்பிவந்த இராமன் சீதையைக் காணாது துன்புற்றது; காடும் மலைகளும் தாண்டித் தம்பியுடன் பிராட்டியைத் தேடிவரும் வழி யில் சடாயுவைக் கண்டது. அவர் மூலம் இராவணன் தேவியைத் தூக் கிவந்த செய்தி அறிந்தது. அதைக்கேட்டு உலகையே அழிக்க இராமன் கொண்ட சீற்றம்; அதை ஆற்றிச் செய்யவேண்டியதை நினைவூட்டிய சடாயுவின் மறைவு; தேவியின் பிரிவால் வருத்தமும் கோபமும் உற்று இயற்கைப் பொருள்களைக் கூடப் பொசுக்க எண்ணிய இராமனின் ஆற்றாமை; கிஷ்கிந்தையில் சுக்ரீவனுடன்

ஏற்பட்ட நட்பு; அதன் தொடர்ச்சியாகத் தான் தென்திசை நோக்கிப் பிராட்டியைத் தேடிவந்த முயற்சி எல்லாவற்றையும் ஒன்றுவிடமால் வரிசையாகச் சொல்லி முடித்தபின்னர் அனுமன் கூறினான்;

"பிராட்டியே! தேடிவந்த நான் இப்போது உன்னைக் கண்டு விட்டேன். இராமபிரான் வாழ்வானாக. இனி அவனுக்கு எந்தத் தீங்கும் நேரப் போவதும் இல்லை. தன் திருமார்பில் தங்கியிருந்த உயிர் போனபிறகு பொய்யுயிர் ஒன்றைத் தாங்கியவனாய் இதுவரை அவன் நடமாடிவந்தான். ஆனால் அவனுடைய நெஞ்சின் உள்ளிருந்து ஒரு கணப்பொழுதும் நீ நீங்கியதில்லை. வேறு என்ன தீமை வந்து விடும். அங்கு உடல். அவனுடைய உயிராகிய நீ இங்கு. பிறகு எந்த உயிரை இராமன் அங்கு விடுவான்?"

தேண்டி நேர் கண்டேன் வாழி தீதிலன் எங்கோன் ஆகம்
பூண்ட மெய் உயிரே போகப் பொய்யுயிர் போல நின்ற
ஆண்டகை நெஞ்சினின்றும் அகன்றிலை அழிவுண்டாமோ
ஈண்டு நீ இருத்தி ஆண்டு அங்கு எவ்வுயிர் விடும் இராமன்

சொல்லின் செல்வனாகிய அனுமனின் பேச்சுத் திறத்தை வெளிப் படுத்தும் பாடல்களில் இதுவும் அடங்கும்.

இராமன் காட்டில் பட்டு வரும் துன்பத்தையும், தன்னைப் பிரிந்துபடும் வருத்தத்தையும் கேட்டுச் சீதை மிகவும் துயரப்பட்டாள்.

"என்புற உருகினள்; இரங்கி ஏங்கினள்; துன்பமும் உவகையும் சுமந்த உள்ளத்தாள்". துன்பத்துக் கிடையிலும் மகிழ்ச்சி; எப்படியும் இராமபிரான் தன்னைக் காணவும் மீட்கவும் வந்துவிடுவான் என்ற ஆசையால் ஏற்பட்ட இன்பம்.

பிறகு பிராட்டி, அந்தச் சிறிய வடிவத்தை வைத்துக் கொண்டு அனுமன் எவ்வாறு கடலைக் கடந்தான் என்று கேட்டாள். அப்படி அவன் கடந்தது அவன் செய்த தவத்தாலா, பெற்றுள்ள சித்தியாலா என்றும் கேட்டாள். "தேவி இது ஒரு பெரிய செயல் இல்லை. உனது நாயகனாகிய இராமபிரானின் தூய திருவடிகளை ஒன்றுபட்ட மனத்துடன் தியானம் செய்யும் ஞானிகள், எப்படி மற்றவர்களால் கடக்கமுடியாத (பிறவியாகிய) பெரியகடலைக் கடப்பார்களோ அதுபோல, அவனுடைய திருவடியை நானும் தியானித்துக் கொண்டே காலால் கடலைத் தாண்டி வந்தேன். அதுமட்டுமல்ல

தேவி. பிரானின் திருநாமம் சொல்லிக்கொண்டே பேருருவம் ஒன்றை என்னால் எடுக்கவும் முடியும். இப்போது பார்" என்று சொல்லிப் பெருவடிவத்தைக் காட்டினான்.

தன்னுடைய கூப்பிய கரங்களை மேலே உயர்த்தினான்; அவை நீண்டு அவனுடைய தோள்களும் உயர்ந்து போயின. வானத்துக்கும் மேலே போய்ப் பிறரால் அடைய முடியாத உச்சியைத் தொட்டான். அதற்கும் மேல் வளர்ந்தால் வானத்தின் முகட்டில் முட்டவேண்டும் என்று கருதித் தலை தாழ்த்தி வணங்கி நின்றான்.

கம்பர், அனுமன் கொண்ட இந்தப் பேருருவத்தை ஆறு பாடல்களில் வருணித்துள்ளார்; செறிவும் தத்துவமும் நிறைந்தவை அவை. பாராயணம் செய்யத்தக்க அளவு பொருள் பொதிந்தவை. சிறிய குரங்கு என்றது போய், அனுமனின் பேராற்றல் முழுவதையும் ஒருசேர முன் நிறுத்தும் பேருருவப் புனைந்துரைகள்.

செவ்வழிப் பெருமை என்றுரைக்கும் செம்மைதான்
வெவ்வழிப் பூதம் ஓர் ஐந்தின் மேலதோ
அவ்வழித்து அன்று எனினும் அனுமன் பாலதோ
எவ்வழித்து ஆகும் என்று எண்ணும் ஈட்டதே.

உலகத்தில் செம்மை பொருந்திய நற்குணங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து கடுமையான தன்மையுடைய ஐம்பூதங்களில் நிலை கொண்டுள்ளன என்று சொல்லலாமா? அல்லது அவை இப்போது அனுமனிடத்தில் சேர்ந்து விட்டன எனலாமா? எப்படிச் சொல்லலாம?

ஒப்பற்றதாகவும் பெரியதாகவும் இருக்கும் பொன்னிற மேருமலையில் உயர்ந்து வளர்ந்த நெருங்கிய மரங்கள் மீது மின்மினிப் பூச்சிகள் மொய்த்தால் எப்படி இருக்குமோ, அப்படி வானத்து மீன்கள் முழுவதும் அனுமனின் மயிர்க்கால்கள் தோறும் படிந்து கிடந்தன.

கண்ணால் காணவும், அறிவால் அறியவும் முடியாத தோற்றம் கொண்ட அனுமன் முகத்தின் இரண்டுபக்கங்களிலும் சூரியனும் சந்திரனும் இரண்டு அணிகளாகப் பொலிந்தன.

இது ஒரு சிறுகுரங்கு என்று யாரும் எளிதாக எண்ணக் கூடாத

அளவு அனுமன் தோற்றம் அப்போதிருந்தது. அதற்கு ஓர் உவமை சொல்கிறார் கம்பர். குள்ளவடிவம் எடுத்து வந்து வாமனாவதாரத்தில் மூவடி மண்ணை மாவலி மன்னனிடம் திருமால் கேட்டபின்னர் பேருருவம் கொண்டவரல்லவா? அதற்கு ஈடாக இதைச் சொல்லவேண்டும். தான் நாளும் வழிபடும் திருமாலின் விசுவரூபம் அடியானுக்கும் வாய்த்தது.

பேருருவம் கொண்ட அனுமன் சுற்றிலும் நோக்கினான். எட்டுத்திசைகள், எல்லா உலகங்கள் என்று பரவியிருக்கும் இடமெல்லாம் நீக்கமில்லாது நிறைந்து வாழ்ந்து வந்த உயிரினங்கள் எல்லாம் தன்னையே பார்த்துக் கொண்டிருப்பதை அனுமன் கண்களால் கண்டான். தவிர, வானுலகத்து அண்டங்களில் எல்லாம் வாழ்ந்த தேவர்களையும் அனுமன் கண்டான். எப்படி! "கண்டனன் தானும் தன் கமலக் கண்களால்' தாமரைக் கண் இராமபிரானுக்குரியது; அவனுடைய தொண்டனாக இருந்து அவனையே - திருவடியையே -நாளும் சேவிக்கும் அனுமனுக்கும் கண் தாமரை போல அருள்கொண்டு மலர்ந்து விட்டது.

அனுமன் பேருவத்துடன் நின்றுகொண்டே தன்னுடைய நீண்ட கால்களையும் பதித்து ஆழமாகவும் வலுவாகவும் அழுத்தினான். இலங்கை கடலுள் ஆழந்தது; கடல்நீர் பொங்கி எழுந்து இலங்கையைச் சூழ்ந்தது

பிராட்டிக்கு மகிழ்ச்சி; அனுமனின் கால்களைக் கூட அவளால் பார்க்க முடியவில்லை. இனி, அரக்கர்கள் அழியப் போவது உறுதி எனத்தெளிவு பெற்றாள். அனுமனைப் பார்த்து, "போதும்! போதும்! உன்னுடைய பேருருவம் எனக்கே அச்சமூட்டுகிறது. அடங்கி மறுபடியும் பழைய வடிவத்தைப் பெறுவாயாக" என வேண்டினாள். "அஞ்சினன் இவ்வுரு அடங்குவாய்" என்றாள். அதைக்கேட்டு அனுமனும் மீண்டும் சிறியகுரங்கு வடிவம் கொண்டான்.

இராமனுக்கு ஏற்ற தூதனா, தொண்டனா என்றெல்லாம் அனுமன் வலிமைமீது கொண்டிருந்த சீதையின் ஐயம் நீங்கிவிட்டது. பிராட்டி அனுமனைப் புகழ்ந்தாள்.

"காற்றின் வேகத்தை உடையவனே! உலகங்களை அதில் நிலைபெற்ற மலைகளோடு உன்னால் எடுக்கவும் முடியும். வானுலகைப் பேர்த்து எடுக்கும் ஆற்றலும் உனக்கு உண்டு.

மண்ணையும் விண்ணையும் ஒரு சேரச் சுமக்கும் பெரும்பாம்பாகிய ஆதிசேடனை ஒரு கையால் இழுக்கும் வலிமையை நீ பெற்றிருக்கிறாய். அத்தகைய நீ இந்தக் கடலில் நடந்து வந்தாய் அல்லது கடலைக் கடந்து வந்தாய் என்று சொல்வது உன்னுடைய பெருமையைக் குறைத்துச் சொல்வதே ஆகும்.

வலிமையுடைய நீண்ட தோள்களையுடைய வீரனே! திருவாழியைத் தன் கையில் ஏந்திய ஆண்டவனாகிய இராமபிரானுடைய கருணையும் புகழும் அழியாமல் பல ஊழிக்காலமும் நின்றுநிலவும் வண்ணம் நீ ஒருவனே செய்யமுடியும். அதற்கெனவே பிறந்தது போல நீ இருக்கிறாய். இந்த இலங்கையோ எழுகடலுக்கு அப்பால் இருந்து தப்பிக்காமல் இந்த உப்புக்கடலில் இருந்து உன்னிடம் அகப்பட்டுக் கொண்டது.

உனக்கு அறிவு இதுதான். ஞானமும் இதுதான். வடிவத்தையும் நேரில் கண்டேன். உன்னுடைய வல்லமையும் பார்த்தாயிற்று. ஐம்புலன்களையும் அடக்கி ஆளும் உன் மேன்மைச் சிறப்பும் வெளிப்பட்டு விட்டது. இது தெளிவு. அதன் பயன் தெரிந்துவிட்டது. உன்னோடு ஒப்பிட்டால் பிரமன் முதலான தேவர்களும் உனக்கு இணையாகமாட்டார்கள்.

அறிவும் ஈதே உருஈதே ஆற்றல் ஈதே ஐம்புலத்தின்
செறிவும ஈதே செயல் ஈதே தேற்றம் ஈதே தேற்றத்தின்
நெறியும் ஈதே நினைவு ஈதே நீதி ஈதே நினக்கு என்றால்
வெறியர் அன்றோ குணங்களால் விரிஞ்சன் முதலாம் மேலோர்.

மின்னலைப் போல அச்சமூட்டும் பற்களையுடைய அரக்கர்களின் எண்ணிக்கையைப் பார்த்து, இவர்களை எதிர்த்துப் போரிட மாவீரனாகிய இராமனுக்குப் பின் பிறந்த தம்பியாகிய இலக்குவன் ஒருவனைத் தவிர வேறு ஒருவர் இல்லையே என்று மனம் கலங்கி வருந்திக் கொண்டிருந்தேன். அந்த ஐயம் இப்போது அடியோடு நீங்கிவிட்டது. நீ என்னுடைய நாயகனின் துணைவன் என்றால் நான் ஏன் அஞ்சவேண்டும்? ஐயுறவேண்டும். சென்ற உயிர் மீண்டது போல நான் மகிழ்கிறேன். இனி, உன்னுடைய வலிமையால் அரக்கர்கள் அழிவது உறுதி.

காற்றின் மைந்தனே! இனி நான் இறந்துவிடுவதாக இருந்தாலும் எனக்குக் கவலையில்லை. என்னை இந்தச் சிறையில் வைத்துத் துன்புறுத்திய அரக்கர்கள் குலத்தோடு அழிவது உறுதி. இந்தக் கணத்திலேயே சிறையிலிருந்து மீட்சிபெற்றதாகவே உறுதியாக உணர்கிறேன். என்னுடைய தலைவனின் பொன்னார்ந்த

திருவடிகளை என் தலைமீது பூண்டுகொண்டேன். இனி எனக்குப் புகழே தவிர, எந்தப் பழியும் என்னை நெருங்காது.

மாண்டேன் என்னினும் பழுதன்றே இன்றே மாயச்சிறை நின்று
மீண்டேன் என்னை ஒறுத்தாரைக் குலங்களோடும் வேரறுத்தேன்
பூண்டேன் எங்கோன் பொலங்கழலும் புகழேயன்றிப் புன்பழியும்
தீண்டேன் என்றுமனம் மகிழ்ந்தாள் திருவின்முகத்துத் திரு
அன்னாள்.

அழகையும் ஒளியையும் உடைய திருமுகத்தைக் கொண்ட செந்திருவாகிய திருமகளைப் போன்ற பிராட்டி இப்படி உருகினாள்.

இந்தப் புகழ் மொழிகள் அனுமனுக்கு ஒருவித நாணத்தையே உண்டாக்கின. கூனிக்குறுகிப் போனான். பெருவடிவும், பெருமைக் குணங்களும் உடையவன்தான். ஆனாலும் பிராட்டியின் முன்னால் சிறியவனிலும் தாழ்ந்த சிறியவன் அல்லவா?

"தாயே! அருந்ததிக்கு ஒப்பானவளே! இராமனுக்கு அடிமைத்தொழில் பூண்டவர்கள் கொஞ்சமல்ல. கடலில் சிதறிக்கிடக்கும் மணலை எண்ணினாலும் எண்ணலாம்; வானரர்களை எண்ணமுடியாது. அந்தக் கூட்டத்துக்கு தலைவர்களாக இருக்கும் வானரரும் பலர். அவர்கள் கூவி ஏவுகின்ற பணிகளைச் செய்கின்ற அடிமைகளில் நானும் ஒருவன்".

அண்ணல் பெரியோன் அடிவணங்கி அறிய உரைப்பான் அருந்ததியே
வண்ணக் கடலின் இடைக்கிடந்த மணலில் பலரால் வானரங்கள்
எண்ணற்கு அரிய படைத்தலைவர் இராமற்கு அடியார் ஆனவர்தாம்
பண்ணைக்கு ஒருவன் எனப் போந்தேன் ஏவல்கூவல் பணி செய்வேன்.

தலையைத் தாழ்த்தி, இருகைகொண்டு வாய்பொத்திப் பணிந்து அனுமன் இப்படிக் கூறித் தன்அடிமையை வெளிப்படுத்திக் கொண்டான். எவ்வளவு படித்தவன்! எவ்வளவு ஆற்றல் மிக்கவன்! எவ்வளவு தவம் உடையவன்! ஆனாலும் தன்னைக் கடலில் பரந்து கிடக்கும் மணல்களின் பெருக்கில் ஒரே ஒரு மணல்; அதுவும் ஏவலும் கூவலும் கேட்டுப் பணி செய்யும் மணல் என்று கூறிக்கொண்டு நாணம் அடைந்தான் என்றால் அவன் பெருமையை எப்படிச் சொல்லிப் பாராட்டுவது? 'எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும் செல்வர்க்கே செல்வனாக' இந்தச் சொல்லின் செல்வன் பணிவுடைமையால் பொலிந்து நின்றது வியப்பில்லை.

## 12. சூடாமணி தந்தாள்

சீதையால் பாராட்டப்பட்ட அனுமன், தன்னுடைய பணிவைத் தெரிவித்துக் கொண்டபின்னர், அங்கதன், நீலன், சாம்பன் உள்ளிட்ட வானர வீரர்களின் பெருமையையெல்லாம் கூறினான். அத்தகைய ஆற்றலும் பெருமையும் கொண்ட வானரரின் தூதனாக வந்த தான் பிராட்டியை எடுத்துக் கொண்டு போய் இராமபிரானிடம் சேர்ப்பதே தன் கடமை என்று எண்ணினான். தேவியைப் பார்த்துக் கூறினான்.

'திருவே! ஒன்று சொல்கிறேன், கேட்க வேண்டும். என் சொற்களைக் கேட்டுச் சினம் கொள்ளக் கூடாது. இப்படி உன்னை விட்டு வைத்தால் இராவணன் கொன்று விடவும் கூடும். பலவற்றைப் பேசிப்பயனில்லை. இது நல்ல சமயம். உன்னை இப்படியே எடுத்துக் கொண்டு போய் இராமனிடம் சேர்ப்பித்த பின்னர் உங்கள் இருவருடைய திருவடிகளிலும் வீழ்ந்து வணங்குவேன். இதைக் காண்பாய்.

பொன் பொதித்தால் போன்ற அழகிய பூங்கொடி போன்ற தேவீ! மென்மையாய்ச் செறிந்துள்ள மயிர் அடர்ந்திருக்கும் என்னுடைய தோளின் மீது நீ அமர்ந்து கொள். உன்னுடைய துன்பம் இன்றுடன் நீங்கிவிட்டது. எல்லாக் கவலைகளையும் விட்டு விட்டு என் தோளின் மீது இனிய உறக்கம் கொள்வாயாக. ஒரு கணத்துக்குள் பெருமான் இருக்கும் குன்றில் கொண்டு போய்ச் சேர்ப்பேன். இடையில் எங்கும் தங்கமாட்டேன்

பிராட்டி! உன்னை அப்படி நான் எடுத்துச் செல்லும் போது ஒருவேளை அரக்கர்கள் செய்தியறிந்து வழிமறித்தால், அவர்களையெல்லாம் பொடிப்பொடியாகத் தேய்த்து அழிப்பேன். (நீங்கள் தந்த நல்வரத்தால்) எனக்குச் சாவு என்பதே இல்லை. என்னுடைய ஆறாத சினம் அப்படி அவர்களை அழிக்கும் போதே ஆறும். இங்கு மீண்டும் துன்பப்படவிட்டு விட்டு நெடியோனாகிய இராமன் முன்னால் போய் வெறுங்கையுடன் நிற்க மாட்டேன்.

"தாயே! இலங்கையுடன் சேர்த்து என்னை எடுத்துக் கொண்டு போகப் போகிறாயா?" என்று நீ கேட்பது போலத் தெரிகிறது. அது

ஒரு பெரிய செயல் இல்லை. இந்த இலங்கையைப் பேர்த்து ஒருகையால் அதைச் சிறிய பொருள் போல ஏந்திக் கொண்டு சென்று என்னுடைய வலிமையைக் காட்டுவேன். தடுப்போரை வீழ்த்திய பிறகு நீண்ட பெரிய வில்களை உடைய இராம இலக்குவரின் அழகிய திருவடிகளில் வீழ்ந்து வணங்குவேன். அத்தகைய ஆற்றலுடைய எனக்கு உன்னைத் தோளின் மீது எடுத்துச் செல்வது ஒரு பொருளே இல்லை.

அருந்ததியே! நீயே சொல். என்மீது நம்பிக்கை வைத்துப் பெருமான் இங்கு என்னை அனுப்பியுள்ளான். நீ இல்லாமல் நான் போய், "சாவாமருந்தாகிய அமுதம் போன்ற உன்னுடைய தேவியார், வஞ்சகர்களுடைய வெஞ்சிறையில், ஒருவகையிலும் விடுதலை பெற வழியில்லாமல், மிகவும் துன்பப்பட்டுக் கொண்டிருக்கிறாள்" என்று நான் சொல்வேனாயின் எனது அடிமைத் தொழிலால் என்ன பயன்?

தேவி! என்னுடைய தோளில் எந்தப் புண்ணும் இல்லாது. வந்திருக்கிறேன். பகைவர்களுடைய வலிமை இப்படி இப்படி என்று அவர்களுடைய பெருமைகளைப் பேசுவதா? பிராட்டியைக் கொண்டு வர என்னால் முடியவில்லை. என்னுடைய உயிரைக் காப்பாற்றிக் கொள்ளும் வழியைத் தேடிக் கொண்டேன். செந்திருவனைய உன்னை மட்டும் பார்க்க முடியவில்லை என்று சொல்லட்டுமா?

இதோ, கண்முன் தெரியும் மதில்சூழ்ந்த, காவல் மிக்க இந்த இலங்கையை நெருப்பு மூட்டி உருகுமாறு செய்து வலிமைமிக்க இராவணனையும் அழித்து அரக்கர் குலம் முழுவதையும் வேரொடு பொசுக்கி, விரைவாக இராமனிடம் போவாயாக என்று நீ கட்டளை இட்டாலும் இப்பொழுதே செய்து முடிக்கிறேன்.

நிலா போன்ற நெற்றியுடைய திருவே! நான் உன்னை எடுத்துக் கொண்டு போய்த் தந்த பிறகு இராமபிரான் உன்னைக் கண்டும் கலந்தும் அவனுடைய கொடுந்துன்பம் நீங்கும். பிறகு தெளிந்த மனத்துடன் இங்கே வந்து அரக்கர் கூட்டத்தை வேரறுப்பான். இதுவே நல்லது. இராமனே அவர்களை அழிக்கட்டும்.

பிராட்டியே! இனி நான் சொல்ல என்ன இருக்கிறது? நீயும் இனி எந்தத் தடையும் சொல்லக் கூடாது. நான் செய்த முன்வினையின் நற்பயனால் உன்னை இராமனிடம் சேர்க்கும் வாய்ப்பும் பேறும் எனக்குக் கிடைத்துள்ளன. நீ திருவருள் செய்து எனக்கு உதவவேண்டும். இராமனிடம் சேர்ந்து உன் துயரத்தை ஆற்றிக் கொள்வாயாக. இப்பொழுது விரைந்து என் தோள்மீது ஏறி அமர்க" என்று தொழுது வேண்டினான்.

வேறினி விளம்ப உளதன்று விதியால் இப்
பேறுபெற என்கண் அருள் தந்தருளு பின்போய்
ஆறுதுயர்; அஞ்சொல் இளவஞ்சி அடிஎன் தோள்
ஏறுகடிது என்று தொழுது இன்னடி பணிந்தான்.

ஒன்பது பாடல்களின் கருத்துக்கள் இவை. கூர்ந்து நோக்கினால் இவற்றின் உள்ளே அனுமனின் அன்பு மனத்தை முழுதாக உணர்ந்து கொள்ள முடியும். பிராட்டியை எப்படியாவது காப்பாற்ற வேண்டும் என்ற துடிப்பு; இராமபிரானிடம் சென்று சேர்க்கவேண்டும் என்ற விரைவு; எதிர்ப்போர் யாராயினும் அழித்துவிட வேண்டும் எனப் பொங்கும் வீரம்; தன்னுடைய வேண்டுதலைத் தேவி ஏற்றுக்கொள்வாளோ என்ற ஏக்கம்; செய்து முடித்தால் தன் அடிமைத்தனத்தைக் காட்ட வழியுண்டே என ஏங்கும் ஆவல்... என்று பலவகையான உணர்ச்சிகள் மாறிமாறி வந்து அனுமனை ஆழ்த்துகின்றன.

இவற்றைச் சொன்ன போது அனுமன் எப்படி இருந்தான்? அவன் பேசிய சொற்கள் தாம் எப்படிப் பட்டவை? தாயின் முன்னால் களிப்புடன் நின்ற கன்று போல - தாயின் முன்னிய கன்றியான் - நின்றான். தகுதியான நல்ல மொழிகளையே பேசினான். பிராட்டியின் நெஞ்சம் அவனுடைய பணிவையும் பார்த்து, தன்னை ஏற்றிக் கொண்டோ, இலங்கை நகருடன் பேர்த்து எடுத்துக் கொண்டோ செல்வது அனுமனுக்கு அரியசெயல் அல்ல என்று அவளுக்கும் தெரியும். ஆனால் தன் மன நிலையை அவனுக்குப் புரியவைக்க வேண்டும் அல்லவா? 15 பாடல்களுக்கு மேலாகப் பிராட்டியின் பேச்சு நீண்டதாய் அமைந்துள்ளது.

"வீரனே! நீ என்னை எடுத்துச் செல்வதாகச் சொல்லியது உன்னால் முடியாத செயலன்று; உன்னுடைய ஆற்றலுக்கு ஏற்றதே ஆகும். ஆராய்ந்து முடிவு செய்த பிறகே அதைத் தெரிவித்தாய்; அதைச் செய்து முடிக்கவும் வல்லவன் நீ. ஆனாலும் அந்தச் செயல் நல்லதன்று என என்னுடைய பெண்மனம் சொல்கிறது.

ஒரு வேளை என்னை நீ எடுத்துச் செல்வதாகவே வைத்துக் கொள்வோம். இடையில் அரக்கர்கள் மறிக்கும் போது அவர்களுடன் நீ போர் புரிவாயா? அல்லது என்னைக் காப்பாற்றுவதே பெரிது எனக் கருதி மனம் துன்புறுவாயா?

இன்னொன்று. நீ என்னை எடுத்துச் சென்றால், தன்

மனைவியைக் காப்பாற்ற முடியாத இராமனின் வில் ஒரு வில்லா என்று உலகம் பழி சொல்லும். வஞ்சனை செய்து என்னை அரக்கனாகிய இராவனன் இங்கு தூக்கி வந்தான். அதே போல ஒரு வஞ்சனையின் மூலம் நீ என்னை எடுத்துச் செல்வதை நான் விரும்ப வில்லை.

இனி நிகழ இருக்கும் இராம - இராவணப் போரின் போது தேவர்கள் முதலான எல்லாரும் என்னுடைய நாயகனின் வில் தொழில் ஆற்றலைக் கண்டு வியக்கவேண்டும். என்னுடைய உடம்பைக்காம உணர்வுடன் எந்த விழிகள் பார்த்தனவோ அவற்றைப் போர்க் களத்தில் காகங்கள் தோண்டி உண்பதை நான் பார்க்க வேண்டும். அப்பொழுதுதான் என் மனம் நிறைவுபடும்.

பொன்மயமான திரிகூட மலையின் மீதுள்ள இலங்கை நகர் அரக்கர்கள் போரில் இறந்துபட்ட பின் குவியும் எலும்புகளால் இன்னொரு மலைமீது இருப்பதாகத் தோன்றவேண்டும். அப்படி நடக்கவில்லையென்றால் என்னுடைய உயர்ந்த அரசகுலப்பிறப்பும், மேன்மையுடைய ஒழுக்கமும், தீதிலாக் கற்பு நெறியும் என்னாவது? எப்படி மற்றவர்களுக்கு இவற்றை மெய்ப்பித்துக் காட்டுவேன்?

கொடுமை செய்யும் அரக்கர்கள் வாழ்கின்ற இந்த இலங்கை நகரம் எனக்கு ஒரு பொருட்டா? கணக்கில்லாத உலகங்கள் எல்லாவற்றையும் "எரிந்து ஒழிக" என ஒரு சொல்லை மட்டும் சாபமாகச் சொல்லி என்னால் சுட்டுக் கொளுத்த முடியும். அப்படிச் செய்வது தலைவனாகிய இராமபிரானின் வில்லாற்றலை இழிவு படுத்துவது போலாகுமே என்று அடங்கியிருக்கின்றேன்.

இன்னொன்றையும் உனக்குச் சொல்லவேண்டும். வாய்மை தவறாதவன் நீ! ஐந்துபுலன்களை நீ அடக்கி வென்றவன். இதில் ஐயமில்லை. ஆனால் உலகம் உன்னையும் ஒரு ஆண்மகன் என்று தானே கூறகிறது? அப்படியிருக்க இராமபிரானின் திருமேனி ஒன்றைத் தவிர இன்னொரு உருவத்தை நான் தீண்டலாமோ? தகுமோ? தகாது.

என்னைத் தீண்டியிருந்தால் இராவணன் இத்தனை நேரம் மாண்டு போயிருப்பான். என்னைத் தொடமுடியாது என்று தெரிந்துதான் நிலத்தோடு தோண்டி எடுத்துக் கொண்டு இங்கு வந்தான். அப்படி அவன் செய்யாமல் விட்டதற்கு வேறொரு காரணமும் உண்டு. தன்னை விரும்பாத பெண்ணை அவன் தொட்டால் அவனுடைய வல்லமை மிக்க பத்துத்தலைகளும் தாமாகவே தெறித்து விழுந்துவிடும் என்று பிரமன் இட்டசாபமும்

அவனிடமிருந்து இதுவரை என்னைக் காப்பாற்றி வருகிறது.

அப்படி அவனுக்கு ஒரு சாபம் உள்ளது என்பதை மின்னும் மணிமுடி தரித்த வீடணனின் மகளாகிய திரிசடை தான் எனக்குச் சொன்னாள். என்மீது பெருங்கருணை கொண்டவள். நான் மனம் வருந்தித் துன்புறும் போதெல்லாம் அவளே எனக்கு ஆறுதலும் தருகிறாள்.

அந்தச் சாபமும் என்னைக் காப்பாற்றி வருகிறது. தவிர, அறம் தவறாது வெற்றிபெறும் என்று கருதியும் நான் உயிர்வாழ்கிறேன். இல்லையென்றால் எப்போதோ உயிர்விட்டிருப்பேன். இன்னொன்று; நாயகனாகிய இராமபிரானின் வலிமையை உலகம் அறியவேண்டும்; என்னுடைய தூய கற்புடை நெறியைக் காட்டவும் நான் காத்திருக்கிறேன்.

நீயே பார். நான் இப்போது இருக்கும் இந்த இடம் தண்டகாரண்யத்திலிருந்து அரக்கன் நிலத்தோடு பேர்த்து எடுத்துக் கொண்டு வந்தது. நாங்கள் வாழ்வதற்காக இலக்குவன் அமைத்துக் கொடுத்த இலைதழைகளான குடிசையும் இருப்பதை நீயே பார். என் மீது இராவணனுடைய ஒரு விரல் கூடப்படமுடியாது என்பதைத் தெளிவாக அறிவாயாக.

இந்த இடத்தை விட்டு ஒரு கணமும் கூட நான் நீங்குவதில்லை. இராமபிரானின் திருமேனி போலக் காட்சிதரும் இந்தப் பொய்கைக்கு நீர் பருகுவதற்கும் இளைப்பாறுதற்கும் வருவேன். அதிலுள்ள தாமரைப் பூக்களும், கரிய நீர்ப்பொய்கையும் பெருமானின் அழகையும் எனக்கு வெளிப்படுத்தி ஆறுதல் தருகின்றன.

ஆதலால், ஐயனே! நீ நினைத்தது நடக்க முடியாதது. நீ வேத நாயகனாகிய இராமனிடம் திரும்பிச்செல். நீ பார்த்ததை எல்லாம் பெருமானிடம் சொல்வாயாக. இதுவே நீ செய்யக்கூடிய செயல்".

இவ்வாறு பிராட்டி விரிவாகத் தன் மனத்துறுதியை அனுமனுக்குப் புலப்படுத்தி விட்டாள். மனம்நெகிழ்ந்து போனான் மாருதி மகன். உள்ளம் பெருமையால் பூரித்துப் போயிற்று. இந்த உலகத்துப் பெருநாயகன் இராமன் என்பது எப்படிப் பெருமையோ, அதே பெருமை அவனுடைய தேவியாகிய சீதைக்கும் உண்டே! அவனுடைய ஒப்பற்ற பெருந்தேவி செய்த தவத்தை எவ்வாறு புகழ முடியும்? அரக்கனுடைய மாளிகையில் பிராட்டி மாசுபடுத்தப் பட்டிருப்பாளோ என்ற சிறு ஐயமும் நீங்கிவிட்டது. கம்பர் பாடுகிறார்.

நன்று நன்று இவ்வுலகுடை நாயகன்
தன்துணைப் பெருந்தேவி தவத்தொழில்
என்று சிந்தை களித்து வந்து ஏத்தினான்
நின்ற சங்கை இடரொடு நீங்கினான்.

"பெருமாட்டி! இத்தனை நாள் இராவணனுடைய கொடுமைக்கு அஞ்சியும் துன்பப்பட்டும் இருளில் கிடந்த உலகம் இனி தெளிவுபெற்று ஒளியின்பத்தில் ஆழும் நேரம் வந்துவிட்டது. அவசரப்பட்டு ஏதேனும் தீங்கு செய்து கொள்ள வேண்டாம். உன்னைப் பிரிந்ததனால், மயக்கம் கொண்டவனாய்த் துன்புறும் மன்னனுக்குப் போய் என்ன சொல்ல வேண்டும்? அவற்றை நீ எனக்கு அருள்புரிந்து கூறுவாயாக"

என்று பிராட்டியின் திருவடிகளை அனுமன் வணங்கினான். சீதா பிராட்டி கூறினாள்;

"நான் இன்னும் இங்கு ஒரு மாதம் இருப்பேன். உனக்குச் சொல்வதைக் கேட்டுக் கொள்வாயாக. நான் இராமபிரான் மீது ஆணையிட்டு இதைச்சொல்கிறேன். நீதிநெறி நிற்பவனே! அந்த ஒரு மாதத்துக்குப் பின்னர் நான் உயிரோடு இருக்கமாட்டேன்.

மாலைகளை மார்பில் சூடிய இராமபிரானுக்குத் தகுந்த மனைவியாக நான் அமையவில்லை போலும். அவனுடைய நெஞ்சில் என்மீது சிறிதும் கருணை இல்லை என்றாலும் கூட, என்னைக்காப்பற்றி அவனுடைய வீரத்தை நிலை நிறுத்துவது அவன் கடமையல்லவா?

அனுமா! இலக்குவனுக்கு ஒன்று சொல்லவேண்டும். நான் இப்போது துன்புறும் கொடிய சிறையிலிருந்து என்னை மீட்க வேண்டியது அவனுடைய பொறுப்பு. என்னைக் காப்பதாக இராமபிரானின் ஆணையை ஏற்றுக் கொண்டவன் அல்லவா?

ஒரு மாதத்துக்குள் இங்கு வந்து பெருமான் என்னைக்காப்பாற்ற வில்லை என்றால், நான் செய்த தவமும் மேற்கொண்ட விரதமும் தீர்ந்து விட்டது என்று பொருள். அதற்குப் பிறகு நான் உயிரோடு இருக்க மாட்டேன். வெள்ளநீர் பெருக்கெடுத்து வரும் கங்கையாற்றின் கரையில் இந்த அடிமைக்கு இறுதிக்கடனை - தன் னுடைய சிவந்த கரங்களால் நீத்தார் கடனைச் - செய்ய வேண்டும் என்று இந்த ஏழை வேண்டிக் கொண்டதாகவும் சொல்.

என்னுடைய மாமியார்களாகிய பெருந்தேவிகளுக்குச் சீதை

உயிர்விட்டபொழுதிலும்அவர்களைமறவாது எண்ணித்தொழுதாள் என்று நீ சொல்ல வேண்டும்; ஏனெனில் அறத்தின் நாயகனாகிய இராமனிடம் அருளில்லை; மறந்தாலும் மறந்து விடுவான். நீ மறவாதே.

பிரானிடம்இன்னொன்றையும்நினைவூட்டு. மிதிலைக்கு வந்து என்னுடைய கையைப் பற்றிக் கொண்டு திருமணம் செய்த போதில் 'இந்தப் பிறவியில் இரண்டு பெண்களை என் மனத்தால் கூட நினைக்கவும் தொடவும் மாட்டேன்' என்று மேலான வரம் ஒன்றை எனக்குத் தந்த நன்மொழிகளை நினைவூட்டுவாயாக.

இப்பொழுது இங்கு இருக்கின்ற நான் இறந்து போகலாம். அப்படி நடந்தால் நான் மீண்டும் மண்ணில் பிறப்பேன். அப்போது என்னுடைய தீவினைகள் தீரும் வண்ணம் அவனுடைய திருமேனியைத் தீண்டும் பேற்றினை எனக்கு வரமாக அருள வேண்டும் என நான் சொன்னதாகக் கூறு.

இராமபிரான் கோசலநாட்டுடைப் பெருமன்னன்; நான் அவனுக்கு வாய்த்த கோப்பெருந்தேவி. அவன் ஆட்சி செய்யும் அழகைப் பார்க்க வேண்டும். பட்டத்து யானை மீது ஏறி உலாவருவதைப் பார்க்க வேண்டும்; அவ்வப்போது நடைபெறும் விழாக்களுக்காகப் பலப்பல கோலங்கள் பூணுவதைப் பார்க்க வேண்டும் என்றெல்லாம் நான் கண்ட கனவுகள் வீணாகப் போய்விட்டன. நல்ல ஊழ்வினை எனக்கு வாய்க்கவில்லை. என்னென்னமோ பேசுகிறேன் - என்விதி அப்படி;

இராமன் இங்கு வரமாட்டான். தன்னுடைய பிரிவால் துன்பப்படும் அயோத்தி மக்களைப் பார்ப்பதற்காகவும் வருந்தும் தாய்மார் மூவரின் நோயை நீக்கவும், நந்திக் கிராமத்தில் பரதன் செய்துவரும் தவநோன்பினை முடித்துக் காப்பாற்றுதற்கு அங்கு போவானே தவிர, ஒரு ஏழையாகிய இந்தப் பெண்ணை நினைத்து அவன் இங்கு வருவான் என்று எதிர்பார்ப்பது என் பேதைமையே!.

மாருதிமைந்தனே! என்னுடைய தாய்தந்தையர் உறவினர் எல்லாருக்கும் நான் வணக்கம் சொன்னேன் என்று தெரிவிப்பாயாக. உன்னுடைய மன்னனாகிய சுக்ரீவனிடம் நான் ஒன்று கேட்டேன் என்று சொல்ல வேண்டும். அழகு மிக்க தோள்களையுடைய இராமனைத் தொடர்ந்து காத்து கூடவே அவனை அரியணையில் அமரச் செய்ய உதவவேண்டும். இவையே நான் சொல்ல விரும்பியவை"

பிராட்டியின் இந்தச் சொற்கள் அனுமனுக்குச் சொல்ல முடியாத வருத்தத்தை ஏற்படுத்தின. அவளுடைய மனக்குழப்பமும் அச்சமும் என்ன நடக்குமோ என்ற கவலையும், கணவன் தனக்கு நிரந்தரமாகவே கிடைக்க மாட்டானோ என்ற ஏக்கமும், அயோத்தியில் உள்ளவர்களுக்குத் தன்னுடைய இறுதிநாள் நினைவுகளைச் சொல்ல வேண்டும் என்ற ஆசையும் - இப்படிப் பலவகையான உணர்ச்சிகளுக்கு ஆளாகித் துன்புறுவதை அனுமன் முழுமையாக உணர்ந்து கொண்டான். தேவியைக் காப்பது கூட இரண்டாவது தான். இப்பொழுது முதலில் செய்யவேண்டியது அவளுடைய மனக்கவலையை நீக்கி நம்பிக்கையூட்ட வேண்டும். இராமன் வருவான்; அரக்கன் அழிவான், துன்பம் தீரும் என்பதை உறுதிப்படுத்த வேண்டும். இந்த ஒரு நோக்கத்தை மனதில் வைத்துக் கொண்டு சொல்லின் செல்வன் பேசத் தொடங்கினான். அற்புதமான, நீண்ட பேச்சு; பிராட்டியை மட்டுமல்ல, துன்புற்றோர் எல்லாருக்கும் கவலை நீக்கும் பேச்சு.

"பிராட்டியே! நீ இதுவரை சொன்னவற்றை எல்லாம் கூர்ந்து கேட்டேன். உன் மனத்தடுமாற்றம் அவற்றின் மூலம் நன்கு தெரிகிறது. நீ குழம்பிப்போயிருக்கிறாய். இந்த நிலையில் அது இயற்கை தான். ஆனாலும் தேவி உண்மைநிலையை உனக்கு உணர்த்துவது என்கடன்.

நீ இங்கு இறந்து விடுவதாகச் சொன்னாய். அது மெய்தான். அதற்குப்பிறகு, உன்னைத் தேடித் தளர்ந்திருக்கும் இராமன் உயிர் பிழைப்பான் என்பதும் மெய்தான். அதோடு காட்டில் வாழ்வதைவிட்டு அயோத்திநகர் சென்று மணிமுடி சூடி மன்னனாக அரசு செய்வான் என்று சொன்னதும் சரியே. ஆனாலும் ஒன்று சொல்வேன், நீயும் எண்ணிப்பார்.

கற்புநிலை சிறிதும் பிறழாத உன்னை இங்கு அஞ்சத்தக்க சிறையில் வைத்த இராவணன் இனிய உயிருடன் வாழ்வானாம்; ஒப்பற்ற வில்வீரம் பொருந்திய இராம இலக்குவர்கள் உயிர்களைக் காக்கும் அரசநீதி தவறிப் பொய்த்துப் போவர்களாம். இது போல ஒரு சொல்லை எங்காவது கேட்டதுண்டோ?

நற்குணங்கள் நிறைந்தவளே! வானரராகிய நாங்கள் எல்லாரும் உன்னை வருத்திய அரக்கர்களைக் கொல்லாமல் எங்கள் உயிரே மேல் என்று கருதி நாங்கள் பின் செல்லும் போது, கோதண்டத்தைக் கையில் ஏந்தி இராமபிரானும் அயோத்தி நோக்கி முன் செல்வது தானே முறை! (எங்கள் உயிர் பெரிதல்ல, உன்னை மீட்காமல் இராமனிடம்

செல்ல மாட்டோம். கையில் வல்வில் ஏந்திய இராமனும் உன்னை விட்டு அயோத்தி செல்ல மாட்டான் என்பது உட்குறிப்பு).

எங்களைக் காக்கவந்த தெய்வம் இராமன். கடப்பதற்கு அரிய துன்பக் கடலிடையே நாங்கள் மாயந்து போகா வண்ணம், குறைவற்ற வகையில் நிறைவான அருட் செல்வத்தை எங்களுக்குத் தந்தவன். அந்தத் தலைவனிடம் உன்னைக் கொண்டு போய் சேர்த்தபின்பு அவன் திருவடி வணங்காவிட்டால், எங்களைப் போல உயர்ந்தவர்கள் யார் இருப்பார்கள்? (நன்றிகெட்டவர்கள் என்பதை எள்ளல் உணர்ச்சியுடன் உயர்ந்தவர்கள் என்கிறான் அனுமன்).

தான்டக வன முனிவர்களுக்கு, அவர்கள் செய்யும் தவம் முதலியவற்றுக்கு இடையூறாக மட்டுமல்லாது, அவர்களையும் கொன்று தின்னும் அரக்கர்களைக் கொன்ற பின்பே கோசலநாடு திரும்புவேன் என்ற இராமன் சொல் பொய்யாகுமா? அவனுக்கு இராவணன் உள்ளிட்டாரை அழிப்பது பெரிய செயலா?

சிறையில் இருக்கும் உன்னை மீட்காமல் நாங்கள் நாடு திரும்பினோம் என்றால் நல்ல சாதாரண குடிமக்கள் மட்டுமல்ல, நல்ல நூல்களைக் கற்ற பெரியவர்களும் ஒரு சேரச் சேர்ந்து சிரிக்கமாட்டார்களா? (மக்களிடையே மதிப்பு இழந்த பிறகு மன்னராக எப்படி ஆட்சிபுரிவது?)

திருமகள் வடிவமே! உன்னை இராவணன் இங்கு எடுத்து வருவதற்கு முன்பே கூட, உலகிலுள்ள அரக்கர்களை அழித்து ஒழிக்க விரதம் பூண்டவன் இராமன். அவனிடம் போய் நீ உயிர் விடத் துணிந்தாய் என்று சொல்வதைக் கேட்ட பின்பும் இராமன் பொறுமையாக இருப்பானா?

இராமனுடைய கோபத்தின் ஆற்றலை நீ அறியாதவள் அல்ல. அவனுடைய வெஞ்சினம் வலிய அரக்கர்களை அழிப்பதோடு நின்றுவிடாது. இந்த வையமும் வானமும் ஒரு சேர அழியும் வரை அது தணியாது. எழுகடல் நீரையும், இராமனின் ஒரே அம்பு ஊழித் தீபோல வறளச் செய்துவிடும்.

தன்னுடைய கணவனின் வீரச் செயலைக் கண்டு மகிழ்வது தேவிக்கு இயற்கை தானே! "இவ்வுலகில் அரக்கரை அழித்து நல்லோருக்கு அருள் செய்து நல்வினைகள் செய்வதன் மூலம் அறத்தை நிலை நிறுத்த வந்த நாயகன் என் தலைவன்" என்று கூறுவதில் நீ பெருமை கொள்ளமாட்டாயா? அத்தகைய புகழ் உனக்கு வேண்டாமா?

ஆனாலும், பிராட்டி! உன்னால் விளைந்த நல்லது ஒன்றை நான் சொல்லவேண்டும். அரக்கர் போன்ற கொடியவர்களின் தீமைகளிலிருந்து மீண்டு உலகமக்கள் நல்வாழ்வு காணவேண்டும் நல்லறம் நிலைபெற வேண்டும். அதற்காகச் சில நாள்கள் நீ துன்பப்பட்டுத்தான் ஆகவேண்டும்; தீரவேண்டும்."

சின்னாள் நீஇடர் தீராதாய்
இன்னா வைகலின் எல்லோரும்
நன்னாள் காணுதல் நன்றன்றோ
உன்னால் நல்லறம் உண்டானால்.

**(தொழுது வணங்க வேண்டிய பாடல் இது. உலகம் வாழ, உயர்ந்தவர்கள் துன்பப்பட்டுத்தான் ஆகவேண்டும். இது இயற்கை நியதி. எல்லாரும் நல்லநாளைக் காணவேண்டும் என்றால் நல்லவர் ஒருவர் தீமையின் துன்பத்தில் சில நாள்களாவது வருந்தவே வேண்டும். இதை மாற்ற முடியாது; தெய்வத்துக்கும் இது பொருந்தும்)**

தொடர்ந்து பேசியபோது அனுமன், அரக்கர்களுக்கு ஏற்படப்போகும் அழிவு, இலங்கை எரியும் காட்சி, இராவணனின் கொடுங்கோன்மையிலிருந்து விடுபட்டுத் தேவர்கள் ஆடும் களிப்பு என்று இவற்றை வரிசையாகச் சொன்னான். பிராட்டிக்கு நம்பிக்கையூட்டிய வாசகங்கள் அவை. அவளுடைய ஏக்கம் தீர வேண்டும் என்பது அனுமன் நோக்கம்.

"திருவே! இப்படி நடக்கும் எனப் பலவற்றைப்பற்றி உனக்கு விளக்கமாகச் சொல்லவேண்டிய தேவை என்ன? நீயே அவற்றைக் காணப் போகிறாய். தூய உன் திருமேனியை எந்தக் கண்ணால் இராவணன் கண்டு காமுற்றானோ, அதைக் காகம் குத்தித் தோண்டித் திண்பதையும் நீயே காணப் போகிறாய். ஒன்றல்ல ; இதுபோல அற்புதங்களை நிகழ்த்த வல்ல தெய்வத்தன்மை பொருந்திய அம்புகள் இராமனிடம் பல உள்ளன.

நீ, இன்னும் ஒருமாதம் இங்கு சிறையில் துன்பப்பட்டு வாழவேண்டும் என்பது தேவையில்லை. நான் போய் இராமனிடம் சேர்வதற்குத் தான் காலம் ஆகும். நடந்தவற்றைக் கேள்விப்பட்ட உடனே ஒரு கணமும் வீணாக்காமல் பெருமான் ஓடி வந்துவிடுவான். அவன் அங்கே எப்படி இருக்கிறான் என்று உனக்குத் தெரியுமா?

உன்னைப் பிரிந்த நாள் தொட்டு, அவன் ஒரு நடைப்பிணம் போல வாழ்ந்து வருகிறான், உயிரில்லாத ஒரு பாவைபோல இயங்குகிறான். பிரிவுத் துன்பத்தால் அவன் திருமேனி முழுவதும் அனலாய்க் கொதிக்கிறது. அந்த வெம்மையைப் பொறுக்கமுடியாமல் அந்தக்காட்டில் உள்ள செடி, மரம், பூ இலை, தளிர், சோலை எல்லாம் எரிந்து விடுகின்றன.

எப்பொழுது சோகம் தோன்றும்? பெருமாட்டியே நீ இராமனை நினைப்பதால் சோகம். உன்னை நினைப்பதால் மன்னனுக்குத் துன்பம். உங்கள் இருவரிடையே மறதி ஏது? தெளிவான நினைவு இருக்கும் போது தான் துன்பமும் தொடரும். உன்னையே எண்ணும் இராமனுக்கு வேறு எந்த நினைவும் இல்லை. மேகம் வந்து இடித்தாலும் ஐந்தலை நாகங்கள் உடலைப்பற்றி வருத்தினாலும் அவனுக்கு உணர்வு தோன்றாதது போல உள்ளான்.

நீ உன்னுடைய துன்ப நிலையை மிக விரிவாகவே சொல்லி வடித்தாய். இராமனுடைய மன நிலையை நான் எப்படிச் சொல்ல முடியும்? தாழியின் உள்ளே மத்தால் கடையப்படும் தயிர் என்னபாடுபடுமோ அதைவிடவும் கடுமையாகத் தடுமாறும் உணர்ச்சிகளுக்கு அவன் ஆளாயுள்ளன். ஐம்புலன்கள் தம் இயல்பை விட்டுப் பித்து பிடித்தவன் போலவும் உள்ளவன். உன்னைப் பிரிந்தவேதனை எவ்வளவு என்று அளவிட்டுச் சொல்ல முடியாது?.

இப்படி உள்ள இராமன், உன்னைப் பிரிந்து உயிர்வாழ்வான் என்றும் மாநகர் சென்று மகுடம் சூடுவான் என்றும் சொல்கிறாய். அது மெய்யாகுமா? அவனை நீயே மற்றவர்களை விட நன்றாக அறிவாய். இதுவரை அவன்பற்றி நான் சொல்லியவற்றை, உள்ளம் கை நெல் லிக்கனியாக உன்கண் முன்னாலேயே பார்க்கப் போகிறாய்.

அன்னையே! நான் திரும்பிச் சென்று உன்னைப் பற்றிய எல்லாவற்றையும் நான் சொல்லக்கேட்டுத் தூயவடிவான இராமனும் குரங்கினத் தலைவன் சுக்ரீவனும் மகிழ்ந்து ஆரவாரிக்கப் போகிறார்கள். ஆனால் அதற்கும் முன்னாலேயே நீ ஒரு பெருமுழக்கத்தைக் கேட்பாய். வானரக் கூட்டம் இலங்கையைச் சூழ்ந் துள்ள இந்தக் கடலைத் தூர்த்த பின்னர் நகரத்தை முற்றுகையிட்டு ஆரவாரிக்கும் ஒலிதான் அது.

பெண்களில் சிறந்தவளே! இராமனுடைய பெரும்படை விரைவில் இந்த நகரத்தை நெருங்கும் பொழுது, அந்தப் படையின் நடுவில் வானில் படரும் கருடாழ்வார் மீது எழுந்தருளும் திருமாலைப் போல என்னுடைய பெரிய பிடரியின் மீது இவர்ந்துவரும் அழகிய

கண்களை உடைய இராமனை நீ காண்பாய்? கூடவே, அங்கதன் தோள் மீது ஏறிவரும் இளவலாகிய இலக்குவனையும் பார்ப்பாய். உன்னுடைய துன்பத்தையும், சந்தேகத்தையும், கவலையையும் இப்பொழுதே விட்டு ஒழிப்பாயாக! உன்னுடைய தனிமைத் துன்பம் விரைவில் நீங்கிவிடும்.

இன்னொன்று தேவி! நான் சொல்லக் கூடாது; ஆனாலும் உன்மனம் அறிந்து சொல்ல வேண்டியது. குராமலர்களைச் சூடியவளே! நீ குறிப்பிட்ட இந்த ஒருமாத காலத்துக்குள், இங்குவந்து இந்தக் கொடிய சிறையிலிருந்து இராமன் உன்னை மீட்கவில்லையென்றால் படர்ந்து வரும் பழிபாவத்துக்கு இராமன் ஆளாவான். அதுமட்டுமல்ல; அவனே இராவணனினும் கொடியவனான இன்னொரு இராவணன் ஆவான். அவனுடன் ஒப்பிட்டால் இந்த இராவணனை இராமன் என்று கூடச் சொல்லலாம்.

குராவரும் குழலி இக் குறித்த நாளினே
விராவரு நெடுஞ்சிறை மீட்கிலான் எனின்
பராவரும் பழியொடும் பாவம் பற்றுதற்கு
இராவணன் அவன் இவன் இராமன் என்றனன்.

உணர்வு ததும்பிய சொற்களைப் பேசி முடித்தான் அனுமன். கூர்மையான அறிவுத் திறத்தையும், இராமன் சார்பாக நின்று அவனுடைய நிலையை விளக்கும் சாதுரியத்தையும், அதேசமயம் பிராட்டியின் மனம் தேறும் வண்ணம் நம்பிக்கைகளை ஊட்டும் அணுகுமுறையையும் ஒரு சேர இந்த நீண்ட உரையில் காணலாம். சீதையைப் பற்றி வந்த இராவணனோ புறப்பகைவன்; சிறையிலிருந்து விடுதலை பெறச்செய்யாது துன்புறுத்தும் இராமன் அகப்பகைவன். அவனினும் இவன் நல்லவன் என்றெல்லாம் பேசும் ஆற்றல் அனுமனுக்கே உரியது. இராமனை இராவணனாக சித்தரிப்பது அவன் நோக்கம் அல்ல; அல்லது இராவணன் இராமன் ஆகிவிடவும் முடியாது; இருவேறு துருவங்கள். இராமன் சீதையை மறக்கும் அளவு கொடியவன் அல்லன் என்பதைப் பிராட்டிக்கு உணர்த்துவதற்கு அனுமன் கையாண்ட ஒரு தந்திரம் இந்தச் சொல்லாடல். அதில் அவன் வெற்றியும் பெற்று விடுகிறான்.

அவன் சொல்லியவை எல்லாம் உண்மையே என்ற தெளிவு பிராட்டிக்கு ஏற்பட்டுவிட்டது. இன்பக்கடலுள் அவள் மனம் துள்ளியது. அறிவிலே ஒரு புத்துணர்ச்சி ஏற்பட்டது. ஒரு கணம் அவளுடைய உடம்பு கூடப் பூரித்துப் போயிற்று. எந்தப்

பெண்ணுக்கும் கிடைக்காத பெருநிலையைப் பெற்று உயர்ந்தவள் போன்றும் ஆனாள். இவையெல்லாம் கம்பன் கைவண்ணம்.

“ஆக இம்மொழியா சிலகேட்டு அறிவுற்றாள்
ஓகை கொண்டு களிக்கும் மனத்தாள் உயர்ந்தாள்”

அனுமன் இராமபிரானிடம் விரைந்து செல்லவேண்டும் என முடிவு செய்தாள். தன் தலைவனுக்குச் சொல்லுமாறு சில நிகழ்வுகளை - தன்மனதில் மறையாது இருந்து தன்னை வாழ வைத்துக் கொண்டிருக்கும் நிகழ்வுகளை - நினைவூட்டுமாறு சொன்னாள்.

காடுறை வாழ்க்கையின் போது தன் மேனியைத் தீண்டிய காகத்தைத் தண்டிப்பதற்காக, ஒரு சிறிய புல்லையே அம்புபோல இராமன் ஏவியது; அது துரத்த, பயந்து ஓடிய காக்கை, தன்னைக் காப்பாற்றுமாறு முறையிட்டும் பிரமனும் சிவபெருமானும் கைவிட்ட பின்னர் இராமன் திருவடிகளையே அடைக்கலம் எனப் புகுந்தது; ஒரு கண்ணைப் பறித்துத் தண்டித்துப் போகவிட்ட இராமனுடைய அருளை நினைவூட்டுவாய். அன்று முதல் எல்லாக் காக்கைகளுக்கும் ஒரு கண் என்பதை உலகம் அறியும். ஆனால் மேற் சொன்ன நிகழ்ச்சி இராமனுக்கும் எனக்கும் மட்டும் தெரியும்; இளவலாகிய இலக்குவனும் அறியான்.

ஒரு தடவை அயோத்தி அரண்மனையில் இருந்த போது, நான் இராமபிரானிடம், ‘மன்னவனே! என்னுடைய இன்னொரு உயிர் போன்ற கிளி ஒன்றுக்கு ஒருபெயர் வைக்க வேண்டும். யார் பெயர் இடுவது?’ எனக் கேட்டேன். அப்பொழுது “என் அன்னையாகிய குற்றமற்ற கைகேயியின் பெயரை வை என்று சொன்னதையும் அடையாளமாகச் சொல்”.

கணவன் மனைவி மட்டுமே அறிந்த சில செய்திகள் அகம் சார்ந்தவை; வெளியில் சொல்லப்படாதவை. அவர்கள் பிரிந்து இருக்கும் பொழுது அவை போன்றவையே அவர்கள் மனங்களில் பசுமையாக இருந்து வாழவைக்கும்; பல சமயம் நெருப்பாக எரிந்து பொசுக்கவும் செய்யும். தூதராக வருவோரிடையே இவை பரிமாற்றம் செய்யப்படும் பொழுது தலைவன் தலைவியிடையே நம்பகத்தன்மை ஏற்பட்டு உயிரின் மறுமலர்ச்சி தோன்றும். அனுமன் இராமனை விட்டுப் பிரிந்த போது, அங்கு தலைவன் சொன்ன சொற்களும், இப்பொழுது சீதையைவிட்டுப் பிரிய நிற்கும் இந்த

நேரத்தில் பிராட்டி சொன்ன சொற்களும் அவர்களுடைய எண்ணங்கள் ஒன்றாக இருப்பதை மெய்ப்பிக்கின்றன. 'ஈருடல் ஒரு தலைப்புள்' - இரண்டு உடல்கள்; ஆனால் ஒரே ஒரு தலை கொண்ட பறவை எனத் தலைவன் தலைவியரைத் திருக்கோவையார் போற்றுகிறது. அப்படி ஒன்றுபட்ட சிந்தையுடைய நாயக நாயகியின் நம்பிக்கைக்கு உரிய பாத்திரமாக இருப்பது அனுமன் செய்த தவத்தால் வந்தபேறு. எல்லாவற்றையும் எல்லாரிடமும் சொல்லமுடியாது. சிலரிடம் மட்டுமே சிலவற்றைச் சொல்லாம், அதற்கு மனதில் ஒரு எண்ணம் தோன்ற வேண்டும். பிரானுக்கும் பிராட்டிக்கும் 'சொல்லலாம்' என அனுமனைப் பார்த்தபோது அது தோன்றியது என்பது காப்பிய அழகில் தலையானது. அவன் போர் செய்தான், இலங்கையை எரித்தான், சஞ்சீவி மலையைக் கொண்டு வந்தான் என்பதெல்லாம் அவனுடைய உடல் சார்ந்த ஆற்றல்களால் விளைந்தவை. அவற்றையெல்லாம் தாண்டிய நிலையில் தான் வணங்கும் தலைவி - தலைவன் இருவருடைய நம்பிக்கைக்குரியவனாக ஆனது தான் அனுமன் பெற்ற பெரிய வெற்றி.

'அனுமனே! அடையாளமாக நான் சொல்லக் கருதியவை இவையே. இனி வேறில்லை'. என்று கூறிக்கொண்டே தான் உடுத்தியிருந்த ஆடையைத் தளர்த்தி, ஒரு முடிச்சை அவிழ்த்தாள் தணக்குத் தானே ஒப்பானது என்று சொல்லத்தக்க சுடரையு டையதும். மேலுகத்திலும் கீழலகத்திலும் அதுபோலச் சுடர்விடும் சூரியன் கூட இல்லை என்று சொல்லத்தக்கதுமான சூடாமணியை எடுத்து அனுமனிடம் தந்தாள்.

அனுமனுக்குப் பெருவியப்பு, தாமரை பூத்தது போன்ற அழகுடைய பிராட்டியின் கையிலிருந்து அதை வாங்கினான். அதன் பேரொளி பரவி ஏழுலக இருளும் ஒரேசமயத்தில் விலகிவிட்டது போலிருந்தது. மேகம் போல இருண்ட பிராட்டியின் கூந்தல் மேல் தோன்றிய சூரியன் போலவும், மென்மைச் சாயலும் பேரெழிலும் கொண்ட தேவியின் திருமேனி போலச் சிவந்தும் தெய்வப்பண்புகளின் உறைவிடமாக இருக்கும் இராமபிரானின் திருவடிச் செம்மையைப் பெற்றதுபோலவும் அது இருந்தது. 'காட்டினாள் மாருதி கண்டான்'.

"அனுமனே! நம்பிக்கைக்குரியவனே! என்னை நாடிவந்து எனது இனிமையான உயிரைக் காத்து என்னை வாழ்வித்தவனே! எனது

கண்மணி போன்றது இந்தச் சூடாமணி; பல நாட்களாக என்னுடைய ஆடையில் இதைப் பொதிந்து வைத்திருந்தேன். என்னை நீ வந்து இங்கு கண்டாய் என்பதற்குப் பேரடையாளமாக இதைக் கொள்க; கொண்டு போய் இராமபிரானிடத்தில் கொடுப்பாயாக".

அம்மையாய் அப்பனாய அத்தனே! என்று ஒரு குரங்கை முன்னரும் புகழ்ந்தவள், அவனை நம்பிப் பிரான் தன்னுடைய கணையாழியைக் கொடுத்து அனுப்பி உயிரைக் காத்தான்; அதே அனுமனிடம் தன்னுடை சூடாமணியைக் கொடுத்து அனுப்பி இராமன் உயிரைக் காக்க விரும்பினாள். அளவற்ற அரக்கியர்கள் சூழ்ந்திருந்த துன்பத்திலிருந்து தன்னை மீட்ட அனுமனே துன்பக்கடலிலிருந்து இராமபிரானையும் மீட்க வல்லவன் என்ற தெளிவும் உறுதியும் ஏற்பட்டதால் தான்,

"சூடையின் கண்மணி ஒப்பது தொல்நாள்
ஆடையின் கண் இருந்தது பேரடையாளம்
நாடிவந்து எனது இன்னுயிர் நல்கிய நம்பா
கோடியென்று கொடுத்தனள் மெய்ப்புகழ் கொண்டாள்

கொடுத்தது சூடாமணியையா? தன் கண்மணியை அல்லவா? "கண்மணி அனையாற்குக் காட்டுக" என்று இன்னொரு கண்மணியைச் சூடாமணியாகக் கொடுத்தாள்.

அனுமனுடைய மனம் உருகிவிட்டது. தொழுதான்; அழுதான் பிராட்டியின் உணர்ச்சிகள் அவனை நெகிழ்வித்தன; தெய்வமகளைக் கைகூப்பித் தொழுதான். இந்தத் தெய்வம் இப்படித் துன்புறுகிறதே என்று எண்ணியபோது அவன் கண்களில் நீர் பெருகியது. தன்னுடைய உடையில் சூடாமணியைப் பத்திரமாக முடித்துக் கொண்டான்; எந்தவகையிலும் அதற்குக் கெடுதிவராதவாறு இறுக்கமாகக் கட்டினான். பிறகு தலை நிமிர்ந்து பிராட்டியைப் பார்த்தான். கூப்பிய கரங்களுடன் தேவியை மூன்று முறை வலமாகச் சுற்றி வந்தான். அவன் கண்கள் இன்னும் அழுது கொண்டிருந்தன. பிறகு பிராட்டியின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான்; தன்னுடைய தெய்வத் திருக்கரத்தால் திருமகளாகிய சீதை அவனை வாழ்த்தினாள். அவளைப் பார்த்துக் கொண்டே அனுமன் அங்கிருந்து பிரிந்து சென்றான் . அனுமன் இப்படியெல்லாம் உருகி அழுது தொழுததைப் பார்த்தும்

அசையாது நின்றாள் பிராட்டி. காரணம் தன்னுடைய துன்பஉணர்வுகளை எல்லாம் கொட்ட ஒரு கொள்கலம் கிடைத்து விட்டது அல்லவா? கொட்டிய பிறகு ஒரு பொம்மை போல ஆகிவிட்டாள். 'எழுது பாவை' என்கிறார் கம்பர். அனுமன் நிலை இப்போது வேறு. இத்தனை நேரம் இவ்வளவு பேசியவனுக்கு இப்போது வாய் அடைத்துப்போயிற்று. மௌனத்தின் நிறைவில் இருவரும் நிற்கிறார்கள். பிராட்டியின் துன்பத்தை வாங்கிக் கொண்ட கொள்கலம் இனிப் பேசுவதற்கு என்ன இருக்கிறது?. அதனால் தான் பிராட்டியிடம் விடைகூடப் பெற்றுக் கொள்ளாமல் 'ஏகினன்' என்கிறார் கம்பர். ஏத்தியவளும் பேசவில்லை; ஏகியவனும் பேசவில்லை. ஆனால் பேசாமல் இருந்ததால் தான் உணர்ச்சிகளைப் புரிந்து கொள்ள முடிந்தது. இதுதான் 'யான் கண்டனையர் என் இளைஞரும்' என்று பிசிராந்தையார் சொல்லும் உறவின் மேன்மை. இத்தனை உணர்ச்சிகளையும் தமிழோவியமாக்கும் கம்பனின் பாடலைப் பாடித் தொழுங்கள்.

தொழுது வாங்கினன் சுற்றிய தூசினன் முற்றப்
பழுதுறா வகை பந்தனை செய்தனன் வந்தித்து
அழுது மும்மை வலங்கொடு இறைஞ்சினன் அன்போடு
எழுது பாவையும் ஏத்தினள் ஏகினன் இப்பால்.

## 13. பொழில் அழிந்ததும் பொங்கிய அரக்கரும்

அனுமன் சீதாபிராட்டியிடமிருந்து பிரிந்து அசோக வனத்தின் நடுவாகப் போனான். தேவியைக் கண்டாயிற்று; நலமாக இருக்கிறாள் என்ற செய்தியை இராமனுக்குச் சொல்ல வேண்டும். எவ்வளவு விரைவில் போகிறோமோ அவ்வளவு நல்லது. ஆனால் இது ஒரு சிறிய தொழில்; தன் ஆற்றலை வெளிப்படுத்த வேண்டும். திருமகள் வடிவமான சீதையைச் சிறைவைத்தவர்களுக்கு ஒரு எச்சரிக்கை செய்தே போகவேண்டும். பேருருவம் எடுத்தான்.

சீதையைக் கவர்ந்து வந்து துன்புறுத்திய அரக்கர்களை மாய்க்க வேண்டும்; இலங்கையை மீன்துள்ளும் கடலில் ஆழ்த்த வேண்டும். அதற்கு அரக்கர்களுக்குக் கோபம் வரவேண்டும். என்ன செய்யலாம்? இராவணன் சீதையைச் சிறைவைத்தது போல, தானும் அவனுடைய தேவியான மண்டோதரியைத் தூக்கிக் கொண்டு போய்விடலாமா? எப்படியாவது அவர்களைப் போருக்கு அழைக்க வேண்டும். முதலில் இந்தச் சோலையை - அழகுமிக்க மலர்வனத்தை அழிப்போம். அப்போது ஏற்படும் ஆரவாரம் கேட்டு எல்லாரும் கிளர்ந்து வருவார்கள். வரிசைவரிசையாக அவர்களை எல்லாம் கொன்று குவிக்கலாம். அவர்கள் அழிந்தபின்னர், தேடிவரும் இராவணனையும் தோற்கடித்து அவமானப்படுத்தவேண்டும்.

இப்படி எண்ணி முடிவு செய்தான் அனுமன். தன்னுடைய பேருருவத்தைச் சுருக்காமல் நீண்ட கால்களால் அந்தச் சோலையைத் துகைத்தான். மரங்கள் ஒடிந்து விழுந்தன; வளைந்தன; பிளந்தன. எரிந்து சாம்பலாயின. வானமே இருளுமாறு பலமரங்களை அனுமன் பிடுங்கி மேலே எறிந்தான். அங்கிருந்து அவை கீழே விழுந்த போது கடல் அலைகள் பொங்கின. மேல் சென்ற சில மரங்களில் இருந்த மணம் மிக்க பூக்களைத் தேவமகளிர் பறித்து மகிழ்ந்தனர். பல மரங்கள் இலங்கை நகர் மீது விழுந்து மலைபோன்ற பெரிய மாளிகைகளை இடித்துத் தகர்த்தன. மரங்களிலும் கொடிகளிலும் மெய்த்துக் கிடந்த பறவைகளும் வண்டுகளும் கடல் மீன்களுக்கு இரையாயின. அழிவு முழுமையாக இருந்தது, ஒரு மரத்தைத் தவிர. ஆம், அதனடியில் தான் பிராட்டி

அமர்ந்திருந்தாள். சுற்றிலும் இவ்வளவு பேரழிவு நடக்கவும் அந்த மரம் மட்டும் எப்படித்தப்பியது? காரணம் சொல்கிறார் கவிஞர். உலகம் அழிந்து போகும் நாளில் ஊழிப் பெருவெள்ளம் புரண்டுபுரண்டு பொங்கி வரும் போது திருமால் தங்கியிருக்கும் ஆலமரம் எந்தப் பாதிப்பும் இல்லாது நிற்பது போலப் பிராட்டியைத் தாங்கும் பேறு பெற்ற மரமும் இருந்ததாம். திருமால் வேறு, திருமகள் வேறா?

> மும்முறை உலகம் எல்லாம் முற்றுற முடிவதான
> அம்முறை ஐயன்வைகும் ஆல் என நின்றதன்றே

வன சங்காரம் - பொழிலின் பேரழிவு முடிந்து போயிற்று. அந்தக் கோரத்தைக் கண்டு அஞ்சி அரக்கியர்கள் எல்லாம் சீதையிடம் "அன்னையே! இது என்ன ? எந்த உருவம் இது? இங்கு நிற்பது யார்? நல்ல நெற்றியை உடையவளே! உனக்கு இது தெரியாதா?" என்று கேட்டார்கள்

> "அன்னை ஈதுஎன்ன மேனி? யார்கொல்" என்று அச்சமுற்றார்
> நன்னுதல் தன்னை நோக்கி அறிதியோ நங்கை என்றார்

பிராட்டி விடை சொன்னாள்.

"ஒரு தீயவன் செய்யும் தீமையான செயல்களை இன்னொரு தீயவரே தெரியமுடியும். நல்லவர்களுக்கு இந்த வஞ்சகம் புரியாது. நீங்கள் மாயச் செயல்களில் வல்லவர்கள்; முன்பு வனத்தில் இருந்த போது பொன்னிற மானைப்பார்த்து நான் ஆசைப்பட்டேன். அப்பொழுதும் இலக்குவன் இது அரக்கருடைய தந்திரம்; ஏமாறவேண்டாம் என எச்சரித்தான். ஆனால் நான் தான் தவறு செய்துவிட்டேன்" என்று சொல்லி இந்த மாயங்களை அவர்களே செய்ய வல்லவர்கள்; அவர்களே உணரமுடியும் என்று கூறித் தவிர்த்தாள்.

அனுமன் நின்றான்; பேருருவத்துடன் நின்றான். அந்த நிலையில் அவனுக்கு யாரை எதை உவமையாகச் சொல்ல முடியும்? தன் இரண்டு கால்களால் ஏழேழு உலகங்களையும் அளந்த திரிவிக்கிரமன் எனலாமா? பாற்கடலின் நடுவில் நிற்கும் மந்திர மலை எனலாமா? பிரளயம் பொங்கிவந்து உலகை அழிக்கும் போது தனி ஒருவனாய் நிற்கும் உருத்திர மூர்த்தி எனலாமா?

அருகில் இருந்தது ஒரு செய்குன்று. இயற்கையாகத் தோன்றாமல், தங்கள் விருப்பத்துக்கு ஏற்றவாறு அரக்கர்கள் அமைத்து வைத்திருந்த ஒரு சிறியமலை. பலவகை மணிகளையும் முத்துக்களையும், பசும்பொன் கட்டிகளையும் கலந்து செய்யப்பட்டது அந்த மலை. அதை அப்படியே தோண்டிப் பறித்து, இலங்கை நகர் மீது அனுமன் வீசினான். முன்பு ஒருநாள் வெள்ளிமலையாகிய கயிலையைக் கைகளால் தோண்டி எடுக்க முயன்ற இராவணனும் வெட்கம் உறும்படி அந்த மலையை வீசினான். மடங்கள் பொடியாயின; மாளிகைகள் தகர்ந்தன. 'கேடு சூழ்ந்தவர்கள் பிழைப்பரோ?' தீங்கு நினைப்பவர் அழிவது உறுதி என்ற சொல்லை மெய்ப்பிப்பது போல அங்கு அரக்கர்கள் அழிந்தனர். அசோகவனத்துக்கு ஆறு பருவங்களுக்கும் காவல் தெய்வங்களாக இருந்த பருவத்தேவர்கள் அஞ்சியோடினர். இராவணனிடம் சென்று அனுமன் செய்தவற்றைச் சொன்னார்கள். ஒரு குரங்கு அசோகவனத்தை, நெருப்பில் ஒரு துணி எரிவது போல எரித்து விட்டது. தன் கையாலும் காலாலும் பிசைந்தும் துவைத்தும் அழிவுகளை ஏற்படுத்திற்று. தெய்வ இலங்கையும் சிதைந்தது என்றனர்.

இராவணன் சிரித்தான். ஒரு குரங்கு இப்படிச் செய்தது என்று சொன்னால் யார் நம்புவார்கள்? இந்த இகழ்ச்சிக் குறிப்பு பருவத்தெய்வங்களுக்குப் புரிந்துவிட்டது. "அரச பெருமானே! நீ தப்புக் கணக்கு போடுகிறாய். அவ்வளவு ஆற்றலும் பெருந்தோற்றமும் உடைய அந்தக்குரங்கின் உடம்பைத் தாங்குகின்ற நிலவுலகத்தை அல்லவா புகழவேண்டும்? தேவர்கள் போற்றி வாழும் முப்பெருந் தெய்வங்களில் ஒருவனாக இந்தக்குரங்கு இருக்கவேண்டும். அப்பொழுதும் அதன்பெருமை முடியாது ஐயனே! நமக்குத் துன்பம் தந்த குரங்கை நீ இப்பொழுதே காண வரவேண்டும்".

இவர்கள் இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும் போது ஒரு சிரிப்பொலி கேட்டது. அது அனுமன் செய்த ஆரவாரம். 'அனுமன் ஆர்த்தான்' எப்படி? உலகம் பிளவுபட்டு அதனுள் கடல் பொங்கி எழுந்து பாயும் போது ஏற்படும் ஓசை போலச் சிரித்தான். அதைக்கேட்டு அஞ்சி, உலகைக் காத்துக் கொண்டிருந்த எட்டுத் திசையானைகளும் நிலை கெட்டு ஓடின; தேவர்கள் பயந்து போய் ஒளிந்து கொண்டார்கள். உலக உருண்டையே வெடித்துப் பிளந்தது போலாயிற்று.

இராவணனுக்கு இந்தப் பேரொலி கேட்காமலா போகும்?. கேட்டது. எது போல? பெரிய பெரிய மலைக் குகைளைத் தாக்கும் இடியின் ஓசை போல; ஊழிக்காலத்துப் பொங்கும் மாகடலின் முழக்கம் போல; சிவபிரானுடைய வில் ஒடிந்தபோது உண்டான பேரொலி போல அவனுடைய இருபது செவிகளினுள்ளும் புகுந்து அதிரவைத்தது அனுமனின் ஆரவாரம். அந்த அதிர்வால் மணி மகுடம் தாங்கிய பத்துத் தலைகளும் குலுங்கின.

அருவரை முழையின் முட்டும் அசனியின் இடிப்பும் ஆழி
வெருவரு முழக்கும் ஈசன் வில்லிறும் ஒலியும் என்ன
கேட்டது என்று பாடுகிறார் கம்பர்.

இராவணன் சிரித்தான். 'புல்லியல் முறுவல் தோன்ற'ச் சிரித்தான். ஆனால் உள்ளூர ஒரு பொறாமையும் ஏற்பட்டது. தன் வாழ்விடத்துள் நுழைந்து, தன்னைவிடவும் ஆரவாரம் செய்யும் அற்பக் குரங்கைப் பிடித்து வருமாறு கிங்கரர்களுக்குக் கட்டளை இட்டான். அனுமன் தப்பித்துப் போகாதவாறு வானம், நிலம் இரண்டிலும் காவல் செய்து தடுத்துக் கொல்லாமல் சிறைப்படுத்தி வருமாறு ஆணையிட்டான்.

பலவகையான கருவிகள் - வேல், வாள், தண்டம் - இவற்றுடன் பலப்பல ஆயிரம் அரக்கர்கள் ஒரு குரங்கைப் பிடிக்கப்போனார்கள். 'போர்' என்ற வார்த்தையைக் கேட்ட மாத்திரத்தில் சிலிர்த்தெழும் வலிமையுடைய அரக்கவீரர்கள் அனுமனைத் தேடிப் போனார்கள். தான் ஏற்படுத்திய பேரோசையைக் கேட்டு இராவணன் தான் இவர்களை அனுப்பியிருக்க வேண்டும் என்று தெரிந்து கொண்ட அனுமனின் மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. அருகில் வளர்ந்திருந்த ஒரு பெரிய மரத்தைப் பிடுங்கிக் கையில் தாங்கித் தன்னை நோக்கி வந்தர்களையெல்லாம் வரிசைவரிசையாக அடித்து நொறுக்கினான்.

ஓடிக் கொன்றனன் சிலவரை உடல் உடல் தோறும்
கூடிக் கொன்றனன் சிலவரை கொடிநெடு மரத்தால்
சாடிக் கொன்றனன் சிலவரைப் பிணம் தொறும் தடவித்
தேடிக் கொன்றனன் சிலவரைக் கறங்கெனத் திரிவான்.

காற்றாடி போலத் தான் ஒருவனே இங்கும் அங்கும் மேலும் கீழும் சுற்றிச் சுற்றி வந்து அரக்கரை அழித்தான்.

அனுமனும் புண்பட்டான். அவன் மேனிமுழுவதும் எதிரிகள் வீசிய கருவிகள் பட்டு எண்ணற்ற புண்கள் ஏற்பட்டன. வானில் இருந்து இவற்றைப் பார்த்துக் கொண்டிருந்த தேவர்களும், தெய்வமகளிரும் மண்ணில் இருந்த முனிவரும் பூக்கள் தூவி வாழ்த்தினர்.

கிங்கரர்கள் எல்லாரும் இறந்து விட்டனர். அசோக வனத்துக் காவல் நாயகர்கள் ஓடிப்போய் இராவணன் முன் நின்றார்கள். அவர்களால் ஒன்றும் பேசமுடியவில்லை; அழுதார்கள்? தங்கள் கைகளை விரித்தும் குவித்தும் ஆட்டியும் அசைத்தும் சைகைகளாலேயே நடந்ததைப் புலப்படுத்தினார்கள். தரைமீது அவர்கள் கால்கள் படவில்லை. எந்தத் திசையிலிருந்து அனுமன் வந்துவிடுவானோ என்று அஞ்சியவர்களாக எட்டுத் திசைகளையும் பார்த்துக்கொண்டு நின்றார்கள். அவர்களுடைய முகங்களையும் மனநிலையையும் வைத்து இராவணனே நடந்ததைப் புரிந்து கொண்டான்.

இராவணனுக்குச் சினம் பொங்கியது. "நான் அனுப்பிய கிங்கரர்கள் இறந்துவிட்டார்களா? அல்லது நான் இட்ட ஆணையை மீறிச் செயல் செய்யாமல் ஓடிவிட்டார்களா? அல்லது போரில் தோல்வியுற்று எல்லாவற்றையும் மறந்து எங்காவது போய் விட்டார்களா? என்ன நடந்தது?" என்று வாயில் நெருப்பு உமிழ்வது போலக் கேட்டான்.

இதுதான் இராவணன் அனுமனின், இராமனின், வானரரின் ஆற்றல் எப்படி இருக்கும் என்று முன்கூட்டியே உணர்ந்து கொண்ட ஓர் எச்சரிக்கை. 'ஒரு குரங்கினால் கிங்கரர்கள் எல்லாரும் அழிந்து போனார்கள்' என்று அவர்கள் சொன்னதைக் கேட்டு நாணம் அடைந்தான். தன்னால் அடக்கப்பட்ட எண்திசைப் பாலகர்கள் முன்னால் தனக்கு இப்படி ஒரு இழிவா! ஒரு மரத்தைக் கையில் ஏந்தி ஒரு பெரிய படையையே ஒரு குரங்கு அழித்து என்றால் யார் நம்புவார்கள்?

இராவணன் சம்புமாலி என்ற வீரனை அனுமனைக் கைப்பற்றி வருமாறு ஏவினான். குன்றுகள் போன்று உயர்ந்த தோள்களை உடையவன்; பாம்பு போலச் சீறுபவன்; எதைக் கண்டும் அஞ்சாதவன்: அந்தச் சம்புமாலி இப்படி ஒரு வாய்ப்பை மன்னவன் தனக்குத் தந்ததற்குப் பெரிய மகிழ்ச்சி அடைந்து பல வகைப் படை

வீரர்களைத் திரட்டிக்கொண்டு அனுமனைத் தேடிப் போனான். பலவகை ஆயுதங்கள், கொடிகள், ஒலிகள், முழக்கங்கள், உற்சாகம் இவற்றுடன் போனார்கள். கிங்கரர்கள் அழிந்த பின்னர் தன்னைத் தேடி இன்னும் அரக்கர்கள் வருவார்கள் என எதிர்பார்த்து அனுமன் நின்றான். அப்போது சம்புமாலி நால்வகைப் படைகளுடன் வந்தான்.

அவர்களைக் கண்டவுடன் கிளர்ச்சியும் மகிழ்ச்சியும் ஒருசேர அனுமனுக்கு ஏற்பட்டன. அவன் ஒரு பெருஞ்சிரிப்பு சிரித்தான். இராமபிரானின் கோதண்டத்தின் நாணை மீட்டிவிட்டால் எப்படி ஒலியும் அதிர்வுமாக அலை அலையாகப் பரவுமோ அப்படி அந்தச் சிரிப்பு பரவியது. அதன் தாக்கத்தால் மேகங்கள் இடியுடன் சிதறி வீழ்ந்தன; கடலின் அலைகள் அடங்கி அமைதி உற்றன. மலைப்பிளவுகளில் பதுங்கியிருந்த பாம்புகள் அஞ்சி நடுங்கி நஞ்சைக்கக்கி மாண்டன. இவற்றைப் பார்த்தும், கேட்டும் அங்கு வந்த அரக்கர் நெஞ்சில் அச்சம் புகுந்தது.

போர் தொடங்கி விட்டது. முதலில் அஞ்சினாலும், சம்புமாலி தூண்டுதலால் அரக்கர்கள் வரிசையாக வந்து நின்றனர். பலவகை இசைக் கருவிகளை முழக்கிக் கொண்டு அனுமன் மீது அரக்கர்கள் பாய்ந்தனர். அவர்களை எல்லாம் தன் கரங்களாலேயே பிடித்துத் தேய்த்து அனுமன் அழித்தான். அவர்கள் ஏறிவந்த தேர்கள், யானைகள், குதிரைகள் எல்லாம் இறந்துபட்டன. தனதன தனதன தனதன தனன என்ற சந்தத்தில் பாடல்களைப் படைத்துக் கம்பர் போர்க்களக் காட்சியைப் படிப்போர் நெஞ்சில் அச்சவுணர்வும் பரபரப்பும் ஏற்படுமாறு படைக்கிறார்.

நெரிந்தன தடஞ்சுவர் நெரிந்தன பெருபார்
நெரிந்தன நுகம்புடை நெரிந்தன அதன்கால்
நெரிந்தன கொடிஞ்சில்கள் நெரிந்தன இயன்தார்
நெரிந்தன கடும்பரி நெரிந்தன நெடுந்தேர்

இது யானைப் படை அழிந்ததைக் குறித்தது. இப்படியே பல பாடல்கள் பிறபடைகளும் சிதைந்து வீழ்ந்ததைக் காட்டுவதான போர்ச் சந்தப்பாடல்கள் இடையிடையே விரவி வருகின்றன.

அனுமன் எங்கிருந்து போர் செய்தான் என்றே தெரிய வில்லை. ஒரு வேளை பார்த்தால் மண்ணில் நின்றான். அடுத்தகணம்

விண்ணில் பாய்ந்தான். மீண்டும் அரக்கர்களின் கண்ணில் படுமாறு முன்னால் நின்றான். திரும்பிய பக்கமெல்லாம் அவன் தோற்றம் தான். அவனையே எண்ணிக் கொண்டுள்ள அரக்கர் நெஞ்சினுள்ளும் அவன் தான்.

இப்படி எங்கும் பரவியுள்ள அனுமனின் தோற்றத்தைக் கம்பர் அழகிய உவமை ஒன்றின் மூலம் மிகவும் நயமுடன் பாடுகிறார். பரம் பொருள் எங்கு இல்லை? எல்லா இடத்திலும் தான் இருக்கிறான். நீ எதைக் கடவுள் என எண்ணுகிறாயோ அது; நீ எங்கு இறைவன் இருக்கிறான் என்று எண்ணுகிறாயோ அங்கு என்றவாறு பொருளிலும் இடத்திலும் முக்காலமும் நீக்கமறப் பரந்து கடவுள் கருணை பொழிகிறான். அந்த ஒப்புயர்வற்ற பெருமானின் திருவடிகளை இறுகப்பற்றிக் கொண்டு, எவ்வித மன மயக்கமும் இல்லாத அடியவர்களுக்கு அந்த இறைவன் இப்படி எங்கும் எப்பொருளிலும் இருக்கின்ற தன்னுடைய பரத்துவத்தைக் கூடத் தருவானாம். கருநிறத்து அழகனாகிய இராமனின் செந்தாமரைப் பாதம் தவிர வேறு எதையும் வணங்காத அனுமனுக்கு இந்தப் பரத்துவம் தானாக வந்து வாய்த்தது. அதனால் தான் அவன் மண்ணிலும் விண்ணிலும் கண்ணிலும் உயிரினும் தோன்றிக் கலந்தான் என்று கம்பர், போர்க்களத்தின் நடுவிலும் பக்தியின் ஆற்றலைப் பாடுகிறார். படியுங்கள்;

**அண்ணல் அவ் அரியினுக்கு அடியவர் அவன் சீர்**
**நண்ணுவர் எனும் பொருள் நவையறத் தெரிப்பான்**
**மண்ணினும் விசும்பினும் மருங்கினும் வலித்தார்**
**கண்ணினும் மனத்தினும் தனித்தனிக் கலந்தான்.**

படைவீரர்கள் மாய்ந்து போனார்கள்; யானை, குதிரை, தேர் ஆகியவையும் அழிந்தன. சம்புமாலி மட்டும் தனி ஒருவனாக நின்றான். சினம் அவனுள் பொங்கி வழிந்தது. ஆனால் அஞ்சாத பெரு வீரத்துடன் அனுமனுடன் போர்புரிந்து மாண்டுபோனான். இதைப் பார்த்துக் கொண்டிருந்த காவல் தேவர்கள் இராவணனிடம் போய் நடந்ததைச் சொன்னார்கள். தானே போய் அனுமனைச் சாகடிப்பேன் என்று புறப்பட்ட இராவணனை, ஐந்துபடைத் தலைவர்கள் - பஞ்ச சேனாபதிகள் - தடுத்துத் தாங்களே தத்தம் படைகளைத் திரட்டிப் போனார்கள்.

அனுமன் அவர்கள் வருவதை உற்றுப்பார்த்தான்; ஒரு நோட்டம் இட்டு முழுப்படைகளையும் பார்த்தபின்னர் தன்தோளையும் நோக்கிக் கொண்டான். "இத்துணைப் படைகளும் இன்றைய பகல் பொழுதுக்குள் அழிவர்" என்று மகிழ்ச்சியுற்ற மனம் கொண்டவனாகத் தன்னுடைய பேருருவத்தை எடுத்தான். 'சேணெடு மீயுயர் விசும்பையும் கடக்க வீங்கினான்'.

அரக்கர்கள் அனுமன் மீது பலபடைகளை ஏவினார்கள். அந்தக் கருவிகள் அனுமனின் மயிர்களுக்கிடையே புதைந்து தங்கி விட்டன. அனுமனோ கண்களை மூடி உறங்குவது போல அமைதியாக இருந்தான். பிறகு கண்விழித்து ஒரு இரும்புத்தூணைக் கையில் எடுத்துக் கொண்டு அரக்கர் கூட்டத்தைத் தாக்கினான். நால்வகைப் படைகளும் சிதறுண்டு அழிந்தன. முழுமுதற்கடவுள்; முக்கண் இறைவன் முருகனின் தாதையாகிய சிவபெருமானின் கையில் இருந்த மழு போன்று, அனுமன் ஏந்திய இரும்பு உலக்கையால் அரக்கர்கள் இறந்துபட்டனர். படைத்தலைவர்களாகிய அந்த ஐவரும் பின்னால் போருக்கு வந்து அனுமனைச் சுற்றி வளைத்தனர். அனுமன் அவர்களை மிக எளிமையாக அழித்து முடித்தான். அவர்களுடைய தேரும் கொடியும் பொடிப் பொடியாகப் போயின. இந்தப் போரில் அனுமனும் புண்பட்டான். தோளிலும் மார்பிலும் இருந்து ரத்தம் கசிந்தது. அவனுடைய உள்ளம் கனன்று நெருப்பு உலையாகவே ஆயிற்று. மேலும் ஆவேசத்தோடு போர்புரிந்து ஐவரையும் கொன்றான் அஞ்சனை மைந்தன்.

ஒருவனால் ஐந்து தலைவர் மாண்டு போயினர். வல்லமை, சூது, வஞ்சகம், கள்ளத்தனம், நஞ்சினும் கொடிய செயல்கள், இவை போதாவென்று 'வழியலா வழிமேல் செல்லும் ஆணவம் இவற்றைப் பெரிதாகக் கருதிய அரக்கர்கள் அழிந்து போனார்கள். கம்பருக்கு இந்தப் பஞ்சசேனாபதிகள் அழிவு வேறு ஒரு தத்துவக் குறிப்பை நினைவூட்டியது போலும். மனிதன் தனியாக ஒருவன் தான். அவனுள்ளே, அவனின் உறுப்புகளாக இருந்து கொண்டு மெய், வாய், கண், மூக்கு, செவி எனும் ஐம்பொறிகளும், அவற்றின் புலன்களும் வழியுடை வழியில் நின்று, குருவருளால் ஞானம் பெற்ற ஒருவன் இந்த ஐம்புலன் ஆட்டத்தை வெல்லமுடியும். அனுமன் ஐந்து கொடிய அரக்கரையே வென்றானே, அதுபோல!

வஞ்சமும் களவும் வெஃகி வழியலா வழிமேல் ஓடி
நஞ்சினும் கொடியராகி நவைசெயற்குரிய நீரார்
வெஞ்சின அரக்கர் ஐவர் ஒருவனே வெல்லப்பட்டார்
அஞ்செனும் புலன்கள் ஒத்தார் அவனும் நல்லறிவை ஒத்தான்

ஐவர் அழிவு இராவணனுக்குத் தெரிவிக்கப்பட்டது. அதைக்கேட்டு அவனுடைய செவித்துளைகள் தீய்ந்துபோயினவாம்! இராவணனுக்குச் சினம் பொங்கியது. நெருப்பு புகைவது போலப் பெருமூச்சுவிட்டுச் தானே போருக்குப் புறப்பட்டான். அப்பொழுது அங்கிருந்த அவனுடைய ஒரு மகன் - அக்ககுமரான் - தந்தையைத் தடுத்துத் தாண்போய்க் குரங்கை வென்று வருவதாகக் கூறி அனுமதி கேட்டான். இராவணன் நேரில் போவது தகாது; வந்தது ஒரு அற்பக் குரங்கு; சிவபெருமானின் நந்தியோ, திருமாலின் கருடனோ ஆதிசேடப் பாம்போ அல்ல. எட்டுத்திசை யானைகளும் அல்ல. இவற்றுடன் போர் புரிவது இராவணனுக்குப் பெருமை. அதை விட்டு கூனுடைக் குரங்கு ஒன்றுடன் மோதலாமா? தகுமா இது? தூணைப் பிளந்து வந்த நரசிங்கம், பாதாளம் போய்ப் பூமியை மீட்டு வந்த பன்றி என எதுவாயிருந்தாலும் தான் அழிக்க முடியும். இந்தக் குரங்கு ஒரு பொருட்டா? என்பது அக்ககுமாரன் வாதம்

இராவணன் உடன்பட்டான். உயர்ந்த குதிரைகள் பூட்டப்பட்ட தேரில் ஏறி அக்ககுமாரன் அனுமனைத் தேடிப் போனான். வழக்கம்போல நால்வகைப் படைகள்; ஆற்றல் மிக்க போர்க் கருவிகள் இவை அவனுக்குத் துணை. காற்றின் மைந்தன் தன்னை நோக்கி வந்த அரக்க இளவரசைக் கண்டான். அவனுடைய உள்ளம் கட்டுக் கடங்காத மகிழ்ச்சியில் திளைத்தது. வந்தது இந்திரசித்தனாகவோ இராவணனாகவோ தான் இருக்கவேண்டும்; பார்த்தாலே தெரிந்தது அரசத் தோற்றம். இத்தனை நேரம் போரிட்டது சாதாரண படைவீரர்கள்/ படைத்தலைவருடன். இப்போதோ நேருக்கு நேர் அரசபீடத்தில் அமர்ந்தாருடன் - இது பெரிய பேறு அல்லவா? அனுமன் தன் சுந்தரத் தோளை - வீரத்தாலே அழகு பொருந்திய தோளைப் பார்த்துப் பெருமிதம் கொண்டான். கூடவே அரசகுலத் தொருவனுடன் போர் புரியும் முன்னர், தன்னுடைய மேலான இறைவனாகிய இராமனை நெஞ்சில் நிறுத்தித் தொழுது வணங்கினான்.

அக்ககுமாரன் அனுமனை நெருங்கிவிட்டான். பத்துத் தலைகளைக் காணோம்; ஆதலால் இராவணன் அல்ல. இந்திரனை வென்றதற்கான பதக்கம், சன்னத்தம் ஒன்றும் காணோம். அதனால் இந்திரசித்துவும் அல்ல. பேரழகுடையவன்; ஆனால் முருகப் பெருமானும் அல்ல. யாராக இருக்கமுடியும்? இப்படி அனுமன் எண்ணிக் கொண்டிருந்த போதே, அக்ககுமாரனின் வெறியுடைய சிரிப்பொலி கேட்டது. 'அரக்கர் கூட்டத்தை அழித்தது இந்தக் குரங்கு தானா'. என்று ஏளனமாகவும் கூறினான். அவனுடைய தேர்ப்பாகன் 'அப்படி இகழக்கூடாது; உன்னுடைய தந்தையை அடக்கிய வாலி ஒரு குரங்கு தான் என்பதை மறவாதே. அந்த நினைவுடன் போர் புரிவாயாக' என்று அறிவுரை கூறினான்.

அதைக்கேட்டு அக்ககுமாரன் சினம் இன்னும் அதிகமாயிற்று "நம்முடைய ஊருக்குள் புகுந்து இத்தனை அழிவுகளையும் ஏற்படுத்திய இந்தக் குரங்கை மட்டுமல்ல, மூன்று உலகங்களிலும் தேடித் திரிந்து கண்டுபிடித்து குரங்கு என்று சொல்லப்படுகிற யாதாயினும் அதன் கருவையும் அழிப்பேன்" என்று வஞ்சினம் கூறினான்.

கடுமையான போர். 'ஆர்த்து' எழுந்த அரக்கர் சேனையை அஞ்சனை வயிற்றில் வந்த குன்றாகிய அனுமன் எதிர்த்தான்; தனி ஒருவனாகவே வீரப் போர் புரிந்தான். காய்ந்து போன புல்வெளியில் காட்டுத் தீ பரவி எரிவது போலக் காற்றின் மைந்தன் அரக்கர் சேனையை எரித்தான். தேரும் யானையும், குதிரையும் வீரரும் அளவிலாத அளவு அழிந்து போனார்கள். அதைக்கண்டு பொங்கிய அக்ககுமாரன் அனுமனை நேரில் எதிர்கொண்டான். பல வகையான வலிமைமிக்க கருவிகளை அனுமன் மீது ஏவினான். அவனுக்குத் தன் கையைத்தவிர வேறுபடை இல்லை. அக்ககுமாரன் ஒரு பெரிய வில்லை வளைத்து வரிசையாக அம்புகளை ஏவினான். அம்புகளை மட்டுமல்ல, வில்லையும் பொடியாக்கினான் அனுமன். வாளை எடுத்து வீச முற்பட்ட போது அதையும் அனுமன் பிளந்து எறிந்தான். சரி. அனுமனைத் தோளால் இறுகக் கட்டிப் பிடித்துச் சுரிகை எனப்படும் கத்தியால் குத்திக் கொன்று விடலாம் என நெருங்கி அவனைப் பிடித்தான், அக்ககுமாரன்.

அவ்வளவுதான். அனுமனின் மயிர்க்கற்றையிலிருந்த ஒவ்வொரு முடியும் வேலாயுதம் போலாயிற்று. அதற்கிடையில்

அக்ககுமாரன் அகப்பட்டான். தம்பி ஓடாதவாறு அனுமன் அவனைச் சுற்றிலும் தன்வாலால் கட்டி நிறுத்தினான்; பிறகு அவன் உடல் மீதும் வயிற்றின் மீதும் மாறிமாறிக் குத்தியும் ஏறிஏறிக் குதித்தும் அவனைத் துவைத்தான். அரக்கனுடைய உடலில் சமையல் வேலையே நடந்ததாம். இரத்தமே நீர்; போர்க்களம் அம்மிக்கல்; அக்ககுமாரன் உடம்பு அரிசி; அவனுடைய எலும்புகள் குழவிக்கல். இந்தச் சமையலை விண்ணும் மண்ணும் கண்டன, இது கம்பரின் கற்பனை; கொடுமையானது தான்.

போர்க்களத்தில் கீதம் இசைக்கமுடியாதே? அரக்கன் மைந்தன் மாண்ட செய்தி போயிற்று. அரக்க மாதர்கள் வந்து புலம்பினார்கள். காவல் தேவர் இராவணனிடம் நடந்ததைச் சொன்னார்கள். தன் இளையமகன் இறப்பு கேட்டு மண்டோதரியாகிய பேரரசி துடித்துப் போனாள். வயிற்றில் அடித்துக் கொண்டு வாய்விட்டு அரற்றினாள். அதைப்பார்த்த பெண்களும், பிறரும் அழுதார்கள். ஏன்? காவல் தேவர்களாய் இருந்தவர்களும் இராவணன் காலில் விழுந்து அழுதனர்.

# 14. அனுமனும் கட்டுண்டான்

இந்திரசித்து தன் தம்பியின் சாவு பற்றிக்கேள்விப்பட்டான். அவன் கண்கள் நெருப்பைக் கனன்றன; சினம் பொங்கியது; முப்புரத்தை அழிக்கப் புறப்பட்ட சிவபெருமானின் உக்கிரத் தோற்றம் போல அவன் நிலை இருந்தது. ஒரு பெரிய தேரில் ஏறினான். வானத்தையும் தொடும் அளவு உயர்ந்தும், இருநூறு பேய்கள் இழுத்துச் செல்வதும், வலிய சக்கரங்களை உடையதுமான தேர். அப்போது இந்திரசித்து ஏற்படுத்திய முழக்கத்தைக் கேட்டு இந்திரன் உள்ளிட்ட தேவர்கள் நடுங்கினர்; மூன்று பெருந்தெய்வங்களும் தம்தம் தொழில் மறந்து நின்றார்கள். தன்னுடைய தம்பியை நினைத்த மாத்திரத்தில் அவன் கண்கள் நீரைத் தாரை தாரையாக வடித்தன. தன் தம்பியைக் காக்கத் தவறிய வில் நாணுடன் இன்னும் தன்னுடைய தோளிலே இருக்கிறதே என்று ஏளனமாகத் தனக்குத் தானே சிரித்தான். அழிவற்ற பேறுடைய தம்பியை, காட்டிலும் மலையிலும் மரக்கிளையிலும் தாவித்தாவி வாழும் ஒரு சிறு குரங்கு மாய்த்தது என்று சொல்வது தவறு. தன்னுடைய தந்தை இராவணனின் அழியாத புகழ்தான் தேய்ந்தது என்று வருந்தினான்.

பெரும்படை திரண்டது. மன்னனிடம் ஆணை வாங்குவதற்காக இராவணன் மாளிகைக்குப் போனான். தன் தந்தையின் காலில் விழுந்து தம்பியின் இறப்புக்காக அழுது புலம்பினான். அதைப்பார்த்து நெகிழ்ந்த வீரனான இராவணனும் இந்திரசித்துவின் தோள்களைப் பற்றிக் கொண்டு அழுதான். அவர்களைச் சுற்றி மண்டோதரி உள்ளிட்ட அரக்கமகளிர் வயிற்றில் அடித்துக்கொண்டு கதறினார்கள். அவர்களை விலக்கி விட்டு, இந்திரசித்து தன் தந்தையிடம் சிலவற்றைச் சொன்னான். கிம்புரர், சம்பு மாலி ஆகியோரைக் குரங்கு அழித்தது என்ற போதே, அதை அடக்கி வெல்லத் தக்கவனை அனுப்பியிருக்க வேண்டும். அசோகவனம் பாழ்பட்டது முதல் கேவலம். அதற்குப் பின்னர் வரிசையாக வீரச்சாவுகள். இப்பொழுது அக்ககுமாரன். இதற்கெல்லாம் என்ன பொருள்? மூன்று பெருந் தெய்வங்களின்

ஆற்றலையும் ஒரு சேரப் பெற்றதாக அந்த அனுமன் இருக்க வேண்டும். கயிலைத் திருமலையை எடுத்த இருபது தோள்கள் இருக்கும் போது ஒரு குரங்கு இலங்கைக்குள் புகுந்து இப்படிச் செய்யலாமா? சரி. நடந்தது நடந்து விட்டது. இத்தனையும் முடிந்து போன கதை. "என்றாலும் தந்தையே! நீ இனி வருந்தி அழுந்த வேண்டாம். ஒரு கணப் பொழுதுக்குள் அந்தக் குரங்கைப் பற்றி இழுத்து வருகிறேன். பல்லாண்டு வாழ்வாயாக" என்று சொல்லிவிட்டு இந்திரசித்தன் போய்விட்டான். இராவணன் ஏதும் சொல்லவில்லை என்பதைக் கூர்ந்து கவனிக்க வேண்டும்.

பெரும்படை புறப்பட்டது. அதன் நடுவில் இந்திரசித்து மேருமலை போல நின்றான். போர்க்களத்தில் நிகழ்ந்திருந்த காட்சிகள் அவனுடைய நெஞ்சைப் பிசைந்தன. ஆனாலும் அவன் ஒரு மாவீரன். 'வீரத்தே நின்ற வீரன்'. இத்தனை அழிவுகளும் அனுமன் ஒருவனால் மட்டுமே நடந்தவை என்பதை எண்ணியபோது ஒருபுறம் அவனுக்குச் சினம் பீறிட்டு எழுந்தது; இன்னொருபுறமோ அனுமனின் போர் ஆற்றல் மீது அளவுகடந்த மதிப்பு ஏற்பட்டது. எண்திசை உலகங்களை ஒருசேர வென்ற ஆற்றலுடையவன் இந்திரசித்தன். ஆனாலும் அனுமனின் வீரத்தை மதித்துப் போற்றினான்.

வழக்கமாக நிலவுலகம் என்று சொன்னால் அதில் மலை இருக்கும்; ஆறு இருக்கும்; காடு இருக்கும்; கடலும் இருக்கும்; இங்கும் அப்படியே. இது போர்க்களமல்ல; வேறு ஓர் உலகம் என்று சொல்லும்படி பிணங்கள் மலைகளாகக் கிடந்தன. இரத்த வெள்ளம் ஆறாகவும் கடலாகவும் தோன்றியது; அரக்கர்கள் கைகளில் இருந்து வீழ்ந்த போர்க்கருவிகள் குவிந்து குவிந்து காடுகள் போல் கிடந்தன. கம்பரின் கற்பனையா, இந்திர சித்துவின் மனநிலையா?

"மலைகளும் கடலும் யாறும் பெற்று மற்றோர்
உலகமே ஒத்ததம்மா போர்ப் பெருங்களம் என்று"

இந்திரசித்தன் வியந்தானாம். இப்படி ஒரு புதிய உலகத்தை இலங்கைக்குள் நுழைந்து உண்டாக்கியது யார் அல்லது எது? ஒரு குரங்கா? இந்தக் காட்சியை நேரில் காணும்வரை எந்தவிதத் துயரமோ தவிப்போ அதிர்வோ அவன் வாழ்க்கையில் நிகழ்ந்ததில்லை. இப்பொழுது அவன் நெஞ்சம் அதிர்ந்தது; ஒரு பெருமூச்சு வெளிப்பட்டது. உடலே குலுங்கியது. பரந்து கிடக்கும் நீரை

உடைய கடல்போன்றதும், ஆற்றலில் தனக்குச் சமம் வேறு எதுவும் இல்லாததுமான அரக்கர் படை முற்றிலும் அழிந்து போயிற்று. பல்லாயிரம் அரக்கர்கள் மாண்டு போனார்கள். இவ்வளவு பேரையும் தேய்த்து அழித்தது குரங்கு ஒன்று தான். அனுமனின் வீரமே இப்படி என்றால் அவனை அனுப்பிய இராமனே போருக்கு நேரடியாக வந்தால் எந்தப்படையைக் கொண்டு இராமனை வெல்வது?

வெப்பு அடைகில்லா நெஞ்சில் சிறிய தோர் விம்மல் கொண்டான்
அப்பு அடை வேலை அன்ன பெருமையர் ஆற்றலோடும்
ஒப்பு அடைகில்லார் எல்லாம் உலந்தனர் குரங்கும் ஒன்றே
எப்படை கொண்டு வெல்வது இராமன்வந்து எதிர்க்கின் என்றான்

. இந்திரனை வென்று "இந்திரசித்து" எனப்புகழ்பெற்ற மேகநாதன் - பட்டத்து இளவரசன் - மலைத்துப் போய் நின்றான். ஒரு குரங்கால் ஏற்பட்ட கேடுகள் சினத்தை ஏற்படுத்தினாலும் சுத்த வீரன் என்ற நிலையில் எதிரியின் ஆற்றலையும் ஒரு கணத்தில் கணித்துவிட்டான். இந்த ஒரு குரங்கின் ஆற்றலே இவ்வளவு என்றால், இன்னும் உள்ள பல்லாயிரம் வானரர்கள், அவர்களின் மன்னன், அவன் போற்றும் இராம இலக்குவராகிய வில்வீரர்கள் இவர்களை எதிர் கொள்வது எளிதான செயலாக இருக்காது. தவிர, மாற்றானின் வீரத்தைக் குறைவாக அளவிடுவதும் பெருங்கேட்டிற்கே வழி வகுக்கும். இப்படி எல்லாம் இந்திரசித்து எண்ணினான்.

மலைத்து நின்று பயனில்லை. சுற்றிலும் இறந்துகிடக்கும் அரக்கர்களைப் பார்த்து மானம் மேலிட்டது. போர்க்களத்தின் ஊடே நடந்து போனான். தன் அத்தையாகிய சூர்ப்பநகைக்குக் காட்டில் ஏற்பட்ட அவமானம், கரன் அழிந்தது, அக்ககுமாரன் சாவு எல்லாம் 'மானிடர் இருவராலும் இப்போது வானரம் ஒன்றினாலும் ஏற்பட்டன' என்பதை எண்ணும்போது தன்வீரத்தைத் தானே பழித்துக் கொண்டான். வழியில் தன் தம்பியின் உடலைக் கண்டான். சோகமும் கோபமும் ஆக உணர்ச்சிகள் அலைபாய்ந்தன. தம்பியை எண்ணி, அவன் வீரத்தைப் புகழ்ந்து, மாண்டுபோன அவலத்தை நினைந்து வருந்தினாலும் இவற்றுக்குக் காரணமான குரங்கைப் பற்றிஇழுத்துச் சென்று மன்னன் முன் நிறுத்த வேண்டும் என்ற வெறியும் பொங்கியது.

தூரத்திலிருந்து இந்திரசித்தின் வருகையை அனுமன் கண்டான்.

முப்புரம் சுடும் தெய்வமான ஈசனின் தன்மை கொண்டவன் "இதற்கு முன்னால் சில வீரர்களை நான் கொன்றேன் என்பதைக் கேள்விப்பட்டல்லவா இவன் இங்கு வந்து நிற்கிறான். இவனையும் வெல்லவேண்டும் அல்லது இவனிடம் தோற்கவேண்டும் என்னும் இரண்டில் ஒன்றே எஞ்சியுள்ளது. இன்றைய பொழுதுக்குள் தெரிந்து விடும். இவன் தான் அந்த இந்திர சித்து.

"நறுமணம் மிக்க மலர்களால் தொடுக்கப்பட்ட மாலை சூடிய இந்த இளையவீரன் என் கையால் இறந்தான் என்றால் அதுவே இராவணனுக்கும் அழிவுக்காலம் ஆகும். நாமும் அழிந்துவிடுவோம் என எண்ணி ஒரு வேளை கற்புத் தெய்வமாகிய பிராட்டியைக் கொண்டுவந்து விட்டாலும் விடக்கூடும், இந்திரசித்து வீழ்ந்தால், இந்திரனின் துன்பமும் நீங்கும்"

என்று தனக்குள் அனுமன் கணக்குப் போட்டுக் கொண்டிருந்தான். அப்போது அரக்கர்கள் பலவிதமான படைக்கலங்களுடன் அவனைச் சுற்றி வளைத்தனர். அனுமன் ஒரு மராமரத்தைப் பிடுங்கிக் கையிலேந்தி அந்த அரக்கர் படையை அழித்தான். அவர்கள் எறிந்த அம்புகளும் கருவிகளும் அவனை ஒன்றும் செய்ய முடியவில்லை. இந்திரசித்துவின் அம்புகளுக்கும் அதேகதி தான். அனுமனின் உடம்பின் மீது பட்டவுடன் அடர்மிக்க வாளிகள் வெந்து கரிந்தன; புகைந்து தீய்ந்தன. அதைப்பார்த்த இந்திரசித்துவுக்குக் கோபச் சிரிப்பு தோன்றியது. அனுமனை நோக்கி நெருங்கிப் போனான்.

"வீரர் வீரனும் முறுவலும் வெகுளியும் வீங்க
வாரும் வாரும் என்றழைக்கின்ற அனுமன்மேல் வந்தான்"

வீரருள் வீரனாகிய இந்திரசித்து கோபமும் சிரிப்பும் கொண்டவனாய்ச் சென்றபோது 'வருக வருக' என்று ஆஞ்சநேயன் வரவேற்பு சொன்னானாம். ஒப்பற்ற இரண்டு பெருவீரர்களும் நேருக்கு நேர் நின்றார்கள். இருவருக்குமிடையேயான உணர்ச்சிகளையும் அவர்களுடைய செயல்பாடுகளையும் கம்பநாட்டாழ்வார் நேரடியாகப் பார்த்ததுபோல எழுதுகிறார்.

இந்திரனுடைய தலை அஞ்சி அதிர்ந்து நடுங்குமாறும், ஆதிசேடப்பாம்பும் இந்திரனுடைய கொடியாக இருக்கும் மேகங்களின் இடிமுழக்கமும் அதிர்ந்தன என்று சொல்லுமாறும்

இந்திரசித்து தன்வில்லை வளைத்துக் கயிற்றைத் தன்கைவிரலால் மீட்டினான். உலகம் முழுவதும் அந்தப் பேரொலி பரவியது. அதைக் கேட்டுச் சிறிதும் அஞ்சாத அனுமன் தன்னுடைய மலைபோன்ற தோள்களைக் கைகளால் தட்டி ஆர்ப்பரித்தான். இடிக்கு இடி முழக்கத்துக்குப் பெருமுழக்கம் என்பது போல இரண்டு பேரொலிகளும் மண்ணிலும் விண்ணிலும் அதிர்வலைகளை ஏற்படுத்தின.

அனுமனின் வாழ்நாளுக்கு அன்றுதான் இறுதி என இந்திரசித்து சொல்ல, இந்திரசித்துவின் வாழ்வுக்கு மட்டுமல்ல; அரக்கர்கள், அவர்களுடைய கொடுஞ்செயல்கள், கைகளில் ஏந்தியுள்ள வாள்கள் எல்லாமும் அன்றோடு மறையும் என அனுமன் எதிர் சொல்லப் போர் தொடங்கிற்று. அனுமன் தன்னுடைய பெரிய வடிவத்தை எடுத்துக் கொண்டு நிமிர்ந்து நின்றான். எதைப் போல? இராமனுடைய புகழ் நிலைத்து, நிமிர்ந்து நிற்பதைப் போல. எந்த இராமன்? தன்னுடைய சிற்றன்னையாகிய கைகேயி 'காட்டிற்குப் போய் வா' என்று சொன்ன மேலான சொற்களைத் தன்தலைமீது சூடிக்கொண்டு அந்த நெறியில் நின்று, தந்த வாக்குறுதியைக் காப்பதற்காக முனைந்து நின்ற இராமனின் புகழ்போல நிமிர்ந்தான். போர்க்களத்தின் நடுவில் அனுமனின் பேருருவத்தில் காப்பிய நோக்கத்தை மறவாது கம்பர் புலப்படுத்தும் அழகு படித்துச் சுவைக்கத் தக்கது. என்ன நோக்குடன் அவன் காட்டிற்குப் போனானோ அது - அரக்கரை அழித்து நல்லாரைக் காக்க வேண்டும் என்ற அவதாரக் கோட்பாடு; 'அறம்வெல்லும் பாவம் தேயும்' என்னும் மெய்ம்மொழி நிறைவேறும் நாள் வந்து விட்டது என்பதையே அனுமன் சொற்கள் மூலம் கம்பர் சுட்டுகிறார்.

சிறியதாய் சொன்ன திருமொழி சென்னியில் சூடி
நெறியில் நின்றதன் நாயகன்புகழ் என நிமிர்ந்தான்.

இராமனின் திருப்பெயர் ஓதப்படும் வரை அவன் புகழும் நினைக்கப்படும்; இராமன் புகழைப் பேசுவோர் எல்லோரும் அனுமனின் பெருமையைப் பேசாமல் இருக்கமுடியாது. ஆதலால் இராமனும் அவன் புகழும் இருக்கும் காலம் வரை அனுமனும் இருப்பான் என்பது அவன் என்றும் வாழும் (சிரஞ்சீவி) வரம் பெற்றதன் குறிப்பாகும்.

இந்திரசித்து வியந்து போனான். அவன் சாதாரணமானவன்

அல்ல. பத்துத் திசைகளுக்கும் அப்பாலும் இருக்கின்ற வரம்பிலா உலகங்களுக்கெல்லாம் தலைவனாக இருந்த இந்திரனை, அவனுடைய வலிமை மிக்க தோள்களை இறுகக்கட்டி அடிமையாக்கி மேகநாதன் என்னும் பெயரைப் பெற்றவன். அவன் அதிர்ந்தும் வியந்தும் போனான் அனுமனின் பேருருவம் கண்டு.

இந்திரசித்துவின் அம்புகள் பாய்ந்தன. தன்மீது படாதபடி அவற்றைப் பெரிய கைகளை நீட்டிப் பறித்து எய்தவன் மீதே அனுமன் திருப்பிவிட்டான். பிறகு இந்திரசித்துவின் தேர்க் குதிரைகளையும், தேரோட்டியையும் வீழ்த்தினான். அவனோ வேறு ஒரு தேரின் மீது தாவி ஏறி மறுபடியும் அம்புமழை பொழிந்தான். அவை அனுமன் உடம்பு முழுவதையும் மறைத்தன. அவற்றை எல்லாம் உதிர்த்து எறிந்த பின்னர், இந்திரசித்துவின் தேர்மேல் குதித்து 'உலகெலாம் பலகால் முற்ற வென்ற போர் மூரி வெஞ் சிலையினை' முறித்தான். (பலகாலமும் பல உலகத்தையும் வென்ற இந்திரசித்துவின் வில் ஒடிந்து விழுந்தது). இந்திரசித்து வேறொரு வில்லை எடுத்தான். மறுபடியும் அம்புகள் பறந்தன. தளராத வலிமையுடைய அனுமனும் சிறிது தளர்ந்தான். பிறகு ஒரு மரத்தை எடுத்து இந்திரசித்துவின் தலையில் அடித்துக் கொஞ்சம் மயங்கச் செய்தான். பிறகு இந்திரசித்துவை அவன் தேரோடு எடுத்துத் தூர எறிந்து முழுக்கமிட்டான். வானத்தில் நெடுந் தொலைவு சென்று அந்தத் தேர் விழுந்தது. இடையே இந்திரசித்துவுக்குப் பாதுகாப்பாக உடன் வந்த சேமத்தேர்களையும் அனுமன் அழித்தான்.

அரக்கன் மைந்தன் பார்த்தான். இனி செய்வதற்கு ஒன்றும் இல்லை. தேரில்லை; வலிமை தேய்ந்தது; அரக்கர்கள் அழிந்தனர். படைக்கலன்கள் போயின. ஆதலால் தன்னிடம் இருந்த எதிர்வந்து தாக்கக் கூடிய எல்லாவற்றையும் அழிக்கவல்ல பிரம்மாஸ்திரத்தை - விரிஞ்சனுடைய மாறிலாப் பெரும்படைக் கலத்தை - அனுமன் மீது ஏவுவது என முடிவு செய்தான்.

அதுபோன்ற கருவிகளை, தெய்வங்கள் கொடுக்கின்ற படைக் கலங்களை ஏவும் முன்னர் அவ்வவற்றுக்குரிய பூசனை முறைப்படி செய்ய வேண்டும். பூ தூவி, புகைகாட்டி, விளக்கேற்றி, பூநிறமுள்ள வெண்சோற்றை நிவேதனமாகப் படைத்து, உரிய மந்திரங்களைச் சொல்லிக் கையில் எடுக்கவேண்டும். இந்தப் போர்க்களத்தில் இப்படிப் பூசை செய்ய முடியுமா? முடியும். இந்திரசித்து தன் கண்களை மூடினான். தியானத்தில் மனத்தைக் குவித்துப் பூக்களைத்

தூவினான்; புகையும் பரப்பினான். உள்ளேயே தீபம் ஏற்றினான்; வெண்சோறு படைத்தான்; பிறகு மந்திரங்களை உச்சரித்து அருச்சனை சமைத்தான். தெய்வங்களையும், உலகங்களையும், உயிர்களையும் படைத்த நான்முகனின் - பிரம்மாவின் கருவியை - படைக்கலத்தைக் கையில் ஏந்தினான். அனுமனின் தோளை இலக்காக வைத்து அதை ஏவினான்.

ஒப்பற்ற படைக்கலம் அது. பெரிய பாம்பின் வடிவமாக அது சீறிப் பாய்ந்தது; கருடனும் அஞ்சி ஓடினான். வந்தவேகத்தில் அனுமனின் தோள்களை அது இறுகப் பிணைத்தது; கீழே சாய்த்தது; அதுவரை அவன்கூடவே வந்து கொண்டிருந்த அறக்கடவுளும் தருமதேவதையும் - கண்ணீர் விட்டு அழுததாம். பிரளயகாலத்தில் வானத்து நிலா ஒரு பாம்பு பற்றக் கீழே சாய்வது போல அனுமன் சாய்ந்தான் என்கிறார் கம்பர்.

அனுமன் அடங்கினான். சற்று எண்ணிப்பார்த்த பின் இது பிரமனுடைய படைக்கலம்; இதை மதிக்க வேண்டும்; இதன் ஆற்றலை இகழ்ந்து உடனே விலகவோ, விலக்கவோ கூடாது என முடிவு செய்து கண்களை மூடியிருந்தான். அந்தத் தெய்வப்படையைக் கூட இராமனுடைய திருப்பெயரை ஒலித்து அழிக்க அவனால் முடியும். ஆனால் தெய்வங்களை இகழ்வு செய்யக் கூடாது என அடங்கினானாம்!

அனுமன் வலி குன்றினன்; அகப்பட்டான் என்ற செய்தி பரவியது. கேட்டு ஆரவாரித்தது அரக்கர் கூட்டம். பாற்கடல் போலப் பரந்த இலங்கை நடுவில், வாசுகி என்ற பாம்பால் கட்டுப்பட்ட மேருமலைபோல அனுமன் நின்றான். கடைந்த தேவர்கள் போல அரக்கர் நிறைந்தனர். இந்திரனைக் கைப்பற்றி இந்திரசித்து முன்பு வந்தது கண்டு எவ்வாறு மகிழ்ச்சி வெள்ளத்தில் அரக்கர்கள் திளைத்தார்களோ, அதுபோல அனுமன் கட்டுண்ட இப்பொழுதும் மகிழ்ச்சியில் ஆடி மகிழ்ந்தனர்.

அனுமன் நாகவடிவம் கொண்ட பிரம்மாஸ்திரத்தில் அகப்பட்டு நின்றதைப் பார்த்த அரக்கர்க்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவில்லை. "இந்தக் குரங்கை அம்பு ஏவித் துளையுங்கள்; வாள்வீசிப் பிளந்து எறியுங்கள்; குத்துங்கள்; அவனுடைய குடலைத் துண்டு துண்டாக வெட்டுங்கள். மண்ணில் அவன் உடலைத் தேய்த்து அரையுங்கள்; தின்னுங்கள்'' என்று பலவாறு கூறிக்கொண்டே அனுமனை

இழுத்துப் போனார்கள். அப்படிச் சென்றபோது தன்னால் சிதைவுண்ட மாடமாளிகைகளை அனுமன் பார்த்தான். ஐம்பதினாயிரம் கிங்கரர்கள் அவனை இழுத்துச் சென்றவர்கள். மாளிகைகளின் மேன்மாடத்திலிருந்து அரக்கியர்கள் வேடிக்கை பார்த்தனர். சிலரோ என்ன காரணத்தினால், யார் இந்தக் குரங்கு வடிவம் கொண்டு இத்தனை அழிவும் செய்திருக்கக் கூடும் என எண்ணினர். எமனாக இருப்பானோ? அல்லது சிவபெருமானாக இருப்பானோ? கற்பின் கனலியாகிய பிராட்டியின் அறம் வழுவாமல் இருக்கவேண்டும் எனக் கருதிய சிவபிரான் - கயிலைமலையில் மழுவாயுதம் ஏந்திய கடவுள் - இப்படி இந்தக் கோட்டை சூழ்ந்த இலங்கையை அழிக்க வந்திருக்க வேண்டும்.

கயிலையின் ஒரு தனிக் கணிச்சி வானவன்
மயிலியல் சீதைதன் கற்பின் மாட்சியால்
எயிலுடைத் திருநகர் சிதைப்ப எய்தினன்
அயில் எயிற்று ஒரு குரங்காய் என்பார் பலர்

அரக்கர்கள் மகிழ அமரரும் முனிவரும் இதைப் பார்த்தும் கேட்டும் வருந்தினர். இப்பொழுது என்ன செய்யலாம்? அனுமனின் சிந்தனை செயல்படத் தொடங்கியது. "இவர்களுடன் மாறுபடவும் வேண்டாம். இந்தக் கட்டிலிருந்து தப்பிச் செல்ல முயலவும் வேண்டாம். இப்படியே இவர்கள் வழியில் போனால் இலங்கை வேந்தனைக் காண்பது எளிதாகும்.

என்னுடைய தந்தையாகிய காற்றுக் கடவுளின் அருளினாலும், இராமபிரானின் சிவந்த தாமரைத் திருவடிகளையே எந்நேரமும் தியானம் செய்கின்ற நன்மையாலும், சீதாபிராட்டியும் தேவர்களும் எனக்குக் கொடுத்துள்ள வரங்களினாலும் கொடிய இந்தக் கட்டை எளிதாகத் தகர்த்து எறிய என்னால் முடியும். ஆனால் இப்பொழுது அமைதியாக இருப்பதே நல்லது.

வளைந்த, கோரப்பற்களையுடைய அரக்கனாகிய இராவணனை நேரில் கண்டு, அவனுடைய அரசவையில் வீற்றிருக்கும் அறிவுடை அமைச்சர்களும் அறியும்படியாக, இராமபிரானின் கட்டளைப்படி இனிமேல் இந்தச் செயல்கள் நிகழக் கூடும் என்று எச்சரித்தால் ஒரு வேளை இராவணன் மனம் இளகிப் பிராட்டியை என்வசம் ஒப்புவிக்கவும் கூடும். தவிர, நேரில் போவதால் இன்னொரு நன்மையும் உண்டு. இராவணனுக்கு உற்ற

துணையாய் இருப்பவர் யார் யார்? அவர்கள் என்ன என்ன எண்ணுகிறார்கள்? அவர்கள் சொல்லக் கூடிய அறிவுரையை கேட்கும் மனநிலையில் இராவணன் இருக்கிறானா? என்பதைக் காணமுடியும். உணர்ச்சி வயப்பட்ட அவனுடைய முகங்களே தூதுவர்களாக அவனுடைய எண்ணங்களை நமக்குச் சொல்லுமே!

இராவணனைக் கண்டு சில செய்திகளை அழுத்தமாகச் சொல்ல வேண்டும். வாலி அழிந்த நிகழ்ச்சி, மராமரங்கள் ஒடிந்த தன்மை, அளவற்ற வானரக் கூட்டத்தின் மிகுதி, அவர்களுக்குத் தலைவனாகிய சுக்ரீவனுடைய அளப்பரும் ஆற்றல் இவற்றை விளக்கமாக நான் சொன்னால் அவை அவன் நெஞ்சில் பதியும்.

ஆதலால் அரக்கனை எய்தி ஆற்றலும்
நீதியும் மனக்கொள நிறுவி நின்றவும்
பாதியின் மேல்செல நூறிப் பைப்பையப்
போதலே கருமம்என்று அனுமன் போயினான்.

அதனால் இராவணனை நேரில் காண்போம். கண்டு இராமபிரான் அறவழி நிற்கும் நீதி பற்றியும், போராற்றல் பற்றியும் இராவணன் புரிந்து கொள்ளும் வண்ணம் விளக்கமாகக் கூறுவோம். அவன் இணங்கவில்லை என்றால், கொன்றது போக எஞ்சியிருக்கும் பாதி அரக்கர் படையையும் கொஞ்சம் கொஞ்சமாக அழித்த பின்னர் மீண்டு இராமனிடம் சென்று நடந்ததை எல்லாம் சொல்வதே

இவை அனுமனின் சிந்தனைகள். சுற்றிலும் கொடிய அரக்கர் கூட்டம்; மாயையிலும் வஞ்சனையிலும் வல்லவர்கள். அவர்களை அழிப்பது இராமன் அருளால் நடக்கக் கூடியதே. ஆனால் அவர்களுக்குத் தலைவனாகிய இராவணனை நேரில் அரசவையில் கண்டு உண்மை நிலையைப் புரிந்து கொள்ள வேண்டும்; அவனுக்கும் புரியவைக்க வேண்டும். இராமன் வலிமை, அவனுக்குத் துணையாக இருக்கும் சுக்ரீவன் உள்ளிட்டோர் ஆற்றலைப் புரியவைப்பதும், அதே போல இராவணன் ஆற்றலையும், அவனுக்குத் துணையாக நிற்போரின் வலிமையையும் புரிந்து கொள்ள வேண்டும். பிறகு நடக்க இருக்கும் போரைப் பற்றி ஒருவாறு கணிக்க முடியும். தன்வலி, மாற்றான்வலி, துணைவலி இவற்றை எண்ணி ஒரு செயலில் இறங்க வேண்டும்

என்று குறள் கூறும் நுட்பம் இங்கு அனுமனிடம் முழுமையாகச் செயல்படுகிறது.

இராவணனிடம், அனுமன் பிடிபட்ட செய்தியைத் தூதர்கள் சொன்னார்கள். "மன்னவனே! உன்னுடைய அருமை மைந்தன் ஏவிய பிரம்மாஸ்திரத்தால் அந்தக் குரங்கு பிடிக்கப்பட்டு விட்டது". சொன்னவர்க்குப் பெரிய முத்துமாலையைப் பரிசாகக் கொடுத்தான் அரசன். ஒன்றை அவன் உணர மறுத்தான் போலும்! இந்திரனை வென்ற நான்முகன் படைக்கலத்தை ஏவியபிறகே ஒரு குரங்கை மகன் பிடித்தான் என்பது தனக்குக் கேவலம் என்பது புரியவில்லை. குரங்கைக் கொல்லாது தன்முன் கொண்டு வருமாறு கட்டளையிட்டான்.

செய்தி பரவியது. வீடணன் மகள் திரிசடை சீதையிடம் அனுமன் பிடிபட்டது பற்றிச் சொன்னாள். அவளுக்குத் துன்பம் மேலிட்டது. ஒன்றின் பின் ஒன்றாக அனுமனின் வீரச் செயல்கள் அவள் நினைவில் தோன்றி வருத்தின. தானே தனக்குள் பேசிக்கொண்டாள்.

"மிகப்பரந்து விரிந்து கிடக்கும் வானத்தைக் கூட ஊடுருவிச் சென்று நிறைந்தாய். எல்லா அறிவுநூல்களையும் முழுவதுமாக கற்றவன்; பழுதுமில்லாமல் கற்றவன் நீ; ஒரு அரக்கனால் பிடிபட்டாய் என்பது நம்பமுடிய வில்லை. இது தருமநெறி தானா?

யாராலும் தாண்ட முடியாத கடலைக் கடந்து இங்கு வந்து புகுந்தாய். பல அரக்கர்களுடன் போரிட்டும் அழியாமல் இருக்கிறாய். வெற்றிகளையே இதுவரை பெற்றுத் தந்த வலிமைமிக்க திரண்ட தோளை உடையவன் நீ. உன்னால் துன்பங்கள் தீர்ந்தன என்று எண்ணினேன். நீ பிடிபட்டதால் அவை மேலும் அதிகமாகி உள்ளன.

இராமபிரானின் மோதிரத்தைக் கொண்டு வந்து காட்டி, இறக்கலாம் என்று எண்ணியிருந்த எனக்கு உயிரைக் காட்டியவனே! என்றென்றும் அழியாது வாழ்வாயாக என்று நான் உன்னை வாழ்த்தினேன். அது தவறாது. நீ என்றும் இருப்பாய். ஆனால் அரக்கர்கள் பிடித்து இழுக்க நீ பழிக்கும் ஆளானாய்.

எனக்கு ஆருயிர் தந்த நீ, இங்குள்ள எல்லா இடங்களையும் தெளிவாக அறிந்தபின்னர், இராமனிடம் போய் அவனைக் கூப்பிட்டுக் கொண்டு நீ முன்னால் வர, மன்னன் வந்து அரக்கர்களை

மாய்ப்பான் என்று நம்பியிருந்தேன். அது இப்போது நடக்குமா என்று ஐயுறுகிறேன்".

இவ்வாறு பேசிப் புலம்பிப் பிராட்டி மயக்கமுற்றாள். தன்னுடைய கன்று பிறர்கையில் அகப்பட்டதைப் பார்த்துத் துன்பம் பெருகும் தாய்ப் பசுவைப் போலத் தளர்ந்து மயங்கினாள். தீயையும் சுட வல்ல கற்புத் தீயைத் தன்வயிற்றில் தாங்கிய அன்னையின் நிலை இது என்கிறார் கம்பர். "அம்மையாய் அப்பனாய் வந்த அருளின் வாழ்வே" என்று சீதை முன்பு அனுமனை அழைத்தாள் - தாயும் தந்தையும் அவனே என்பது பொருள் - இங்கோ அனுமன் மகன் ஆனான்; அந்த மகனைப் பிரிந்து துன்புறும் தாய் ஆனாள் பிராட்டி.

ஏய பன்னினள் இன்னை தன்னுயிர்
தேயக் கன்று பிடியுறத் தீங்குறும்
தாயைப் போலத் தளர்ந்து மயங்கினாள்
தீயைச் சுட்டதோர் கற்பெனும் தீயினாள்.

## 15. அனுமனும் அரக்க வேந்தனும்

இராவணன் மாளிகை. பெருந்தகைப் பெரியோனாகிய அனுமன் இராவணன் முன் நிறுத்தப் பட்டான். அனுமன் இராவணனை ஏறிட்டுப் பார்த்தான். வானத்தில் இன்னொரு நிலவு தோன்றியது போல் கயிலை மலையின் வடிவம் கொண்ட வெண்கொற்றக் குடையின் கீழ், தன்னுடைய வீரத் தோள்களில் போர்த் தழும்புகளைக் கொண்டவனாய், வடக்கு மட்டுமல்ல தெற்கிலும் ஒரு ஊழித்தீ இருக்கிறது எனச் சொல்லுமாறு பெருமூச்சு விட்டுக் கொண்டு, ஆதிசேடப் பாம்பே தன் பல தலைகளையும் பல திசைகளிலும் பரப்பியது போல, கருங்கடல் தன்மீது மேருமலை சூடியது போலக் கருத்த உடல்மீது பொன்முடி தரித்து, வேத ஞானமும் வண்மைக் குணமும் ஒருபுறம் முகத்தில் பொலிய எட்டுத் திக்குத் தேவர்களும் என்ன நடக்குமோ என்று அஞ்சி நடுங்க - இதுபோல இன்னும் பல உணர்ச்சிகள் பொங்குகின்ற மனத்துடன் இராவணன் அரியணையில் வீற்றிருந்தான்.

அனுமன் அவனைப் பார்த்தான். அவன் உள்ளத்தில் கோபம் சீறிட்டு எழுந்தது. கருடன் ஒன்று நாகபாம்பை நோக்குவது போலப் பார்த்தான். தன்னுடைய தோளைக் கட்டியிருக்கும் கயிற்றைச் சிதறி அரக்கண் மேல் பாயலாம் எனத் துடித்தான் - சில எண்ணங்கள் அவன் உள்ளே ஓடின.

> "முதல் முதலில் இவனை நான் பார்த்தபோது, உறங்கிக் கொண்டிருந்தான். அப்போது கொல்வது குற்றம் என விட்டுவிட்டேன். இப்போது அரியணையில் இருக்கிறான். அவன்மீது பாய்ந்து பத்துத் தலைகளையும் அறுத்துச் சிதறிவிட்டு, அறத்தின் நாயகியாகிய பிராட்டியை மீட்டுச் செல்வேன்.
>
> பிராட்டி இப்படி இங்கு சிறைப்பட்டிருப்பதைப் பார்த்தும் ஒன்றும் செய்ய முடியாமல் இருக்கும் தேவரும் பிறரும் காண பிறன்மனை விரும்பிய இந்தப் பாவியின் உயிரை நான் பறிக்கவில்லை என்றால். இதை விடவேறு அடிமைத் தொழிலை நான் என்ன செய்ய முடியும்?

இவனைச் சுற்றியிருக்கும் பெண்கள் எல்லாம் அலறி ஓடும்படியாக, இவனுடைய மணிமுடி சூடிய தலைகளைத் திசைதோறும் உருளச்செய்து அதன் பிறகு வெற்றிக்களிப்பில் வீரமுழக்கம் செய்வேன். அதைக் கேட்டு "சீதையைத் தேடிவந்த ஒரு குரங்கு இத்தனையும் செய்தது" என்று அரக்கர்கள் அஞ்சி வியந்து பேசும் பேச்சு சிறியதா? பெருமைக்குரியதல்லவா?

நீண்டவாள் போன்ற பற்களையுடைய இந்த அரக்களை, கண்களில் நேராகப் பார்க்க விரும்பினேன். அதற்காக இந்த உயிரைச் சுமந்து அலைந்து கொண்டிருந்தேன். இப்பொழுது நல்ல வாய்ப்பு கிடைத்துள்ளது. இதைவிட்டுவிட்டு நான் வெறுங்கையுடன் திரும்பிச் சென்றால் பழியே மிஞ்சும். அப்படி இல்லாமல் இவனுடன் வீரப்போர் புரிந்தால் - அதில் வெற்றி கிடைக்க வில்லை என்றாலும், ஒருவேளை இறந்தே போனாலும் - எனக்கு எஞ்சுவது புகழே தவிர வேறு என்ன?"

இப்படிப் பலவகையான சிந்தனைகள். ஆனால் இவை எதிரியை நேரில் கண்டதால் ஏற்பட்ட உணர்ச்சிக் குமுறல்கள். அவனுடைய அறிவோ வேறு வகையில் சில உறுதிகளை அவனுக்கு உணர்த்தியது. உண்மைநிலையை எவ்விதமான மனக் குழப்பமும் இல்லாமல் புரிந்து செயல்பட வேண்டும் என்ற கருத்து மேலோங்கியது. தனக்குத் தானே கூறிய அறிவுரை இது.

"இந்த இராவணன் எளிதில் கொல்லக் கூடியவன் அல்ல; இவனைக் கொல்வது இராமபிரானுக்கு மட்டுமே இயலும் ஆட்சிமுறையை நோக்கினால் அது பாராட்டுவதற்குரியதாக இருக்கிறது; அதை வெல்வதும் கடினம். இராமன் வந்தே இவனை வீழ்த்த வேண்டும்.

என்னை வெல்லது இந்த இராவணனால் முடியாத ஒன்று. நானும் இவனைத் தனியாக வெல்ல முடியாது. இப்போது இவனைத் தாக்கிப் போரைத் தொடங்கினால் பலப்பல நாள்கள் வீணாகப் போய்விடும்.

இராமபிரான் முன்பு ஒருநாள் சொன்ன விரதமும் நினைவுக்கு வருகிறது. "இந்த ஏழு உலகங்களிலும் இருக்கும்படி வலிய தோளையும், பத்துத் தலைகளையும் உடைய இராவணனைக் கொன்று புழுதியில் புரட்டவேண்டும் என்பது நான் மேற்கொண்ட சபதம்" என்றானே பெருமான். அவன் ஆணையை மீறக்கூடாது.

தவிர இன்னொன்றும் கருதற்குரியது. 'இன்னும் இங்கு

ஒருமாதம் மட்டுமே உயிர் வாழ்வேன். அதற்குள் இராமன் வந்து மீட்க வேண்டும்' எனப் பிராட்டி சொன்னதையும் எண்ண வேண்டியுள்ளது. நான் போரில் ஈடுபட்டுக் காலம் கடத்தினால் தேவி இறப்பது உறுதி. ஆதலால் போர்வீரனாக இராவணன் முன்னால் போவதை விட, இராமபிரானின் தூதனாகப் போவோம். அதுவே நல்லது"

என்று முடிவு செய்தான் அனுமன். வேதநாயகனாகிய இராமனின் ஒப்பற்ற தொண்டன் அல்லவா! அப்படித்தான் செய்யமுடியும்.

"இதுதான் அந்தக் குரங்கு. இவன்தான் அந்த அனுமன். சிவபெருமான் போலவும், திருமால் போலவும் வீரம் கொண்டவன்". என்று தந்தையிடம் அனுமனை இந்திரசித்து அறிமுகப்படுத்தினான். "சிவன் எனச் செங்கணான் என" - சிவனும் இவனே, சிவந்த கண்களையுடைய திருமாலும் இவனே. அவர்களைப் போல வீரம் மிக்கவன் என்ற மதிப்பீட்டையும் இராவணன் முன் வைத்தான். "வெறும் குரங்கு என்று கருதித் தவறாகக் கணக்கிட்டு அழிவு தேடாதே"என்ற எச்சரிக்கையும் உள்ளிருந்தது.

இராவணன் பார்த்தான். கண்களில் அனல்பொறி பரந்தது. பெருமூச்சுவிட்டுப் பாம்பு போலச் சீறினான். ஏற்கெனவே மேகநாதன் விட்ட நாகக்கணையால் கட்டுண்டு கிடந்த அனுமனை இந்தப் பெருமூச்சு இன்னும் இறுக்கமாகப் பிணித்ததாம். இந்தக் கோபத்துடன் இராவணன் அனுமனை நோக்கிக் கீழ்வருமாறு கேட்டான்

"ஏ! குரங்கே! தேவர் உள்ளிட்ட பகைவர்கள் நெருங்கக் கூட முடியாத இடத்துக்கு வந்துள்ளாய். சக்ராயுதத்தைக் கையில் ஏந்திய திருமாலா? வச்சிரப்படை ஏந்திய இந்திரனா? முத்தலைப்படை கைக் கொண்ட சிவபெருமானா? பலதலைகளை உடையவனாய் இந்தப் பூமியைத் தாங்கும் ஆதிசேடப் பெரும்பாம்போ? இலங்கை அழியும் வண்ணம் இருக்கும் உன் ஆற்றலையும் உண்மையான வடிவத்தையும் மறைத்துக் கொண்டு இங்கு வந்துள்ளாய்! யார் நீ?"

**நேமியோ குலிசியோ நெடும் கணிச்சியோ**
**தாமரைக் கிழவனோ தறுகண் பல்தலைப்**
**பூமிதாங்கு ஒருவனோ பொருது முற்றுற**
**நாமமும் உருவமும் கரந்து நண்ணினாய்**

அருமையான பாடல். தெய்வத்தின் அருளும் ஒப்பிலாத பேராற்றலும் இருந்தால் அல்லாது இப்படி இலங்கைக்குள் நுழைந்து தீங்கு செய்ய முடியாது. அப்படி யார் இருக்கிறார்கள்? முப்பெருங் கடவுளர்கள், இந்திரன், ஆதிசேடப்பாம்பு இவர்களுக்குகே இது சாலும். ஆகவே வந்தவன் இவர்களில் ஒருவராகத்தான் இருக்க வேண்டும். உண்மையான தோற்றத்தில் இயற்கையான ஆற்றலையும் வெளிப்படுத்தாமல் வந்திருக்க வேண்டும் என்று இராவணன் எண்ணினான். முதல்முதலில் அனுமனைப் பார்த்த இந்தக் கணத்திலேயே அவனுடைய வீரம் பற்றியும், பெற்றுள்ள தெய்வ வரம் பற்றியும் முழுமையாக அளவிட்டுத் தெரிந்து கொண்டான் அந்த அரக்க வேந்தன். பார்வை ஒன்றினால் மாற்றாரின் வலிமையைக் கணிக்கும் அரசப்பெரும்பதம் அவனிடம் இருந்தது என்பதற்கு இது நல்ல சான்று. மேலும் பேசினான்.

> "எதற்கும் சலியாது உறுதியாக நின்று தனது வலிய கயிறை வீசி உயிர்களைக் கவர்ந்து செல்லும் கரியநிற எமன் நீ தானோ? ஒரு வேலை வீசி எறிந்து மலையைப் பிளந்த வெற்றியுடைய முருகனோ? தென் திசையில் தவம்செய்யும் அகத்திய முனிவரோ? அல்லது எட்டுத் திசைகளையும் தாங்கி நிற்கும் காவல் தெய்வங்களில் ஒருவரா? யார் நீ?
>
> காடுறை முனிவர்கள் வேள்வித் தீ வளர்த்து, அதில் தோன்றிய ஒரு கொடிய பூதத்தை உன்னுருவில் இங்கு அனுப்பி உள்ளார்களோ? தாமரை மலரில் இருக்கும் பிரமன் 'இலங்கை நகரை முழுவதுமாக அழித்துவிடு' என்று ஆணையிட்டுப் புதிதாகப் படைத்து ஏவிய தேவனா நீ?
>
> என்னிடத்தில் இப்படி வந்து நிற்கும் நீயார்? உன்னை இங்கு வரவிடுத்தவர் யார்? ஏதும் விடாமல் எல்லாவற்றையும் சொல்க"

என்று ஆணையிட்டான். இந்தச் சொற்களைக் கூர்ந்து கவனித்தால் இராவணனுக்கு ஏற்பட்ட மனக்கலக்கம் தெளிவாகப் புலப்படும். முப்பெருங்கடவுள்கள், முருகப்பெருமான், எமதர்மன், அகத்திய முனிவர், எண் திசைப் பாலகர்கள் இவர்களுக்குச் சமமாக அனுமனை இலங்கைவேந்தன் மதித்தான் என்பது குறிக்கத்தக்கது.

அனுமன் அழகாகத் தெளிவாக, எந்தவிதமான அவசரமுமில்லாத அமைதியுடன் விடை சொன்னான்.

"அரக்கனே! நீ சொல்லிய அவர்களோ, அவர்களில் ஒருவரோ

அல்லன் நான். அவர்களுடைய ஏவலைப் பூண்டு நான் இங்கு வரவும் இல்லை. தாமரை போன்ற அழகிய சிவந்த கண்களையுடைய வில்வீரன், இராமனின் தூதன் நான்; இலங்கைக்கு வந்துள்ளேன். அந்த இராமன் யார் என்றா கேட்கிறாய். முனிவரும் தேவர்களும் மூன்று பெருந்தெய்வங்களும் மற்றும் அவர்களைப் போல எந்த எந்தத் துறையில் எப்படி எப்படி மேம்பட்டவராயினும் அவர்களும் - உலகில் இயங்கும் எல்லா உயிரினங்களும் நினைத்தற்குக் கூட அரியதான பெரிய செயல் ஒன்றைச் செய்து முடிக்க வந்துள்ளான்.

இலங்கை வேந்தனே! ஒன்றுகேள். நீ பெற்றிருக்கும் ஒப்பிலாத பெரு வலிமையும், முன்பு நீ பல்லாண்டு செய்த தவத்தால் வந்த பயனும், புதிதாக நீ பெருக்கிக் கொண்ட படைவீரமும், தேவர்கள் உனக்குத் தந்த வரங்களும், வேறுள்ள சிறப்புகளும் உன்னுடைய வெற்றிகளையும் புகழையும் எழுதிவைத்துள்ள அந்த வெற்றித் தூண்களும், மற்றும் உன்னுடைய அரசவாழ்வு சேர்ந்து வந்துள்ள எல்லாவகையான செல்வச் சிறப்புகளும் அழியும்படி ஒரே ஒரு அம்பை ஏவ முடிவு செய்துள்ளான் அந்தப் பெருவீரனாகிய இராமன்.

இவ்வளவு ஆற்றலுடையவன் யாராக இருக்க முடியும் என்று சிந்திக்கிறாய் போலும். தேவரோ அசுரரோ அல்லன்; நீ வென்றாயே அந்த எட்டுத்திசை யானைகளில் ஒருவனும் அல்லன்; எண்திசைப் பாலகர் அல்லன்; நீ தூக்க முயன்றாயே அந்தக் கயிலை மலை வாழும் ஈசன் அல்லன்; மும்மூர்த்திகளும் அல்லன்; தவம் செய்யும் மற்ற முனிவர்களும் அல்லன். இந்த நிலவுலகை முழுவதுமாக ஆண்ட தயரத மன்னனின் புதல்வன் இராமன்.

நீ கணக்குப் போடுவது தவறு. வெறும் மனிதன் என்று எண்ணாதே. ஒருவன் பெறக்கூடிய ஞானத்தையும், முறைப்படி வேள்விகள் செய்து வரும் பயனையும், குற்றமற்ற நெறி நின்று செய்யும் பொய்தீர்ந்த மாதவங்களையும் , இவை போன்று செயற்கரிய யாவற்றையும் அவனுடைய திருவருளால் மட்டுமே அடையப்பெறலாம். அவன் என்ன நினைக்கிறானோ அதுவே நடக்கும். இதற்கு என்ன காரணம் என்று உனக்கு ஓர் ஐயம் எழலாம். அவன் தான் வேதங்களாலும் அறக்கடவுளும் ஒரு சேரத் துதிக்கும் மெய்யான தருமத்தின் வடிவமாக வந்துள்ளான். அவனே இராமன்; வில்லேந்தியவன்.

**போதமும் பொருந்தும் வேள்விப் புரையறு பயனும் பொய்தீர்**
**மாதவம் சார்ந்த தீராவரங்களும் மற்றும் முற்றும்**
**யாது அவன் நினைந்தான் அன்ன பயத்தன ஏது வேண்டின**
**வேதமும் அறனும் சொல்லும் மெய்யற மூர்த்தி வில்லோன்**

அந்த முதற்கடவுள் ஏன் தசரதனுக்கு மகனாக, மனிதனாகத் தோன்றினான் என நீ காரணம் கேட்கலாம். முடிவிலாத வேதத்திலும், அதனுடைய ஞானப்பகுதியாகிய உபநிடதத்திலும் இன்னது என்று முழுமையாக அறியப்பட முடியாத பெருஞானத்தின் முழுவடிவும் அவனே. அறிவுக்கு அறிவு. ஒரு முறை நீர்நிலையில் இருந்த யானையை, வலிய முதலை பற்றி இழுத்துத் துன்பம் செய்த போது, இறைவனின் பெயரைச் சொல்லக் கூடத் தெரியாதவாறு "ஆதிமூலமே!" என்று அழைத்து உரக்க ஒலியிட்டபோது ஓடிவந்த தெய்வம் எதுவோ, அதுவே இப்போது தேவர்களைக் காப்பது என உறுதிபூண்டு வந்துள்ளது.

மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் மும்மைத் தாய
காலமும் கணக்கும் நீத்த காரணன் கைவில் ஏந்திச்
சூலமும் திகிரி சங்கும் கரகமும் துறந்து தொல்லை
ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும் விட்டு அயோத்தி வந்தான்

உலகம் எங்கும் அறத்தை நிலைநிற்கச் செய்து, ஞானநூல்களில் மக்கள் நன்றாக வாழவேண்டும் என்பதற்காகச் சொல்லப்பட்டுள்ள நீதிக்கருத்துக்களை உலகத்தார் புரிந்து கொண்டு வாழவழிகாட்டி, செம்மை திறம்பாத நெறியில் அவர்களை நிறுத்தி, தீயவர்கள் எல்லாரும் இறந்து போகுமாறு அழித்துப் பொடிபடச் செய்து நல்லவர்களாக வாழ்வோர்க்கு வரும் துன்பங்களை முழுவதுமாகக் களைந்து, பிறகு தான் வந்த நோக்கம் நிறைவேறியவுடன் தன்னுடைய சோதித்திருவுருவத்திற்கு மீண்டும் சேர்வான். அவனே தன் பொன்னடிகளை ஏத்துவாரின் பிறப்புத் துன்பங்களை அழிப்பவன்; அவனே இராமபிரான்.

அறம்தலை நிறுத்தி வேதம் அருள்சுரந்து அறைந்த நீதித்
திறம்தெரிந்து உலகம் பூணச் செந்நெறி செலுத்தித் தீயோர்
இறந்துக நூறித் தக்கோர் இடர்துடைத்து ஏக ஈண்டுப்
பிறந்தனன் தன்பொற்பாதம் ஏத்துவார் பிறப்பறுப்பான்.

அத்தகைய சிறப்புகள் பொருந்திய இராமனுக்குப் பணிபுரியும் அடிமை நான். என்னுடைய பெயர் அனுமன். உன்னால் சிறைப் பிடித்து வைக்கப் பட்டிருக்கும் பிராட்டியைத் தேடி, நான்கு திசைகளிலும் பரவிய வானரப் பெரும்படையில், தென்திசை நோக்கிவந்த படையின் தலைவன் வாலியின் மைந்தனாகிய அங்கதன். அவனுடைய தூதனாக நான் இப்போது வந்துள்ளேன்; என்னுடன் யாரும் இல்லை, தனியாகவே வந்தேன்".

ஒன்பது பாடல்களின் கருத்துச் சுருக்கம் இது, 36 வரிகள்; 216 சொற்கள் முன் பின்னாக வரும் அடைமொழிகளையும், அசைச் சொற்களையும் நீக்கிவிட்டால் 150 சொற்கள் தேரும். அவற்றுள் இராமபிரானின் பரம் பொருள் இயல்பு, அடியாரைக் காத்து அல்லாரை அழிக்க அவன் பூண்டுள்ள உறுதி (துஷ்ட நிக்ரக சிஷ்ட பரிபாலனம்) இராவணன் உள்ளிட்ட அரக்கர் பெற்றிருந்த வலிமை, தவம், ஞானம் எல்லாம் இராமனால் அழியும் என்ற உறுதி. அந்தப்பரம்பொருள் நினைந்து கருணை கொண்டு கொடுத்தாலே ஒருவருக்கு ஞானம், தவம், செல்வம் உள்ளிட்ட பெருவாழ்வு கிடைக்கும்; அதுவும் அவன் எந்த அளவு என்று வரையறுக்கிறானோ அந்த அளவு மட்டுமே துய்க்க முடியும் என்ற தெளிவு; மும்மூர்த்திகளின் தனித்தனி ஆற்றலை ஒருசேரப் பெற்ற தெய்வம் இராமபிரான் என்ற உண்மை. அவனே காலம், இடம் என்ற தத்துவங்களைத் தாண்டி அப்பால் நின்ற கடவுள் என்ற இந்த மெய்ம்மைகளை அழகாக, நுட்பமாக, தெளிவாக அனுமன் அடுக்கி வைத்துள்ளான். இராமபிரானின் தன் விபரக்குறிப்புப் போல இந்தப் பாடல்கள் அமைந்துள்ளன. 'சொல்லின் செல்வன்' என்று தன் தலைவன் தனக்குத் தந்த பட்டத்துக்குத் தான் தகுதியுடையவன் தான் என்பதை ஐயமின்றி வெளிப்படுத்தினான், அனுமன்.

இராவணன் அனுமன் கூறிவற்றைக் கூர்ந்து கேட்டான். 'வாலி' என்ற சொல் ஒரு மாயத்தைச் செய்திருக்கும் போலும். அனுமன் கூறிய மேகத்தின் நடுவில் மின்னல் கீற்று வெட்டியது போலச் சிரித்து, "வாலியின் மகனால் அனுப்பப்பட்ட தூதனே! மிகுந்த வலிமையுடையவனான வாலி நலமுடன் இருக்கிறானா? அவனுடைய அரசாட்சி நன்றாக நடந்து வருகிறதா?" என்று கேட்டான். இப்பொழுது, இந்தக் கேள்வியைக் கேட்டவுடன் அனுமனுக்குச் சிரிப்பு வந்தது. அவன் விடை சொன்னான்.

> "அரக்கர் கோமானே! நீ அஞ்ச வேண்டா. கொடிய கோபத்தையுடைய வாலி, சிலமாதங்களுக்கு முன்பு, இந்தப் பூமியை விட்டுவிட்டு வானுலகம் போய்ச் சேர்ந்தான். இனித் திரும்ப வரமாட்டான். அவனுடைய உயிர் போன அந்தக் கணத்திலேயே அவனுடைய வாலும் அழிந்துபோயிற்று. நம்ப முடியவில்லையா? அந்த அற்புதத்தைச் சாதித்தது, அஞ்சன வண்ணனாகிய இராமபிரானின் கையில் இருந்து ஏவப்பட்ட ஒரு அம்பு தான்; அவனும் அவன் வாலும் இன்று இல்லை. பிறகு சூரியனின்

புதல்வனாகிய சுக்ரீவன் தான் எங்கள் மன்னன் ஆனான்".

மூவுலகையும் ஒருசேர வென்ற இராவணன் வாலிக்குத் தோற்றதும், அவன் பெயரை யாராவது சொன்னாலும் பயந்து நடுங்கியதும் காப்பியம் கூறும் தொடர்பு. அதை இங்கே நினைவுபடுத்தி 'நீ யாரைக் கண்டு, கேட்டு நடுங்கினாயோ அந்த வாலியும் கூட இராமன் அம்பால் மாண்டு போனான்' என்று அனுமன் அரக்கனின் மனங்கொள்ளும் வகையில் நறுக்கென்று கூறிய அழகு உணரத்தக்கது.

"அந்த வாலியை இராமனுடைய வலிமையான அம்பு என்ன காரணத்தால் கொன்றது? அந்த இராமன் தான் இப்போது எங்கு உள்ளான்? அவனுடைய துணைவியாகிய தேவியை அங்கதன் ஏன் தேடி அலையவேண்டும்?" என்று இராவணன் வினவினான். காற்றின் மைந்தன் கூறினான்;

> "தேவியை நாடிக்கொண்டு தம்பியுடன் எங்கள் நாட்டில் வந்த செங்கண் இராமனுக்கு நெருங்கிய தோழனாய் நட்பு பூண்டான் சுக்ரீவன். ஈருடல் ஒருயிர் என்னத்தக்க அளவில் அது பெருகியது. தன் துன்பத்தைத் துடைக்க வேண்டும் என்று சுக்ரீவன் இராமனிடம் விண்ணப்பித்துக் கொண்டான். அதற்கேற்ப வாலியைக் கொன்று அரசபதவியையும் சுக்ரீவனுக்குக் கொடுத்தான். தவிர சுக்ரீவன் மனைவியான உருமையையும் மீட்டுத் தந்தான். பிறகு நான்கு மாதங்கள் கிஷ்கிந்தையில் தங்கியிருந்த பின்னர் தேவியைத் தேடிவருமாறு நான்கு திசைகளுக்கும் எங்களை அனுப்பி வைத்தான். அந்த வகையில் இங்கு நான் வந்தேன்".

இந்த விடையைக் கேட்டு இராவணன் இகழ்ச்சியாகச் சிரித்தான். "உங்கள் குலத்துக்குத் தலைவனாக இருந்தவன் வாலி; ஒப்பற்ற பெருமையுடைய மாவீரன். அவனைக் கொடிய அம்பு ஒன்று ஏவிக்கொன்ற ஒருவனுக்கு அடிமையாகி நீங்கள் பணி செய்கிறீர்கள். எவ்வளவு புகழுடையவர்கள் நீங்கள்? அந்தப் புகழுக்கும் அழிவு வருமா என்ன! தன் அரசனைக் கொன்றவன் பின்னே அடிமையான உங்கள் நிலைகண்டு நிலமகள் கூட வெட்கப்படுவாள்.

"இராமனைக் கொண்டு வந்து, தன் அண்ணனைக் கொன்றதோடல்லாமல், அவனோடு நட்பும் பூண்ட உன்னுடைய தலைவனாகிய சுக்ரீவன் என்னிடம் என்ன சொல்லச் சொல்லி உன்னை ஏவினான்? "தூதுவனாக வந்தேன்" என்று கூறும் நீ

அரக்கரோடு ஏன் போர் புரிந்தாய்? தூதுவனாக வந்த காரணத்தால் உன்னைக் கொல்லமாட்டோம். மனத்தில் எந்த வகையான அச்சமும் வேண்டாம். சொல்ல வேண்டியதைச் சொல் " என்று இராவணன் கூறினான்.

அனுமனின் அறிவுரை தொடங்கியது. பதினாறு பாடல்கள்; அவற்றின் உட்கருத்துக்கள் இன்றும் ஆட்சியில் இருப்போருக்குக் கூறுவன போல் அமைந்துள்ளன. அனுமன் சொன்னான்;

"நான் உன்னிடம் தூதுவனாய் வந்தது சூரியகுமாரனாகிய சுக்ரீவன் சொன்ன சொற்களை உனக்குத் தெரிவிக்கவேண்டும் என்பதற்காகவே. அவை நீதிக்குப் பொருந்தியவை; குற்றமற்றவை. நீ அவற்றைச் செவிமடுத்துக் கேட்டு நல்லவை என்று உணர்ந்தால் நல்லது.

உன்னுடைய செல்வ வளம் மிக்க வாழ்க்கையை நீ வீணாக்கி விட்டாய். அரசனுக்கு உரிய அறவழியில் நீ ஆட்சி செலுத்தவில்லை. பிறன்மனை விரும்பும் தீமையைச் செய்திருக்கிறாய்; இப்பொழுது நீ செய்த தவறுகளுக்குத் தண்டனையாக அழியும் காலம் வந்துவிட்டது. உன்மீது உனக்கு ஆசை இருக்குமானால், நான் சொல்வதைக் கேட்டு அதன்படி நடந்து கொள்.

என்னதான் நீ துன்புறுத்தினாலும், சீதாபிராட்டி கற்பு நெறியிலிருந்து சிறிதும் பிறழமாட்டாள்; நெருப்பை விடவும் தூய்மையானவள். அந்தத் தெய்வத்தைப் பலவகைகளிலும் வருந்தச் செய்துள்ளாய். அந்தப் பாவத்தால், ஐம்புலன்களை வென்றும், அரியதுமாகச் செய்த பெருந்தவப்பேற்றை உன்னோடு அரக்கர் குலமும் இழந்துவிட்டது.

நல்ல, அறிவுமிக்க தேவர்கள் உள்ளிட்டோரை வென்ற பின், அதனால் உங்களிடம் உண்டான ஆணவத்தால் ஏற்கெனவே பெற்றிருந்த ஒப்பற்ற பெருமை நீங்கிப்போயிற்று. எஞ்சி ஏதாவது இருந்தால், அதுவும் இன்றுடன் போய்விடும். அதையும் மீறி ஏதேனும் மிஞ்சினால் நாளை அழியக் காண்பீர்கள்.

பாவம் என்றுமே புண்ணியத்தை வென்றதில்லை. இது ஆன்றோர் மொழி. இந்த வாய்மை நீதியை நீ மறந்துவிட்டாய். மிகப்பெரிய தவங்களைச் செய்து செய்து நீ அளப்பதற்கரிய ஆற்றலும் தூய்மையும் பெற்றாய். இதுமெய்ம்மை. அந்தப் பெருமையைத் தூய்மையின் வடிவமாகிய பிராட்டியின் மீது வைத்த

முறையற்ற ஆசையால் நீயே துடைத்து இழிந்தவன் ஆகிறாய். எதையும் நீ ஆராய்ந்து பார்க்க மாட்டாயோ?

நெறி தவறிய காம ஆசையினால் உந்தப்பட்டு, அறவழியை மறந்து தங்கள் அறிவில் மயங்கியவர்கள் நாளும் நாளும் செத்துச் செத்துக் கீழுக்கும் கீழாகி அழுந்துவார்களே அல்லாமல், அழியா வாழ்வு பெறுவது என்பது யாராலும் முடியாது; ஒரு நாளும் நடவாது.

அச்சம் தரும் கடல் சூழ்ந்த இந்த உலகத்தைக் காக்கும் அரசராக இருந்து, அதைப் பேணிக்காத்துக் கொள்ள முடியாமல், காமத்துக்கு இரையாகிப் பதவியும் பெருமையும் இழந்தவர் ஒன்றல்லர். இரண்டல்லர், பலர்.

சிறந்த ஒழுக்கம் பேணுபவர்கள் பொருளாசையையும் சிற்றின்ப ஆசையையும் அறவே தவிர்த்து - அவற்றை வாழ்வுக்கு இருளூட்டுபவை என்று கருதி எண்ணாது தவிர்ந்தனர். ஏதும் இல்லாத ஏழைகளுக்குக் கொடுத்தல், எல்லா உயிர்களிடத்தும் கருணை காட்டுதல் என்ற இவையே மேலான அறங்கள் எனத்தெளிவாகச் சொல்லியுள்ளார்கள். ஆசையை அடக்குவதே சிறப்பு. அதை மறந்து அதன் வழியில் போய் அறிவையும் இழந்து காமவலைப் பட்டு ஏன் இழிவுக்கும் ஏளனத்துக்கும் ஆளாக வேண்டும்?

நீ சாதாரண அரக்கன் அல்லன். கடல்சூழ்ந்த இந்த நிலவுலகத்தை ஆண்ட மன்னர்களில் உன்னைப் போன்று ஞானமும் அரச நீதியுணர்வும் பெற்றவராய் இருந்தவர்கள் யார்? வேதங்கள் சொல்லும் நெறி நின்று நீதியைப் பேணிவந்த நீ, அறநெறி வரம்பு கடந்தவனாய்த் தாழ்ந்து போவாயா என்ன?

உலகங்களை எல்லாம் அழிக்கவல்லனவான மிகப் பல வலிய தோள்களையும் ஒருவன் பெற்றிருந்தாலும் அவை உயிருக்குச் சேமக்கலனாக வந்து பாதுகாக்குமா? ஊர் முழுவதும் எரிந்து போகுமாறு பரவிவரும் பெருந்தீயின் முன்னால் வெறும் துணிகள் போல அவை எல்லாம் அழிந்து போகுமே!.

திரிபுரங்களாகிய முப்புரத்தை, யாராலும் தடுக்க முடியாத பெருந்தீயை உண்டாக்கி எரித்தவன் சிவபெருமான். பொங்கிச் சீறியெழும் கோபத்தையுடைய தெய்வம். இசைபாடி அந்தக் கடவுளை மகிழ்வித்தவன் நீ. நரம்பிழைத்த யாழ்மீட்டி நீ பாடிய இசை கேட்டுப் பெரும் வரத்தை அந்தப்பரம் பொருள் அளித்தான். இப்பொழுது அறநெறி தவறும் உன்னுடைய செயலால் அந்த

வரத்தையும் அதனால் வந்த பயனையும் இழக்கப் போகிறாய். ஒருவேளை இது நடவாமல் போய் நீபெற்றுள்ள வரம் பிழைத்தாலும் வேதநெறி தவறாத இராமபிரான் விடக்கூடிய அம்பு தவறாது.

அழிவில்லாத செல்வம் எனப்படுவது நாணம். அது சிதைந்து போகுமாறும், குறைவில்லாத அரசசெல்வம் அழிந்து போகுமாறும் சிறுமைக் குணம் உடையவனாய் நீ எப்போது மாறினாய்? சிற்றினம் சேர்ந்து உன்னை நீயே இழத்தல் இழிவானது.

என்னுடைய தலைவனாகிய இராமபிரான் பரம்பொருள் என்று உணர்ந்து எல்லாரும் போற்றுகின்றனர். இந்த உலகில் பிறந்து இப்போது வாழ்ந்து கொண்டிருப்பவர்களும், மேலுலகில் பிறவாநெறி பெற்று வாழும் பெரும்பதம் உற்றவர்களும், தேவர்களும், தேவர்களுக்குத் தேவர்களாய் இருப்போரும் - இவரேயல்லாத மற்றவர்களும் - யாரும் இராமபிரானை ஒரு போதும் மறவாது தொழுகின்றனர். இது உண்மை.

ஆதலால், பிறர் பெறமுடியாத, நீ பெற்றிருக்கும் செல்வங்களையும், பலவகையான சுற்றத்தாரையும், ஏன் உன்னுடைய உயிரைக்கூடக் காத்துக் கொள்ளவேண்டும் என்னும் உணர்வு உனக்கு இருக்குமானால், சீதாபிராட்டியை விட்டுவிடு. அதுவே உனக்கும் மற்றவர்க்கும் நல்லது எனச் சொல்லிவருமாறு சோதியான் மகன் - சுக்ரீவன் - என்னை அனுப்பினான்".

ஆதலால் தனஅரும் பெறல் செல்வமும்
ஓதுபல கிளையும் உயிரும் பெறச்
சீதையைத் தருக என்று எனச் செப்பினான்
சோதியான் மகன் நிற்கு எனச் சொல்லினான்

இவைதாம் அனுமன் கூறியவை. ஆழ்ந்து படித்துப் பார்த்தால் இராவணனை ஒரேயடியாக இழித்தோ பழித்தோ அனுமன் பேசவில்லை. மாறாக ஆற்றல், ஞானம், தவம், வெற்றி, வரம், இசைத்திறன் .......... என்று இராவணன் பெற்றிருந்த எல்லா உயர்ந்த பேறுகளையும் புகழ்ந்தே பேசினான். எதிரில் இருப்பது பகைவனேயானாலும் அவனுடைய நற்பண்புகளைப் போற்ற வேண்டும் என்ற உயரிய நெறியை இங்கும் காணலாம். ஆனால் இத்தனை உயர்ந்த பெரும் பேறுகளும் காமத்தால் அழிந்து, அந்த நற்குணங்களுக்கு உறைவிடமான இராவணனும் அழிவானே என்ற இரங்கலையும் இவற்றுள் காணலாம்.

"கரக்க வந்த காமநோய் துரக்கவந்த தோமினால்
இரக்கமின்றி ஏவினார் அரக்கன்மைந்தன் ஆயினேன்"

என முன்பு விராடன் இராமனிடம் சொல்லி இரங்கிப் பின்பு வீடு பேறு பெற்ற செய்தியையும் இந்த அனுமன் பேச்சில் உணர முடியும்.

இவ்வளவு கேட்டும் இராவணனுக்கு ஆணவம் போகவில்லை. இதுவரை வெற்றி தவிர வேறு தோல்வியை அடையாத செருக்கு மேலோங்கியது. "மலையில் வாழும் ஒரு அற்பக் குரங்கு எனக்கு அறிவுரை கூறுகிறது. நன்று நன்று என்னுடைய நிலைமை" என்று இகழ்ச்சி புலப்படுமாறு பெருஞ்சிரிப்பு சிரித்தான். குரங்கினத் தலைவனாகிய சுக்ரீவனுடைய சொற்களும், மானிடனாகிய இராமனின் சிறப்பும் ஒருபுறம் இருக்கட்டும். ஒரு தூதுவனாக வந்து பெரிய கோட்டைமதில் சூழ்ந்த நகருள் புகுந்தவன் ஏன் அரக்கர்களைக் கொல்ல வேண்டும்?

"உன்னை எனக்குக் காட்டுவாரில்லை. ஆதலால் நறுமணம் மிக்க அசோகவனத்தை அழித்தேன். அதைப் பார்த்து என்னைக் கொல்ல வந்தவர்களைக் கொன்றேன். பிறகு உன்னைக் காணவேண்டும் என்னும் ஆவல் தணியாததால் இப்பொழுது அடங்கி இங்கு வந்துள்ளேன்".

இது அனுமனின் விடை.

அனுமனின் இந்தச் சொற்கள் இராவணனுக்கு நெருப்பை மூட்டிவிட்டது போலிருந்தது. அனுமனை உடனே கொல்லுமாறு ஆணையிட்டான். கொலையாளிகளும் நெருங்கிச் சூழ்ந்தனர். அப்போது நீதி தவறாத வீடணன் தடுத்து அண்ணனாகிய இராவணனுக்கு உண்மை அறத்தைக் கூறினான். நீண்ட தன்னுடைய கைகளைக் கூப்பிக்கொண்டு சொன்னான்;

"அறிவு ஆற்றல்களில் மேம்பட்ட அண்ணலே! வேதங்களில் வல்லவனே! மூவகையுலகங்களையும் தன்னுடைய தவபலத்தால் படைத்த பிரமதேவனது அன்புக்கு ஆளானவன் நீ! அதன் வழி நின்று தவநெறியில் வல்லவனானாய், இந்திரன் ஆட்சி செய்வது போல மூன்று உலகங்களையும் நீயே ஆள்கிறாய். 'ஒருவனின் தூதனாக வந்தேன்' என்று உண்மை சொன்னவனைக் கொல்ல முயல்வது என்ன நீதி?

இந்த உலகம் மட்டுமல்ல, அண்டகோளத்திலும் கூட ஆட்சிபீடத்தில் இருந்தவர்களில் யாரும் இதுவரை தூதரைக் கொன்றதாக நிகழ்ச்சியே கிடையாது. தூதர்கள் தொழில்தான் என்ன? பகைவர்களுடைய இடத்தைத் தேடிப்போய், தன்னை ஏவியவர்கள் சொன்ன செய்தியைச் சொல்லி, அதனால் அவர்களுக்கு ஏற்படக் கூடிய கோபத்துக்கும் ஆளாகி, ஆனாலும் தான் கோபப்படாது மீளும் தகுதியுடைய அறிவும் தொழிலும் உடையவர்கள். அத்தகைய தூதர்களைக் கொல்வது அறிவொழுக்கமுடைய எல்லாரும் சிரிப்பதற்கு இடம் தருமே!

உலகங்களை ஆளும் வேந்தனே! உன்னுடைய பகைவர் ஏவ இங்கு வந்துள்ளான். அவனைக் கொல்வது குற்றம். ஒரு வேளை இது நடந்தால் சிவபிரான் உள்ளிட்ட முப்பெருங்கடவுளரும் பிறதேவர்களும் உன் வீரத்தை எண்ணி எள்ளி நகையாடுவர். நமது தங்கையாகிய சூர்ப்பநகையைக் கொல்லாமல், மூக்கையும் காதையும் அரிந்து அவள் மூலம் நமக்குச் செய்தியையும் சொல்லி அனுப்பிய நீதி தவறாத இராம இலக்குவரை எண்ணிப் பார்ப்பாயாக. அதுமட்டுமன்று; இப்பொழுது அனுமனை இங்கு கொன்று விட்டால் நம்முடைய செய்திகள் எதிரிக்குத் தெரியக்கூடாது என்று அஞ்சிய செயலாக அல்லவா அது முடியும்?"

## 16. எரிந்தது இலங்கை

இராவணன் காதில் இவை விழுந்தன. 'தம்பீ! நல்லதே நீ சொன்னாய். இவன் நமக்குத் தீமையே செய்திருந்தாலும், இவனைக் கொல்வது குற்றமே ஆகும்' என்று முடிவு செய்தான். "அனுமனே! நீ விரைந்து போய் உன்னுடைய தலைவர்களிடம் இங்கு நடந்தவற்றையெல்லாம் விளக்கமாகச் சொல்லி அவர்களைக் கூட்டிவா" என்று சொன்னான். அனுமனின் வால் எரிந்து போகும்படி, வாலுக்குத் தீவைக்கச் சொன்னான். கூடவே இலங்கை நகருக்கு அப்பால் கொண்டுபோய் விட்டு வருமாறும் ஏவலருக்கு ஆணையிட்டான். அரக்கர்கள் பெற்ற மகிழ்ச்சிக்கு அளவில்லை. ஆர்ப்பரித்து எழுந்தார்கள்.

அப்பொழுது, பிரம்மனுடைய நாக கணையால் அனுமன் கட்டுண்டு இருக்கும் பொழுது தீவைத்துக் கொளுத்துவது பெருங்குற்றமாகி விடும் என்று கருதிய இந்திரசித்து, அதை விடுவித்தான். வேறு வலிமையான கயிறுகளைக் கொண்டு வந்து அவனைக் கட்டுமாறு பணித்தான். அனுமனைக் கட்டுவதற்குக் கயிறுகள் போதவில்லை. வீடுகளில் ஊஞ்சலில் கட்டியிருந்தவை; தேர்களில் கட்டியிருந்தவை; யானைகள், குதிரைகளைத் தறிகளில் இணைத்திருந்தவை; இப்படிக் கயிறு என்று கண்ணில் பட்டவற்றை எல்லாம் - 'கண்ணில் கண்ட வன்பாசம் எல்லாம்' - இட்டுக் கட்டினர்.

அனுமனுக்கோ அளவுகடந்த மகிழ்ச்சி. "பிரம்மா ஆகிய கடவுளின் தெய்வப்படையை உடைத்துச் சிதறுவது தருமத்துக்குப் பகை ஆகுமே என்று கருதி அஞ்சியிருந்தேன். ஆனால் இப்பொழுதோ அவர்களாகவே அதிலிருந்து என்னை விடுவித்துவிட்டார்கள். மிகவும் நல்லதாகப் போயிற்று". 'அனுமனின் வாலில் தீ வைத்துக் கொளுத்துங்கள்' என்று இராவணன் சொல்லியது, 'அனுமனே! நீ இந்த ஊரைத் தீயால் சுடுவாயாக' என்று சொன்னது போல் இருக்கிறது. தனக்குள் தானே எண்ணி மகிழ்ந்து அரக்கர்களிடமிருந்து நீங்கும் நல்ல சமயத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

ஆஞ்சநேயனின் பேராற்றல் எத்தகையது! வெறும் நூலினாலும் நாரினாலும் ஆன அந்தக் கயிறுகளின் மென்மை எப்படிப்பட்டது! மலையை நூலால் பிணைக்க முடியுமா? ஆனாலும் அனுமன் அந்தக் கயிறுகள் தன்னைச் சுற்றிப் பிணைக்கப்பட்டபோது ஆற்றல் இலாதவன் போல உடம்பு துவண்டான். கொடிய அரக்கர்கள் இங்கும் அங்குமாய் இழுத்து அலைத்தபோதும் அதிலிருந்து விடுபடும் வழி தனக்குத் தெரிந்திருந்தும் கூட அனுமன் அவசரப்படவில்லை. அவர்கள் விருப்பத்துக்கு இசைந்தது போல நடந்து கொண்டான். யாரைப் போல? கம்பநாட்டாழ்வாருக்கு அனுமனின் இந்தச் செய்கை ஒரு பெரிய தத்துவத்தை நினைப்பூட்டியது. யோக முதிர்ச்சிகளால் தத்துவ நுட்பங்களை உணர்ந்த ஒரு மேலோன், தனக்கு இன்னும் மெய்யுணர்வு வரவில்லை என்று காட்டி, நடித்துப் பொய்ம்மையில் தான் இருப்பதாக மண்ணில் வாழ்வாரிடம் எப்படி நடமாடுவாரோ அதுபோல மாருதிமைந்தன் இருந்தான் என்று கற்பனையை விரிக்கிறார்.

"ஐயன் விஞ்சை தனை அறிந்தும் அறியாதான் அவிஞ்சை எனும்
பொய்யை மெய்போல் நடிக்கின்ற யோகிபோன்றான் போகின்றான்"

தெளிந்த மெய்யுணர்வு பெற்ற நிலையில் அனுமன் தங்களுடைய ஆற்றலில் அகப்பட்டு விட்டான் என்ற களிப்பில் அரக்கர்கள் இராவணனுடைய அரண்மனை வாயிலைக் கடந்து, கோட்டை வெளியைச் சேர்ந்தார்கள். ஆரவாரமும் பெரும் கூச்சலுமாக அவசரத்தில் அந்தத் தீயவர்கள், மேலேமேலே எழும் அனுமனின் வாலில் துண்டுத் துணிகளை நிறைய நெருக்கமாகச் சுற்றி, நெய்யிலும் எண்ணெயிலும் ஊறவைத்துத் தோய்த்தவாறு ஊற்றித் தீவிரமாகப் பற்றி எரியக் கூடிய நெருப்பைப் பற்ற வைத்தார்கள். பிறகு அண்டங்கள் நடுங்கும் படியாகப் பெருஞ்சிரிப்பும் சிரித்தார்கள். "இந்தக் குரங்கு தான் நம்முடைய இலங்கைத் திருநகரின் அழகிய, குளிர்ச்சிமிக்க சோலைகளை அழித்ததாம். அதற்கு மேல் நம்முடைய இளவரசனாகிய அக்ககுமாரன் உள்ளிட்ட பெருவீரர்களைக் கொன்றதாம். காவல்களை எல்லாம் மீறிச் சீதையுடனும் பேசிற்றாம். இப்படியெல்லாம் செய்து மனிதர்களின் திறமைகளைக் காட்ட வந்த இந்த அற்பக் குரங்கு படும்பாட்டை எல்லாரும் திரளாக வந்து

காணவேண்டும்'' என்று வீடுகளின் வாசல்களில் நின்று பறைசாற்றினார்கள்.

அண்டங்களுக்கு அப்பால் உள்ளவர்களுக்கும் இந்தச் செய்தி போய்ச் சேர வேண்டுமாம். அங்கும் இங்குமாக ஓடினார்கள். பெரிய பெரிய ஒலிகளை எழுப்பிக்கொண்டு முரசங்களையும் முழக்கினார்கள். அனுமனைப் பார்த்துப் பார்த்து ஏசினர்; திட்டினர். இவ்வளவு கூச்சலும் எல்லை கடந்த மகிழ்ச்சி ஆரவாரமும் கேட்ட அரக்கியர்கள் சீதையிடம் இதைச் சொன்னார்கள்.

கேட்டவுடன் வருத்தமும் சினமும் ஏக்கமும் இரக்கமுமாக உணர்ச்சிகளின் குமுறல் நிலைக்குப் பிராட்டி ஆட்பட்டாள் "அவளும் உயிர்பதைத்தாள், வேர்த்தாள், உலந்தாள், விம்மினாள், விழுந்தாள், அழுதாள், வெய்துயிர்த்தாள்" என வரிசையாகக் கம்பர், சீதையின் மனநிலையைப் பாடுகிறார். தானே ஒரு தீ; கற்பின் கனலி; தூய நெருப்பின் தூய வடிவம்; அந்த தெய்வத்தன்மையைப் பிராட்டி மனத்துள் கொண்டவளாக நெருப்புக் கடவுளை - அக்கினி பகவானை - இவ்வாறு வணங்கினாள்.

> "தீக்கடவுளே! எல்லா உயிர்களுக்கும் தாய்போலக் கருணை செய்யும் காற்றுக் கடவுளின் துணைவனே! சிறிது கூடப் பெருமைக் குணம் ஏதுமில்லாத, நாய் போன்ற கொடிய அரக்கர்கள் அனுமனுக்கு இப்படித் துன்பம் செய்யும்போது நீ அவனுக்கு ஏதும் கருணை காட்டாயா? இந்த உலகத்தில் நடக்கின்ற எல்லாவகையான புண்ணிய பாவங்களை எல்லாம் மேலிருந்து பார்க்கின்ற ஒரே சான்று நீ தான்; உனக்குத்தெரியும்; எல்லாம் தெரியும். நான் நிறையுடைய கற்பில் தூயவள் என்பது உண்மையானால், உன்னை இப்பொழுது வணங்கிக் கேட்டுக் கொள்வது ஒன்றுதான். அனுமனை ஒரு சிறிதும் சுடக்கூடாது".

தாயே அனைய கருணையான் துணையே ஏதும் தகவில்லா
நாயே அனைய வல்லரக்கர் நலியக் கண்டால் நல்காயோ
நீயே உலகுக்கு ஒருசான்று நிற்கே தெரியும்; கற்பினால்
தூயேன் என்னில் தொழுகின்றேன் எரியே! அவனைச் சுடல் என்றாள்.

மிகவும் அழகான பாடல். கதிரவனின் இன்னொரு வடிவமான நெருப்பு. அதற்கு நண்பனாக இருக்கின்ற காற்றே உலகத்து உயிர்களுக்கு எல்லாம் ஆதாரம். அந்தக் காற்றின் மைந்தன் அனுமன். அவனையா நீ எரிக்கப் போகிறாய்? நான் தூயவள்

என்றால் அவனைச் சுடாதே" என்றவாறு பிராட்டியின் அருள் மனத்தை உருக்கிற்று; அத்தனாய் அன்னையாய் வந்து தன்னைக் காப்பாற்றியவன் எந்தத் துன்பமும் படக்கூடாது என்ற நல்ல நெஞ்சத்தை இதனுள் காணலாம்.

பிராட்டியின் ஆணையை நெருப்புக் கடவுள் மீறுமா என்ன! சீதை மேலுள்ளவாறு சொல்லிய உடனேயே, ஒளியும் வெப்பமும் உடையவனாகிய அக்கினிதேவன், உள்ளத்தால் அஞ்சி, அனுமனைச் சுடுவதற்குத் தயங்கினான். அந்தக் கணத்தில் அனுமனுடைய மேல் மயிர்ப்புறம் தளிர்த்து உடம்பு சிலிர்த்தது. அவனுடைய வாலோ உடம்பில் உண்டான இந்தக் குளிர்ச்சியால் உள்எலும்பு அளவும் குளிர்ந்தது.

இதற்கு மேல் என்ன பேச இருக்கிறது? 'மற்றினி பல என்? பிராட்டியின் ஆணையோ என்னவோ தெரியவில்லை. ஊழிக்காலத்து தோன்றும் வடவைத் தீ, நிலவுலகில் எங்கெங்கு உண்டோ அந்தத் தீ, வானத்துத் தோன்றும் நெருப்பு, காடுகளில் முனிவர்கள் பேணிவளர்க்கும் மும்மைச் செந்தீ, முப்புரங்களை ஒரு சேர எரித்த சிவபெருமானின் நெற்றிக்கண்ணில் தோன்றும் வெந்தீ - இவை எல்லாம் ஒருசேர, ஒரே சமயத்தில் குளிர்ந்தன.

வாலில் அரக்கர் வைத்த தீ எரிந்தது. மலையை உருக்கிச் செய்தது போன்ற வாலில், அந்த மலையில் காட்டுத்தீ பரவுவது போலச் சுடர் கொளுந்து விட்டு எரிந்தது. ஆயினும் அனுமனின் உடம்புள் எந்தச் சூடும் தெரியவில்லை. காரணம் என்னவாக இருக்கும்? அனுமன் ஒரு கணம் எண்ணிப்பார்த்தான். இராமபிரான் மீதும் பிராட்டி மீதும் வைத்த அன்பு அனுமனின் உள்ளே ஒரு தெளிவைக் காட்டியது. சனகமன்னனின் திருமகள் - சீதாபிராட்டி - செந்திருவின் கற்பினால் இதுநடந்துள்ளது என்று புரிந்து கொண்டான். அவனுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு எல்லை இல்லை. இது தான் தலைவர்க்கும் உண்மைத் தொண்டர்க்கும் இடையே ஊடுருவி நிற்கும் பிணைப்பின் திரட்சி. அசோகவனத்தில் இருந்து கொண்டு 'சுடாதே என்று பிராட்டி நெருப்புக்கடவுளுக்கு இட்ட ஆணை இது என, இலங்கை நகருக்குள் அரக்கர் நடுவுள் இருந்த அனுமனுக்குத் தெரிந்தது' என்பதில் வியப்பில்லை. துடிப்புகள், அதிர்வுகள், எண்ண அலைகள் ஒன்றுதான்; அவற்றை அளக்கும் அளவுகோல்கள் தாம் வேறு வேறாக உள்ளன.

அரக்கர்களுக்கு உண்மை நிலை புரியவில்லை; அனுமன் அகப்பட்டான் என்ற களிப்பில் மூழ்கியிருந்தார்களே தவிர, அறிவு வேலை செய்யாத மூடத்துக்கு ஆள்பட்டிருந்தனர். அதனால், அனுமனை இழுத்துக் கொண்டு, இலங்கைத் திருநகர் முழுவதையும் அவனுக்குச் சுற்றிக் காட்டினார்கள்; தங்கள் பெருமையைக் காட்டும் துடிப்பால் வந்த வினை அது. முந்தைய நாள் இரவில் பார்க்கமுடியாமல் போன இடங்களையும் அனுமன் தெளிவாகப் பார்த்துக் கொண்டான். ஊரின் கடைசிக்கும் போனவுடன் இதுதான் இவர்களிலிருந்து விடுபடும் நேரம் என்று கருதி, தன்னை இறுகக் கட்டியிருந்த இருபுறத்துக் கயிறுகளையும் தன்னுடைய மார்புடன் சேர்த்து இழுத்துக் கொண்டு மேலே எழுந்தான். அவனைப் பிடித்திருந்த அரக்கர் கைகள் அறுபட்டுக் கயிறுகளுடன் மேலே போய்த் தொங்கின. அரக்கர்கள் உடம்புகள் கீழே விழுந்தன.

அனுமனுடைய உடம்பில் கயிறுகள். அவற்றின் முனைகளில் தொங்கும் அரக்கர் கைகள். அந்தச் சமயத்தில் அனுமனின் தோற்றம் எப்படி இருந்தது? கயிறுகள் பாம்புகள். அரக்கர் கைகள் பாம்புகளின் படங்கள். பெரிய திருவடி என வைணவ உலகம் போற்றும் கருடாழ்வார் வானில் காகங்கள் சுற்றும் தன் வடிவத்துடன் ஒளிச்சுடர் பெருக நிற்பது போலச் சிறிய திருவடியும் நின்றான் எனக் கம்பர் இந்தக் காட்சியில் திளைக்கிறார்.

இற்றவாள் அரக்கர் நூறாயிரவரும் இழந்த தோளார்
முற்றினார் உலந்தார் ஐயன் மொய்ம்பினோடு உடலை மூழ்கச்
சுற்றிய கயிற்றினோடும் தோன்று வான் அரவின் சுற்றம்
பற்றிய கலுழன் என்னப் பொலிந்தனன் விசும்பின் பாலான்.

இந்தப் பாட்டின் மூலம் பெரிய திருவடியையும் சிறிய திருவடியையும் ஒருசேரச் சேவிக்கலாம்.

மேல் எழுந்த அனுமன் இராமனை நெஞ்சில் எண்ணி மீண்டும் மீண்டும் தொழுதான். இலங்கையை எரிப்பதற்கு முன் தன் தலைவனின் இசைவை இதன்மூலம் கேட்டுப் பெற்றான். பிறகு தன் வாலை இங்கும் அங்குமாக நீட்டி இலங்கையைக் கொளுத்தத் தொடங்கினான். கருநிறத்தழகனாகிய இராமனின் திருத்தூதனாகிய அனுமனின் வால் அப்போது எப்படி இருந்தது ? கம்பருக்கு மறுபடியும் சிவபெருமானின் நினைவு தோன்றுகிறது. அனுமன் சிவபிரானின் அம்சமாகத் தோன்றியவன். இப்பொழுது அரக்கர்கள்

அனுமனுக்குச் செய்த துன்பங்கள், கொடுமைகள் எல்லாம் சிவனுக்குச் செய்ததாகவே கொள்ளவேண்டும். ஆதலால் சிவபிரானின் கையிலுள்ள, சிவந்த நிறமுடைய தீச்சுடர்களைக் கக்குகின்ற மழுவாயுதம் தன் இறைவனின் அம்சமாகிய அனுமனைத் தொடர்ந்து அவன் நீட்டிய இடம் எல்லாம் எரித்துப் பொசுக்கியது. முப்புரத்தை எரித்தபோது சிவபிரான் ஏவிய அம்பு போலவும் அந்த வால் இருந்தது. பின்னாளில் ஊழிப் பெருவெள்ளத்தின்போது, ருத்திரன் வடிவில் தோன்றிக் காலாக்கினியை ஏவி அழிக்கும் சிவபெருமானின் அம்சமாக அப்போதிருந்தான் அனுமன். பின்னாளில் உலகை அழிக்கப் பயிற்சி பெறுவது போல அந்தத் தீ பரவியது. இவை எல்லாம் கம்பனின் சொற்கள். வால் பற்றி மூன்று பாடல்கள். மழு, அம்பு,காலாக்கினி என மூன்று உவமைகள். மூன்றும் சிவபெருமான் தொடர்பான செய்திகள். கம்பருக்குச் சமய எல்லை தாண்டி, சமய வெறியைத் தாண்டிக் காப்பியத்தைத் தொடர்ந்து சொல்லும் நேர்மை வாய்த்திருந்தது என்பதற்கு இவை சான்றுகள்.

சுடர் பரவியது. தீ எரிந்தது. நெருப்பு தன் நாக்குகளை நான்கு புறமும் நீட்டிப் பொசுக்கியது. காவல்மிக்க பெரிய வீடுகளின் மேல் இருந்த கொடிகள், மேல்மாடங்கள், வலிய சுவர்கள், நீண்ட உயரமான தூண்கள் எரிந்தன. அரக்கர்கள் அஞ்சி ஓடி வெளியே வந்து புலம்பி அழுதனர். சுழன்று, சுழன்று எரியும் தீ மேலே மேலே பொங்கும் புகை இவற்றின் இடையே அகப்பட்டு அரக்கியரும் ஆடவரும் வெந்தனர், கருகினர். ஏற்கனவே, கருகிய உடல்கள், நெருப்பால் இன்னும் கருகி அஞ்சத்தக்க வடிவம் அடைந்தனர். யானைகள், எருமைகள் உள்ளிட்ட விலங்குகளும் எரிந்தன. தீக்கங்குகள் கடலில் விழுந்து அங்கிருந்த மீன் இனங்களையும் வேகச் செய்தன.

நெருப்பின் வெப்பத்தால் அரச மாளிகைகளில் இருந்த பொன் உருகி ஓடியது. பொன்மயமானது. எல்லாவற்றுக்கும் இந்தக் கதிதான். தீயின் வெப்பம் தாங்காது நீரினுள் மூழ்கிக் கருகிய அரக்கியர்கள் தீச்சுடர்களினால் தோன்றும் மாயத்தோற்றத்தை, கானல்நீரை நீர் என்று கருதி மீண்டும் தீக்குள் விழுந்தனர். சில அரக்கியர் மான உணர்ச்சி உடையவராய், நெருப்பு வீட்டைச்சுற்றி எரிக்கும்போது தப்பி ஓடாமல் உள்ளிருந்தே எரிந்து போனார்கள்.

தீயின் கடுமையான வெப்பம் விண்மண்டலமும் பரவியது. அமராவதி எனப்படும் இந்திரனின் தலைநகரமாகிய பொன்னகரமும் உருகியது. சந்திரமண்டலமும் உருகியது. இவை மட்டுமா? நெருப்புக்கும் சூடு தரும் கதிரவன் மண்டலத்திலும் நுழைந்தது. இலங்கை நகரம் சிதைவுண்டது. அரக்கரும், பிற உயிர்களும் கடலில் வீழ்ந்தனர். படைக்கலங்கள் உருகி ஆறாக ஓடின. இராவணன் அரண்மனையின் உள்ளே புகுந்தது தீ. அங்கிருந்த தேவ சாதியினர் அஞ்சி அலறி ஓடினர். மாடங்கள் எரிந்தன; மாளிகைகள் கருகி சாம்பலாயின.

இராவணன் தப்பிப் பிழைத்தான். இந்தக் கொடுமைகளுக்கு என்ன காரணம் என்று கேட்டான். கூப்பிய கரங்களுடன் அரக்கர்கள் "தலைவனே ! அலைகடலினும் நீண்ட தன்னுடைய வாலில், நாம் வைத்துக் கொளுத்திய தீயைக் கொண்டு ஒரு குரங்கு இவ்வாறு ஊரை எல்லாம் எரிக்கிறது" என்றார்கள்.

இத்தனை நடந்தும் ஒரு குரங்கு என்னும் ஏளனப் பார்வை அரக்கர்களிடமிருந்து நீங்கவில்லை. இராவணனுக்கு மானஉணர்ச்சி மேலிட்டது. மூவுலகங்களையும் ஒருசேர வென்ற மாவீரன் ; நகருள் புகுந்த அற்ப விலங்கின் இந்த வெறியாட்டம் அவனுள் கழிவிரக்கம் ஏற்படுத்திற்று.

இன்று புன்தொழில் குரங்கு தன்வலியினால் இலங்கை
நின்று வெந்துமா நீறெழுகின்றது செந்தீத்
தின்று தேக்கிடுகின்றது தேவர்கள் சிரிப்பார்
நன்று நன்று போர்வலி என இராவணன் நக்கான்.

தேவர்கள் சிரிக்கவும், இலங்கை அழியவும், ஒருபுன்தொழில் குரங்கு காரணம் என்றால் தன்னுடைய வீரம் என்னாயிற்று என்று தனக்குள் தானே சிரித்து வருந்தினான். ஆணவமும் அவலமும் கலந்த கழிவிரக்கச் சிரிப்பு அது.

தீக்கடவுளையும், அனுமனையும் பிடித்து வருமாறு அரக்கர்களுக்கு ஆணையிட்டான். பலப்பல வீரர்கள் தேடிச் சென்று அனுமனைச் சூழ்ந்து கொண்டார்கள். அவன் தன்னுடைய வாலால் அவர்களை வளைத்து, ஒரு மரத்தினால் அடித்துக் கொன்றான். இறுதியில் தன்னுடைய எரியும் வாலை கடலுள் நனைத்துப் "பசி" ஆறினான். அப்போது வானத்தில் செல்லும் விஞ்சையர்,

'இவ்வளவு கொடுமை செய்து எல்லாவற்றையும் எரித்த தீ, சீதை இருந்த அசோக வனத்தைச் சுடவே இல்லையே' என்று பேசிக் கொண்டு போனார்கள்.

அந்தச் சொற்கள் அனுமன் காதில் விழுந்தன. அனுமனின் உள்ளம் குளிர்ந்தது. உடனே அசோகவனம் சென்று பிராட்டியை வணங்கி நின்றான். தேவியின் முன்னால் தொண்டன் தன் ஆற்றல் முழுவதையும் வெளிப்படுத்திய பெருவீரன். "இனிச்சொல்ல என்ன இருக்கிறது"இவை பிராட்டியின் சொற்கள். "வார்த்தை என் வந்தனை; நீதான் மீண்டு வந்தாயே?" பொங்கிவரும் பேருவகை கலந்து இந்த இரண்டு சொற்களைப் பிராட்டி பேசி அனுமனுக்கு விடை கொடுத்தாள். அனுமன் தாவிப் பறந்தான். அவன் போனவுடன் தீயும் தணிந்து அவிந்தது.

## 17. மீண்டனன் வீரன்

பிராட்டியிடமிருந்து விடைபெற்று, அனுமன் ஒரு மலைமேல் ஏறி நின்று, இராமபிரானின் திருவடிகளை நெஞ்சில் நினைந்து வணங்கினான். பிறகு வானில் எழுந்து போய் மைந்நாக மலை சேர்ந்தான். முன்பு இலங்கை நோக்கிச் சென்றபோது, மைந்நாகமலையிடம் தான் திரும்பும் போது வந்து பார்ப்பதாகச் சொன்ன சொல் தவறாமல் இப்போது போய் அந்த ஆவலையும் நிறைவு செய்தான். அங்கிருந்து புறப்பட்டு அங்கதன் உள்ளிட்ட வானர வீரர்கள் இருந்த மகேந்திரமலை சென்று சேர்ந்தான்.

அந்தக்கணம் வரை அனுமன் பாதுகாப்புடன் பழுதில்லாமல் வந்து சேர வேண்டுமே என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்த வானரர் முன்னால் அனுமன் குதித்தான். அந்த வருகை எப்படி இருந்ததாம்? இரைதேடச் சென்ற தாய்ப்பறவை திரும்பிவந்து சேர்ந்ததைக் கண்ட குஞ்சுகளுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிபோல இருந்தது என்கிறார் கம்பர். பிராட்டி மட்டும் அனுமனை அன்னை எனக் கூறவில்லை. கம்பருக்கும் அப்படியே தோன்றிற்று.

> பாய்வரு நீளத்து ஆங்கண் இருந்தன பறவைப் பார்ப்புத்
> தாய்வரக் கண்டது அன்ன உவகையில் தளிர்த்தார் அம்மா.

சிறிய திருவடியின் வருகை வாடிக் கிடந்தவர்கள் நெஞ்சில் பால் வார்த்தது. அவர்கள் தளிர்த்தனர். ஒருவரால் பலநூறு பேருடைய வாழ்வில் மலர்ச்சி ஊட்டமுடியும் என்ற உயரிய கோட்பாட்டை இதனுள் கம்பர் பதியவைக்கிறார்.

அழுதவர் சிலர். அனுமனைத் தொழுதவர் சிலர். தழுவினர் சிலர். தாங்கினர் சிலர். இப்படி எல்லாம் அவர்களுடைய உணர்ச்சிப் பெருக்கு வெளிப்பட்டது. அனுமனின் உடல் மெலிந்து இருந்தது. உடம்பெல்லாம் புண்கள். வானரவீரர்களின் நெஞ்சங்கள் உருகின. இங்கும் அங்கும் ஓடித் தேன், கிழங்கு, காய், கனி இவற்றைக் கொண்டுவந்து அவன் முன்னால் வைத்து அவற்றை முதலில் தின்று இளைப்பாறிய பின்னர் நடந்தனவற்றைச் சொல்லுமாறு

வேண்டினர். அனுமனின் முகமகிழ்ச்சி நல்லதே நடந்திருக்கிறது என்று சொன்னாலும் அவனுடைய உடம்பு முழுவதிலுமிருந்த புண்களைப் பார்த்து வருந்தினர்

அங்கதன் காத்திருந்தான். கரடிகளுக்கு அரசனாகிய சாம்பவான் காத்திருந்தான். அனுமன் வந்தவுடன் முதலில் அங்கதனை வணங்கி பிறகு சாம்பவானையும் தொழுதான். அதற்குப் பிறகு அங்கிருந்தவர்களுக்கு உரியமுறைப்படி தன் வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டு சொன்னான்; "இராமபிரானின் திருத்தேவியார் உங்களுக்கு எல்லாம் நல்ல வெற்றி உண்டாகட்டும்" என்று சொல்லி அனுப்பினாள்.

'என்ன நடந்தது என்ன நடந்தது' என்று முதலிலிருந்து கடைசிவரை அனுமனுக்கு ஏற்பட்ட நிகழ்வுகளைச் சொல்ல வேண்டினர். தேவியைக் கண்டது, அவள் செய்யும் அரியதவத்தின் பெருமை, அவள் இராமனுக்கு சூடாமணி தந்தது ஆகியவற்றை மட்டும் சொல்லிப் போரில் அரக்கரை மாய்த்தது, இலங்கையை எரித்தது உள்ளிட்ட பிற செய்திகளைச் சொல்லாமல் விட்டுவிட்டான். ஏன் ? அவையெல்லாம் தான் பெற்ற வெற்றியைக் காட்டுவன. அது தற்புகழ்ச்சியாக ஆகிவிடும். பெரியோர்கள் தம்மைத் தாமே புகழ்ந்து கொள்வார்களா என்ன? அவற்றையெல்லாம் அனுமன்

விளம்பான் தான்தன் வென்றியை விளம்ப வெள்கி

ஆனால், பிறப்பால் குரங்குகளே தவிர, வானரங்கள் அறிவால் மேம்பட்டவர்கள். "நீ சொல்லாவிட்டால் என்ன ! அங்கு நடந்தவை எங்களுக்குத் தாமாகவே புலப்படுகின்றன. அரக்கர்களுடன் நீ போர் செய்திருக்கிறாய். உன் உடம்பின் மேலுள்ள புண்களே சான்றுகள்; நீ அவர்களை வென்றுவிட்டாய் என்பது நீ மீண்டு வந்த தன்மையால் அறிகிறோம். இலங்கையை நீ நெருப்பால் எரித்தாய் என்பதை, மேல்நோக்கி வானாளாவ அப்பொழுது எழுந்த புகையே கூறியது. பகைவர்களும் வலிமை உடையவர்கள்தாம் என்பதைப் பிராட்டி உன்னுடன் வராதது மூலம் அறிநது கொண்டோம். இவை போதாதா? இனி, என்ன செய்யலாம் என்று பேசி முடிவெடுப்போம்' என அவை அனுமனிடம் கூறின. இனி, எதைப்பற்றியும் எண்ணிக் காலத்தை வீணாகப் போக்கிக் கொண்டிருக்க வேண்டாம். இராமபிரானிடம் உடனே சென்று

தேவியைக் கண்ட செய்தியைச் சொல்லி, அவனுடைய துயரத்தைத் தவிர்ப்போம் என்று அனுமன் சொல்ல எல்லாரும் அதை ஏற்றுக் கொண்டு புறப்பட்டார்கள்.

வழியில் மதுவனம், தேனும் அடைகளும் நிறைந்த இடம். அழகிய மலர்கள், இளந்தளிர்கள் அழகு செய்த இடம். சோலைகள், பொய்கைகள் குளிர்ச்சியூட்டிய இடம். அங்கதனின் ஆணை பெற்று அங்கு போய்க் குரங்குக் கூட்டம் ஆடின; பாடின; குடித்தன களித்தன, ஒடித்தன, தாவின, அடித்தன, அழித்தன. அங்கு காவலில் இருந்த வேறு ஒரு குரங்குக் கூட்டம் தம் தலைவனாகிய ததிமுகன் என்பவனிடம் போய்ச் செய்தியைச் சொன்னார்கள். அவன் நேரில் வந்து அங்கதனிடம் சினந்தான். அவனை வென்ற வானரர் பயணத்தைத் தொடர்ந்தனர்.

இராமனும், அனுமனும்

சீதையைத் தேடச் சென்று, தூதனாக இராவணன் முன் நின்று, வீரனாகப் போர் செய்து, இலங்கையை எரியூட்டி அனுமன் செய்த வீர நிகழ்வுகள் இராமன் உள்ளிட்டாருக்கு இன்னும் தெரியவில்லை. இராமன் இன்னும் துன்ப நினைவுகளில் மூழ்கியிருந்தான். சீதையின் பிரிவு அவனை மேலும் மேலும் வருத்தியது. அருகிலிருந்த சுக்ரீவன் தான் அவ்வப்போது ஆறுதலும் தேறுதலும் கூறிவந்தான். தென்திசை தவிர மற்ற திசைகளில் பிராட்டியைத் தேடப்போனவர்கள் தோல்வியுடன் திரும்பி விட்டனர். அனுமன் வரவுக்காகவே எல்லோரும் காத்திருந்தனர். தென்திசை சென்றவர்களைப் பற்றிய தன் எண்ணங்களை இராமன் சுக்ரீவனிடம் வெளிப்படுத்தினான்.

"நாம் இத்தனை நாள்களுக்குள் திரும்பவேண்டும் எனக் குறித்த காலம் முடிந்து போயிற்று. தேவியைத் தேடித் தென்திசை சென்றவர்கள் யாரும் வரவில்லை. ஒருவேளை அவர்கள் இறந்து போயிருப்பார்களோ ? அல்லது வேறு துன்பத்துக்கு ஆளாகியிருப் பார்களோ?

தேவி இறந்திருப்பாளோ? இந்தத் துன்பச் செய்தியை இங்கு வந்து நம்மிடம் சொல்வதை விட இறந்து விடலாம் என்று முடிவு செய்திருப்பார்களோ அல்லது சீதையை இன்னும் தேடிக் கொண்டிருக்கிறார்களா?

அரக்கர்களை நேரில் பார்த்து. அவர்கள் மீது கடும் கோபம் கொண்டு போர் தொடங்கியிருப்பார்களோ? அரக்கர்கள் மாயத்தில் வல்லவர்கள்; அப்படி ஏதும் செய்து வானரங்களைக் கொன்றிருப்பார்களோ? அல்லது தப்புவதற்கு முடியாத வகையில் பெரிய, காவல்மிக்க சிறையில் அடைக்கப்பட்டுவிட்டார்களா?

குறித்த நாளில் வந்து சேரமுடியாத தோல்விமனத்தால், இங்கு வர அஞ்சி, இன்ப துன்ப நினைவுகள் இல்லாத துறவு வாழ்வு மேற்கொண்டு காடுகளில் மறைந்துவிட்டார்களோ?"

இவை இராமனுடைய தவிப்பையும், கவலையும் காட்டும் சொற்கள்.

இவ்வாறு இராமனும் சுக்ரீவனும் பேசிக்கொண்டிருந்த போது மதுவனத்துக்குக் காவல் தலைவனாக இருந்த, ததிமுகன் ஓடி வந்து சுக்ரீவனிடம் அங்கதன் ஆணையால் குரங்குகள் வனத்தை அழித்ததையும், ஏனென்று கேட்ட தன்னைத் துன்புறுத்தியதையும் சொன்னான். இதைக் கேட்டுச் சுக்ரீவனுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. அங்கதன், நீலன், சாம்பன், குமுதன் ஆகியோர் திரும்பிக்கொண்டு இருக்கின்றனர் என்றால் - மகிழ்ச்சிப் பெருக்கில் ஆடியும் பாடியும் மதுவனத்துள் அலைந்தனர் என்றால் என்ன பொருள்? அனுமன் உள்ளிட்டோர் பிராட்டியைப் பார்த்துத் திரும்புகின்றனர் என்பதே.

பண்தரு கிளவியாள் தன்னைப் பாங்குறக்
கண்டனர் அன்னதோர் களிப்பினால் அவர்
வண்டுறை மதுவனம் அழித்து மாந்தினார்
அண்டர் நாயக இனிஅவலம் தீர்க என்றான்

"இராமனுக்கு இனி கவலை வேண்டாம். பிராட்டியைக் கண்டு திரும்பிக் கொண்டிருக்கிறார்கள்" என்பது சுக்ரீவன் முடிவு. அங்கதன் இழிவான தொழில் செய்ய மாட்டான், பிராட்டியைத் தேடிச் சென்றவர்கள், ஆதலால் நடந்ததற்கு வருத்தம் தெரிவித்து அங்கதனை வணங்குமாறு ததிமுகனுக்குச் சுக்ரீவன் சொல்லி அனுப்பினான்.

இராமனிடம் விரைவாக முதலில் அனுமன் போய் நடந்தவற்றைச் சொல்ல வேண்டும் என முடிவு செய்தனர் வானரர். அதுபோலவே அனுமன் இராமனிடம் போனான்; அவனுடைய வரவுக்காகப் பெருமானும் காத்திருந்தான். தெற்கில் சூரியன்

உதயமாகி வருவதுபோல அனுமன் வந்தான். அவனை, "அன்புறு சிந்தையன் அமைய நோக்கினான் - அன்புகொண்ட உள்ளத்துடன் இராமபிரான் தன் உள்ளத்து உணர்ச்சிகள் எல்லாம் அனுமன் உள்ளே எதிரொலிக்குமாறு நோக்கினான். அப்போது மாருதிமைந்தன் வணங்கினான். யாரை? அற்புதமான பாடல் ஒன்றில் அனுமனின் பக்திப்பெருக்கைப் பதிவு செய்கிறார் கம்பர். இராமபிரான் இருக்கும் இடத்துக்கு வந்த அனுமன். இராமபிரானின் திருவடிகளை உடனே வணங்கவில்லை. தாமரையை விட்டு நீங்கி அரக்கரிடம் சிறைப்பட்டுக்கிடக்கும் பிராட்டி இருந்த திசையைப் பார்த்து நின்றான்; தன் இரண்டுகைகளையும் மேலுயர்த்தித் தொழுதான். பிறகு தென்திசையை நோக்கியவாறு நெடுஞ்சாண் கிடையாகக் கீழே விழுந்து வணங்கினான்.

எய்தினன் அனுமனும் எய்தி ஏந்தல்தன்
மொய்கழல் தொழுதிலன் முளரி நீங்கிய
தையலை நோக்கிய தலையன் கையினன்
வையகம் தழீஇ நெடிது இறைஞ்சி வைகினான்

தன் தலைவனாகிய இராமபிரானை - இத்தனை நாள்கள் கழித்துப் பார்க்கும் போது கீழே விழுந்து வணங்க வேண்டாமா? தென்திசை நோக்கித் தொழுதானே விழுந்தானே! இப்போது இராமனுக்கு யாருடைய வணக்கமும் தேவையில்லை; தேவிஉயிருடன் இருக்கிறாள் என்று தெரிந்தால் போதும்! அதைத் தன் செயல்மூலம் ஆஞ்சநேயன் காட்டினான். சிந்தை அமையத் தன்னைப் பார்த்த இராமனுக்குத் தென்திசை தொழுது பிராட்டியின் நலத்தை அனுமன் குறிப்பால் உயர்த்திய அழகே அழகு. இது - இந்தச் செயல்- இராமனுக்குப் புரியாதா? உண்மைத் தொண்டனின் உள்ளத்துணர்ச்சிகள் தலைவனுக்குத் தெரியாமலா போகும்?

திண்திறல் அவன்செயல் தெரிய நோக்கினான்
வண்டுறை ஓதியும் வலியள்; மற்றிவன்
கண்டதும் உண்டு; அவள் கற்பு நன்றெனக்
கொண்டனன் குறிப்பினால் உணரும் கொள்கையான்.

அனுமன் செய்ததைக் கூர்ந்து கவனித்த இராமன், "வண்டுகள் மொய்க்கும் கூந்தலையுடைய தேவி உயிருடன் நலமாக உள்ளாள்; இவன் அவளைப் பார்த்து வந்துள்ளான். தன் கற்பு மாசுபடாத

தூய்மையுடன் வணங்கத் தக்கவளாக அவள் உள்ளாள்" என்பதை எல்லாம் ஒரு குறிப்பாலேயே இராமன் உணர்ந்து கொண்டான். "குறிப்பினால் குறிப்பு அறிவாரை"த் தொண்டனாகவும், தலைவனாகவும் பெறுவது திருவருளால் மட்டுமே வாய்க்கும்.

தன்னை வணங்காது அனுமன் தென்திசைபார்த்துக் கீழே விழுந்து கும்பிட்டதைக் குறிப்பால் அறிந்த இராமனுடைய தோள்கள் மகிழ்ச்சியால் பூரித்தன; மலர் போன்ற கண்களிலிருந்து இன்பக் கண்ணீர் பாய்ந்தது; மனதுள் இத்தனை நாள் பூட்டியிருந்த அரியதுயரம் நீங்கியது; பிராட்டியின் மீது வைத்த அன்பு இன்னும் பெருகியது.

இராமனுடைய மனநிலையை உணர்ந்து பூரித்த அனுமன் 24 பாடல்களில் வரிசையாகத் தனக்கு ஏற்பட்ட அனுபவங்களைச் சொன்னான். முதல்பாட்டு இராமாயணம் படிப்பவர்களும் கேட்பவர்களும் வியந்து பாராட்டும் பெருமை கொண்டது.

"கண்டனன் கற்பினுக்கு அணியைக் கண்களால் என்று தொடங்கும் பாட்டு". "நானே பார்த்தேன்; என் கண்ணாலேயே பார்த்தேன்; கற்புநிலை தவறாத பேரொழுக்கத்துடன் இருக்கும் தேவியைக் கண்டேன்" என்று இராமன் நெஞ்சில் பாலை வார்த்த பின்னர் நீண்ட பேருரையை அனுமன் ஆற்றினான்.

கண்டனன் கற்பினுக்கு அணியைக் கண்களால்
தெண்திரை அலைகடல் இலங்கைத் தென்நகர்
அண்டர் நாயக இனி துறத்தி ஐயமும் பண்டுள துயரும்

"வானத்துத் தேவர்களுக்கும் தலைவனாகிய பெருமானே! உனக்கு இனிமேல் எவ்வித ஐயமும் வேண்டாம்; எவ்வகையான துயரமும் வேண்டாம். தெளிவான நீரலைகள் வீசும் கடலால் சூழப்பட்ட தென்னிலங்கையில் கற்புக்கு அணிகலனான சீதாபிராட்டியை நான் என் கண்களாலேயே கண்டேன்.

தெய்வமே! என்னுடைய பெருந்தெய்வமாகிய பிராட்டி, உன்னுடைய பெருந்தேவி என்று சொல்வதற்கேற்ற தகுதிக்கும், உன்னைப் பெற்ற தசரதமாமன்னனின் மருமகள் என்று சொல்லப்படும் வாய்மைக்கும், சனகமன்னனின் மகள் என்பதற்கேற்ற தகைமைக்கும் ஒரு சிறிதும் மாசு இல்லாத சிறப்பு பெற்றவளாக இருக்கிறாள்.

பொன்னுக்குச் சமம் என்று வேறு எதையாவது சொல்ல முடியுமோ? பொன்னுக்கு அதுவே ஒப்பு. பிராட்டி தனக்குத் தானே சமம். வேறு ஒரு பெண் அல்லள். அவளுக்குக் கணவனாக வாய்த்த உனக்கு ஒப்பானவர் இந்த உலகில் யாருளர்? நீயே. உங்கள் இருவர் தாள்கள் பணிந்து தொண்டு புரியும் எனக்கு ஒப்பும் யாரும் இல்லை என்ற பெருமையைப் பிராட்டியே என்னிடம் சொன்னாள்.

தேவியின் மேம்பட்ட உயர்பண்பை எப்படிப் போற்றுவேன்? அவள் உங்கள் குடும்பத்துக்கு மருமகளாக வந்தபின் உங்கள் அரசகுலத்தின் பெருமையும் உயர்ந்தது. அவள் பிறந்து அதுவரை வளர்ந்த காரணத்தால் சனகப் பேரரசரின் குலப்பெருமையையும் உயர்த்தினாள். உன்னிடமிருந்து அவளைப்பிரித்துத் துன்புறுத்திய அரக்கர்களுக்கு அழிவு வரச்செய்து, வானவர் குலத்தையும் வாழவைக்கப் போகிறாள். அத்தகைய பெருமாட்டிக்கு உனக்கும் தொண்டு செய்யும் வாய்ப்பு கிடைத்தால் என்னை உள்ளிட்ட வானர குலத்துக்கும் பெருமை ஏற்பட்டது.

பெரிய, அகன்ற தோளில் வில்லை ஏந்தியிருக்கும் வீரனே! பொங்கி ஆர்ப்பரிக்கும் அலைகடல் சூழ்ந்த இலங்கை நகரின் உள்ளே திரிகூடமலையில் நல்ல, பெரிய தவத்தைச் செய்து கொண்டு இருக்கும் நங்கையைக் கண்டேன் என்று நான்சொல்லமாட்டேன். நல்ல குடிப்பிறப்பு, அளவுகடந்த பொறுமை என்னும் சால்பு, நெருப்பு போன்ற கற்பு என்ற இவை மூன்றும் மானிடப் பெண் உருகொண்டு இருப்பதை அவள் வடிவில் பார்த்தேன்.

உன்னை விட்டு பிராட்டியும், தேவியைவிட்டு நீயும் பிரிந்திருக்கிறீர்கள். உண்மைதான்; உடம்புகள் அப்படி உள்ளன. ஆனால் நிலைமை வேறு. பிராட்டியை நேரில் சந்தித்த போது, அவளுடைய கண்களின் உள்ளும் நீயே இருப்பதைப் பார்த்தேன்; தேவி என்னென்ன நினைக்கிறாளோ அந்தக் கருத்துள்ளும் நீயே இருக்கிறாய். உன்னையே தினமும் எண்ணி உன் திருப்பெயரையே எப்பொழுதும் ஒலிப்பதால் தேவியின் திருவாயிலும் நீயே இருக்கிறாய்.

கடலின் நடுவில், இலங்கை என்னும் பெரிய நகரத்தில் ஒருபுறம், அசோகவனத்தில் பிராட்டி தங்கியிருக்கிறாள். கற்பக மரங்கள் வானுறவளர்ந்து நின்று நிழல் பரப்புவதால் அங்கு காலையும் இல்லை மாலையும் இல்லை. எப்பொழுதும் மங்கிய இருள்தான். உன்னுடைய தம்பியாகிய இலக்குவன் புல்லினால் செய்து கொடுத்த குடிசையில் பிராட்டி இருக்கிறாள். தெய்வமே! தவம் என்பது ஒன்று இருக்குமானால், அது தான் பெண்ணாக இருக்கவேண்டும் என்று

தவம் செய்தால் எப்படி இருக்குமோ அப்படி உள்ளாள் பிராட்டி.

சோலை அங்கு அதனுள் உம்பி புல்லினால் தொழுத்த தூய
சாலையில் இருந்தாள் ஐய! தவம்செய்த தவமாம் தையல்.

பிராட்டியின் புண்ணியத் திருமேனியைத் தீண்டுவதற்கு அஞ்சிய இராவணன், மண்ணோடு குடிசையுடன் தேவியையும் தூக்கிக் கொண்டு போய்விட்டான். அதற்கு ஒரு காரணம் உண்டு முன்பு ஒரு காலத்தில் பிரமன், இராவணனை நோக்கி, "உன்னிடம் விருப்பம் இல்லாத பெண்ணைத் தொடுவதற்கு முயன்றால், உன் தலைகள் எண்ணற்ற துண்டுகளாய் வெடித்துச் சிதற மாண்டு போவாய்" என்று சொன்ன சாபம் ஒன்று உண்டு.

பெருமானே! பிராட்டியை இராவணன் நெருங்கக் கூட முடியவில்லை. பிறகு தீண்டுவது எங்கே? அதற்குச் சான்றுகள் உள்ளன. நான்முகன் படைத்த அண்டகோளங்கள் இன்னும் பிளந்து போகாமல் சுற்றுகின்றன. ஆதிசேடப்பாம்பின் தலை வெடிக்கவில்லை; இன்னும் அது பூமியைத் தாங்கிக் கொண்டுதான் இருக்கிறது. கடல்கள் பொங்கி வெள்ளம் மேல் எழவில்லை. வானில் இருக்கும் சூரிய சந்திர நட்சத்திரங்கள் கீழே விழவில்லை. வேதங்களும் தருமங்களும் மாளவில்லை. இவையே பிராட்டியின் தூய்மைக்குச் சான்றுகள்.

உன்னைப் பிரிந்த துன்பம் வருத்த, வாடியிருக்கும் நங்கை கற்பு நிலையில் சிறிதும் குறையாது இருத்தலால், வானில் வாழும் இந்திரன் பிரமன் உள்ளிட்ட தேவர்களின் மனைவிமார்களான இந்திராணி கலைமகள் போன்றோரும், எல்லோராலும் தொழத்தக்க பெருமை பெற்றார்கள். பெண் ஒருத்தி பெண்குலத்துக்கு ஈட்டித் தந்த பெருமை இது. இனி உமையொருபாகனான ஈசனின் இடப்புறம் இருக்கும் அம்மை அவன் மகுடத்தின் மேலும் இருக்கும் தகுதி பெற்றாள். செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள், திருமாலின் மார்பில் இனி இருக்க வேண்டாம்; அந்தத் திருமாலின் ஆயிரம் முடிமேல் இருக்கும் பெருமை சேர்ந்தது.

சோகத்தாள் ஆயநங்கை கற்பினால் தொழுதற்கு ஒத்த
மாகத்தார் தேவிமாரும் வான்சிறப்பு உற்றார் மற்றைப்
பாகத்தாள் அல்லள் ஈசன் மகுடத்தாள் பதுமத்தாளும்
ஆகத்தாள் அல்லள் மாயன் ஆயிரம் மோலியாளால்.

நான் இலங்கை நகர் முழுவதையும் சுற்றிப் பார்த்தேன். இராவணனின் அரண்மனைக்குள் நுழைந்து அங்குள்ள பெண்களை

எல்லாம் உற்று நோக்கினேன். யாரும் பிராட்டியாக இல்லை. அவற்றைத் தாண்டிச் சோலைகள் நிறைந்த அசோக வனத்துள் தேடியபோது தான் கண்ணீர்க் கடலின் நடுவில் திருமகள் போன்ற சீதாப்பிராட்டியைக் கண்டேன்.

நான் பார்த்தபோது தேவியைச் சுற்றிலும் அரக்கியர்கள் பலர் பலராக எண்ணிக்கையற்ற அளவில் நெருங்கி நின்று பலவாறு துன்புறுத்தினார்கள். அவர்கள் செய்வதைப் பார்த்தால் பேய்கள் கூட அஞ்சி ஓடிவிடும். அவ்வளவு கொடுமை? இவற்றைப் பிராட்டி எப்படித் தாங்கினாள்? எப்படி உயிருடன் இருக்கிறாள்? அன்னையை நெருங்கிப் பார்த்தபோது எனக்கு அந்த உண்மை புரிந்து விட்டது "இராம இராம இராம" என்று உன்னுடைய திருநாமத்தைச் சொல்லிக் கொண்டே இருந்தாள். அந்தப் பக்தி தான் எல்லாத் துன்பங்களையும் அச்சங்களையும் விரட்டியது. இரக்கம் என்ற ஒரு துன்ப உணர்வு பெண்ணின் வடிவம் எடுத்து வந்தது போல இப்போது இருக்கிறாள். கொடுமைமிக்க சிறையுள், தனியாக இருந்து அந்தக் கோப்பெருந்தேவி துன்புறுகிறாள்.

அரக்கியர் அளவற்றார்கள் அலகையின் குழுவும் அஞ்ச
நெருக்கினர் காப்ப நின்பால் நேசமே அச்சம் நீக்க
இரக்கம் என்று ஒன்றுதானே ஓர் ஏந்திழை வடிவம் எய்தித்
தருக்கிய சிறையுற்றன்னள் தகையள்அத் தமியள் அம்மா

பெண்ணுக்குரிய மங்கல குணங்களை ஒருங்கே பெற்றுக் கற்பின் கனலியாக இருக்கும் பிராட்டி, உன்மீது வைத்துள்ள காதல் இவ்வளவு அவ்வளவு என்று சொல்ல முடியாது. அது 'சேண் பிறந்து அமைந்த காதல்'. அதைக் கண்ணால் பார்த்து இன்பம் பெறுவதற்கு நீ மானிடனாக வந்துள்ளாய். இந்த மண்ணில் ஒருவன் ஆணாகப் பிறந்து அடையவேண்டிய செல்வப் பேறுகளுக்கு அடையாளமாக நீயே இருக்கிறாய்.

தேவியை நெருங்கி நின்று திருவடியை வணங்குவதற்கான ஏற்ற சமயத்தை எதிர்பார்த்து நான் இருந்தபோது, இலங்கைவேந்தனாகிய இராவணன் அங்கு வந்து பிராட்டியைக் கெஞ்சி, இரந்து மன்றாடினான். தேவியோ சீறி, கோபம் கொண்டு கடுமையான சொற்களால் அவனை ஏசினாள். அவற்றைக் கேட்டு வெகுண்ட அரக்கன் அன்னையைக் கொல்லவும் நினைத்தான். அந்தச் சூழலிலும் பிராட்டியைக் காத்தது எவை? தேவியின் கற்பு, உன்னுடைய திருவருள், தூய நல்லறங்கள், இவை தாம். அருகிருந்த அரக்கப் பெண்களைச் "சீதைக்கு அறிவுரை கூறித்திருத்துங்கள்; இல்லை

என்றால் கொல்லுங்கள்'' என்று சொல்லிப் போய் விட்டான். அப்போது நான் ஒரு மந்திரத்தைச் சொல்லி, ஏவினேன். அரக்கியர்கள் பெரிய தூக்கத்தில் ஆழ்ந்து விட்டார்கள்.

அப்பொழுது தேவி, தன்னுடைய உயிரை விடத் துணிந்து கையில் ஒரு கொடியை எடுத்துக்கொண்டு ஒரு மரக்கிளையின் அருகில் சென்றாள். தன் கழுத்தில் கொடியைச் சுற்ற முற்பட்ட பொழுதில் நான் அவள் முன் குதித்து. 'இராம' என்று உன்னுடைய திருப்பெயரை உரக்கச் சொன்னேன். அதைக் கேட்டவுடன், இதுவும் அரக்கர்கள் செய்யக் கூடிய வஞ்சகச் செயலாக இருக்கக் கூடும் என்று முதலில் ஐயப்பட்டாள். இருந்தாலும் அவளுக்கு ஒரு நம்பிக்கை தளிர்த்திருக்க வேண்டும். என்பால் இரக்கம் கொண்டவளாக என் முன் வந்து அஞ்சன வண்ணனாகிய அண்ணலின் பெயரைச் சொல்லி, நான் இறந்துவிடலாம் என்றிருந்த வேளையில் என் உயிரைத் தந்தாய் என்று மகிழ்ச்சியுடன் சொன்னாள்.

என்னுடைய தாய் போன்றவனே! என்னிடம் நீ சொல்லி இருந்த பெரிய அடையாளங்களை எல்லாம் பிராட்டியிடம் நான் சொன்னேன். அவற்றைத் தன் கூர்த்த அறிவால் ஆராய்ந்த பின்பு, என்னுடைய மனத்தில எந்த வஞ்சக எண்ணமும் இல்லை என்பதைத் தெளிவாக அறிந்தாள். நீ அருளுடன் தந்த அழகிய மோதிரத்தை அவளுக்குக் காட்டினேன். மோதிரமா அது? உயிர்போகும் காலத்தில், சாவைத் தடுத்து நிறுத்தும் ஆற்றல் மிக்க சாவா மருந்து போன்றது அல்லவா?

அதை ஆசையுடன் - தீராப் பெருங்காதலுடன் திருக்கரங்களில் வாங்கிக் கொண்ட பிராட்டி தன்னுடைய மார்பின் நடுவில் வைத்துத் திருக்கரங்களால் அழுத்திப் பிடித்துக் கொண்டாள். செல்வ நாயகனே! இது ஒரு நிகழ்ச்சி; ஆனால் அதனால் இரண்டு அற்புத நிகழ்வுகள் நடந்ததை என் கண்களால் கண்டேன். ஒளிமிக்க அந்த மணிமோதிரம், தேவி பிரிவுத் துன்பத்தால் உன்னை எண்ணி எண்ணி இருந்ததால், அந்த உடம்புச் சூட்டில் அப்படியே உருகியது. ஒரு கணம் தான். உன்னுடைய மோதிரம் உடம்பில் பட்டதால் ஏற்பட்ட குளிர்ச்சியால் உருகிய அது கெட்டிப்பட்டு மறுபடி முன்போல் ஆய்விட்டது.

அந்த மோதிரத்தை மீண்டும் எடுத்துத் தன் கண்களால் ஆசையுடன் பார்த்தாள். அரக்கர் வாழும் ஊருக்குள் வந்து தன்னைச் சேர்ந்தது என்பதால் ஒரு வேளை அழுக்கும் தீட்டும் பட்டிருக்கலாம் அல்லவா? ஆதலால் அதைக் கழுவித் தூய்மை செய்தாள். எப்படி? தன் கண்களிலிருந்து வழிந்த நீரையே மஞ்சன நீராகக் கருதிப் புனித நீராட்டினாள். ஒரு பெருமூச்சு; இரக்கத்தின் மிக்கதான ஒரு பார்வை

வேறு பேச்சில்லை. அதுவரை இளைத்திருந்த திருமேனி மகிழ்ச்சியால் பூரித்தது. கண்கள் விழித்தபடியே இருக்கப் பெருமூச்சு விட்டாள்.

மனம் உருகிய நிலையில் இருந்த பிராட்டிக்கு, இருவரும் பிரிந்த பின்னர் உனக்கு ஏற்பட்ட எல்லா நிகழ்வுகளையும் சொன்னேன். "மயில் போன்ற சாயலை உடைய தேவியே! நீ இருந்த இடம் அறியாமல் உன்னைத் தேடிக் கொண்டே இருக்கிறோம். காலம் தாழ்த்தியமைக்கு அதுவே காரணம். உன்னைப் பிரிந்த பின்னர் இராமபிரான் படும் துன்பங்களை நீ நேரில் பார்த்தால் தான் புரிந்து கொள்வாய்" என்று சொல்லி நிலைமையை உணர்த்தினேன். புரிந்து கொண்டவளாக, மீண்டும் உயிர்ப்பு வந்தவளாக ஆனாள்.

இங்கு யார் யார், எப்படி எங்கு என்ன முயற்சிகளில் ஈடுபடுகிறார்கள் என்பதை எல்லாம் விரிவாகக் கேட்டுத் தெரிந்து கொண்டாள். பிறகு, உன்னைப் பிரிந்த பின்னர் அரக்கனுடைய கொடுமைக்கு ஆளாகித் தனக்கு ஏற்பட்ட துன்பங்களை எல்லாம் விரிவாகச் சொல்லி முடித்தாள். "இன்னும் ஒரே ஒரு மாதம் தான் உயிரோடு இருப்பேன். அதற்குள் இராமன் வந்து என்னை அழைத்துப் போகவேண்டும். அதற்குத் திருவுளம் கூடவில்லை என்றால் நான் இறந்து விடுவேன். இது உறுதி'' என்று சொல்லியவளாய் உன் திருவடிகளை நெஞ்சின் உள்ளே தொழுபவளாய்த் தலை மீது சூடிக் கொண்டாள்.

உன்னுடைய திருவடி தொழுத பின்னர், அந்நாள் வரை தன் துணியில் பாதுகாப்பாகச் சுற்றி வைத்திருந்த சூளாமணியை எடுத்து உன்னிடம் தருமாறு தந்தாள். ஒளிமிக்க அந்த மாணிக்க மணியை, உன்னுடைய செந்தாமரைக் கண்களால் ஆசை தீரும்படி நீயே பார்த்துக் கொள்வாயாக. அறிவு மேம்பட்டவனே! இவை தாம் நடந்த நிகழ்வுகள்".

என்று சொல்லி இராமபிரானை வணங்கி நின்றான். யார்? அனுமன் என்றோ ஆஞ்சநேயன் என்றோ, அஞ்சனை புதல்வன் காற்றின் மைந்தன் என்றோ சொன்னால் போதுமா? போதாது. பின் எப்படிச் சொல்ல வேண்டும்? எத்தனை ஊழிப்பெரு வெள்ளங்கள் - பிரளயங்கள் - தோன்றி உலகை அழித்தாலும் உயர்ந்த அறநூல்களும் வேதங்களும் அழியாமல் இருந்து மக்களை வாழ்விக்கும். அந்தக் காலமெல்லாம் புகழ் கொஞ்சமும் குறையாது வாழும் - என்றும் வாழும் - பேறு பெற்றவனாகிய அனுமன் இவ்வாறு கூறினான் என்று சுந்தர காண்டத்தை நிறைவு செய்யப் போகிறார் கம்பர்.

வைத்தபின் துகிலில் வைத்த மாமணிக்கு அரசை வாங்கிக்
கைத்தலத்து இனிது ஈந்தான் தாமரைக் கண்கள் ஆர
வித்தக காண்டி என்று கொடுத்தனன் வேத நன்னூல்
உய்த்துள காலம் எல்லாம் புகழொடும் ஓங்க நிற்பான்.

அதைத் தன் திருக்கரங்களை நீட்டி இராமன் வாங்கினான். எத்தனையோ நினைவுகள் உள்ளாடின. வெறும் சூளாமணியாக அது தோன்றவில்லை. சிவந்த நிறம், ஒளிவீசும் அழகு, சிறிதாய் நேர்த்தியாய் இருந்த வண்ணம் இராமனுக்குச் அவளுடைய கையைப் பற்றிக் கொண்டு தீயை வலம் வந்தபோது போது ஏற்பட்ட உணர்ச்சி இப்போது ஏற்பட்டது.

ஐயனுக்கு அங்கி முன்னர் அங்கையால் மற்றும் நங்கை
கைஎனல் ஆயிற்று அன்றே கைபுக்க மணியின் காட்சி

இதுதான் கம்ப சித்திரம். சூளாமணி கையில் பட்டவுடன் உரோமம் பொடித்தது; கண்களில் நீர்பெருகிப் பாய்ந்தது. மார்பும் தோளும் துடித்தன. வேர்த்துக் கொட்டிற்று; பெருமூச்சு விட்டதால் உடம்பு பெருப்பதும் மெலிவதுமாக மாறிமாறி உணர்ச்சிக் குமுறல்களின் தொட்டிலாக இராமன் ஆகிப்போனான்.

இத்துடன் அனுமன் - இராமன் காணல் நிறைவுறுகிறது. திருவடி தொழுத படலம் என்று இதற்குக் கம்பர் பெயர் வைத்துள்ளார். பிராட்டியின் திருவடியை அனுமன், இராமன் திருவடியைப் பிராட்டி, இராமன் திருவடியை அனுமன் என்று எல்லாரும் தொழுவதாகவே இந்தப்பகுதி அமைந்துள்ளது. இராமனிடம் அனுமன் சீதைபற்றிக் கூறிய செய்திகள், அப்படிச் சொல்ல அவன் பயன்படுத்திய சொற்கள், பேசிய விதம் இவை எல்லாம் காப்பியப் போக்கில் அறிவும் உணர்ச்சியுமான மன நிலைகளை ஓவியமாக்கின்றன. சொல்லின் செல்வன் என்பது தகுமே! 'உன்குலம் உன்னதாக்கி' 'விற்பெரும் தடந்தோள் வீர' 'தவம்செய்த தவமாம் தையல்' 'இரக்கம் என்ற ஒன்று ஏந்திழை வடிவம் எய்தி' என்பன போல வரும் தொடர்கள் என்றும் வாழும் அழியாப் பேறு பெற்றவை.

அப்பொழுது அங்கதன் முதலான வானரவீரர்கள் அங்கு வந்து சேர்ந்தார்கள். இராமனையும் சுக்ரீவனையும் மகிழ்ச்சியுடன் பணிந்தார்கள். இனி உடனே சீதையை மீட்க எல்லோரும் உடனே போகவேண்டும் என்று இராமபிரான் கூற, 'எழுக எம் படைகள்' என்று சுக்ரீவன் ஆணையிட்டான். வெற்றி முரசங்கள்

முழக்கப்பட்டன. எழுபது வெள்ளம் என்னும் அளவு பேரெண்ணை உடைய படைகள் ஆரவாரத்துடன் புறப்பட்டன.

இராமனும் இலக்குவனும் முன்னால் வந்தனர். அனுமன் இரண்டு கரங்களையும் கூப்பி இராமன் முன் நின்று சொன்னான். "இழிவான தொழிலை உடைய குரங்கு என்று கருதாமல் என் தோள் மீது ஏறியருள வேண்டும்" என்று பணிந்து கேட்டுத் தரையில் குனிந்து நின்றான். அதே போல அங்கதன் இலக்குவனைத் தன் தோளில் ஏறுமாறு வேண்டினான். இருவரும் அந்த வேண்டுதல்களை ஏற்றுக் கொண்டார்கள். படை மகிழ்ச்சி ஆரவாரத்துடன் புறப்பட்டது. வானத்திலிருந்து தேவர்கள் பார்த்து தெய்வப் பொற்பூ சிந்தி வாழ்த்தினர். பன்னிரண்டு நாட்கள் தொடர்ந்து நடந்தார்கள். வழிக்களைப்பு தீரவும், எதிர்வரும் போருக்குத் தயாராக இருக்கும் படியுமாக அனுமன், அரக்கர்கள் வலிமை, காவல் செய்யும் திறமை, கோட்டைகளின் தன்மை, நகரமைப்பு போன்றவற்றை யெல்லாம் - எதிரி நாட்டின் சிறப்புகளை எல்லாம் சொல்லிக் கொண்டே வர, தெற்கு முனையில் இருந்த கடற்கரையை அடைந்தார்கள். சீதையின் நினைவால் வருந்தி இரவில் கூடத் தூங்காத இராமன் கடலைப் பார்த்தான். "கங்குல் பொழுதும் துயிலாத கண்ணன் கடலைக் கண்ணுற்றான்".

## 18. வந்தான் வீடணன்

கடலின் கரையில் வானரப்படை; இலங்கை நகருள் இராவணனின் மந்திராலோசனை. இளவரச மக்களும், அமைச்சரும், தம்பியரும் மட்டுமே அங்கு இருந்தனர். நெருக்குமான நிலையில் தொலைவில் காவலர் சூழ்ந்திருந்தனர். அப்போது இராவணன் ஒரு குரங்கினால் ஏற்பட்ட அழிவுகளைக் சொல்லிச் சொல்லி வருந்தினான். பலரும் பலவாறு தம் கருத்துக்களை வெளிப்படுத்தினர். எதிரியாகிய மானிடர் இருக்கும் இடம் சென்று அவர்களையும் அந்தக் குரங்கையும் கொல்வதே செய்யக் கூடியது என முடிவாகக் கூறினர். கும்பகருணன் இராவணனின் தவறைச் சுட்டிக் காட்டினாலும் போர் செய்வதே நல்லது என்று சொன்னான். வீடணன் மட்டும் தன் அண்ணன் மீது வைத்த அன்பாலும் பக்தியாலும் அவனுக்குக் கேடு வரக் கூடாதே என்று கவலைப்பட்டு, இராமனின் அவதார நோக்கம், திருமகளே பிராட்டியாய்ப் பிறந்துவந்த தன்மை, இராமனுடைய வீரச் செயல்கள், வெற்றிகள் இவற்றையெல்லாம் விரிவாகப் பேசினான். கேட்ட இராவணனுக்குச் சினமே பொங்கியது. வீடணனைப் பார்த்து ஏளனமாகச் சொன்னான்.

"ஏய் தம்பீ! அந்த மனிதனுடைய பெருமையை உன்னைத் தவிர வேறுயார் மதிப்பார்கள்? மதிக்கத் தக்க அளவு அவன் என்ன வீரச் செயல்கள் செய்துள்ளான்? ஏற்கெனவே பலபேர் முயற்சி செய்து வளைத்து வளைத்து இற்றுப்போன சிவதனுசை இவன் முறித்ததில் என்ன பெருமை? ஒரு பெரிய மராமரம்; வயதானது ஓட்டை விழுந்தது; அதில் அம்பைச் செலுத்தியதில் என்ன ஆற்றல்? அரண்மனையில் ஒரு பணிப்பெண்ணாக வேலை செய்யும் ஒரு கூனி செய்த சூழ்ச்சியால் அரசிழந்து போனானே அதில் என்ன புகழ்? அதற்கும் மேல் என்னுடைய செயலில் ஏமாந்து காட்டில் மனைவியைப் பறிகொடுத்த பின்னரும் அவன் இன்னும் உயிரைச் சுமந்து வாழ்கிறானே, என்ன கேவலம்? அவனுக்குப் பயந்து சீதையை விடுவதாம் அவனிடம் மன்னிப்பு கேட்பதாம்! என்ன உன் பேதைமை"! என்று ஆணவத்தின் உச்சியில் நின்று இராவணன் ஆட்டம் போட்டான்.

ஊன வில் இறுத்து ஓட்டைமா மரத்துள் அம்பு ஓட்டிக்
கூனி சூழ்ச்சியால் அரசிழந்து உயர்வனம் குறுகி
யான் இழைத்திட இல் இழந்து இன்னுயிர் சுமக்கும்
மானுடன் வலி நீ அலாது யாருளார் மதித்தார்.

இதைக் கேட்ட வீடணன், ஆணவத்தால் திருமாலிடம் அழிந்து போன இரணியன் வரலாற்றை விளக்கமாகக் கூறி, தன்பேச்சை அவன் கேட்கவில்லை என்றால் இராமனால் அழிவது உறுதி எனச் சொன்னான். ஆணவம் யாருடைய பேச்சை, எப்போது தான் கேட்டது? "நீ மானிடர் மீது அன்பு வைத்தாய் அவர்களிடமே போ: என்முன் நில்லாதே" என ஆணையிட்டான். வேறு வழியில்லை. அந்த உத்தமன் அனலன் உள்ளிட்ட நான்கு துணைவர்களுடன் வெளியேறினான். கடற்கரையில் வந்திருந்த இராம இலக்குவரையும் வானரக் கூட்டத்தையும் பார்க்கச் சென்று வியந்து போனான்.

என்ன செய்யலாம்? என்று வீடணன் கேட்டதற்குக் கூட வந்த நான்கு அமைச்சர்களும் ஒன்றே போல் சொன்னார்கள்;

மாட்சியில் அமைந்தது வேறு மற்றிலை
தாழ்ச்சிஇல் பொருள் தரும் தரும மூர்த்தியைக்
காட்சியே இனிக் கடன்

இப்பொழுது நாம் செய்யக் கூடிய பெருமைக்குரிய செயல். மேலான செல்வத்தைத் தரக்கூடிய அறத்தின் நாயகனாகிய இராமனை அடைக்கலமாகச் சேர்வதே.

வீடணன் உள்ளக் கருத்தும் அதுவே. நல்ல அமைச்சர்கள் ஆதலின் அவர்கள் உள்ளும் அது எதிரொலித்தது. வீடணன் சொன்னான் "நல்லதே சொன்னீர்கள்; இப்படிப் பெருமான் திருவடியை அடைக்கலமாக அடைவது தவிர வேறு செய்தால் நாமும் அரக்கர்கள் ஆவோம். ஆதலால் எல்லையில்லாத பெருங்குணங்களுக்கு எல்லாம் ஒருருவாக வடிவெடுத்து வந்துள்ள இராமபிரானின் மலர்த்தாள்களை இறுக்கிச் சேர்வோம். அப்படி மலரடிகளைத் தழுவி இந்த இழிந்த பிறப்பையும் போக்கிக் கொள்வோம்.

நல்லது சொல்லினீர் நாமும் வேறினி
அல்லது செய்துமேல் அரக்கர் ஆதுமால்
எல்லையில் பெருங்குணத்து இராமன் தாளினை
புல்லுதும் புல்லி இப் பிறவி போக்குவாம்

மாலைப் பொழுது ஆகிவிட்டது. இரவு சோலையில் தங்கிக் காலையில் இராமனைச் சேரலாம் என முடிவு செய்தனர்.

பொழுது விடிந்தது. இராமன் கடற்கரைச் சோலைகளைப் பார்த்து நடந்து வந்தான். கானல், உப்பங்கழி, மணல்பரப்பு, குவளை மலர்கள என அவனுடைய பார்வை அழகில் விரிந்தது. அழகைப் பார்த்தும் விரிந்தது. சிறிதுநேரம் தான். பிறகு அந்தக் காட்சிகளே சீதையின் நினைவை அவனுக்கு ஊட்டின. சுக்ரீவன் முதலியோர் அங்குவந்து அவனைத் தேற்றி அழைத்துப் போயினர். போகும் போது,

மற்றொரு பொருள் உளது என்? மாறிலாக்
கொற்றவா சரண் எனக் கூயதோருரை

(வேறு எந்தப் பொருளும் உனக்கு ஒப்பு ஆகாது. வெற்றியுடையவனே உன்னைச் சரணடைந்தோம்) என்ற சொற்கள் அவன் காதில் விழுந்தன. என்ன என்று இராமன் நின்று கேட்டான். அனுமன் காவல் பொறுப்பில் இருந்த மயிந்தன், துவிவிதன் ஆகியோரை முன்னே போய் ஆய்ந்து வருமாறு ஏவினான். அப்படியே அவர்கள் சென்று கேட்டனர். அனலன் - வீடணனுடன் வந்தவன் - இலங்கையில் நடந்ததைச் சுருக்கமாகச் சொல்லி, இராமனைச் சரண் அடைவது என்னும் தங்கள் முடிவையும் தெரியப்படுத்தினர். அப்பொழுது இராமன் வீடணனை ஏற்பதா வேண்டாமா என்று நண்பர்களிடம் கருத்து கேட்டான். 'கைப்புகல் பாலனோ கழியப் பாலனோ ஒப்புற நோக்கி நும் உணர்வினால்' என்றான். உணர்ச்சிவசப்படாமல், ஆராய்ந்து நன்மை தீமைகளை உணர்ந்து கூறுமாறு பணித்தான்.

சுக்ரீவன் வீடணனை ஏற்கக்கூடாதென்று பலப்பல காரணங்களைக் கூறினான். சாம்பவானும் அப்படியே உரைத்தான். நீலன் பல நீதிகளைச் சொன்னாலும் வீடணனை ஏற்பதில் உடன்படவில்லை. இறுதியாக நின்றவன் அனுமன் மட்டுமே. "நீ என்ன நினைக்கிறாய்? உன் கருத்து என்ன?" என்று கேட்ட அறிவனை - ஞானவடிவமான இராமபிரானைப் பார்த்து அறிவில் மேம்பட்டவனான அனுமன் பேசத் தொடங்கினான். 18 பாடல்கள் குணமும் குறையும் நாடிமிக்க கொளவேண்டும் என வலியுறுத்தித் தர்க்கநூல் முறைப்படி, காரணங்கள் காட்டி விபீடணனை ஏற்றுக் கொள்வதே சரி எனத் தனக்குப்பட்டதைத் தெளிவாக, எந்தத்

தயக்கமும் இல்லாமல் கூறினான். தன்னுடைய மன்னனாகிய சுக்ரீவன், மற்ற வீரர்கள், நீலன், சாம்பவான் என்ற இவர்களுக்கு மாறாக, அவர்கள் சொல்லியதை மறுத்து அனுமன் ஆற்றியது அற்புதமான, அறிவாராய்ந்த திறனாய்வு. அதைக் காண்போம்.

**அனுமன் புகழ்ந்த வீடணன்**

தலையைத் தாழ்த்தி இராமனுக்கு முதலில் வணக்கம் சொன்னான். தன்னுடைய வாயை ஒரு கை கொண்டு மூடிக்கொண்டான். பேரறிவாளனாகிய அவன் பிறகு பேசத் தொடங்கினான்.

வணங்கிய சென்னியன் மறைத்த வாயினன்
நுணங்கிய கேள்வியான் நுவல்வது ஆயினான்

"பெருமைக்குரிய அரசே! உனக்குக் கருத்துரை வழங்கும் தகுதி எங்களுக்கு இருக்கிறதா என்ன! உம்முடன் ஒப்பிடும் போது நாங்கள் அறிவில்லாதவர்கள். ஆனால் அப்படிக் கேட்பது உன்னுடைய தகுதியின் உயர்வைக் காட்டும்.

எனக்கு முன்பு பேசியவர்கள் அவ்வளவு பேர்களும் உத்தமர்கள். ஆராய்ந்து எண்ணுவதில் வல்லவர்கள். வருபொருள் உரைப்பதில் தேர்ந்தவர்கள். அவர்கள் எல்லோரும் வீடணனை ஏற்கலாகாது எனறு தெளிவுபடுத்திவிட்டார்கள். அவர்கள் சொல்லியபிறகு நான் என்ன சொல்ல இருக்கிறது?.

நீயே அறிவின் வடிவமாக இருப்பவன். நீ அறியாதது ஏது உண்டு? அவர்கள் சொல்லியது தூயதுதான். பிழையில்லை. ஆனாலும் இலங்கையில் எனக்கு ஏற்பட்ட அனுபவங்களின் அடிப்படையில் சிலவற்றை நான் இங்கு சொல்வது என் கடமை.

நம்மிடம் இப்பொழுது வந்துள்ள வீடணனை, நான் தீய அரக்கன் என்று சொல்ல மாட்டேன். வஞ்சகம் செய்யக் கூடும் என இவர்கள் கருதுவது போல எண்ணவும் மாட்டேன். இப்படி நான் சொல்லக் காரணங்கள் உள.

ஒருவன் நல்லவனா வஞ்சகனா என்பதை அவனுடைய முகமே தெளிவாக உணர்த்திவிடும். அந்த வஞ்சகத்தைத் தீயவர்களால் மறைக்க முடியாது. வஞ்சக எண்ணத்துடன் பகைவர்கள் நம்மிடம் அடைக்கலம் கேட்டு வருவார்களா என்ன! இருள் எப்பொழுது விளங்கித் தோன்றும்? ஒளி புகமுடியாமல் இருக்கும் போதுதான்.

பள்ளமான நிலத்தில் அப்படி இருள் படியும். குழிவிழுந்த நிலத்தில் ஒளி புகாது. குற்றமுள்ள மனத்தில் நேர்மை இருக்காது. ஒருவன் பேசத் தொடங்குவதற்கு முன்பே, அவனுடைய உள்ளக் கருத்தை முகம் காட்டி விடும்.

வீடணனுக்கு ஒரு செய்தி நன்றாகத் தெரிந்திருக்கிறது. வாலியை நீ கொன்று, கிட்கிந்தை மன்னனாகச் சுக்ரீவனை ஆக்கிய உன்னுடைய நீண்ட வில்லாற்றலையும் வெற்றித் தன்மையையும் அவன் தெளிவாகக் கேள்விப்பட்டு, சுக்ரீவனை நீ ஏற்றுக் கொண்டது போலத் தன்னையும் ஏற்றுக் கொள்வான் என்ற நம்பிக்கையுடன் இங்கு வந்துள்ளான். உன்னிடம் அடைக்கலமானால் வீடு பேற்றின்பத்தையும் நீ நல்குவாய் என்றும் தெரிந்துள்ளான். வீரக்கழலைக் கட்டியவராய் ஆர்ப்பரித்து அரக்கர்கள் செய்கின்ற அரசாட்சி நற்குணமுடையார் கூறும் நீதிநெறிப்படி நடைபெறவில்லை. ஆழிசூழ் உலகை எல்லாம் உன்னுடைய தம்பியாகிய பரதனுக்கு நீ விட்டுக் கொடுத்ததைக் கேள்விப்பட்டு மனம் உருகியவன் வீடணன். வாய்மையை நிலைநிறுத்த நீ செய்யும் அறச் செயல்களை நன்றாக அறிந்தவன்.

இப்போது இவன் இங்கு வந்த காலம் தக்க காலம் அன்று என இங்கு பேசியவர்கள் வாதிட்டார்கள். இராவணனை வீழ்த்திய வாலியையும் வீழ்த்தியவன் நீ. இலங்கைக்குள் நீ புகுந்தால் இராவணன் அழிவது உறுதி. அழிவின் விளிம்பில் மூலப்பரம் பொருளாகிய உன்னை வணங்க இங்கு வந்துள்ளான். இதுதான் அவன் வரவேண்டிய தக்க காலம்.

இன்னொன்றையும் நாம் எண்ணிப்பார்க்க வேண்டும். அரக்கர்கள் மாயத்தொழில் புரிவதில் வல்லவர்கள். எப்படி எப்போது என்ன செய்வார்கள் என்பதை நாம் உணர முடியாது. அவற்றை நன்றாகத் தெரிந்த வீடணன் இப்போது நம்மிடம் வருவது எவ்வளவு பெரிய பலன்களைத் தரும் என்று எண்ணிப் பார்க்க வேண்டும். அதே மாயைகளை நம்மிடம் இவர்கள் செய்யக்கூடும் என்று பலர் எண்ணியது பொதுவான் நோக்கம். ஆனால் எளிய கோலத்தில் நம்மை நாடிவந்த வீடணன் அப்படிச் செய்யமாட்டான். இது என் நம்பிக்கை.

இலங்கையில் நான் நாகபாசத்தால் பிணைக்கப்பட்டு இராவணன் முன் நின்றேன். இவனைக் கொன்று விடுங்கள் என்று அரக்கர் வேந்தன் ஆணையிட்டான். அப்போது வீடணன் தான் குறுக்கிட்டுத் தூதுவரைக் கொல்வது இழிவான செயல்; பழியும் பாவமும் வந்த சேரும் என்று சொல்லித் தடுத்தான்.

பெண்களைக் கொல்வது, வீரம் நீங்கிய நமக்குச் சமம் இல்லாதவரைக் கொல்வது, அழிவே செய்தாலும் தூதுவராக வந்தவரைக் கொல்வது அறநெறிக்கு ஏற்றதல்ல எனக் காரணங்கள் காட்டினான்.

பிராட்டியைத் தேடி ஒவ்வொரு மாளிகையாய் நான் அலைந்தபோது, வீடணன் அரண்மனைக்குள் நான் நுழைந்த போது நல்ல அறிகுறிகள் எனக்குத் தென்பட்டன. அவன் இல்லத்தில் அறிவை மயக்கும், பழிப்பதற்குரிய கள்ளோ, புலால் உணவுப் பொருள்களோ இல்லை. அவற்றை ஓரிடத்திலும் நான் காண முடியவில்லை. ஒரு பக்கம் வந்தவர்க்குத் தருமமும் தானமும் நடந்து கொண்டிருந்தன. மற்றொரு பக்கம் வழிபாடுகளும் நீதி முறைகளும் செய்து கொண்டு இருந்தார்கள். வல்லரக்கர் வீடு போல எனக்குத் தெரியவில்லை. வேதம் கற்றுத் தேறி, எல்லாச் சிறப்புக்களுடன் வாழும் அந்தணர்களின் வீடு போல அது இருந்தது.

வேறொரு குறிக்கத்தக்க சிறப்பான செய்தி. வீடணன் மகள் திரிசடை, என்னுடைய பிராட்டிக்குத் தோழியாக அசோக வனத்துள் இருக்கிறாள். தேவி துன்புறும் போதெல்லாம், "திருமகளே! நீ அஞ்ச வேண்டாம். உன்னை இராவணன் தீண்ட முடியாது. விருப்பமில்லாத எந்தப் பெண்ணைத் தொட முயன்றாலும் தலை வெடித்துச் சாவான் என அவனுக்குப் பிரமன் இட்ட சாபம் ஒன்றுண்டு. ஆதலால் நீ கவலைப்படாதே'' என்று ஆறுதல் கூறிக் காப்பவளின் தந்தை வீடணன்.

இராவணன் பெற்றிருக்கும் வரங்கள், அவனுடன் இயற்கையாக அமைந்துள்ள வஞ்சக மாயைகளும், இவை போன்ற மற்றவையும் உன்னுடைய வில்லிலிருந்து புறப்படும் அம்புகளால் அழிந்துவிடும் என உறுதியாக வீடணனுக்குப் புலப்பட்டுவிட்டது. ஆதலால் உன்னிடம் அடைக்கலம் கேட்டு வந்துள்ளான். ஆராய்ந்து பார்த்தால், அரக்கர் குலத்துள் இப்படி ஒருவனை - பெருவரங்கள் பெற்றவனை, பொங்கும் கருணையுடையவனை, மெய்ஞ்ஞான நாட்டம் கொண்டவனை - நாம் பார்க்க முடியுமா? அரக்கர்கள் அல்லாமல் பிறர் நடுவிலும் இப்படி ஒருவனைக் காண்பது அரிது.

நீ எதற்காகப் பிறவி எடுத்து வந்துள்ளாய் என்று உனக்குத் தெரியாதா? தேவர்கள், அசுரர்கள், பிரமன் உள்ளிட்ட முப்பெருங்கடவுளர்கள் ஆகிய இவர்களால் முடியாத செயலை, இராவணனை அழித்து அறத்தை நிலைநாட்டவிருக்கும் பெரும்பணியை முடிப்பதற்காக வந்துள்ளாய். தனக்குக் கேடு வந்த போது நம்மிடம் காப்பாற்றுங்கள் என்று கூவியழைத்து ஓடோடி

வந்தவனை, சந்தேகப்பட்டுச் சேர்த்துக் கொள்ளாமல் விட்டுவிட்டால், எங்கு கிணற்று நீர் தன்னை அடித்துக் கொண்டு போய்விடுமோ என்று பெருங்கடல் ஐயுறுவது போல ஆகிவிடும்.

சரி, இவன் பகைவனின் தம்பி. எதிரியின் கோட்டையிலிருந்து வந்திருக்கிறான் என்ற ஒரு காரணத்துக்காக இவனை ஏற்காமல் மறுத்துவிட்டால், அரசநீதிநூலை நன்றாக ஆராய்ந்த அறிஞர் கூட்டம் நம்மைப் பார்த்துச் சிரிக்கும். தவிர, ஒரு குலத்தில் பிறந்து தாயமுறை ஆட்சி பெற்றிருக்கும் தந்தையர், தமையர், தம்பியர் இவர்கள் கூட அரசுரிமைக்காக ஒருவருடன் ஒருவர் போரிட்டுப் பகைவராகிறார்களே.

ஆதலால் - இந்தக் காரணங்களை எல்லாம் கவனமாக எண்ணிப் பார்த்தால் - வீடணன் இங்கு வந்தது நல்லது, தக்க காலத்தில் நடந்துள்ளது என்றே எனக்குப் படுகிறது. ஆனால் நீ என்ன நினைக்கிறாய் என்று எனக்குத் தெரியவில்லை. உன் உள்ளம் வேறு. வேதம் வேறு அல்ல. கடல் போன்ற வேதநூலை முழுதும் கற்று உணர்ந்தவர் யார்? உன்னை முழுதாக உணர்ந்தவர் தான் யார்?"

இவ்வாறு பேருரை ஆற்றி முடித்தான் அனுமன். யார்? பிரமன் கூடக் கல்லாத அனைத்துக் கலைகளையும் சூரியனுக்கு முன்னே நடந்து சென்று கற்றவன். அலைகள் பொங்கி எழுந்து ஆர்ப்பரிக்கும் கடலைக் கடந்து பகைவர்களைக் கலக்கி உலகை வாழச் செய்தவன் அனுமன். கம்பருடைய சொற்கள் இவை. சொல்லின் செல்வன் எனத் தான் தந்த பட்டத்துக்கு ஏற்ற தமிழ்ச் சொற்களை மாலையாக்கி அழகும் சீர்த்தியும் மேன்மையும் பொங்கும் வண்ணம் பேசி முடித்தான்.

ஒன்று இங்கு கூர்ந்து கவனிக்கத்தக்கது. அனுமனுக்கு முன்னதாகப் பேசிய சுக்ரீவன் அனுமனின் அரசன். நீலன், சாம்பவான் எல்லாம் படைத்தலைவர்கள். இந்த மந்திராலோசனையில் இலக்குவனோ, அங்கதனோ பங்கு பெறவில்லை. அனுமன் ஒருவனே இலங்கை நிலவரத்தை - உண்மை நிலையை அறிந்தவன். ஆதலால் அறிவுக் கணிப்பு கொண்டு பேசி முடித்தான். தன்னுடைய மன்னனின், தோழர்களின் கருத்துகளுக்கு மாறாகவும் அவற்றை எதிர்த்தும் காரணங்களை வைத்தான். அடைக்கலமாக வந்தவனை ஏற்பது அரசமரபு. அதைச் செய்யாமல் விட்டுவிட்டால் பழியும் பாவமும் வந்து சேரும் என்று இராமனிடமே அஞ்சாமல் சொன்னான். அதற்கு மேல் சீதாப்பிராட்டி

உயிருடன் இருக்கக் காரணம் வீடணன் மகள் திரிசடை. அவள் செய்த உதவிக்கு ஈடாக அவள் தந்தையை ஏற்பது நல்லது. இல்லை என்றால் நன்றி கொன்ற பாவத்துக்கு ஆளாக வேண்டும் என்று துணிவுடன் எச்சரிக்கவும் செய்தான். இவற்றை எல்லாம் கூறிமுடித்த பின்னர், இவை எல்லாம் உனக்குத் தெரியாததல்ல. நீ கேட்டதால் சொன்னேன், ஆனாலும் என் முடிவு வீடணனை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதே என்று நிறைவு செய்தான்.

ஆதலால் இவன்வரவு நல்வரவே என உணர்ந்தேன் அடியேன்
உற்றேன்
வேதநூல் எனத்தகைய திருவுளத்தின் குறிப்பறியேன் என்று விட்டான்
காதல் நான்முகனாலும் கணிப்பரிய கலையனைத்தும் கதிரோன் முன்
சென்று
ஓதினான்; ஓதநீர் கடந்து பகை கடிந்து உலகை உய்யச் செய்தான்

அனுமன் பேச்சைக் கேட்டு உருகிப் போனான் இராமன். வெறும் சொற்கள் என்று அனுமன் பேசியவற்றைச் சொல்வது பிழை. அமிழ்தை வாரித்தந்தது போல இருந்தது. கேட்ட உணர்வோ அதை வாரி வாரி உண்டது போல இருந்தது. அவன் பேசி முடிக்கும் வரை யாரும் குறுக்கிடவில்லை. இராமனும் செவிமடுத்துக் கேட்டான். மற்றவரை எதிர்த்துப் பேசினாலும், இராமனுக்குத் துணிச்சலுடன் தன் கருத்தைக் கூறியபோதும் பேச்சில் ஆணவம் இல்லை. அடக்கமே மிகுந்திருந்தது. அறிவு - அடக்கம் - துணிவு - எதிர்காலத்தைக் கணிக்கும் நுட்பம் - சொல்லும் நேர்த்தி இவை இராமனை மிகவும் கவர்ந்தன. அனுமன் அமைச்சன் அல்லன். ஆனாலும் மந்திரிக்கு அழகு வரும் பொருள் உரைத்தல் என்பதற்கு வடிவமாக மேன்மை பெற்றான். அவனை என்ன சொல்லி அழைப்பது?

மாருதி வினயவார்த்தை செவிமடுத்து அமிழ்தம் மாந்திப்
பேரறிவாள நன்று நன்றெனப் பிறரை நோக்கிச்
சீரிதுமேல் இம்மாற்றம் தெளிவுறத் தேர்மின் என்னா
ஆரியன் உரைப்பதானான் அனைவரும் அதனைக் கேட்டார்

பேரறிவாளன் என்று அனுமனுக்கு இராமன் பட்டம் தந்தான். கூனுடைக் குரங்கு என்றான் இராவணன். அதனுள்ளே உலகிற்கே வழிகாட்டும் உயர்சிறப்பை - பேறறிவைக் கண்டான் இராமபிரான். தலைவர்களுக்கு - உயர்பதவிகளில் இருப்பவர்க்கு - ஒரு

எடுத்துக்காட்டகவும் இராமன் திகழ்ந்தான். செயற்கரிய செய்பவர்களை மற்றவர்கள் முன்னால் புகழ வேண்டும். தங்கள் கீழ் பணிபுரிபவர்களைத் தக்க காலத்தில் பெருமைப்படுத்த வேண்டும் என்றும் வணங்கிய வாய் உடையவர்கள் என்றும் வாழ்வில் உயர்வு பெறுவார்கள் என்பதை இந்த நிகழ்ச்சி மெய்யாக்குகிறது.

பிறகு மற்றவர்களிடம் தன்னுடைய கருத்துக்களை விளக்கமாகச் சொல்லி வீடணனுக்கு அடைக்கலம் தரும் தன்னுடைய முடிவையும் இராமன் தெளிவாக்கினான். புறவாவைக் காப்பாற்றிய சிபி மன்னன், முதலையிடமிருந்து யானையைக் காத்த திருமால், எமனிடமிருந்து மார்க்கண்டனைக் காப்பாற்றிய சிவபெருமான் என்று வரிசையாக, அடைக்கலமாக வந்தவர்களை ஏற்றுக் கொண்டவர்களைப் பட்டியலிட்டான் இராமன்.

மற்றினி உரைப்பது என்னே மாருதி வடித்துச் சொன்ன
பெற்றியே பெற்றி

வேறு என்ன பேச்சு வேண்டிக் கிடக்கிறது. அனுமன் சொன்னது தான்; பொருளுடைய சொல், அதை ஏற்பது என முடிவாயிற்று. வெற்றி வந்தாலும் தோல்வியே வந்தாலும் இதிலிருந்து விலகப் போவதில்லை என்றான் இராமன். அடைக்கலம் பகர்கின்றானைப் பற்றுதல் அன்று வேறு வேண்டாம் எனத் தெளிவாக்கினான். வீடணனை ஏற்றுக் கொள்ளக்கூடாது என வாதிட்டு எதிர்ப்பு தெரிவித்த சுக்ரீவனையே அனுப்பிக் கூப்பிட்டு வருமாறு பணித்தான். 'கதிரோன் மைந்த! கோதிலா அவனை நீயே என்வயின் கொணர்தி' என்றான்.

வீடணன் வந்தான். 'கார்முகில் கமலம் பூத்து' இருப்பது போன்ற அருளும் அழகும் கண்டு மெய்மறந்து இராமன் காலில் விழுந்து வணங்கினான். அவனை ஏற்றுத் தன்அருகில் இருக்கை அளித்து அமரச் செய்தான். நாயகன், தம்பியைக் கூப்பிட்டு இலங்கை அரசனாக வீடணனுக்கு முடிசூட்டுமாறு கட்டளை இட்டான். பரதனுக்குத் தந்த திருவடிநிலைகளே தனக்குப் போதும் என்று வீடணன் விண்ணப்பித்தான். தனக்கு வந்த தம்பியர் வரிசையில் ஆறாவது இடம் தந்து - நின்னொடும் எழுவர் ஆனோம் - என்று தன்னையும் உள்ளடக்கிய உடன்பிறப்புத் தத்துவத்தை இராமன் நிலைநிறுத்தினான்.

## 19. வீடணன் புகழ்ந்த அனுமன்

போரைத் தொடங்க வேண்டும். அதற்கு முன்பு எதிரியின் வலிமை, படைவலிமை, துணைவலிமை இவற்றைப் பற்றி முழுமையாகத் தெரிந்து கொள்வது ஒரு மன்னனின் கடமை. இராமன் வீடணனைக் கூப்பிட்டு இலங்கை நகர் அமைப்பு, கோட்டை, படைவீரர்கள் எண்ணிக்கை முதலியவற்றைப் பற்றி விபரமாகச் சொல்லுமாறு வேண்டினான். அவ்வாறே அவனும் சொன்னான்.

இலங்கை நகரின் கோட்டை வாயில்கள், அவற்றைக் காக்கும் தலைவர்கள், கும்பகருணன், இந்திரசித்து உள்ளிட்ட பெருவீரர்கள், இராவணனுடைய தனிப்பெரும் பண்புகள், கூடவே அவனுடைய பலவீனங்கள்.

> "இராவணன் என்று பேர்கொண்டவனின் - மலைகள் அழிந்தாலும் தான் அழியாத தோள் வலிமையுடையவனின் மகாவீர மேம்பாட்டை என்னால் முழுவதுமாகச் சொல்ல முடியாது. அவன் இன்று அழிவானா நாளை அழிவானா சிலநாள் கழித்து அழிவானா தெரியாது. ஆனால் அவனை அழிக்க உன்னால் மட்டுமே முடியும் பிறர்கையில் அவன் சாகாமாட்டான்"

என்று முடித்தான்.

"பெருமானே! உன்னிடம் நான் இன்னொன்று சொல்ல வேண்டும். இலங்கையில் என் கண்முன்னால் நிகழ்ந்தவைகள்; அனுமனால் அங்கு நடத்தப்பட்டவை பற்றிய செய்தி அது. அனுமனின் இருப்புத் தடியில் அடிபட்டு அழிந்தவர் எண்ணற்ற அரக்கர்கள். கடல்மணலை எண்ணினாலும் எண்ணலாம் அனுமனால் கொல்லப்பட்டவரை எண்ண முடியாது. கோட்டை மதில் மீது கொடிபறக்கக் கம்பீரமாக இருந்த இலங்கைத் திருநகர் எரிந்து சாம்பலாயிற்று.

அனுமனின் சினம் எவ்வளவு கொடுமையான விளைவைத் தரும் என்பதை நேரில் கண்டேன். அரக்கர்களின் உடல்களிலிருந்து சிந்திய இரத்தக்கறையுடைய ஊன்துண்டுகள் மணல் குன்றுகள்

போலக் கடலில் காட்சி தருகின்றன. நெருப்பு போலப் பொங்கி எழும் என் அண்ணன் மகன் அக்ககுமாரனை அவனுடைய மலைபோன்ற வில்லோடு சேரித்துத் தூக்கித் தரையில் தேய்த்துக் குழம்புபோல் ஆக்கிவிட்டான்.

தேவலோகக் காவலையும் உடைத்துப் பொடியாக்கிய மகாவீரர்கள் ஐந்து பெரும்படைத்தலைவர்கள்; அவர்களும் அனுமனால் அழிந்தார்கள். மலைபோன்ற தோற்றமுடைய கிங்கரர்கள் சிவன் எரித்த முப்புரத்து அசுரர்கள் போல இறந்தார்கள். கடல்போன்று படையுடன் வந்து ஆயிரமாயிரம் அம்புகளை அனுமன் மீது ஏவிய சம்புமாலியும் உயிர்துறந்தான். எல்லாரும் அழிந்தனர்; எல்லாமும் அழிந்தன. இவற்றைப் பார்த்த இலங்கை வேந்தன் ஏழுநாள் மண்ணில் நடமாட முடியாமல் விண்ணிலேயே இருந்தான்.

எல்லாம் முடிந்தபின்பு, இராவணன் மறுபடியும் இலங்கையை உண்டாக்குமாறு பிரமனுக்குக் கட்டளையிட்டான். புகழ்பெற்ற வீரனே! கரன் உன் கையால் இறந்ததோ, வாலி உன்னால் கொல்லப்பட்டதோ அதுவரை எனக்குப் பெரிதாகத் தோன்றவில்லை. அவற்றைக் கேள்விப்பட்டு நான் இங்கு வரவும் இல்லை. ஆனால், இலங்கை எரிந்ததையும் அரக்கர் அழிந்ததையும் கண்டேன். அதற்குக் காரணமான அனுமனின் தலைவனை அடைக்கலமாகப் புகுவதே சரி என்று கருதி வந்தேன்".

வீடணன் தன் பேச்சை முடித்துக் கொண்டான். இராமன் அவற்றைத் தன் திருவுள்ளத்தில் பதித்தான். ஒரு கணத்தில் சீதையின் பிரிவால் மெலிந்திருந்த அவனுடைய தோள்கள் கூடப் பருத்துவிட்டனவாம். பிறகு அனுமனைப் பார்த்து இவை சொன்னான்!

"வீரனே! பாடுபட்டுப் பலகாலம் திரட்டிய அரக்கர் படையை ஒரே நாளில் பாதிக்கும் மேல் நீ தனிஒருவானக இருந்தே கொன்றுவிட்டாய். இலங்கையையும் எரித்தாயிற்று. இனி நான் என்ன செய்வதற்கு இருக்கிறது? வீடணன் சொல்லச் சொல்ல உன்னுடைய தோளாற்றல் ஐயமின்றித் தெளிவாகியது. பிறகு ஏன் நீ சிதையை மீட்காமல் இங்கு வந்தாய்? நான் என்னுடைய வில்லாற்றலை அவர்களுக்குக் காட்டவேண்டும் என நீ விரும்பினாய் போலும்!

பொன்னால் செய்யப்பட்டது போன்ற வலிய தோளுடைய வீரனே! உன்னுடைய ஆற்றலால் சிதைந்து போன இலங்கையை அடைந்தோம். 'இனி வேறு சில வீரச்செயல்களைப் புரிந்து

காட்டுவோம். பெரும்புகழை எய்தும் நேரம் வந்து விட்டது' என்று எண்ணவும் முடியாதபடி நீயே எல்லாம் முடித்தாய்.

நல்வினை முழுதுமாக ஒருருவம் கொண்டதுபோல வந்தவனே! நீ இலங்கைக்கு எங்களுக்கு முன்னதாகவே போய் வலிமையைக் காட்டிவிட்டதால் என்னுடைய ஆற்றலும் இராவணன் வீரமும் உன்னுடைய தாகவே ஆகிவிட்டன. மூவுலகங்களையும் முன்னர் இருந்தவாறே படைக்கும் தொழிலைக் கொண்ட பிரம்மனின் பதம் இனி - இப்பிறவிக்குப் பின்னர் - உன்னை வந்து சேரும். இது என் ஆணை"

என்று இராமன் அனுமனைப் பாராட்டினான். பலர் கூடியிருந்த அவையில் இப்படித் தலைவன் தொண்டனைப் புகழ்ந்தது அனுமனுக்கு நாணத்தை ஏற்படுத்தியது. நின்று கொண்டு இராமன் பேசியதைக் கேட்டவன், அவன் திருவடிகளில் விழுந்து வணங்கினான். பேச்சு வரவில்லை; பேச விரும்பவும் இல்லை. நாணம் கொண்டவனாக நின்றான்.

"என்று கூறலும் எழுந்து இருநிலனுற இறைஞ்சி
ஒன்றும் பேசலன் நாணினன்"

இந்தப் பகுதியில் சில குறிப்புகள். அனுமன் பிராட்டியிடம் தன் தோள்மீது ஏறி அமர்ந்து கொள்ளுமாறு வேண்டியபோது, 'என்சொல்லினால் சுடுவேன், அது அவன் வில்லின் ஆற்றலுக்கு மாறு' என்று மறுத்தாள். தன்னுடைய வில்லாற்றலை உலகம் காண வேண்டும் என்பதற்காகச் சீதையை விட்டு விட்டு அனுமன் வந்தானோ என்று இராமன் கேட்டான். ஈருடல் ஓருயிராய் இருக்கும் தெய்வங்களின் நெஞ்சங்களில் நினைவு மட்டும் வேறாகவா இருக்கும்?.

அதே போல அனுமன், தான் செய்த வீரச் செயல்களை முற்றிலுமாகக் கூறவில்லை; கோடிட்டுக் காட்டினான். ஆனால் அவை முழுவதையும் தலைவன் அறியத்தான் வேண்டும். யார் சொல்வார்கள்?. அவற்றையெல்லாம் நேரில் பார்த்த ஒருவரே கூட்டாமல் குறைக்காமல் சொல்லமுடியும். இராமன் அருகில் அப்படி யார் இருந்தார்கள், வீடணனைத் தவிர. அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டான் இலங்கை அறவாளன். தன்னை இராமனிடம் சேர்த்த அனுமனின் உயர்ந்த ஆற்றலைப் பேசிப் பிரமபதம் தேடித் தந்தான்.

# 20. மூண்டது போர்

போரைத் தொடங்க வேண்டும். இலங்கைக்குள் நுழைய வேண்டும். இவற்றுக்கு என்ன வழி? கடலைத் தாண்டுவதே முதலில் செய்யக் கூடியது. அதற்கு வழி சொல்லுமாறு வீடணனை இராமன் கேட்டான். கடலை வழிபட்டு வேண்டினால் அது நடக்கும் என்று வீடணன் சொன்னான். கடலோரத்தில் அமர்ந்து இராமன் ஏழுநாள்கள் தவம் செய்தும் கடலுக்கரசனான வருணன் வரவில்லை. இராமனுக்குச் சினம் வந்தது. அம்பு தொடுத்து அழிப்போம் எனக் கருதி இலக்குவனிடமிருந்து வில்லை வாங்கினான். அம்புகள் வரிசையாகப் பாய்ந்தன. கடலுள் எல்லாம் எரிந்தன; பொசுங்கின; நீரும் கொதித்தது. வருணன் வரவில்லை பிரமாஸ்திரத்தை விட்டே அழிக்கவேண்டும் என்று இராமனுக்குத் தோன்றியது. அப்போது அழுத கண்களுடன், அன்பால் உருகிய நெஞ்சத்துடன், அச்சத்துடன் கைகூப்பித் தொழுதவனாய் வருணன் தோன்றினான்.

நெடுங்கடலின் முடிவில் நின்றதால் தான் உடனே வர முடியவில்லை என்றும், தான் சொல்வது மெய் என்பதைக் காட்டுவதற்காகக் கடலுள் எரிந்து கொண்டிருந்த நெருப்பின் மேல் நடந்து வந்தாகவும் சொல்லி இராமனைத் தொழுதான்.

ஆழி நீ அனலு நீயே அல்லவை எல்லாம் நீயே
ஊழி நீ உலகு நீயே அவற்றுறை உயிரும் நீயே
வாழியாய் அடியேன் நின்னை மறப்பனோ வயங்கு செந்தீச்
சூழுற உலைந்து போனேன் காத்தருள் சுருதி மூர்த்தி

"வேதங்களின் நாயகனே! இந்தக் கடலே நீ தான். அதில் இப்போது எரிகின்ற தீயும் நீதான். இவைதவிர உலகில் தென்படும் எல்லாப் பொருள்களும் உன் வடிவமே! உலகு அழியும் நாளாகிய ஊழிக் காலமும் நீ தான். பெருமானே! நீ வாழ்க. உன்னை நான் மறப்பேனா? கடலின் நீண்ட மூலையில் நின்று கொண்டிருந்தேன். சுற்றிலும் தீ. உடனே வரமுடியாமல் போயிற்று. வேறு ஒன்றும் இல்லை "மன்னித்தருள வேண்டும்".

இதுபோல ஏழு பாடல்கள் வருணன் துதியாக வருகின்றன. இறைவனின் பரத்துவத்தை, இராமனின் பரம்பொருள் தன்மையை நினைவூட்டும் பாடல்கள்; படித்து நாளும் ஓதத்தக்கன.

வருணனின் சொற்களைக் கேட்டு இராமபிரானுக்கு இரக்கம் மேலிட்டது 'சரி; தொடுத்த அம்பிற்கு ஏது இலக்கம்? என்று கேட்டான். மருகாந்தரம் என்னும் தீவில் வாழ்ந்த அவுணரை அழிக்க வேண்டினான். அம்பு புறப்பட்டது; அவுணர் மாண்டனர்; ஏவிய அம்போ மீண்டு இராமனிடம் வந்துவிட்டது. பிறகு இராமன் வருணனிடம் தன்னுடைய நோக்கத்தைத் தெரிவித்தான். கடலில் பாலம் கட்டிப் போகுமாறு அவன் சொன்னான். அப்படியே பலருடைய பலவகை முயற்சிகளால் பாலம் உருவானது. மலைகள், மரங்கள், மண், சேறு, காடுகள், கருமண் குன்றங்கள் இவற்றை எண்ணற்ற அளவில் கொண்டுவந்து கொட்டி நிரப்பி, நிறுத்திப் பாலம் கட்டப்பட்டது.

இராமன் பார்த்துப் பெருமிதம் கொண்டான். அந்தப் பொறுப்பை ஏற்றுத் திறம்பட முடித்த நளனுக்குச் சிறந்த மாலைகளைப் பரிசாக அளித்தான். இராமன் முன் செல்ல வானரப்படை இலங்கை நோக்கிப் புறப்பட்டது. இலங்கையுள் நுழைந்து தகுந்த மலைப்பகுதி ஒன்றில் பாடிவீடு அமைந்துத் தங்கினர். அப்போது இராவணனின் ஒற்றர்களாக அங்கு வந்த சுகன், சாரணன் என்ற இரண்டு அரக்கர்கள் பிடிபட்டனர். அவர்களை இராமனிடம் கொண்டு வந்தனர்

இராமன் அரக்கர் வேந்தனுக்கு அவர்கள் மூலம் ஒரு செய்தி சொல்லி அனுப்பினான். இலங்கைக்கு அரசனாக வீடணனுக்கு முடி சூடியது; கடலைக் கடந்து வானரப்படை வந்தது, இரண்டு பெரும் வில்லுடன் வீரர் வந்தது. அந்த வில்லின் ஆற்றல் இவற்றைச் சொல்ல வேண்டும் என அனுப்பினான். செய்தி இலங்கைக்குப் போனது.

இராவணன் பலவகையான திட்டங்களை வகுத்தான். அவனைச் சுற்றியிருந்த பலரும் தத்தம் கருத்துக்களை எடுத்துக்கூறி செய்யதக்கது இன்னது என்று ஆளுக் கொன்றைச் சொன்னார்கள். இராவணனின் தாயைப் பெற்ற மாலியவான் துணிந்து இராமன் திருமாலின் அவதாரம், சீதை திருமகள் - ஆதலால் தெய்வசாபத்துக்கு ஆளாகி அழியவேண்டாம் எனக் கூறினான். ஆணவ வடிவமான இராவணன் காதில் இவை விழவில்லை. சிலர் அவனுடைய

வெறிக்குத் தூபம் போடுவது போலப் பேசினார்கள். அவனும் கூடத் தனக்குத் தோற்று ஓடிப்போன இந்திரன் உள்ளிட்ட தேவர்களைப் பற்றிய செய்திகளைச் சொல்லிச் சொல்லிச் செருக்கால் நிமிர்ந்தானே தவிரக் கேடு வந்துள்ளது என்பதை உணரவில்லை. உயரமான ஒரு பெரிய கோபுரத்தின் மீது ஏறி நின்று தொலைவில் இருந்த வானரப்படையைப் பார்த்தான்.

எதிர்ப்புறத்தில், இராமன் பாடிவீடு அமைத்திருந்த சுவேல மலை உச்சியில் ஏறி நின்று இலங்கை நகரின் அமைப்பை முழுவதுமாகப் பார்த்தான். வியந்து போனான். எதிரியின் தலைநகராக இருந்தாலும் அதன் சிறப்பு அவனை ஈர்த்தது. இலக்குவனிடம் தான் கண்டவற்றைக் கூறிக்கொண்டு இருந்தான்.

கோபுரத்தின் மீது இருந்த இராவணனுக்கு இராமன் உருவம் தெரிந்தது. எந்த இராமன்? வேதத்தின் சாரம் என்று சொல்லப்படும் உபநிடத்து அமுதை, அந்த வேதங்கள் தேடும் மூலமான பரம் பொருளை - இராமனைத் தன் நிமிர்ந்த கண்கள் கொண்டு பார்த்தானாம்.

ஆரணத்து அமுதை அம்மறை தேடும்
காரணத்தை நிமிர் கண் கொண்டு கண்டான்.

அவன்தான் இராமன் என்று தான் உணர்ந்து கொண்டாலும் மற்றவர்களை வினவினான். இதுவும் ஒருவகை ஆணவம் தான். உள்ளே ஒரு அதிர்ச்சி ஏற்பட்டாலும் இந்தப் புன்தொழில் குரங்குகள் - ஈன மானிடர் என்ற ஏளனமே அவனுக்கு மேல் ஓங்கியது. அழிவு வரும் நாளில் செருக்கு தரும் போதை அது.

மலைமேல் இருந்த இராமன், வீடணனிடம் எதிர்ப் படையில் உள்ள அரக்கர்கள் யார் யார் என்பதைத் தெரிவிக்குமாறு கேட்டான். முதலில் அவன் இராவணனைச் சுட்டிக் காட்டினான். யாரும் எதிர்பாராத வண்ணமாகச் சுக்ரீவன் வானில் தாவி இராவணன் மீது பாய்ந்தான். 'நீல மலையின் முன்னால் கயிலைமலை' நின்றது போல அவன் முன் நின்றான். 'யார் நீ எதற்காக வந்தாய்?' என்று இராவணன் வினவியதும் அவற்றுக்கு விடைசொல்லாமல் இராவணனைச் சுக்ரீவன் தாக்கினான். பொங்கிய கோபத்துடன் சுக்ரீவனைக் கீழே தள்ளித் தேய்த்தான். இப்படி மாறிமாறித் தனிப்போர் - மற்போர் நடந்தது. சளைக்காமல் இருவரும்

போர்புரிந்தனர். சுக்ரீவன் இராவணனின் தலைகள் மீது பாய்ந்து அவன் சூடியிருந்த மணிமுடிகளைக் கீழேதள்ளி மாணிக்கக் கற்களைப் பறிந்துக் கொண்டு இராமனிடம் ஓடிவிட்டான். மகுடம் இழந்து கேவலத்துக்கு ஆளானான் அரக்கன்.

அமைச்சர்களை வரவழைத்துச் செய்வது என்ன என்பதைப்பற்றி இராவணன் ஆலோசனை செய்தான். படைகளை அணிவகுத்து நிறுத்த ஆணையிட்டான். போர்தொடங்கும் முன்பு அறநூல்களின் விதிகளுக்குட்பட்டு இராமன் அங்கதனைத் தூதுவனாக இராவணனிடம் அனுப்பினான். அவனும் சென்று சொல்ல வேண்டிய செய்திகளை முறைப்படி சொல்லியும் இராவணன் அடங்கவில்லை அங்கதன் திருப்பினான்.

**"இன்றுபோய் நாளைவா"**

கோட்டையின் நான்கு வாசல்களிலும் நான்கு பெரும் வீரர்கள் தலைமையில் படை அணிவகுப்பு. அதேபோல இராமனின் வானரப் படைகளும் கோட்டையை முற்றுகை இட்டுள்ளன. இராமன் வீரர்கள் போருக்கு வருமாறு அரக்கர்களை அழைத்து உள்ளே புகுந்தனர். கடுமையான போர். பெருவீரர்கள் மாண்டு ஒழிந்தனர். செய்தி கேட்ட இராவணன் தானே போருக்குப் புறப்பட்டான். தேவர்களுடன் போர்புரிந்து வென்றவன்; கயிலை மலையைத் தூக்கமுயன்றவன்; போருக்கு வந்தான்.

வானரர்களைத் தேய்த்துக் குவித்தான்; சுக்ரீவனும் சோர்ந்து போனான். மேற்கு வாயிலில் படைப்பொறுப்பை ஏற்றிருந்த அனுமன் வடக்கு வாயிலுக்கு ஓடி வந்தான். தன்னுடைய மன்னனான சுக்ரீவனுக்கு ஒரு துன்பம் என்று கேள்விப்பட்டவுடன் கணமும் வீணாக்காமல் அங்கு தோன்றினான்.

"மிக்க தோள் வலிமை உடைய அரக்கனே! சுக்ரீவனை விட்டு என்னுடன் போர்புரிய வா" என்று சொல்லிக் கொண்டே ஒரு மலையைப் பறித்து எடுத்து இராவணன் மீது வீசினான். அதை ஒரு அம்பால் பொடியாக்கினான் அரக்கன். இரண்டாவது ஒரு மலை; இராவணன் தோளில்பட்டு அங்கிருந்த வளையத்தைக் கீழே விழச் செய்து நொறுங்கிப் போனது. மூன்றாவது மலையைப் பறிக்க முயன்று கொண்டிருந்த அனுமன் மீது பத்து அம்புகளை ஒரே சமயத்தில் ஏவினான். அவற்றை அஞ்சாத துணிவுடன் அனுமன் தன்னுடைய உடம்பில் ஏற்றுக் கொண்டான்.

"யார் இது செய்ய கிற்பார் என்று கொண்டு இமையோர் ஏத்த (யாரால் இதுபோலச் செய்யமுடியும் என்று தேவர்கள் புகழ்ந்து கொண்டாட) நின்ற அனுமன் ஒரு மராமரத்தைப்பறித்து வீச, இராவணனின் தேரோட்டி இறந்து போனான்; அந்த மரத்தால் பல அரக்கரும் மாண்டனர். இதைப் பார்த்த இராவணன், இன்னொரு சாரதியைத் தேர் ஓட்டச் சொல்லி, தெய்வத்தன்மை பொருந்திய நூறு அம்புகளை அனுமன் மேல் எய்தான். அவன் உடலில் அவை நுழைந்து இரத்தப் பெருக்கை ஏற்படுத்தின. தளர்ச்சியடையாத அனுமனும் தளர்ந்து போனான்.

அப்போது அங்கு இலக்குவன் வந்தான். அவனுடைய வில்லின் நாண் ஒலி கேட்டுப் பெரும்பெரும் வீரர்களும் கலங்கினார்கள். ஒரு கணம் இராவணனும் அதிர்ந்து போனான். இருவருக்கும் இடையே வில்போர் தொடங்கிற்று. இலக்குவன் அவனுடைய அம்பறாத் தூணியையும் சிதைத்து விட்டான்.

அனுமன் சோர்விலிருந்து மீண்டான். இராவணன் முன் போய் நின்று எதிர்த்தான். தன்னுடைய வானளாவிய பேருருவத்தை அவன் முன் எடுத்துக்காட்டி மூவுலகையும் வென்றவனுக்கு இறுதிக் காலம் வந்துவிட்டது என எச்சரித்தான். "பல பேசி என்ன பயன்? இந்தக் குரங்கின் ஒரு கைக்குத்தை நீ தாங்க வல்லாயோ? பிறகு நீ என்னைக்குத்து. நான் இறக்கா விட்டால் கூட உன்னோடு சண்டையிடமாட்டேன்" என்று கூறினான்.

**பகைவன் புகழ்தல்**

இராவணனுக்கு ஒரே வியப்பு. தன் முன்னால் இதுவரை யாரும் துணிந்து இப்படி வந்து நின்றதில்லை. அனுமனைப் பார்த்துச் சொன்னான்.

> "பெருவலிமை உடையவனே! ஒரு வீரன் எப்படிப் பேச வேண்டுமோ அப்படியே நீ பேசினாய். யாரும் ஒப்பில்லாத மேன்மை படைத்த என்முன்னே வந்து நிற்பவர் யாரும் இல்லை. நீ மட்டுமே அப்படி ஒரு அஞ்சாமை பெற்றிருக்கிறாய். என்னை எதிர்த்து இப்படி நின்றதால் உலகுள்ள அளவும் உன்புகழ் இருக்கும்.

காரில் கரியவன் மாருதி கழறக் கடிது உகவா
வீரற்கு உரியது சொற்றனை விறலோய் ஒரு தனியேன்
நேர்நிற்பவர் உளரோ பிறர்நீ அல்லவர் இனிநின்
பேருக்கு உலகளவே இனி உளவோ பிற என்றான்

பெருமை பெற்றவனே! தனியாய் ஒருவனாக நிற்கிறாய். கையில் எந்தப் போர்க்கருவியும் இல்லை. என்னுடைய சுற்றத்தாரை நீ கொன்றவன். உயர்ந்த ஒரு பெரிய தேரின் மீது ஏறி, கொடிய வில்லை வளைத்து வலிமை மிக்க படைவீரர்களுடன் வந்தவன் நான். என் முன்னால் நிற்கிறாய். உனக்கு நிகரானவர் என்று யாரையேனும் இந்த உலகில் சொல்ல முடியுமா?

உண்மையில் நீ மிகுந்த துணிச்சல் உடையவன் தான். மூன்று உலகங்களிலும் வாழ்கின்ற தேவர்களானாலும் சரி என் முன்னால் வந்து நின்று யாரும் போருக்கு வரமாட்டார்கள். ஒருவேளை அப்படி யாராவது வந்தால், அவனுக்குப் பித்துதான் பிடித்திருக்க வேண்டும். இதில் ஐயமில்லை. ஆனால் நீயோ என் முன் நின்றதோடு அல்லாமல் மார்பில் குத்து என்கிறாய்.

போர் செய்ய என்னிடம் வலிய இருபது கரங்கள் உள்ளன. உலகத்தை வென்றவன் என்ற பெரும் புகழும் எனக்கு உண்டு. கொடிய யானைகளும் தங்கள் வலிமை இழக்கும்படி, பெருந்தோற்றத்துடன் வருகின்றவனே! நீ இரண்டே கைகளைப் பெற்றுள்ளாய். இந்தச் சூழலில் நான் குத்துகிறேன்; பிறகு என்னைக் குத்து என்கிறாய். என்ன பெருமை எனக்கு! என்ன வெற்றி என்னுடையது!

எல்லாத் திசைகளையும் ஒருசேர வென்ற சிறப்பும் புகழும் ஒரு சேர அழியும் படியாக ஒரு பழி உன்னால் எனக்கு இப்போது நேர்ந்து விட்டது. என்னுடைய உயிர்போன்ற மகனை - அக்ககுமாரனை - தரையிலே தேய்த்து ஒழித்தாய். அப்போது பரந்த அந்தச் செம்புனல் - இரத்தம் - இன்னும் உலறவில்லை அதற்குள்ளாக என்முன் வந்து இப்படிப் பேசுகிறாய்!

என்னுடைய கையறு நிலையை நன்கு உணர்ந்தவனாகி நீ பேசினாய். இப்படிச் சொல்வது இயல்புதான்; பொதுவானது தான். வேறு பேசுவதற்கு இனி என்ன இருக்குகிறது? வானமும் மண்ணும் நடுங்குமாறு ஆட்சி செய்தவன் ஒரு குரங்கின் வாய்வீச்சுக்கு அஞ்சினான் என்று உலகம் சொல்வதற்கு நாணி நிற்கின்றேன். உலகம் எல்லாம் காணும்படியாக நீ வந்து என் மார்பில் குத்துவாயாக".

இராவணனின் சொற்கள் ஒரு கணம் அனுமனையும் திகைக்க வைத்தது. எதிர்நிலையில் உள்ள, தன்னிகரற்ற பெருவீரன் எதிரியின் தொண்டனைப் புகழ்வது என்றும் நடவாது; எங்கும் நடவாது. தாவிக்குதித்துத் தன்முன் வந்த ஓர் அற்பக் குரங்கின் சூளுக்குக்

கட்டுப்பட்டுத் தன்னைக் குத்தவும் அனுமதித்தான் இராவணன் என்பது அவனுடைய பெருமையைக் கூட்டவே செய்தது.

"வீரத்திறம் இது; நன்று இது" எனப் பாராட்டியவனாய் அனுமன் இராவணன் தேர்மீது விரைந்து ஏறினான். கண்கள் கனல் சிந்தும்படியாக, தன்னுடைய வயிரம் போன்ற கையினால் அவனுடைய மாமார்பில் - பெரிய மார்பில் - குத்தினான். இராவணன் கவசம் பிளந்தது; சூடியிருந்த மாலைகள் சிதறி வீழ்ந்தன.

குத்து விழுந்தது இராவணன் மார்பில் தான். ஆனால் அந்தப் பொழுதில் மலைகள் மணல்களாய் உதிர்ந்தன; இராவணன் தலைகள் சாய்ந்தன; அரக்கர்கள் உயிர் சிந்திற்று. கடல்கள் கரைகளைக் கடந்தன. வில்களில் நாண்கள் அறுந்தன. இராவணன் மார்போ ஒளிவிட்டு மின்னிற்று. எட்டுத் திசைகளை வென்றதன் அடையாளமாக ஏந்தியிருந்த யானைகளின் கொம்புகள் முதுகின் வழியாகக் கழன்று போயின்.

வானவர்கள் முழக்கம் ஒரு பக்கம்; மாலை, மலர்கள் சொரிந்து மகிழ்ந்தவர்கள் ஒரு பக்கம். அஞ்சி அடங்கிய அரக்கர் கூட்டம் ஒருபக்கம்; அனுமனின் வெற்றி மறுபக்கம். கொஞ்சநேரமே இந்தச் சோர்வு. பிறகு அனுமனைப் பார்த்து இராவணன் கூறினான்;

"அனுமனே! என்னைத் தாக்கி ஒரு கணம் சோர்வடையச் செய்துவிட்டாய், இப்பொழுது என்னுடைய ஆற்றலையும் அதனால் உனக்கு உண்டாகும் விதியையும் பார்.

வலிமை வலிமை என்று பேசுகிறார்களே, வீரனே! அது உன்னிடத்தில் தான் உள்ளது. உன்னை விட்டு எஞ்சியிருப்பவர் எல்லாம் வீரர் அல்லர்; அலிகள் என்றே சொல்லத் தக்கவர். உலகேழையும் வெல்லும் ஆற்றல் மிக்கவனே! 'நீயும் சோர்ந்து போவாய்' என்று பிரமதேவனே சொன்னாலும் சிறிதும் சலிப்படையாத நான், இன்று உன்னால் சோர்ந்து போனேன். நீ என்னை வென்று விட்டாய்.

**வலி என்பதும் உளதே அது நின்பாலது மறவோய்**
**அலி என்பவர் புறநின்றவர் உலகேழையும் அடர்த்தாய்**
**சலி என்று எதிர் மலரோன் உரைதந்தால் இறை சலியேன்**
**மெலிவு என்பதும் உணர்ந்தேன் எனைவென்றாய் இனி விறலோய்.**

இனி நான் சொல்ல இருப்பது ஒன்றே ஒன்று தான். உன்னுடைய மார்பிலே இப்பொழுது குத்தப் போகிறேன். ஊழிக் கால முடிவில் இறங்கும் பேரிடி போல அது இருக்கும். அதற்குப் பிறகும் நீ உயிரோடு இருப்பாயானால் உன்னைத் தவிர எல்லாரும் இறந்தாலும் நீ இருப்பாய். இன்றும் இருப்பாய்; என்றும் இருப்பாய்; உனக்குப் பகை என்பது இனி இல்லை"

"இன்றும் உளை என்றும் உளை இலை ஓர் பகை என்றான்"

மனதையும் அறிவையும் ஒரு சேர உருக்கும் சொற்கள். தன்னை மயங்கச் செய்தவன் வலிமையை உணர்ந்து கொண்ட பூரணத்தில், இராமன் வெல்வதற்கு முன்னாலேயே அனுமன் தன்னை வென்றுவிட்டான் என ஒப்புதல் வாக்கு மூலம் தந்து, அதே சமயத்தில் 'நல்லதோர் பகைவனின்' வீரத்தை வாய்விட்டுப் பாராட்டியதோடு அல்லாமல் என்றும் இருப்பாய் என அனுமனுக்குச் சிரஞ்சீவிப் பேற்றையும் இராவணன் நல்கினான் என்றால் மனம் உருகாமல் இருக்குமா? இப்படிப் பட்டவன் ஏன் காமவலைப்பட்டு அழிவுக்கு ஆளானான் என்ற அவலமே எஞ்சுகிறது. தன்னை அவன் வெல்வது உறுதி; தனக்குப் பின்னும் அவன் நெடுநாள் வாழ்வான் என்பதும் உறுதி. இந்தத் தெளிவை இராவணன் பெற்றான். பிராட்டியும் பிரானும் அனுமனுக்குத் தந்த என்றும் வாழும் பேறு (சிரஞ்சீவித் தன்மை) ஒரு வகையில் சிறப்பு என்றால் மாற்றானாகிய எதிரி தந்தது இன்னொரு வகையில் சிறப்பு என உணர்ந்து ஆஞ்சநேயனை வணங்குவோம்.

இராவனன் பேச்சு அனுமனையும் உருக்கியது. "நான் குத்தினேன்; அதில் சாகவில்லை, இன்னும் உயிரோடு இருந்து பேசுகிறாய் அப்படிப் பார்த்தால் நீ தான் என்னை வென்றவன் ஆகிறாய். வா ; என் நெஞ்சில் இப்போது நீ குத்துவாயாக" என்று அவன் எதிர் நின்றான். திருமகளும் திருமாலும் சேர்ந்து வாழும் அந்த மார்பின் மீது இராவணனின் குத்து விழுந்தது. வெள்ளிமலை சலித்தது போல் அனுமன் சோர்வுற்றான். அனுமன் மட்டுமா சோர்ந்து போனான்? அவன் மார்பில் உள்ளுறையும் தெய்வங்கள்; அவர்களின் அருளை எதிர்நோக்கும் தேவர்கள்; நல்ல அறம்; வாய்மை; நீதி நெறி; புகழ் ; வேத ஞானம்; நற்குண மேன்மைகள்; கருணை ; தவம் எல்லாமே - இவை எல்லாமே ஒருசேரச் சோர்ந்து போயின என்று கம்பர் தம் மானசீகத் திரையில் ஓவியம் படைக்கிறார்.

சலித்த காலையில் இமையவர் உலகெலாம் சலித்த
சலித்ததால் அறம் சலித்தது மெய்ம்மொழி தகவும்
சலித்தது அன்றியும் புகழொடு சுருதியும் சலித்த
சலித்த நீதியும் சலித்தது கருணையும் தவமும்.

வானவர் வாழ்வு தொடங்கி, தவம் முடிய ஒன்பது மங்கலப் பண்புகளின் உறைவிடமாக அனுமன் இருந்தான்; அவன் சோர்ந்ததால் அவையும் சோர்ந்தன என்ற அழகு ஓவியப்படைப்பில் இராமநாமமும் பிராட்டியின் அருளும் உள்ளிருந்து இருந்து அனுமனை எவ்வாறு உருமாற்றம் செய்திருக்கின்றன என்பதை உணர்ந்து காணலாம்; கண்டு வணங்கலாம்; வணங்கி நாமும் அருள் பெறலாம்.

தன்னுடைய ஒரு குத்து பட்டு இராவணன் பொடியாகப் போவான் என்ற அனுமனின் எதிர்பார்ப்பும், தன்னுடைய ஒரு குத்தால் அனுமன் முற்றிலுமாகச் சிதைந்து போவான் என்று இராவணன் போட்ட கணிப்பும் - இரண்டுமே நடக்கவில்லை. வீரனுக்கு வீரன் வலிமைக்கு வலிமை - என்ற கணக்கு மட்டுமே நின்றது.

போர் தொடர்ந்தது. வானரங்கள் சூழ நின்று இராவணன் மீது மலைகளை வீசினார்கள். இராவணன் அம்புகளால் அவை சாம்பலாகப் போய்விட்டன. எங்கும் இராவணன் அம்புகள். வானரப் படை நிலை குலைந்தது. அப்போது இலக்குவன் சினந்து வந்து ஒரே அம்பை ஏவி அவனுடைய பத்து வில்களின் கயிற்றை அறுத்தான். இராவணனே அதிசயித்துப் போனான். வேறு வழியில்லை. இலக்குவன் மீது பிரம்மாஸ்திரத்தை இராவணன் விட்டான். அவன் மயக்கமடைந்து கீழே விழுந்தான். அவனுடலைத் தூக்கிச் சென்றுவிடலாம் எனக் கருதிய இராவணன், அதில் தோற்றுப் போனான். "இராமனுக்கு இளையான்" இருபது தோள்களுக்குள் அடங்கவில்லை. அந்தச் சமயத்தில் அங்கு ஓடிவந்த அனுமன் ஒரு குட்டியைத் தூக்கிக் கொண்டு மரம் நோக்கித் தாவும் தாய்க் குரங்கு போல, இலக்குவனை எடுத்துக்கொண்டு இராமனிடம் போனான்.

அப்போது தரையில் நடந்து தலைவன் செல்வதை விரும்பாதவனாக, "ஆயிரம் குதிரைகள் பூட்டிய தேரின் மேல் இருந்து அரக்கன் போரிட வரும் போது நிலத்தில் நின்று அவன் எதிரில் நீ நிற்கலாமா? உன்னோடு ஒப்பிட்டால் நான் மெலியவன்

தான் ஆனாலும் என் தோளின் மீது ஏறியருள்வாயாக" என்று வேண்டினான். "ஏறு நீ ஐய என்னுடைத் தோளின் மேல்" என்றான். "நன்று நன்று" என்று சொல்லிக் கொண்டு நாயகன் ஏறினான். அப்போது தான் தாங்கிய திருமேனியை அனுமன் தாங்கியது கண்டு கருடன் நாணினான்; தன் மீது படுத்துறங்கும் தெய்வ உருவை அனுமன் ஏற்றது கண்டு ஆதிசேடப்பாம்பும் நாணினான். அருந்தவர் ஆசிகள் கூறினர். வானவர்கள் மகிழ்ந்து போற்றினர்.

இராமன் - இராவணன் போர் நேரடியாகத் தொடங்கிற்று. அம்புகள் பறந்தன. இராமனின் வீரச் செயலுக்கு முன்னால் அரக்கர்கள் ஒழிந்தார்கள். இராவணன் ஒருவனே எஞ்சி நின்றான். இராவணனுக்குச் சினம் பொங்கியது. வலிமை மிக்க வில்லை வளைத்து வேகம் மிக்க அம்புகளை அடுக்கடுக்காக ஏவினான். இராமனோ ஒரே அம்பை விட்டு இராவணன் வில்லைத் துண்டித்தான். அவன் வேறொடு வில்லை எடுக்க முற்பட்ட போது அதையும் இராமன் அம்பு எறிந்து வெட்டி வீழ்த்தினான். காற்றினும் வேகமாகப் பறந்து செல்ல வல்ல அவனுடைய தேர்க்குதிரைகளைத் தலையறுத்தான். படைக்கலம், கொடி, குடை என்று வரிசையாக அழித்துக் கொண்டே வந்து கடைசியில் இராவணனின் "பொன்னின் மாமணி மகுடத்தை" யும் தள்ளிக் கடலில் கொண்டு போய்த் தள்ளியது இராமனுடைய அம்பு. ஒரு சொல்லைச் சொல்லி முடிக்கும் நேரத்துக்குள்ளேயே தன்னுடைய மணிமுடியை இராவணன் இழந்துவிட்டான். சூரியனை இழந்த பகல் போலவும், நிலவை இழந்த இரவு போலவும் ஆனான். அதுவரை யாரிடமும் தோற்காத வீரமுடையவன் தோற்று நின்றான். எப்படி? நாணம் கொண்டு நின்றான்.

அவன் கண்கள் கீழ்நோக்கின. முகம் ஒளி இழந்தது. கருவிகள் இல்லாமல் கைகள் தொங்குகின்றன. குனிந்த தலை; மண்ணைக் கீறிய கால்கள், விழுதுகள் ஊன்றிய ஆலமரம் போல நின்றான். இராமன் சொன்னான்.

> "அறத்தினாலன்றி அமரர்கள் கூட எந்தப் போரையும் வெல்ல முடியாது. இதை மனதில் கொள்; அதர்மத்தால் எதையும் சாதிக்கவும் முடியாது. உன்னை இப்பொழுது என்னால் எளிதாகக் கொல்ல முடியும். நான் செய்ய மாட்டேன்.
>
> சிறையில் நீ வைத்திருக்கும் தேவியை விட்டுவிடு; தேவர்களை அவரவர்களுக்குரிய பதவிகளில் அமர்த்திவை. அரக்கருள் பிறந்தும்

தெய்வமகனாக இருக்கும் வீடணனை அரசனாக ஆக்கி நீ ஏவல் செய். உனக்கு இது பிடிக்கவில்லை என்றால் உன் வலிமை எல்லாம் திரட்டிக் கொண்டு வா.

அரக்க வேந்தனே! நீ எவற்றை வலிமையுடைய படைகள் என்று கருதுகிறாயே அவை இன்று பெருங்காற்றில் பறந்து போகும் பூளைப்பூக்களாக மாறிவிட்டன. உனக்கே தெரிந்த உண்மை இது. அதனால் இன்று உன் அரண்மனையை நோக்கித் திரும்பிப்போ; போய்ப் படைகளைத் திரட்டிக் கொண்டு நாளை வா".

ஆள் ஐயா உனக்கு அமைந்தன மாருதம் மறைந்த
பூளை ஆயின கண்டனை இன்று போய்ப் போர்க்கு
நாளை வா என நல்கினன் நாகிளம் கமுகின்
வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்

இராவணன் திரும்பினான்; அவமானப்பட்டுத் திரும்பினான்

தமிழ் இலக்கியத்தில் சாகாவரம் பெற்ற பாடல் இது. காப்பியத்துக்கு இலக்கணம் வகுத்தால் - தேர்ந்த சொற்களைத் தேர்ந்து எடுத்தால் தேர்ந்த பொருள் தானாக அமையும் என்ற கோட்பாட்டுக்கு வடிவமாக இருக்கும் பாடல். குறிப்பாக **'இன்றுபோய் நாளை வா!'** என்ற நான்கு சொற்களில் போரில் கூட அறநெறியைப் பின்பற்ற வேண்டும், பகைவனுக்கும் அருள் புரிதல் வேண்டும் என்ற நல்ல நீதிகள் அமைந்த பாடல்.

வாரணம் பொருத மார்பு, மலையினை எடுத்ததோள், நாரத முனிவரையும் இசையால் தோற்கச் செய்த ஞானம், பத்து மணிமகுடங்கள், ஈசனாகிய சிவபெருமான் கொடுத்த வாள், வீரம் எல்லாவற்றையும் போர்க்களத்தில் இழந்துவிட்டுத் தான் ஒருவன் தனியனாக இராவணன் இலங்கை திரும்பினான். பெருமூச்சு, ஏமாற்றம், அவமானம், கோபம், தன்னைப் பற்றித் தானே இரங்கும் கழிவிரக்கம் என உணர்ச்சிகள் மாறிமாறி அவனைத் துன்புறுத்தின.

மந்திர சுற்றத்தையும் தூதுவரையும் உடனே அழைத்து வருமாறு ஆணையிட்டான். சபை கூடியது. தன்னுடைய தாய்வழிப் பாட்டனாகிய மாலியவானிடம் இராமனுடைய போர் வல்லமையை நேரில் கண்டு வந்த பின்னர் ஒப்புக்கொண்டான். 'இராமனுடைய அம்பு ஊழித்தீயைத் தீய்க்கும்; செல்லும் திசையையும் தீய்க்கும்; செப்பும் வாயையும் தீய்க்கும் மனத்தையும் தீய்க்கும்

ஆற்றலுடையது' எனச் சொல்லி, இனிச்செய்ய வேண்டியது என்ன என்பது பற்றி ஆலோசனை கேட்டான்.

வீரத் தம்பி கும்பகருணனை அழைத்து வருமாறு ஆட்களை அனுப்பினான்; வந்தான் தம்பி. அவனும் சீதையை விட்டு, இராமனைப் பணிந்து விட்டால் உயிர் வாழலாம்; இல்லை என்றால் அழிவு உறுதி எனக் கூறிப்பார்த்தான். இராவணனுக்குச் சீற்றமே எஞ்சியது. தம்பியையும் ஏளனமாகப் பேசினான். தன்னை வளர்த்து ஆளாக்கிய அண்ணனுக்காக, செஞ்சோற்றுக் கடன் கழிப்பதற்காகப் போருக்குப் புறப்பட்டான் கும்பகருணன்.

ஒரு தோளிலிருந்து அவன் உருவத்தைப் பார்த்துக் கொண்டே கண்களை நகர்த்தினால் மறுதோளின் எல்லையை அடையப் பல நாள்கள் ஆகும் என்ற அளவில் பேருருவம் உடையவனைப் பார்த்து இராமனிடம் வீடணன் அவனுடைய பண்புநலன்களை எல்லாம் ஒன்று விடாமல் விளக்கமாகவே சொன்னான். இராவணனையும் எதிரித்து அவன் அறவுரை பேசியவன் என்றதைக் கேட்ட சுக்ரீவன் அவனை இராமன் பக்கம் சேர்த்துக் கொள்வது நலம் என்று தெரிவித்தான். வீடணனைக் கும்பகருணனிடம் இராமன் அனுப்பி வைத்தான்

அவனும் சென்று கும்பக்கருணனைக் கண்டு இராமன் கருத்தைத் தெரிவித்து வேண்டினான். இராமன் பக்கம் நியாயமே இருந்தது என்றாலும் அண்ணனை விட்டு வருவது நன்றி கொன்ற பாவம் எனக்கூறி மறுத்துவிட்டான். திரும்பிய வீடணன் நடந்தன சொன்னான். போர் தொடங்கியது. பலவகை ஆற்றல்களையும் காட்டி, பலவகைப் போர்க் கருவிகளைப் பயன்படுத்தியும் கும்பகருணன் தோற்றுப் போனான். அவனுடைய கால்கள், கைகள் எல்லாம் இராமனுடைய அம்பினால் அறுபட்டன. கடைசியில் அவனுடைய தலைகடலில் எறியப்பட்டது.

இப்படி அங்கு போர் நடந்து கொண்டிருக்கையில், இராவணன் இன்னும் சீதைமீது வைத்த ஆசையை விடமுடியாமல் மகோதரன் என்பவனைக் கூப்பிட்டு ஒரு வழி சொல்லுமாறு கேட்க, அவன் வேறொருவனைச் சீதையின் தந்தையாக உருமாற்றம் செய்து, அந்த மாயாசனகனைச் சீதைக்குக் காட்டினால், அவள் தந்தையின் உயிரைக் காப்பாற்ற அவனுடைய ஆசைக்கு இணங்குவாள் என்று கூறினான். அப்படியே மாயை விளைந்தது. வந்தது தன்

உண்மையான தந்தை என்று கருதிய சீதை, பலவாறாகப் புலம்பித் துன்புற்றாள். மாயாசனகன் அரக்கனின் ஆசைக்கு அடங்குமாறு பிராட்டியை உருக்கமாக வேண்டினான். அவன் சொன்ன சொற்கள் சீதைக்கு ஐயத்தை ஏற்படுத்தின. உண்மையான எந்தத் தந்தையும் மகள் ஒழுக்கத்தை விடவேண்டும் எனச் சொல்லக் கூடமாட்டான். அதிலும் ராஜரிஷி என்று உலகம் புகழும் தன் தந்தை அப்படிச் சொல்வாரா? மாயாசனகனை வெட்டுமாறு இராவணன் ஆணையிட்ட போது கும்பகருணன் மாண்ட செய்தி வந்தது. துன்பத்தின் எல்லையில் ஆழ்ந்து போன இராவணன் அங்கிருந்து வெளியேறினான். திரிசடை, வந்தது சனகன் அல்ல; மாயவடிவம் எடுத்த வேறு ஒரு அரக்கன் என அறிந்தாள்.

அடுத்துப் போருக்கு யார் போவது? இராவணனின் இன்னொரு மனைவியான தானியமாலிக்குப் பிறந்த அதிகாயன் தான்போவதாக முன்வந்தான். இவனும் பெருவீரன்தான். இராவணனுடைய தம்பியாகிய கும்பகருணனை மாய்த்துப் பெருந்துயரத்தைக் கொடுத்த இராமனுடைய தம்பியைக் கொன்று பழிதீர்ப்பதாகச் சபதம் செய்து கொண்டு போர்க்களம் புகுந்தான். அங்குபோய், தான் இலக்குவனுடன் மட்டுமே சண்டை புரிய வந்துள்ளதாகச் செய்தி அனுப்பினான். இராமனும் உடன்பட்டுத் தம்பியைப் போர்க்களம் செல்ல விடுத்தான். அனுமன் மீது ஏறிக்கொண்டு தம்பி வீரப்போர் புரிந்தான். அனுமனும் தன் பங்குக்கு யானைப்படையைப் பொடியாக்கினான். அதைக்கண்டு தன்னுடன் மோதவந்த தேவாந்தகன் என்ற அரக்கனையும் அனுமன் கொன்றான். அனுமனின் வீரப் போர் எதிரியாகிய அதிகாயனையும் புகழச் செய்தது. உமையொரு பாகனகிய சிவபெருமான் கூட இவனுடைய சீற்றத்துக்கு முன்னால் நிற்கமுடியாது;

"உமையொரு பாகனேயும் இவன் முனிந்து உருத்தபோது
கமையிலன் ஆற்றல்"
என்று பாராட்டினான்.

இலக்குவனுக்கும் அதிகாயனுக்கும் போர் உக்கிரமமாக நடந்தது. அவன் மீது பிரம்மாஸ்திரத்தை விடுமாறு காற்றுக்கடவுள் இலக்குவன் முன் தோன்றி உரைத்தான். இலக்குவன் அப்படியே செய்ய அதிகாயன் தலை அறுபட்டது. எஞ்சிய அரக்கர் படைத் தலைவர்கள் சுக்ரீவன், அங்கதன் உள்ளிட்ட வீரர்களால் அழிக்கப்பட்டனர். இந்தச் செய்தி இராவணனுக்குப் போயிற்று.

துன்ப மேகம் இலங்கை மேல் கவிழ்ந்தது.

இலங்கை முழுவதும் அரக்கியர் அழுகின்ற அவலம் கேட்டு இந்திரசித்து இராவணனைப் போய்ப் பார்த்தான். நடந்தவற்றை அப்படியே இராவணன் சொல்லக் கேட்டு, தந்தை என்றும் பாராமல் இந்திரசித்து சினம் கொண்டு தகாத சொற்கள் கூறி அவனை ஏசினான். தன் தம்பியைக் கொன்ற இலக்குவனைக் கொல்வதாகச் சபதம் செய்தான். நாகபாசத்தை ஏவி இவக்குவனை வீழ்த்துமாறு இராவணன் மகனைக் கேட்டுக் கொண்டான்.

அது ஒரு கொடிய அம்பு. இந்திரனுக்காகப் பிரமன் வச்சிரமலையைக் கொண்டு செய்தது. இந்திரன் தோற்று ஓடிப்போன போது மேக நாதனாகிய அரக்க இளவரசன் அதை எடுத்துக் கொண்டு தன் பெயரையும் இந்திர சித்து என மாற்றிக் கொண்டான். அதையும் பிற கருவிகளையும் கையில் ஏந்தியவனாய்த் தேரேறிப் போர்க்களம் போனான். அவனைப் பார்த்த வீடணன், அவன் ஆற்றல் முழுவதையும் இலக்குவனுக்குச் சொல்லித் துணையில்லாமல் அவனுடன் போர் புரியக் கூடாது என்றும் அறிவுறுத்தினான். இந்திரசித்து வந்தான். போர் தொடங்கிற்று. சுக்ரீவன் உள்ளிட்ட வீரர்கள் இலக்குவனைச் சூழ்ந்து இருந்தார்கள்.

வரிசை வரிசையாக வானரவீரர்கள் - குமுதன் நீலன் உள்ளிட்டோர்- இந்திரசித்துவின் எதிர்நிற்க முடியவில்லை ஒருமலையை அனுமன் எடுத்து எறிய, அதையும் பொடியாக்கினான் அரக்கர் மைந்தன். இப்படியே தொடர்ந்தது. இறுதியில் அனுமன் மீது ஏறியவனாய் இலக்குவனே இந்திரசித்துவை எதிர்த்தான். கடும்போர். இடைவிடாத போர். சற்று சோர்ந்த நிலையில் இந்திரசித்து நின்றபோது, அனுமன் எதிரியின் தேர்க்குதிரையைக் கொன்று, தேரையும் உருட்டிவிட்டான். வேறு ஒரு தேர்; அதுவும் அழிந்தது. இப்படியே பலதேர்கள்; அனுமனாலும் இலக்குவனாலும் பல அழிவுகள்.

மாலைப் பொழுது இருண்டு வந்தது. இரவுபரவுவதற்கு முன்னால் இந்திரசித்துவைக் கொன்றால் தான்முடியும்; இல்லை என்றால் மாயங்கள் பல செய்து அவன் வென்று விடுவான் என்று வீடணன் இலக்குவனுக்குச் சொன்னான். அதற்குள் இலக்குவன் உள்ளிட்டோரை நாகபாசத்தால் பிணைப்பதே சரி என்று

முடிவுசெய்து இந்திரசித்து வானில் மறைந்தான். நுண்ணிய வடிவம் எடுத்து உரிய மந்திரம் ஓதி அதை ஏவினான். இலக்குவன், அனுமன், அங்கதன், சுக்ரீவன் எல்லாரும் இறந்தது போலக் கட்டுண்டு கிடந்தார்கள். தன்னுடைய எண்ணம் நிறைவேறியது. தந்தையிடம் தன் வெற்றியைச் சொல்லிவிட்டு இந்திரசித்து ஓய்வுக்குப் போனான்.

நடந்தது கண்டு வீடணன் கதறினான். அவனுடைய அமைச்சனான அனலன் மூலம் இராமனுக்குச் செய்தி போயிற்று. அதைக் கேட்டு வருந்தி, சினந்து, உணர்ச்சி வசப்பட்டு உலகையே அழிப்பதாக வில்லை எடுத்து, ஒருவன் பிழைக்காக உலகை அழிப்பது என்ன நீதி என்று தனக்குள் தானே கேட்டுக் கையறு நிலையில் இராமன் தவித்தான். எல்லாம் வீடணனால் வந்த துன்பம் என அவனையும் ஏசினான். வீடணனோ நாகாஸ்திரத்தின் வரலாற்றைச் சொல்லி, யாரும் இறக்கவில்லை; அதன்கட்டு நீங்கினால் பிழைப்பர்; கட்டு தானாக நீங்கவேண்டும்; யாரும் நீக்க முடியாது எனச் சொல்லிக் கொண்டிருந்த போது வானத்தில் ஒரு பேரொளி தோன்றியது; தென்றல் போல மென்காற்று வீசியது. எல்லாரும் நிமிர்ந்து பார்த்தார்கள். வைகுந்தத்திலிருந்து தன் தலைவன் படும் துன்பத்தைக் காணப் பொறுக்காத கருடன் வந்ததால் ஏற்பட்ட பேரொளி அது; சிறகுகள் அசைந்ததால் ஏற்பட்ட காற்று அது.

அந்த ஒளியும் காற்றும் பட்டதால் நாகாஸ்திரம் விலகியது. இலக்குவன் உள்ளிட்டோர் மீண்டும் எழுந்தனர். தம்பியைத் தழுவிக் கொண்டு கருடனைப் புகழ்ந்து தான்பட்ட நன்றிக் கடன் பற்றி இராமன் பேசிக் கொண்டிருந்த போதே அது பறந்து போய்விட்டது. இலக்குவனும் அனுமன் உள்ளிட்ட வானரர்களும் இறந்து விட்டார்கள் என்ற மதர்ப்பில் இருக்கும் இராவணன், இந்திரசித்து உள்ளிட்டோர்க்கு இறந்தவர்கள் பிழைத்துவிட்டார்கள் என்பதை எப்படித் தெரிவிப்பது? பெருமுழக்கம் செய்ய வேண்டும்; எல்லாரும் சேர்ந்து ஒலிக்க வேண்டும். இராமனிடம் அனுமன் அதற்கு அனுமதி கேட்டான்.

> "நெஞ்சில் அறம்பேணும் உணர்வும் பெருகும் அன்பே வடிவாகவும் உடைய தலைவனே! நாம் இன்னும் உயிரோடு இருக்கிறோம் என்ற செய்தியைத் தெரிவிக்காமல் சும்மா இருந்தால் இலக்குவன் இறந்தான் என்று எண்ணிப் பிராட்டி அவலம் அடைவாள். கவலையில்லாமல் உறங்குகின்ற அரக்கர்கள்

போர்க்களத்தில் இறந்தவர்கள் மீண்டும் உயிர்பெற்றார்களே என்று பெரிய அச்சம் கொண்டு நடுங்குவார்கள். அதனால் ஆரவாரம் செய்ய அனுமதிக்க வேண்டும்".

இறந்தனன் இளவல் என்னா இறைவியும் இடுக்கண் எய்தும்
மறந்தனர் உறங்குகின்ற வஞ்சரும் மறுகி மீளப்
பிறந்தனர் என்று கொண்டு ஓர் பெரும்பயம் பிடிப்பர் அன்றே
அறம்தரு சிந்தை அன்ப ஆர்த்தும் என்று அனுமன் சொன்னான்.

இராமனின் இசைவு கிடைத்தது. ஏழு கடல்கள் அஞ்சிக்கலங்க, ஆதிசேடப்பாம்பின் தலைமேலிருந்து உலகம் சிதற, மேகம் நிலை சிதறப் பேராரவாரம் வானரக் கூட்டம் செய்தது. அதைக் கேட்டு இலங்கையும் அரக்கரும் அஞ்சினார்கள் மறுநாள் போர்க்களம் சென்று எதிரிகளை வீழ்த்துவதாக இந்திரசித்து தந்தைக்கு உறுதி கூறினான்.

**மீண்டும் தொடங்கிய போரில் படைத் தலைவர்கள்**

யஞ்ஞ சத்துரு, தூமிராட்கன், மகாபார்தவன், மாலி, சூரியசத்துரு, இடபன், பிசாசன் உள்ளிட்ட படைத்தலைவர்கள் நான்கு வகைகப் படைகளுடனும் அழிக்கப்பட்டனர். அனுமன், அங்கதன், சுக்ரீவன் ஆகியோர் தங்கள் பெருவீரத்தைத் தனித்தனியாகக் காட்ட முடிந்தது. வழக்கம் போலச் செய்தி இராவணனுக்குப் போயிற்று. கேட்டு வருந்திய அவன், அடுத்து என்ன செய்வது என்பது பற்றி முடிவுசெய்து மகரக் கண்ணன் என்பவன் தலைமையில் அரக்கர் படையை அனுப்பினான். இவன் ஏற்கெனவே இராமனால் கொல்லப்பட்ட கரன் என்பவனுடைய மகன். தந்தையைக் கொன்றவனைப் பழிவாங்குவது அவன் நோக்கம். ஆதலால் அவன் நேரே இராமனிடம் போருக்கு வந்தான்; தான் வந்த காரணத்தையும் சொன்னான்.

"நீ கரன் புதல்வன் கொல்லோ நெடும்பகை நிமிரவந்தாய்
ஆயது கடனே அன்றோ ஆண்பிறந்து அமைந்தார்க்கு ஐய
ஏயது சொன்னாய்"

என்று இராமன் அவனைப் புகழ்ந்தான். மகன் ஒருவன் தந்தையின் இறப்புக்குக் காரணமானவனைப் பழிவாங்குவது தகுதியானதே என்று இராமன் உடன்பட்ட மேன்மையைக் காணவேண்டும். மாமன்னன் ஒருவன் சாதாரண படைத்

தலைவனுடனோ வீரனுடனோ போரிடுவது முறை அல்ல என்ற அக்கால வழக்கம் எண்ணற்குரியது.

மகரக் கண்ணன் பேரிடி, பெருங்காற்று ஆகியவற்றைத் தன்னுடைய தவவலிமையால் உண்டாக்கி மாயப்போர் புரிந்தான். வானரர்கள் நிலைகெட்டு ஓடினர். அப்படி ஒரு ஆற்றல் அவனுக்ககு எவ்வாறு வந்தது என்று இராமன் கேட்க, அவன் செய்த தவத்தின் பெருமைபற்றி வீடணன் சொன்னான். மழைத் தெய்வமும் காற்றுத் தேவனும் அவனுக்கு இந்த வரங்களை அளித்த பின்னணியைக் கூறினான். தாமரைக் கண்ணனாகிய இராமன் அவற்றை அழிப்பதற்கு ஏற்ற அம்புகளை ஏவிப் போக்கினான். அவன் மறைந்திருக்கும் இடத்தைக் கணித்து அதற்கேற்ற அம்பைப் போக்கி அவனுடைய தலையை அறுத்தான். மகரக்கண்ணனும் மாண்டான்; அரக்கர்கள் அழிந்தனர். இராவணன் செய்தி கேட்டான்.

மீண்டும் இந்திரசித்தது போருக்குப் போனான். அனுமன் தோள்மீது இராமனும், அங்கதன் தோள்மீது இலக்குவனும் ஏறி வந்து அவனை எதிர்த்தனர். அரக்கர் வானரர் மோதலும், படைத்தலைவர்கள் மோதலும், பிறகு இந்திரசித்து இராம இலக்குவர் மோதலும் வரிசையாகக் கம்பரால் விரிவாகப் பாடப்பட்டுள்ளன. எதிர் எதிரே நின்று இலக்குவனும் இந்திரசித்தும் ஒருவரை ஒருவர் கொல்வதாகச் சபதம் செய்தார்கள். போரில் இரண்டுபக்கத்திலும் பேரழிவே எஞ்சுகிறது. இந்திரசித்து வானில் மறைந்தான். அவன் மீது பிரம்மாஸ்திரம் விடலாம் என்று இலக்குவன் தன் கருத்தைக் கூற அதை இராமன் மறுத்துவிட்டான்.

இந்திரசித்துக்கு உதவியாக மகோதரன் பெரும்படை திரட்டிக் கொண்டு வந்து போரை நடத்தினான். அனுமன் தன் கையில் ஒரு பெரிய, நீண்ட தண்டாயுதத்தை ஏந்திக் கடும் போர் புரிந்தான். அந்தக் கருவி முன்பு கும்பகருணன் வைத்திருந்த ஒன்று. பெரிய வயிரக் குன்று போன்றது; வெஞ்சுடர் விரிப்பது; தேவர்களை முன்னர் புறமுதுகிட்டு ஓடச் செய்தது; உலகத்தை நெளியச்செய்யும் வலிமை உடையது. அதை 'மாருதி எடுத்தான்'.

இது காற்று அல்ல; நெருப்பும் அல்ல; கூற்றமாகிய எமனே அனுமானாக வந்து விட்டான் என்று கலக்கினான். ஒரு கணம் இங்கே; மறுகணம் அங்கே. எங்கும் உள்ள திருமாலே இருப்பது போலத் திரிந்தான்.

எங்கும் உளன் ஒருவன் எதிர்த்திரு நான் மறை தெரிக்கும்
செங்கண் அவன் இவனே என்ன திரிந்தான்.

அரக்கர்கள் தோற்றனர். இனிச் செய்வது என்ன? இந்திரசித்து முன்னர்த் தந்தையிடம் உறுதி கூறியபடி எதிரிகள் மீது பிரமாத்திரம் ஏவ முடிவு செய்தான். நான்முகன் படை பாய்ந்தது.

இன்னுயிர் போனது போல இலக்குவன் மயங்கி வீழ்ந்தான். அவனைத் தொடர்ந்து அனுமன் அங்கதன் என்று வரிசையாக எல்லாரும் வீழ்ந்தனர். எல்லாரும் இறந்தனர் என்று கூவிக்கொண்டு வெற்றிச் சங்கை ஊதிக்கொண்டே இந்திரசித்து தந்தையிடம் சென்று செய்தியைச் சொன்னான். கேட்டவனுக்குப் பெரு மகிழ்ச்சி.

அங்கே தன்னுடைய,போர்க்கருவிகள் வழிபாட்டுக்குப் போன இராமன் திரும்பிவந்து பார்த்தான். எல்லாரும் இறந்து விட்டதாகவே கருதிப் பலவகையாகப் புலம்பி வருந்தினான். அது கண்ட தேவர்கள் நடந்ததை அவனுக்கு உணர்த்தி அவனுடைய கடவுள் தன்மையையும் நினைவூட்டினார்கள்.

இலக்குவன் பிரமாத்திரத்தால் மாண்டான்; அதைக் கேட்ட இராமன் துன்பத்தில் இருந்தான் என்ற மகிழ்ச்சியை இராவணனுக்கு அரக்கர்கள் அறிவித்தார்கள். கேட்டு உவகையின் எல்லைக்குச் சென்ற அவன், சீதையை அழைத்துச் சென்று போர்க்களத்தைக் காட்டும்படி ஆணையிட்டான். "கண்டனள் கண்ணால்" தன் கணவன் மயங்கிக் கிடப்பதை; தண்தாமரைப்பூ நெருப்பில் எரிந்தால் எப்படி இருக்குமோ அப்படி ஆனாள். அழுதாள்; தொழுதாள். பிராட்டி அழுததைப் பார்த்து எல்லோரும் அழுதனர். யார் யார்?

தேவமங்கையர், சிவபெருமானை வலமாகக் கொண்ட உமாதேவியார், செந்தாமரை மேல் இருக்ககும் திருமகள், கங்கை, பிரமன் நாவில் இருக்கும் கலைமகள், திருமாலின் உடன் பிறந்தாள் ஆன துர்க்கை எல்லோரும் அழுதனர். படிப்போரையும் அழவைக்கும் பாட்டு, கம்பன் கைவண்ணத்தில்

மங்கை அழுதாள் வானாட்டு மயில்கள் அழுதார் மழவிடையோன்
பங்கில் உறையும் குயில் அழுதாள் பதுமத்திருந்த மாதழுதாள்
கங்கை அழுதாள் நாமடந்தை அழுதாள் கமலத் தடங்கண்ணன்
தங்கை அழுதாள் இரங்காத அரக்கிமாகும் தளர்ந்தழுதார்.

பிறகு பழைய நிகழ்ச்சிகளைச் சொல்லிச் சொல்லி மனம் நொந்து இராமன் மீது விழப் போனாள். அப்போது திரிசடை மங்கை நல்லாள், சீதையை உண்மை நிலையை உணர்வித்துத் தேற்றினாள். இது அரக்கரின் மாயச் செயல்; பிரம்மாத்திரத்தால் கட்டுண்டார்களே தவிர சாகவில்லை. தருமத்தை தாங்கும் அண்டர் நாயகனாகிய இராமபிரான் அற்பர்களால் சாகமாட்டான். கண்ட கனவுகள், ஏற்பட்ட நிமித்தங்கள் நல்லனவற்றையே குறித்தன; கூர்ந்து பார்; இறந்தவன் முகம் போல இலக்குவன் முகம் தோன்றவில்லை; உணர்ச்சி வயப்படாதே; உலகம் ஏழும் அழியாது, சூரியன் மறையாமல் இன்றும் இருப்பது கொண்டே இவர்கள் இறக்கவில்லை என்பது தெரிகிறது. அனுமனுக்குப் பிராட்டியே அளித்த என்றுமுள வாழ்வு என இவற்றை எல்லாம் மனதில் படும்படியாகச் சொன்னாள். சீதை மனம் தேறினாள்.

## 21. வந்தது சஞ்சீவி மலை

வீடணன் இராம, இலக்குவர், வானரர்கள் மயங்கிக் கிடப்பதைக் கண்டான். அதுவரை அவன் அங்கு இல்லை. இராமனுடைய கட்டளைப்படி வீரர்களுக்கு உணவு கொண்டுவரப் போயிருந்தான். நுண்ணறிவு மிக்கவன்; இராம இலக்குவர் இருந்த நிலை துல்லியமாக அவனுக்குத் தெரிந்தது. இது பிரம்மாத் திரத்தால் ஏற்பட்ட விளைவு; இதை நீக்கும் வழியும் அவனுக்குத் தெரிந்தே இருந்தது. போர்க்களம் முழுவதும் தேடி அனுமனைக் கண்டான். 'காய்சினத்து அனுமன் என்னும் கடல் கடந்தானைக் கண்டான்'. அவனருகில் அமர்ந்து, உடலில் இருந்த அம்புகளை நீக்கி, முதலுதவி போலச் சிலவற்றைச் செய்ய அவன் உணர்வு பெற்றான். விழிப்புநிலை எய்தியவுடன் உயிர்த்துடிப்பு ஏற்பட்டது; உரோமங்கள் சிலிர்த்தன; கண்கள் விழித்தன; வியர்வை அரும்பிற்று; உடம்பு அசைந்தது ; வாயில் நீர் சுரந்தது; விக்கலும் பிறந்தது. மறுபிறப்பு பெற்றவன் போல ஆன அனுமன் வாய்திறந்து முதலில் சொல்லிய சொல் 'இராம இராம நாமம் வாழ்க'. கேட்ட அமரர்கள் ஆரவாரித்தார்கள்

அற்புதமான வகையில், உயிரற்ற ஒன்று உணர்வு பெறும் நிலையில் கம்பசித்திரம் வரைகின்ற அழகே அழகு. அவலச் சுவை மலிந்த போர்க்களத்தில் அனுமனின் பக்திச் சுவையைப் பரப்பும் பாட்டு இது. 'இராம இராம இராம இராம'என்று பன்னிப்பன்னிச் சொல்லும் போது துன்பங்கள் தீர்வது மட்டுமல்ல, செத்த பிணம்போலக் கிடப்பாரும் மீண்டும் எழுவர் என்று பக்தர்கள் நெஞ்சில் நம்பிக்கையை ஊட்டும் பாடலைப் படித்துப் பயன் பெறுவோம்.

உயிர்ப்பு முன் உதித்த; பின்னர் உரோமங்கள் சிலிர்ப்ப; ஊரு
வியர்ப்பு உளதாகக் கண்கள் விழித்தன; மேனி மெல்லப்
பெயர்த்து வாய்புனல் வந்தூற விக்கலும் பிறந்ததாக
அயர்த்திலன் இராமநாமம் வாழ்த்தினன்; அமரர் ஆர்த்தார்

காலையில் விழிப்பும், உணர்வும், அறிவுத் தெளிவும்

வந்தவுடன் ஒவ்வொருவரும் சொல்லவேண்டிய மந்திரம் 'இராம இராம' என்ற உயர்நிலைத் தெய்வச் சொல் என்பதை அனுமன் நினைவுபடுத்தினான் போலும்.

காலையில் உயிர்ப்பு உதித்த உடன் 'இராமா' என்போம்.
உரோமங்கள் சிலிர்க்கும் போது 'இராமா' என்போம்
கண்கள் விழிக்கும் போது 'இராமா' என்போம்
உடம்பு துடிக்கும் போது 'இராமா' என்போம்
விக்கல் எழும்போது 'இராமா' என்போம்
ஒரு போதும் மறவாது 'இராமா' என்று சொல்லிவணங்குவோம்.

அனுமன் உயிர்ப்பு பெற்றான். வீடணனுக்கு அழுகையும் உவகையும் ஒருசேர வந்தன. ஆசைமிக்கவனாய் அனுமனைத் தழுவி அணைத்தான். அப்படியே அனுமனும் வீடணனைக் கட்டிப்பிடித்து, 'பெரியோனே! இராமபிரான் நலமுடன்தானே இருக்கிறான்' என்று கேட்டான். வலியன் - நன்றாக உள்ளான் என்பதைக் கேட்டுத் தன் கரங்களைத் தலைக்கு மேல் கூப்பித் தொழுதான்.

இருவரும் சாம்பவானைத் தேடிப் போனார்கள். களத்தில் கிடப்போரைக் காக்கும் வழியைச் சாம்பவான் காட்டுவான் என்ற நம்பிக்கை அவர்களுக்கு இருந்தது. வந்தவர் இருவரையும் சாம்பவான் தெரிந்து கொண்டான்; மகிழ்ச்சி அடைந்தான்; கட்டாயம் அனுமனால் எல்லாரும் எழுந்து விடுவார்கள் என்ற துணிவு ஏற்பட்டது. அருகில் வந்த அனுமன்,

"கொற்றவனே! உன் அருகில் நிற்கும் நான் அனுமன்; உன்னைத் தொழுகிறேன்" என்று வணங்கினான். இனியாரும் சாகமாட்டார்கள் என மகிழ்ந்தானாம்.

மயங்கிக் கிடப்போர்க்குத் தேவையான மருந்து கொண்டுவருமாறும், அந்த மருந்து மூலிகையுள்ள மலை - மருந்து மலை - இமயம், அதைத்தாண்டி ஏமகூடம், நிடதம், மேருமலை, நீலகிரி, இந்த மலைகளை எல்லாம் தாண்டிப் போனால் மருத்து மலை வரும்; காலம் தாழ்த்தாது போகச் சொன்னான்.

தவிர அந்த மலையில் என்னென்ன மருந்துகள் இருந்தன, அவற்றைக் கண்டு பிடிப்பது எப்படி என்றெல்லாம் சொன்னான் மாண்டாரை எழுப்புவது, போர்க்கருவிகளால் அறுத்துப் பிளந்த

உறுப்புகளை ஒட்ட வைப்பது, காயத்தின் உள்ளே இருக்கும் ஒருவருக்குப் பழைய உருவைத் தரவல்லது என நான்கு வகை மருந்துகளின் தன்மைகள் அடையாளங்கள் கூறினான்.

உடனேயே பேருருவம் கொண்டவனாக அனுமன் மூலிகை தேடிப் புறப்பட்டான். வாலை வளைத்து, கையை நிமிர்த்தி, வாயினைச் சிறிது அகலமாக மடித்துக் கொண்டு, கால் நிலத்தில் வலுவாக ஊன்றி, மார்பை விரித்துப் பெரிதாக்கிக் கழுத்தைச் சிறிதாக்கி உந்தி எழுந்து வானில் போனான். அப்படி அனுமன் சென்றபோது ஏற்பட்ட பேரொலியால் அண்டகோளங்கள் அதிர்ந்தன.

இமயத்தை அடைந்தான். முனிவர்களின் வாழ்த்து பெற்றுக் கயிலைமலை சேர்ந்தான்; உமையொருபாகன் அருள்புரியும் திருக்கயிலை. அங்கு சிவபெருமான் உமாதேவியுடன் எழுந்தருளிய நேரம். 'உமையே! தன்னுடைய சிவந்த கரங்களைக் குவித்துக் கொண்டு உன்னையும் என்னையும் இந்த மலையையும் வணங்கிச் செல்பவன் காற்றின் மைந்தன்' என்றார். அனுமன் செல்லும் காரணத்தை உமை வினவ, இவன் மன்னவன் ராமதூதன்; மருந்தின் மேல் வந்தான் தொன்னகர் இலங்கை இனி அழியும்' என்று சிவபெருமான் கூறினார்.

கயிலையை வழிபட்டு ஏமகூடம், மேரு மலைகளையும் தாண்டி அனுமன் விரைந்து போனான். பிரமன், திருமால், உருத்திர மூர்த்தி, இந்திரன், திசைக்காவலர் என அங்கங்கிருந்த தெய்வங்களையும் வணங்கினான். பிறகு நீலமலை தாண்டி மருத்துமலை சென்று அடைந்தான். அவன் அதன் மீது குதித்த போது மலை தாழ்ந்தது. இந்த அதிர்வை உணர்ந்த மருந்து தேவதைகள் அனுமனைத் தடுத்து அவன் வந்த காரணத்தைக் கேட்டார்கள். அவன் எல்லாவற்றையும் சொன்னான்.

அவற்றை கேட்ட அவர்கள், 'ஐயனே! உணர்ந்து கொண்டோம். நீ இந்த மலையை எடுத்துச் செல். வேண்டியவற்றை எடுத்துக் கொண்டு, மீண்டும் வளம் குன்றாத வகையில் எம்மிடம் இதைக் கொண்டு வந்து சேர்க்க வேண்டும்' என்று இசைவு தந்து, வாழ்த்தி மறைந்தன. அப்போது, திருமாலின் கருவி - திருவாழி- கூரிய முனையுடைய சக்ராயுதம் அனுமனுக்குக் காட்சி தந்து உடனே மறைந்துவிட்டது. மலையைத் தூக்க இருப்பவனுக்குப்

பெருமானின் அருள் போலும்!

'வான்தலை நேமி தோன்றி மறைந்தது' அனுமனுக்கு ஒரு சிறிய குழப்பம். நான்கு வகை மருந்துகளைச் சாம்பவான் கூறினான். யார் யாருக்கு எந்த மருந்து என்பது தெரியாது; தவிர இதைப் பற்றி நினைத்துக் கொண்டு இங்கிருந்தால் காலமும் வீணாகும். அதைவிட மலையை அப்படியே எடுத்துச் சென்று விடுவோம் என முடிவு செய்து, கையில் தூக்கிக் கொண்டு போனான்.

அங்கோ இராமன் உணர்வு பெற்றவனாய் வீடணன், சாம்பவான் இருவரிடமும் நடந்ததைச் சொல்லி வருந்திக் கொண்டு இருந்தான். அவனைத் தேற்றி அனுமன் மூலிகைமலை கொண்டு வர இருக்கும் செய்தியைச் சொன்னார்கள். சாம்பவான் பத்துப் பாடல்களில் மருத்துமலை வரலாற்றைச் சொல்லி, அதை மாருதி உறுதியாகக் கொண்டு வருவான்; நீ வருந்த வேண்டாம். அதைத்தேடும் வழியை அவனுக்குத் தருமமே காட்டும்; காலம் தாழ்க்காது விரைந்து கொணர்வான்.

வருவது திண்ணம் நீ வருந்தல் மாருதி
தருநெறி தருமமே காட்டத் தாழ்கலன்
அருமையது அன்று

எனச் சொல்லி இராமன் திருவடிகளை வணங்கினான். அது கேட்டு இராமன் தேறியிருந்த போது வடதிசையில் ஆரவாரம். எல்லோரும் நிமிர்ந்து மேலே பார்த்தனர். அனுமன் மலையுடன் வந்து கொண்டிருந்தான். அப்பொழுது காற்றுக் கடவுளும் வலிமையான காற்றை ஏவி மருந்துகளின் மணமும் தன்மையும் கீழே கிடப்பவர்களின் மீது படும்படியாகச் செய்தான். வானரர்கள் எல்லாரும் உயிர் பெற்று எழுந்தனர். அரக்கர்கள் மட்டும் பிழைக்கவில்லை. காரணம்? அவர்கள் எல்லாம் கடலுள் அழுந்திப் போயிருந்தனர். மேலிருந்த மரக்கலங்கள் கூட உயிர் பெற்றன என்பார் கம்பர்.

'இலக்குவன் இராமபிரானைத் தொழுது வணங்கினான். கண்களில் நீர்வார அவனை இராமன் தழுவிக் கொண்டான். பிரமாத்திரம் இராமனைச் சுற்றிவந்து பணிந்து போய்விட்டது. இவ்வளவு பேர் பிழைப்பதற்கும் யார் காரணம்? அனுமன். சற்றுத் தொலைவிலே நின்று கொண்டிருந்த அவனை இராமன் அழைத்துத்

தழுவிக் கொண்டான். அப்பொழுது அவன் கண்களில் நீர் அரும்பியது; இதயத்தில் பெருங்காதல் ததும்பியது. அனுமனோ ஒரு தாயை விடவும் அன்பு கொண்டவனாக நின்றான். அனுமன் தாய்; இராமன் குழந்தை. குழந்தை ஓடிச் சென்று தாயை அணைத்துக் கொள்வது போல இராமன் தழுவிக் கொண்டான்.

ஆய காலையில் அமரர் ஆர்த்து எழத்
தாயின் அன்பனைத் தழுவினான் தனி
நாயகன் பெருந்துயரம் நாமறத்
தூய காதல் நீர் துளங்கு கண்ணினான்.

இராமன் அனுமனுக்குச் சொன்னான்.

'நல்ல அறநெறியில் நிற்பவனே! அயோத்தியில் முந்தையோர் பிறந்த பெருமை மிக்க குலத்தில் பிறந்து, அறநெறியில் ஆட்சி செய்து, என்னுடைய பிரிவைத் தாங்காது உயிர்விட்ட தயரதன் எங்கள் தந்தையாக இருந்து பெற்றெடுத்தான். பிரமாத்திரத்தால் மாண்டு போன இன்று உன்னால் இன்னொரு பிறவி பெற்றோம். நீயே தந்தை போன்றவன்.

எங்களைக் காத்ததுடன் உன் பெருமை நின்று விடவில்லை; கொடிய பகைவர் அழியும் வகையும் காத்தாய். எங்கள் குலத்தின் உயர்வையும் காத்தாய். ஒருவேளை என் தம்பி இறந்திருந்தால் ஏழுலகங்களும் அழிந்து போயிருக்கும். இலக்குவன் மீது நான்கொண்ட அன்பு அத்தகையது. அப்படி உலகு அழியாமல் காத்தவனும் நீயே.

அனுமனே! ஆஞ்சநேயா! நீ வாழ்க. பிரமாத்திரத்தால் யாரும் மாண்டு போகாமல் எல்லாரும் எம்மோடு வாழும் வழி செய்தவனே நீ வாழ்க! ஒரு நோயோ, துன்பமோ ஏதும் வராமல் என்றுமே இப்படியே நீ வாழ்வாயாக! இது என்னுடைய ஆணை!"

இன்று வீகலாது எவரும் எம்முடன்
நின்று வாழுமா நெடிது நல்கினாய்
ஒன்றும் இன்னல் நோய் உறுகிலாது நீ
என்றும் வாழ்தியால் இனிது என் ஏவலால்.

அசோக வனத்தில் பிராட்டி கூறிய சொற்கள் இங்கு எண்ணிப் பார்க்கத் தக்கன. 'அம்மையாய் அத்தனாய அப்பனே? அருளின் வாழ்வே!...' என்று தன்னைக் காத்த அனுமனை வாழ்த்தி என்றும்

உள வாழ்வை அங்கு தந்தாள். இராமபிரான் அதே சொற்களைத் திருப்பிக் கூறுவான் போல இப்படிச் சொல்லி 'என்றும் வாழ்தி' என வாழ்த்தி அருள் செய்தான். தலைவன் தலைவியர் இடையே உணர்வும் அறிவும் உயிர்ப்பும் ஒன்றே என்பதை இது போன்ற பலபாடல்களில் கம்பர் மெய்ப்பிக்கிறார். அனுமன் ஏற்கெனவே உறுதி தந்தபடி வந்த செயல் முடிந்த பின்னர் மருத்து மலையைத் தான் எடுத்து வந்த இடத்துக்குத் திருப்பிக் கொண்டு போய் வைத்து விட்டு வந்தான்.

அங்கே இலங்கையில் நிலைமை வேறு. இந்திரசித்ததன் ஏவிய பிரம்மாஸ்திரத்தால் வானரப்படை முழுதும் அழிந்து விட்டதாகக் கருதி ஆட்டமும் பாட்டுமாக அரக்கர்கள் களிப்புடன் இருந்தனர். அரக்கர்களை விட்டு விடலாம்; அரக்கியர்கள் கூட மிதமிஞ்சிய அளவில் கள்ளைக் குடித்துவிட்டு அழுது, சிரித்து, ஆடிப்பாடி, தொழுது மயங்கி, தூங்கி துவண்டு, விழுந்து எழுந்து ஒரே பரவச நிலையில் இருந்ததைக் கண்டு இராவணன் மகிழ்ந்திருந்த நேரம். அப்போது வானர சேனையின் ஆரவாரம் அவன் காதில் விழுந்தது - இராம இலக்குவரின் வில்களிலிருந்து நாண் ஒலி எழுந்து பேரதிர்ச்சியை எல்லாருக்கும் விளைத்தது.

இராவணன் அமைச்சரவையைக் கூட்டி ஆலோசனையைத் தொடங்கினான். வழக்கம் போல மாலியவான் நல்ல நீதிகளே கூறினான். ஆணவ மனம் இன்னும் அசையவில்லை. இந்திரசித்து தான் ஏவியபோது இராமரை அதனுள் அடக்காமல் விட்டுவிட்டேன். இராம இலக்குவர் மாபெரும் வீரர்கள்; அவர்களில் இராமன் மானிடருக்கும் தேவருக்கும் முனிவருக்கும் மேம்பட்ட பரம்பொருள்; யான் எனது என்னும் இருவகைப் பற்றுகளையும் விட்டவரே இந்த உண்மையை உணர முடியும் என்ற மெய்ம்மையை எடுத்துரைத்தான். தந்தைக்குத் தனயன் கூறிய சொற்கள். இப்போது அவற்றை எண்ண நேரமில்லை. நிகும்பலை யாகம் செய்தால் எதிரிகள் முற்றிலும் அழிந்து போவார்கள் என்று நம்பிக்கையை இராவணன் மனத்தில் தழைக்கச் செய்தான்.

அது தடையில்லாது முடிவதற்கு என்ன வழி என்று இராவணன் கேட்டான். அதற்கு இந்திரசித்தே விடை சொன்னான். சீதை போன்று ஒரு மாய உருவத்தைப் படைத்து அதை அனுமன் காணும்படியாக அவன் முன்னால் நிறுத்தி வாளினால் கொல்ல வேண்டும்; இந்திரசித்து தன்படையோடு அயோத்தி நோக்கிப் போய்ச்

கொண்டிருப்பதாகச் செய்தியைப் பரப்பவேண்டும். சீதையோ இங்கு இறந்தாள்; இனி இருப்பதில் என்ன பயன் என்று கருதி இராம இலக்குவர் படையுடன் திரும்பி விடுவார்கள். நம்பாவிட்டால் கூட அனுமனை அயோத்திக்கு அனுப்பி உண்மை தெரிந்து வரும்படி அனுப்பித் துன்பத்தில் ஆழ்ந்துகிடப்பார்கள். அதற்குள் யாகம் முடிந்து விடும் என்றான் இந்திரசித்தன். இராவணன் உடன்பட்டான். இந்திரசித்து போனான்.

குரங்குக் கூட்டம் வாளா இருக்கவில்லை. ஆளுக்கு ஒன்றாகக் கொள்ளிக் கட்டையைக் கையில் ஏந்தி இலங்கை மேல் வீசினர். இலங்கை தீப்பற்றி எரிந்தது. அப்போது தான் அனுமன் மருத்து மலையைத் திரும்பக் கொண்டு போய் வைத்து விட்டு வந்து கொண்டிருந்தான். அப்போது மாயாசீதையின் கூந்தலைப் பற்றி இவள் காரணமாகவே இந்தப் போர்; ஆகையால் இவளைக் கொல்வதாகத் தன்னுடைய வாளை இந்திரசித்து எடுத்தான்.

அதைப்பார்த்து துடிதுடித்துப் போனான் அனுமன். ‘விண்டது போலும் நம் வாழ்வு’’- அழிந்ததோ வாழ்க்கை - என மிகவும் துயரப்பட்டு இந்திரசித்துவைப் பார்த்துப் பேசினான்.

> “குணங்களில் சிறந்தவனே! குற்றமற்ற குலத்தில் பிறந்தவன் நீ! ஒரு பெண்ணைக் கொன்றாய் என்றால், அது உனக்குத் தீராப் பழியையே கொண்டு வந்து சேர்க்கும்.
>
> உன்னுடைய குலப்பெருமை பெரியது. பிரம்மனுடைய மரபில் நான்காம் தலைமுறையில் உதித்தவன் நீ. ஞானநூல்களை முழுவதுமாக, நுட்பமாக அறிந்துள்ளாய். கொஞ்சமும் கருணை காட்டாமல் ஒரு பெண்ணை நீ கொன்றால், அது பெரும்பாவம் என்பதை நீ கற்ற நூல்களே கூறுமே!
>
> ஒரு பெண்ணைக் கொலை செய்யும் அளவு, இரக்கம் அற்றவனாய் நீ இப்போது உள்ளாய். உன்னுடைய எண்ணத்தைத் தெரிந்தவுடன் இந்த நிலவுலகில் உள்ளவர்கள் நடுங்குகின்றனர். வானில் உள்ளோரும் துடித்துப் போனார்கள். நீ இவற்றை எல்லாம் உன் கண்களைத் திறந்து பார். என்னுடைய திரியாமனமும் உன் செய்கையை எண்ணித் திரிகின்றது.

மண் குலை கின்றது வான நடுங்கிக்
கண் குலை கின்றது காணுதி கண்ணால்

எண் குலை கின்றது இரங்கல் துறந்தாய்
பெண்கொலை செய்கை பெரும்பழி அன்றோ

என்னுடைய பேச்சைக் கேள். பிராட்டியை விட்டு விட்டுப் போய்விடு. அப்படி நீ செய்தால் உன்னுடைய அருள் திறம் கண்டு உலகமே போற்றி உன் வசமாகும். நீ வந்த மரபை எண்ணிப்பார். நீ புகழ் பெற்றவன். கீழான பெண்கொலை புரிந்து புகழைக் கெடுத்துக் கொள்ளாதே".

அனுமனின் நயமும் வீரமும் வேண்டுதலும் அறிவுரையும் ஒன்று சேர்ந்த பேச்சு இது. அரக்கன் காதில் நீதிநெறி விழுமா? இந்திரசித்து அனுமனின் வேண்டலை மறுத்துவிட்டான். இலங்கை அழிவு, இராவணன் சாவு இவற்றைத் தடுக்கச் சீதையைக் கொல்வதே நல்ல வழி; இது மட்டுமல்ல, அயோத்தியும் அழிந்து விடும்; இதோ காத்திருக்கும் புஷ்பக விமானத்தில் ஏறி அயோத்தி நோக்கிச் செல்வதாகவும் இந்திரசித்து விரிவாகவே அனுமனிடம் விடை சொன்னான்.

சொல்லிவிட்டுத் தன்னுடைய வாளால் மாயா சீதையை வெட்டிச் சாய்த்தான். 'ஆளுடையவனே! எனக்கு அருள் புரிவாய் அருள்புரிவாய்' என்று சீதை எவ்வளவு கெஞ்சியும் இரக்கம் காட்டாதவனாகக் கொன்றான். உடனே விமானம் ஏறி, வடதிசை நோக்கிப் புறப்பட்டான்; அது கண்டு அனுமன் மயங்கினான். உடனே இந்திரசித்து நிகும்பலை வேள்வி செய்யும் இடம் சேர்ந்தான்.

பேரறிவும், நுண்ணுணர்வும், இன்னது இப்படி என்று கணிக்கும் ஆற்றலும் உடையவன் தான் அனுமன். அதில் ஏதும் ஐயமில்லை. ஆனாலும் தன் கண் முன்னேயே பிராட்டி கொலையுண்டதை அவனால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. தனக்கு 'என்றுமுள வாழ்வை'த் தந்த பெருந்தெய்வம் சாகக் கூடியதா என்று அவனால் எண்ணமுடியாதபடி, உணர்ச்சிக்கு ஆட்பட்டுப் புலம்பினான்.

"அன்னமே! பெண்ணின் முழுமையாக வந்து அந்தக் குலத்தின் அணிகலம் போன்றவளே! என் அம்மையே! தெய்வம் ஏதும் இல்லையா? ஐயோ! நான் என்ன செய்வேன்? அரக்கன் தேவியின் உடலை வெட்டி வீழ்த்துவதைப் பார்த்தும் என்னுடைய உயிர்போகாமல் இன்னும் இருக்கிறதே. பாவி நான்; பெரும்பாவி.

என்னுடைய எண்ணம் தோற்றுப் போயிற்று. மூன்று உலகங்களிலும் பரவி இருந்த இருள் விலகி ஒளிபரவுகிறது என்று எண்ணினேன். ஆனால் கொடிய துன்பம் என்னும் பேரிருள் உலகம் முழுவதும் மூடிக் கவிந்துவிட்டது. அந்தப்பாவி, வாளால் செந்திருமகளை வெட்டி விட்டானே, தருமம் என்பது உலகில் இருக்கிறதா என்ன? ஐயோ!

கற்புத் தெய்வமாகிய பிராட்டியை, பெண்ணின் பெருமகளை, என் கண்ணெதிரே அரக்கன் கொல்வதைப் பார்த்தும், உதவ முடியாமல் இரண்டு சிறகுகளையும் இழந்து விட்ட பெரிய பறவை போல நின்றிருந்தேனே. எம்பிரானின் தேவியிருந்த கொடுஞ்சிறையிலிருந்து நான் அவளை விடுதலை செய்த அழகு மிகவும் நன்று.

தெய்வக் கற்பினாளை, உயர்ந்த தவக்கொழுந்தை, கரவிலாப் பேதைமை கொண்டவளை, பெருமை மிக்க குலத்தில் உதித்த பெருமை உடையவளை, குற்றமற்றவளை, பெண்மகளாகிய சீதையை, திருமகளே வந்துதித்த மானிடப்பிறப்பைச் சிறைவைத்த கொடியவன் இராவணன். அவனைக் காட்டிலும் கொடியவனாக அவனுடைய மகன் இந்திரசித்து சீதையை வெட்டும் போது வாளா நின்ற என்னுடைய கருணை பாராட்டுக்குரியது தான்.

கல்விச் செல்வத்தில் தனக்கு இணையில்லாத வண்ணம் புகழ் பெற்றவன் இராமபிரான். அவனுடைய தூதுவனாக வந்து பிராட்டியிடம் அவன் சொல்லியவற்றையெல்லாம் சொல்லிப் போனேன். இப்பொழுது தேவியே! உனக்குத் துன்பம் செய்தவரை வென்று உன்னை மீட்டேன் என்று புகழ் பெறுவதற்குப் பதிலாக, உன்னைக் கொல்லும் வழியைக் காட்டிய கொடும்பழிக்கு ஆளாகி விட்டேன்.

கல்விக்கு நிமிர்ந்த கீர்த்திக் காகுத்தன் தூதனாகிச்
சொல்விக்க வந்து போனேன் நோய்வுறு துயர்செய்தாரை
வெல்விக்க வந்து நின்னை மீட்பிக்க அன்று வெய்தில்
கொல்விக்க வந்தேன் என்றே கொடும்பழி கூட்டிக் கொண்டேன்

என்ன வாழ்க்கை என்னுடையது! வஞ்சிக் கொடிபோன்ற சீதாபிராட்டியை எங்கு தேடியும் காணாமல் தன்னுயிரை மறந்தது போலிருந்த இராமபிரானிடம், அவனுடைய உள்ளம் தெளிந்து மகிழுமாறு "கண்டேன் கற்பினுக்கு அணியை" என்று அழகு சொற்களைப் பேசும் சீதை பற்றிச் சொல்லி மகிழ்ந்தேனே. அதே

வாயால், அரக்கன் தேவியை வாளால் கொல்வதைப் பார்த்துக் கொண்டு இருந்தவனும் நானே, என்று எப்படிச் சொல்வேன்? என்ன பிறப்பு என்னுடையது?

கடத்தற்கு அரிய கடலைக் கடந்து, இந்த இலங்கை நகருக்குத் தீவைத்து எரித்து, வெள்ளப்பெருக்கான கருங்கடல் மீது பாலம் கட்டி, மேருமலையைக் கடந்து போய் மருத்துமலையைக் கொண்டு வந்து இறந்தாரை எழுப்பி, - நான் செய்த இவற்றை எல்லாம் கேட்டும் கண்டும் மகிழ்ந்த என் தலைவன். 'குரங்குகளில் உனக்குச் சமம் என்று சொல்லக்கூட யாரும் இல்லை' எனச் சொன்னபோது எவ்வளவு மகிழ்ச்சியை அடைந்தேன்! அந்த மகிழ்ச்சி பெரியகடலில் ஒரு நறுமணப் பொருளைக் கரைத்தது போல அற்பமாகப் போயிற்றே!

உன்னை அவன் கைப்பற்றிய போதே, நான் என் உயிரை விட்டிருக்க வேண்டும். அல்லது உன்னைத் தொட்ட இந்திரசித்துவின் உயிரைப் போக்கியிருக்கவேண்டும். இனி மற்ற குரங்குகள் போல நானும் காய் இலை கனிகளைக் கையால் பறித்து உண்டு வாழ்ந்திருக்க மாட்டேன். நான் எளியவன் அல்ல; வேறுபட்ட பெருமையுடையவன்".

அனுமனின் உள்ளத்தில் அலைமோதிய கழிவிரக்க உணர்வை இந்தப் பாடல்கள் படம்பிடித்துக் காட்டுகின்றன. அதுவும் குறிப்பாக 'அஞ்சொலாள் இருந்தாள் கண்டேன்' என்ற நான் 'துஞ்சினாள் என்றும் சொல்லத் தோன்றினன் தோற்றம் ஈதால்' என்ற வரிகள் அவலத்தின் உச்சநிலையைக் காட்டுகின்றன. செயற்கரிய செய்தவன் என்று தலைவனால் பாராட்டப்பட்ட பின்னர், பழிக்குரியதைத் தடுக்கமுடியாமல் போனபாவி என்று ஏசப்படுவதற்கும் இடமாவது தான் ஒருவன் வாழ்க்கையில் பெறக்கூடிய பெரிய வீழ்ச்சி. அனுமன் சொற்கள் இந்த உலகியல் தத்துவத்தின் சொல்லோவியம். தன்னைத் தொண்டனாக - உண்மைத் தொண்டனாக மதித்த தலைவியைத் தன்னால் காப்பாற்ற முடியவில்லையே என்ற ஏக்கமும் அதனால் எழுந்த கோபமும் வருத்தமுமாக உணர்ச்சிகளின் கலவையாக அனுமன் இருந்தான்.

நடந்தது நடந்து விட்டது. இனிச் செய்ய வேண்டியதை முடிவு செய்யவேண்டும். 'பின் இனி முடிப்பது யாது? என்று இரங்கினான் உணர்வு பெற்றான்'. நேரடியாக இராமபிரானிடமே போகலாம். போய் எல்லாவற்றையும் சொல்லலாம். அவற்றைக் கேட்டு அவன் இறந்தால் நாமும் இறந்து விடுவோம்; இல்லை அவன் இருந்து என்ன சொல்வானோ அதைக் கேட்டு அதன்படி செய்வோம் என்று முடிவு

செய்தான். சென்று கண்ணீர் அருவிபோலப் பொங்கிவரத் திருவடியில் விழுந்தான். இராமன் குனிந்து தன் கைகளால் தழுவி அவனை எடுத்து நடந்ததைச் சொல்லக் கேட்டான்; சொன்னான். கேட்டு

துடித்திலன் உயிர்ப்புமில்லலன் இமைத்திலன் துள்ளிக் கண்ணீர்
பொடித்திலன் யாதும் ஒன்றும் புகன்றிலன் பொருமி உள்ளம்
வெடித்திலன் விம்மிப் பாரில் வீழ்ந்திலன் வியர்த்தான் அல்லன்
அடுத்துள துன்பம் யாவும் அறிந்திலர் அமரர் ஏயும்

ஒரு கணம். பிறகு மயங்கிக் கீழே விழுந்தான் இராமன். அதைக் கண்ட இலக்குவனும் வீழ்ந்தான். வீடணனுக்குப் புரிந்து விட்டது. இந்திரசித்து பிராட்டியைக் கொன்றிருக்கலாம்; அதை அனுமன் தெரிந்து வந்து சொல்லியிருக்கக் கூடும். உடனே நீர் தெளித்து, திருமேனி தீண்டி, பாதமும் கையும் வருடி உணர்வு வரச் செய்தான். இலக்குவனும் பலபல கூறிப் பகைவரை ஒழிப்பதே கடமை எனத் துணிவு ஏற்படும் வகையில் பேசினான். அதைக் கேட்டு சுக்ரீவன் உள்ளிட்டவர்கள் இலங்கை மீது பாயத் தொடங்கினார்கள். அனுமன், இந்திரசித்து அயோத்தி நோக்கிச் செல்வதையும் குறிப்பிட்டான். இராமன் அதைக்கேட்டு இன்னும் அதிகமாகத் துன்புற்றான்.

வீடணன் இந்தச் சூழலில் உணர்ச்சிகளுக்கு இரையாகாமல் தெளிவு பெற்றான். இராமனை நோக்கி, இந்திரசித்து செய்தவை எல்லாம் மாயாக இருக்கக் கூடும்; பிராட்டியை யார் தொட்டாலும் எரிந்து போவார்கள்; அப்படியிருக்க இந்திரசித்து கொன்றிருக்க முடியாது; தான் போய் உண்மையாக நடந்தவற்றைக் கண்டு வருவதாகவும் அதுவரை பொறுத்திருக்கவேண்டும் என்றும் சொல்லிப் போனான். சீதையைக் கண்டான்; தன்மகள் திரிசடை தேறுதல் மொழி கூறக் கேட்டு அமைதியாக இருக்கும் பிராட்டியைக் கண்டான். அவன் மனத்தின் பெரும்பாரம் இறங்கியது. வஞ்சனை தெரிந்து விட்டது. இந்திரசித்து நிகும்பலைக்கு யாகம் செய்யப் போவதையும் கண்டான். திரும்பிவந்து தான் தெரிந்தவற்றைச் சொல்லக் கேட்ட எல்லாரும் மகிழ்ந்து ஆரவாரித்தார்கள்.

## 22. நிகும்பலை யாகமும் இந்திரசித்து வீழ்ச்சியும்

இந்திரசித்துவின் நிகும்பலை யாகம் நடைபெறாமல் தடுக்கவேண்டும். இல்லையென்றால் அதன் விளைவாக எல்லாரும் இறப்பது உறுதி. யாரை அனுப்புவது? இலக்குவனை அனுப்புமாறு இராமனிடம் வீடணன் சொன்னான். அதற்கு உடன்பட்டுத் தம்பியை அழைத்து மார்புறத் தழுவிக் கொண்டு அம்பு விடுவது குறித்துச் சில அரிய நுட்பங்களை இராமன் சொன்னான். தவிர தன்னுடைய வில்லையும் கவசத்தையும் அம்பறாத் தூணியையும் கொடுத்து வாழ்த்தி அனுப்பினான்.

வானரப்படையுடன் இலக்குவன் நிகும்பலை அடைந்தான். அரக்கர்படை சூழ இருந்தது. இருபக்கமும் கடுமையான போர் நடந்தது. யாகம் நடத்த முடியவில்லை. பேரழிவு; அளவிலாதார் இறப்பு; அரக்கர் மாய்வு; இவற்றைப் பார்த்த இந்திரசித்து வருந்தினான். தன் கண் முன்னால் அவர்கள் அப்படி இறந்தது அவன் மனத்தை வாட்டியது.

அப்படி அவன் துன்பப்பட்டு நின்ற பொழுது அவனை நெருங்கி அனுமன் கூறினான். அவன் சொற்களால் இந்திரசித்துவுக்குக் கோபம் வரச்செய்ய வேண்டும் என்பதே நோக்கம். அனுமன் சொன்னான்;

"வஞ்சனையும் பொய்யும் ஒன்றல்ல. கோடிகோடியாக உடையவனே! நான் உனை எப்படிக் கெஞ்சிக் கேட்டேன். அதை ஒன்றும் காதில் போட்டுக் கொள்ளாமல் நீ எங்கள் பிராட்டியை வாளால் வெட்டி வீழ்த்தினாய். இப்பொழுது என்ன ஆயிற்று? குபேரன் தந்த புஷ்பக விமானத்தின் மீது ஏறி வடதிசை அயோத்தி நோக்கிப் போனாயே? இப்பொழுது ஏன் இங்கு நிற்கிறாய்?

பேரலைகள் ஆர்ப்பரிக்கும் கடலைப்போல அரக்கர் படைகள் சக்ரவியூகம் அமைத்து நிகும்பலையில் இருப்பதை நாங்கள் கண்டோமே. ஆனால் நாண்ஒலி ஏதும் கேட்கவில்லையே! படைகொண்டு சென்று எப்போது அயோத்தியை அழித்தாய்? பரதனைச் சுற்றத்தாருடன் எப்படி வீழ்த்தினாய்? இப்பொழுது இங்கே வேள்வி நடத்திக் கொண்டிருக்கிறாயே. அது முடிந்து

விட்டதா?

அகன்ற உலகங்களை எல்லாம் தாங்கும் இந்தப் பூமியை இனிமையாக ஏந்தும் ஆதி சேடப் பாம்பிலும் ஆற்றல் மிக்கவன் பரதன். மிகுந்த தோள்வலியுடையவன்; அவனை நீ நேரில் பார்த்து உன் ஆற்றலைக் காட்டிப் போரிட்டு மீண்டு நீ உயிருடன் திரும்பி வந்துள்ளாய் என்பது புதுமை தான்.

வானத்தில் போர்புரிவதில் வல்லவனான சம்பரன் என்ற அசுரனை எதிர்த்துப் போரிட்ட வானவர்க்குத் துணையாகப் படையெடுத்துப் போய், அவனைக் கொன்று தேவர்களுக்கு மீட்சி தந்தவன் தயரதமாமன்னன். அவன் பெற்றெடுத்த மக்கள் இராமபிரானை முதலாகக் கொண்ட நால்வர். அவர்களில் கடைசி மகனான சத்ருக்கனை நேரில் கண்டாயா? அவனிடத்தில் உன் வில் வலிமை காட்டினாயா?

இவையெல்லாம் நடக்கவில்லை என்பது உனக்கே தெரியும். ஆனால் உறுதியாக என்ன நடக்க இருக்கிறது என்பதை நான் சொல்ல நீ கேள். இலக்குவனுடைய நெருப்பைப் போன்ற அம்புகள் வயிரத்தூண்கள் போல் உங்கள் மீது பாய உள்ளன. அவற்றின் விளைவால் கண்கள், வாய், மூக்கு என்று எங்கெல்லாம் உடம்பில் துளைகள் உள்ளனவோ அங்கிருந்து அரக்கர் ரத்தம் பீறிட்டுப் பாயப் போகிறது. இலங்கைக்குள் ஓடிப்போய் ஒளிந்து கொண்டு வஞ்சனையாகவும் மாயமாகவும் நீ செய்யும் போராற்றல் எல்லாம் இன்றொடு மாண்டு போகும்; இதை மறவாதே.

நாகபாசத்தை மீண்டும் விடப் போகிறாயா? தாமரைமலரில் வாழும் பிரம்மனுடைய படையா, பழந்தெய்வமாகிய சிவபெருமானின் அம்பா, மாயோனாகிய திருமாலின் சக்கரப் படைக்கலமா எதை எங்கள் மீது ஏவப் போகிறாய்? அவற்றைக் கண்டு நாங்கள் அஞ்சி நடுங்கிக் கூசிவிடுவோம் என்று எண்ணுகிறாயா? போதும் போதும் உன்னுடைய மாயவித்தைகள். உங்களை நோக்கி எமன் நெருங்கி விட்டான்; நீங்கள் இறப்பது உறுதி.

பாசமோ மலரின் மேலான் பெரும்படைக் கலமோ பண்டை
ஈசனார் படையோ மாயோன் நேமியோ யாதோ இன்னம்
வீசநீர் விரும்புகின்றீர் அதற்கு நாம் வெருவிச் சாலக்
கூசினோம் போதும் போதும் கூற்றினார் குறுக வந்தார்.

நீயும் உன் தந்தை உள்ளிட்டோரும் நிறைய வரங்களைப் பெற்றவர்கள்; ஐயமில்லை. வியப்பையும் அச்சத்தையும் விளைக்க

வல்ல மாயங்கள் பல செய்வதில் வல்லவர்கள்; அதிலும் ஐயமில்லை. பெருமைமிக்க தேவர்கள் எல்லாம் ஆற்றல்மிக்க படைக்கலங்கள் பலவற்றை உங்களுக்குத் தந்திருக்கிறார்கள். இதுவும் மெய்தான். உடல்வலியால் யாரும் நெருங்க முடியாத வல்லமையும் உங்களுக்கு உண்டு. இவற்றை எல்லாம் தாண்டிய வலிமையுடன் உங்களை உயிரோடு இருக்கும் போதே தலைகளை அறுத்துக் குவிப்போம்.

நஞ்சு தன் கழுத்தில் துடிக்குமாறு அதைக் கொண்ட சிவபெருமான் தானே ஆகுக; பிரமன் தானே ஆகுக; பாற்கடலில் ஆதிசேடப் பாம்பின்மீது துயில் கொள்ளும் திருமால் தானே ஆகுக இவர்கள் மூவரும் ஒன்று சேர்ந்து வந்து உங்களை அதிர்வில்லாமல் தாங்கினால் கூட. நீங்கள் சாவது திண்ணம். அதில் ஐயம் ஏதும் வேண்டாம். இடப்பக்கக் கண் உனக்குத் துடிக்கிறதே, அது ஒரு தீய அறிகுறி அல்லவா? உயிருடன் இருக்க ஆசையா அழிய ஆசையா? சொல்லுங்கள்.

'இந்திரசித்துவை நானே கொல்வேன்' என்று வீரசபதம் செய்த வில்லாளியான இலக்குவன் உன் படை முழுவதையும் அழித்து விட்டான். இப்பொழுது, 'வா. விரைந்து வந்து என்னோடு போரிடு'. என்று அழைக்கிறான். அவனுடைய வில்லின் கயிறு இப்பொழுது மீட்டப்பட்டு விட்டது. அது எழுப்பும் ஒலி நீ செய்யவிருந்த யாகத்தின் கருவி முழக்கம் போல உனக்குத் தென்படவில்லையா?

இந்திரசித்துவே! உன் தலையை நிமிர்த்தி வானத்தைப் பார். தேவர்களும் முனிவர்களும் மற்றவர்களும் ஒன்று கூடித் தோன்றுகின்றனரே, எதற்காக? மூன்று உலகங்களையும் காக்கும் தெய்வ இராமனின் தம்பி இலக்குவன் உங்களுடன் செய்ய இருக்கும் போரைக் காண்பதற்காக! ஏன் காலத்தை வீணாகக் கழிக்கிறாய்? இன்றுடன் நீங்கள் அழிவது உறுதி".

அறத்தைக் காக்க வந்த அனுமனின் வீர உரை இது. பத்துப் பாடல்கள். எதிரிகளின் பலத்தையும் பலவீனத்தையும் ஒருங்கே சுட்டிக் காட்டிப் பேசிய வீர உரை. அழியும் காலம் என்று வந்துவிட்டால், ஒருவன் பெற்றிருக்கும் எந்த வரமோ தெய்வப்படையோ கூட வந்து உதவிசெய்யாது; ஒரு குறிப்பிட்ட காலம் வரையே அவையும் பயன்படும். எஞ்சியது முடிவு ஒன்று தான் என்பதை இந்திரசித்துவுக்கு அனுமன் தெளிவாக்கினான். மாயம், வித்தை, வஞ்சனை, வரம், படை இவை எல்லாம் நிலையானவை அல்ல என்பதை எல்லாருக்கும் அனுமன் கூறுவது போல உள்ளது.

இந்த மெய்ம்மொழிகள் அரக்கர்களின் ஆணவ உள்ளத்தை மாற்றுமா என்ன? சிரித்தான் இந்திரசித்து. இலக்குவனாவது இராமனாவது. குரங்குகளாவது மானிடராவது-எல்லாரும் அவனுடைய வில்லால் கொல்லப்படுவது உறுதி என்று பேசினான். அனுமனைப் போல வாயால் தன் திறமைகளைச் சொல்லப் போவது இல்லை என்றும், ஏற்கெனவே நாகபாசத்தாலும் பிரம்மாஸ்திரத்தாலும் இறந்து போனவர்கள் தானே என்றும் வீறு பேசிப் போரைத் தொடங்கிவிட்டான்.

வில்லை வளைத்து அவன் அம்புகளை ஏவ, அனுமன் ஒரு மலையை எடுத்து அவன்மீது வீசினான். மலை பொடியாகப் போனது. அம்புகள் வரிசை வரிசையாக இந்திரசித்துவின் வில்லில் இருந்து வெளிப்பட்டு, அனுமனின் மார்பில், தோளில், காலில், கையில், கழுத்தில், நெற்றியில், கண்ணில், எரிமுகக் கடவுளின் நெருப்பு மழையாகத் தைத்தன. அங்கு இலக்குவன் வந்து சேர்ந்தான். அனுமனின் தோள்மீது ஏறிப் போரைத் தொடர்ந்து நடத்தினான். பலபல பாடல்களில் அதைக் கம்பர் வருணிக்கிறார். பலவகையான போர்க் கருவிகளை மாறி மாறி இந்திரசித்து ஏவியும் இலக்குவனை அசைக்கவில்லை. ஏவியவன் சலித்துப் போனான். ஒரு கட்டத்தில் இந்திரசித்து பிரம்மாஸ்திரத்தைச் செலுத்தினான். அதைக் கண்ட இலக்குவன் தானும் அதற்கு எதிராக வேறொரு பிரம்மாஸ்திரத்தை ஏவினான். அது இந்திரசித்துவின் படைக்கலத்தைச் செயல் இழக்கச் செய்தது. தேவர்கள் வியந்து போனார்கள்.

அப்போது இராம இலக்குவர் யார், அவர்கள் உண்மையான ஆற்றல் என்ன என்பது பற்றிச் சிவபெருமானே கூறியதாகக் கம்பர் நான்கு பாடல்களில் தெய்வச் சிறப்பைப் பாடுகிறார். அனுமனுக்கு இங்கு தொடர்பில்லை என்றாலும், பரத்துவத்தைப்பாடும் அழகுக்காகப் பார்க்கலாம்.

> "தேவர்களே! என்ன இப்படி வியந்து நிற்கிறீர்கள்? உண்மைப் பொருள் பற்றி நான் சொல்கிறேன், கேட்டுக் கொள்ளுங்கள். இந்த இருவரும் - இராம இலக்குவராகிய இந்த இரண்டு மானிடர்கள் - நமக்கெல்லாம் வேர் போல மூலகாரணராய் இருப்பவர்கள். இந்த அண்டங்களுக்கெல்லாம் முழுமுதல் பொருளும் இவரே. வினை கடந்த ஞானிகள் ஆராய்ந்து பார்த்தாலும் அறிய முடியாத ஒரு பெரிய மாயையில் அவர்கள் மறைந்துள்ளார்கள். வேதவிற்பன்னர்கள்

பாராயணம் செய்து தொழும் நான்மறை களையும் கடந்தவர்கள்; மிகமிகத் தொன்மையானவர்கள்.

அறிவோ ஆராய்ச்சியோ அவர்களைத் தொடக்கூட முடியாது. அந்த எல்லைகளை எல்லாம் தாண்டியவர்கள். அறத்துக்குக் கேடு வரும் போது மானிடராய் ஏற்கெனவே பிறந்துள்ளவர்கள். நடுவில் தாமும் பிறந்து அந்த அறத்தை நிலை நாட்டுபவர்கள். கொடிய அரக்கர்கள் வேரோடு அழியவேண்டி இப்போது இங்கு வந்துள்ளார்கள். ஆனாலும் யாருக்கும் அவர்கள் நோக்கம் தெரியாதபடி திரிந்து கொண்டிருப்பார்கள்.

உயிர்கள் தோறும் பரந்து கரந்து உள்ளவனாகவும், பாடித் தொழத் தக்க பெருமைக்கு உரிய ஒப்பற்ற கடவுள் எனவும் இருப்பவன் இந்த இலக்குவன். இதில் எந்த ஐயமும் வேண்டாம். எங்கும் எதிலும் கலந்து நிற்பவன். இதுதான் அந்த ஒப்பற்ற பொருள். அவனே தலைவனாக இப்போது வந்துள்ளான். உணர்வீர்களாக.

“அரக்கர்களைக் கொன்று உலகைக் காக்கவேண்டும் என நாம் முன்பு பாற்கடலில் கிடந்த பரமனை வேண்டிக் கொண்ட நினைவு இருக்கிறதா? அவர்களை எப்படி அழிக்க முடியுமோ அப்படி வகை செய்து இப்போது நம்முன் வந்துள்ளார்கள்'' என அழிக்கும் கடவுளும், செஞ்சடை சூடியவனுமான சிவபெருமான் கூறினார்.

''நெடும்பாற்கடல் கிடந்தாரும் பண்டுஇவர் நாம்குறை நேர
விடும் பாக்கியம் உடையார்களைக் குலத்தோடு அற வீட்டி
இடும் பாக்கியத்து அறம் காப்பதற்கு இசைந்தார்'' என
அடும் பாக்கியத்து உடைச் செஞ்சடை முதலோன் பணித்து
அமைத்தான்

இந்திரசித்து இலக்குவன் மீது திருமாலின் படையை (நாராயண அஸ்திரம்) ''நீ இதைத் தடுத்துப்பார்; ஒருவேளை அதைத் தடுத்துவிட்டால் உன்னை எதிர்த்து யாராலும் நிற்க முடியாது" என்று சொல்லி ஏவினான். 'தானே முழுமுதலாகிய அந்தத் திருமால்' என்று தியானித்து இலக்குவன் நின்றான். வந்த பெரும்படைக்கலம் அவனை வலம் வந்தவாறு திரும்பிச் சென்று விட்டது. அதே போல இந்திரசித்து அடுத்ததாக விடுத்த பாசுபத அஸ்திரத்தையும் இலக்குவன் அதேபோல வேறு ஒன்று ஏவி அழித்தான்.

இத்தனைக்கும் யார் காரணம் ? வெற்றிகளையே தந்து கொண்டிருந்த தன்னுடைய படைக்கலங்கள் வலியிழந்து

போனமைக்கு யார் காரணம்? சிற்றப்பா, வீடணன். அவனைப் பல வகைகளிலும் பழிச்சொற்களால் ஏசினான் இந்திரசித்து. பிறகு வானில் மறைந்து இராவணனிடம் போனான்.

தந்தைக்கும் மகனுக்கும் கடுமையான வாக்குவாதம் நடந்தது. களத்தில் நடந்தது என்ன என்பது பற்றி விரிவாக இந்திரசித்து சொன்னான். என்ன மாயம் செய்தாலும் அவற்றை எல்லாம் வீடணனே காட்டிக் கொடுத்து அழிக்கச் செய்தான். (பிரம்மாஸ்திரம், நாராயணாஸ்திரம், பாசுபதாஸ்திரம்) பிரம்மன், திருமால், சிவபெருமான் படைக்கலங்கள் அவர்களை நெருங்கவும் முடியவில்லை. திருமால் தந்த படைக்கலம் இலக்குவனை வலம்செய்து போயிற்று; அவர்கள் வலிமை இத்தகையது. ஆதலால் சீதையை விட்டு அடைக்கலம் கேட்பதே நல்லது எனத் தெளிவாகக் கூறினான்.

ஆனாலும் இராவணன் மனம் இரங்கவில்லை. ஆணவமே மேலோங்கி நின்றது. 'என்னையே நோக்கி இந்நெடும்பகை தேடிக் கொண்டேன்' என மகனிடம் கூறித் தானே போருக்குச் செல்லப் புறப்பட்டான். அவனைத் தடுத்து இந்திரசித்தே மீண்டும் களத்துள் புகுந்தான். இலக்குவனுக்கும் இந்திரசித்துவுக்கும் போர் தொடர்ந்தது. எண்ணற்ற அம்புகள் உடலைத் தைத்த போதும் கலங்காமல் அரக்கன் மகன் செய்யும் வீரப்போரைக் கண்டு இலங்குவனே பாராட்டினான். 'இவனுடன் போர் வீரமும் மடிந்து போகும்' என்பது அவன் கணிப்பு.

'இலக்குவனின் கொடுங்கணையால் இந்திரசித்துவின் தேர் சிதறியது. அது சிவபெருமான் தந்தது; பாதி ஆற்றலை அவன் இழந்தான். கையில் இருந்ததும் சிவதனுசு தான். அதையும் ஒடித்தால் அரக்கன் மடிவான். வீடணன் காட்டிய வழி. வில்லை ஏந்திய கையை ஒரு அம்பால் இலக்குவன் அறுத்து வீழ்த்தினான். இராமனே பரம்பொருள் என்பது உண்மையானால் இவன் சாக வேண்டும்' என்று சொல்லி இலக்குவன் ஒரு பிறைவடிவ அம்பை ஏவினான். இந்திரசித்துவின் தலை அறுந்தது; அவனுடல் மண்ணில் வீழ்ந்தது. அங்கதன் அந்தத் தலையை எடுத்து வந்து இராமனிடம் காட்டினான். இலக்குவனை இராமன் அணைத்து மகிழ்ந்தான் புகழ்ந்தான்.

செய்தி இலங்கையில் பரவியது. ஊருள் பரவிய துன்பத்துக்கு

அளவில்லை. இராவணன்-மண்டோதரி ஆகிய தந்தை தாயர் தம்முடைய வீரத் திருமகனின் சாவுக்காக வருந்தியதும் அழுததும், புலம்பியதுமான உணர்ச்சிக் குமுறல்களைக் கம்பர் தெய்வத் தமிழ்ப் பாடல்களில் அழியாவண்ணம் பதிவு செய்திருக்கும் வகை இன்றும் படிப்போரை உருக்குவன.

இத்தனை துன்பங்களுக்கும் சீதையே காரணம். அவளைத் தானே வெட்டி விடுவது என்று சினந்து இராவணன் ஓடினான். அவனை மகோதரன் தடுத்து நிறுத்தினான். பெண் கொலைப் பாவம், இராவணன் பெற்ற மேன்மை, இராம இலக்குவர் ஆற்றல் இவற்றை எல்லாம் சொல்லி அந்தப் பாவத்திலிருந்து தடுத்து நிறுத்தினான். இலங்கையில் எஞ்சி இருந்த ஒரே வீரன் இராவணன் தான். படைகளை எல்லாம் ஒன்று திரட்டி இறுதிப்போரை அவன் தான் செய்தாக வேண்டும். வேறு வழியில்லை.

அவனுடைய ஆட்சிக்கு உட்பட்ட பல தீவுகள் நாடுகள் இவற்றிலிருந்தெல்லாம் படைகள் வந்தன. அவற்றின் தலைவர்கள் இராவணனைப் பணிந்தனர். இந்திரசித்துவையும் கும்பகருணனையும் அம்பினால் வென்றவர்கள் மனிதர்களா? அவர்கள் படை குரங்குகளா? என்று எள்ளி நகையாடி இராவணனின் செருக்குக்குத் தூபம் இட்டனர். அவர்களுக்கு மாலியவான் இராம இலக்குவரின் தெய்வத் தன்மை பற்றியும பேராற்றல் பற்றியும் விரிவாகச் சொன்னான். உயிர் பிழைக்கவேண்டும் என்றால் தேவியை விட்டுச் சரணடைவதே மேல் என்று தக்கநெறி சொன்னான். வழக்கம் போல அறிவுரைகள் விழலுக்கு இறைத்த நீர் ஆயின.

## 23. இராவண வீரம்

இராவணன் தன்னுடைய மூலப்படையைத் துணையாகக் கொண்டு வானரக் கூட்டத்தை அழிக்கவும், பிறநாடுகள் தீவுகளிலிருந்து போருக்கு வந்த படைகளை இராம இலக்குவரை எதிர்த்துப் போர் செய்யவுமாக இராவணன் பணித்தான். இந்த மூலப்படை தொன்று தொட்டு இலங்கையிலிருந்து பல வெற்றிகளைப் பெற்ற பெருமைக்குரியது. இந்திரன் உள்ளிட்ட தேவர்களையும் எட்டுத்திசை பாலகர்களையும் வென்ற படை அது. அசைக்க முடியாத நம்பிக்கையுடன் இராவணன் களம் சென்றான். அளவாலும் பெரியது; ஆற்றலாலும் பெரியது; போட்ட ஆரவாரமோ உலகையே நடுங்கச் செய்த ஒலி உடையது. அதுதான் அந்த மூலப்படை.

வானவரும் வானரரும் ஒரு சேர அஞ்சிக்கலங்கினர். வானரப்படை சிதறி இங்கும் அங்கும் ஓடியது. சுக்ரீவன், அங்கதன், அனுமன் தவிர யாரும் அங்கில்லை . இராமன் வீடணனைப் பார்த்து மூலப்படையின் தன்மை பற்றிக் கேட்டான். அவன் விளக்கமாக அதுபற்றிக் கூறினான். அங்கதன் வானரர்களுக்குச் சாம்பவான் மூலமாக வீரச்சொற்கள் கூறித் துணிவை ஏற்படுத்தினான். இலக்குவனை உதவிப்படையை எதிரிடுமாறு கூறி, அனுமனைத் தம்பிக்குத் துணையாகப் போகுமாறும் சொன்னான், ஆனால் அனுமனுக்கு ஒரு ஆசை. இராமபிரானைத் தன் தோளில் ஏற்றிக் கொள்ள வேண்டும்; இல்லை என்றால் அருகில், பின்னால் எப்போதும் களத்தில் கூட இருக்கவேண்டும். சாதாரண விலங்கு என்றோ, அற்பத் தொழில் செய்யும் குரங்கு என்றோ கருதாமல் இந்தப் பேற்றை அருளுமாறு கேட்டான்.

என்று அவன் ஏகலுற்ற காலையில் அனுமன் எந்தாய்!
புன்தொழில் குரங்கு எனாது என்தோளின்மேல் ஏறிப்புக்கால்
நன்றெனக் கருதா நின்றேன் அல்லது நாயினேன் உன்
பின்தனி நின்ற போதும் அடிமையில் பிழைப்பில் என்றான்.

இராமன் தக்ககாரணத்தைக் கூறினான் "அனுமனே! உன்னால்

முடியாத செயல் ஏதும் உண்டா என்ன! பெருவீரனாகிய இராவணன் வில்லைக் கையில் ஏந்தி வந்து இலக்குவனை எதிர்த்தால், நீ அங்கு இலக்குவனுக்குத் துணையாக இல்லை என்றால் வெற்றி கிடைக்குமா? வானர சேனையும் அழிந்து போகுமே! நீ இருக்கும் துணிவால் தானே இலக்குவனை அனுப்பி இந்திரசித்தை எதிர் கொண்டோம்? வெற்றியும் பெற்றோம். வீரனே! உன்னைப் பிரியாது இலக்குவன் இருந்தால் இன்னும் பல வெற்றிகளை இலக்குவன் பெறுவது உறுதி. ஆதலால் நீ அவனுக்குத் துணையாகப் போய் வா''. அனுமன் மட்டுமல்ல; வீடணன், சுக்ரீவன் உள்ளிட்ட பெருவீரத் தலைவர்களையும் இலக்குவனுக்குத் துணையாக இராமன் அனுப்பிவைத்தான். தான் தனி ஒருவனாக அரக்கரின் மூலப்படையை எதிர்நோக்கிப் போர்க் கோலம் பூண்டான். தேவர்கள் வாழ்த்தினர்; முனிவரும் வெற்றிக்கு ஆசி கூறினர்.

இராமன் தன் வில்லை வளைத்து நாணை மீட்டினான். அரக்கர் படை அதிர்ந்தது. அம்புகள் மழைத் தூறல்கள் போலக் கிளம்பின. பலபாடல்களில் இராமனின் போர்த்திறமையைக் கம்பர் பாடுகிறார். பல்லாயிரம் அரக்கர்கள் மாண்டு போனார்கள். மூலபல வதைப் படலம் என்றே இப்பகுதிக்குப் பெயர். இராமனின் வில்லாற்றல் பார்த்து முப்பெருங் கடவுளரும் தேவரும் முனிவரும் வியந்து போனார்கள்.

இது ஒருபுறம். மறுபுறத்தில் இராவணன் தேரேறி வானர சேனையை எதிர்க்க வந்தான். அவன் கண் முன்னாலேயே அவனுடை வீரர்கள் பெரும் எண்ணிக்கையில் கொல்லப்பட்டனர். அளவில் அடங்காக் கோபத்தால் கொதித்து, கடும் கணைகளை இராவணன் ஏவினான். வானரசேனை நிலை கெட்டு ஓடியது. அப்போது அவர்களுக்குத் துணிவு ஏற்படும் விதமாக இலக்குவன் அனுமன் மேல் ஏறி வந்தான். இராவணன் அவன் மீதும் பல அம்புகளைச் செலுத்தினான். கடைசியில் மோகனாஸ்திரத்தை இலக்குவன் மீது எறிந்தான். அது முழுமுதற் கடவுளால் அருளப்பட்டது. அதற்குரிய மந்திரத்தை ஒலித்து ஏவினால் சிவபெருமானும் எதிர் நிற்க முடியாத வல்லமை உடையது. இராவணன் அதைத்தான் இலக்குவனனைப் பார்த்து ஏவினான். அருகிலிருந்த வீடணன், திருமாலின் படையைச் செலுத்தி அதை அழிக்கச் சொன்னான். அதைக்கண்ட அரக்கவேந்தன் வேல் எறிந்து

வீடணனைக் கொல்ல முயன்றான். இலக்குவன் பல படைக்கலங்களை வீசி அதை முறிக்கப் பார்த்தும் முடியவில்லை. வேறு என்ன செய்யலாம்? இலக்குவன் தன்னுடைய மார்பில் அதை ஏற்றான்; கீழே விழுந்து இறந்தவன் போலவும் ஆனான். இராவணன் தனக்கு வெற்றி கிடைத்தது போதும் என்ற நிறைவில் இலங்கை திரும்பினான். அனுமன், சாம்பவான் அறிவுரைப்படி, மூலிகை மருந்து கொண்டு வந்து இலக்குவனை உயிர்ப்பித்தான். எல்லாரும் இராமபிரானைச் சார்ந்தனர். வீடணனுக்காக இறக்கத் துணிந்த தம்பியை இராமன் பாராட்டினான். வீடணன் வானர வீரர்களுக்குப் போர்க்களக் காட்சிகளைக் காட்டி மகிழ்ந்தான்

அங்கு இலங்கையில் காட்சி வேறு. இலக்குவன் தான் எறிந்த வேலால் மாண்டு போனான் என்று கருதிய இராவணன் தன்னோடு வந்து போரிட்டவர்களுக்குப் போகக் களியாட்ட விருந்தைக் கொடுத்தான். ஆடியும் பாடியும் கூடியும் களித்தும் இன்பம் துய்த்துக் கொண்டிருந்தபோது, இராவணனுக்கு மூலபலம் அழிந்த செய்தி வருகிறது. தனி ஒருவனாக நின்று இராமனே அதைப் பொடியாக்கினான் என்பதை வந்தவர்கள் தெரிவித்தார்கள். அவனுக்கு ஐயம் ஏற்பட்டது. இலக்குவனைக் கொன்றாயிற்று; தம்பியின் இறப்புக்காக இராமன் துன்புறும் நேரம்; எப்படிப் போருக்கு வந்திருப்பான்; அந்தச் சமயத்தில் இன்னொரு தூதன் அங்கு வந்து இலக்குவன் பிழைத்ததையும் உதவிப்படை சிதறியதையும் சொன்னான். தீய அறிகுறிகள் பல இராவணனுக்குத் தென்பட்டன. எஞ்சிய படைகளைத் திரட்டிக் கொண்டு தானே போருக்குப் புறப்பட்டான். ஆயிரம் குதிரைகள் பூட்டப்பட்டு, பாரிலும் வானிலும் நீரிலும் நெருப்பினுள்ளும் செல்லும் ஆற்றல் கொண்டதாய், அழியாத வலிமை கொண்டதாய் மலைபோல் உயர்ந்த தேரில் உரிய முறைப்படி அதற்கு வழிபாடு செய்த பின்னர் ஏறிப் போனான்.

இனி எஞ்சியிருப்பது ஒன்று தான். சீதை தன்னுடைய வயிற்றில் அடித்துக் கொண்டு அழுமாறு இராமன் சாகவேண்டும்; அல்லது மயன் மகளாகிய மண்டோதரி புலம்புமாறு தான் அழியவேண்டும்.! 'இரண்டில் ஒன்று ஆக்குவன்' என்று முடிவு செய்தான் இராவணன்.

தேர்மீது ஏறிவந்தான் பகைவன். இராமபிரான் நிலத்தில் இருந்து எப்படிப் போர் செய்வான்? அவனுக்கு வலிய தேர் ஒன்றை

அரக்கனின் தேருக்குச் சமமாக, அழகும் கம்பீரமும் சிறிதும் குறைவில்லாமல் அனுப்புமாறு சிவபெருமான் தேவர்களுக்கு ஆணையிட்டார். மேரு மலையே வந்து நிற்பது போன்ற தோற்றத்துடன் தேர் வந்தது. அதில் 'இனிது ஏறினான் இராமன்' .

சமமான வீரர்கள் இருவரும்; தெய்வ வரங்கள் பெற்ற ஒருவனும், தெய்வமான ஒருவனும். இருவருடைய வில்களின் நாண் ஒலி கேட்டு அனுமன் உள்ளிட்டவரும் கீழே விழுந்தனர் என்றால் அவர்களின் வலிமையும் போராற்றலும் நன்றாகப் புலப்படும். வளைந்தன வில்கள்; விளைந்தது பூசல். இருபுறத்திலிருந்தும் வரிசையாக அம்பு மழைகள்; இருபக்கத்துப் படைகளும் கட்டழிந்து நிலை குலைந்தன. மூர்க்கமான போர். இராவணன் தன்தேரை மேலே எழுப்பி வானிலிருந்து அம்புகளை ஏவி வானரரை அழித்தான். இராமன் தேர் வாளா இருக்குமா? அரக்கர் படை தடுமாறியது.

இராம இராவணப் போர் காப்பியத்தின் இறுதிநிலையைக் காட்டுவது. அதை மிகவும் விரிவாகப் பாடுகிறார் கம்பர். இராமனுடைய தேர்க் கொடியில், வைகுந்தத்திலிருந்து பறந்து வந்து கருடன் புகுந்து வலிமை சேர்த்தான். அப்படி இல்லாமல் இராவணனின் தேரிலிருந்து வீணைக் கொடி அறுபட்டுப் பறந்தது. பிரமன் படை, திருமால்படை, சிவனருளிய படை என்பன போலத் தெய்வத்தன்மை வாயந்த அஸ்திரங்கள் களத்தில் பேரழிவுகளை உண்டாக்கின். இவைதவிர, வலிமைமிகக பிறகருவிகளும் பயன்படுத்தப்பட்டன. அரக்கன் நேரடிப் போர் தவிர, வஞ்சனை மாயை இவற்றால் பொய்க்காட்சிகள் தோன்றச் செய்தும் வானரர்களைக் குழப்பினான். இராவணன் ஏவிய சூலப்படை ஒன்றை இராமனுடைய அம்புகள் தகர்க்க முடியவில்லை. அவனை அது நெருங்கிவிட்டது. என்ன செய்வது? என்ன செய்யலாம்? தேவர்கள் உள்பட எல்லாரும் அதிர்ந்து அஞ்சிப்போனார்கள். அழிக்கும் வலிமையுடன், மணிகளை ஒலித்துக் கொண்டு, நெருப்பைச் சிந்திய வண்ணம், அழகான மணிமாலைகள் தழுவும் இராமபிரானின் மார்புக்கு நேராக அது சீறி வந்தது ஒரு கணம் தான். அளவிடமுடியாத கோபத்துடன் அதை இராமன் உற்றுப் பார்த்தான். அவனுடைய நெஞ்சிலிருந்து 'ஊங்காரப் பெருமுழக்கம்' இடிபோல ஒலித்தது. அவ்வளவு தான்; அந்தச் சூலம் பலநூறு துண்டுகளாகப் பொடியாகி விழுந்தது.

சங்காரத்தால் கண்டை ஒலிப்பத் தழல் சிந்தப்
பொங்கு ஆரத்தான் மார்பு எதிரோடிப் புகலோடும்
வெங்காரத்தான் முற்று முனிந்தான் வெகுளிப்போர்
உங்காரத்தால் உக்கது பன்னூறு உதிராகி.

கொடிய அழிவுக்கருவியாக இருந்தாலும், அதைத் தகர்க்க வல்ல பிற படைகள் பயனற்றுப் போன நேரத்தில் இராமன் தளராமல் இருந்து வெறும் ஊங்கார ஒலியை ஏற்படுத்திப் பொடியாக்கினான் என்பது வெறும் கதை என்று எண்ணக் கூடாது. 'உம்' என்ற அந்த முழக்கத்துக்கு எவ்வளவு பெரிய ஆற்றல் இருக்கிறது என்று மானிடர்கள் புரிந்து கொள்ள, உணர்ந்து பின்பற்ற, திருந்த ஒரு நீதி இதனுள் இருக்கிறது. நம் உள்ளே, வெளியே, நம்மைச் சுற்றிலும் அந்தத் தெய்வ முழக்கம் ஒலித்துக் கொண்டே இருக்கும் என்பதை மறக்கக் கூடாது.

இதற்கு பிறகு தான் இராவணன் தெளிவு பெற்றான். தன் முடிவு நெருங்கிவிட்டது. வந்தவன் சாதாரண மானுடன் அல்லன். தான் போட்ட தப்புக் கணக்கு - ஈனமானிடன் கூனுடைக் குரங்கு - அவனுக்குத் தெரிந்தது. சிவனுடைய படைக் கலங்கள் பொடியாயின; பிரம்மாஸ்திரங்கள் அழிந்து போயின. திருமாலின் படைகளும் வலுவிழந்தன. அப்படியானால் எதிரில் நின்ற அவன் யாராக இருக்கும்? மூலப்பரம் பொருளாக, வேத முதல் காரணனாகத் தான் இருக்கவேண்டும்.

'இவனோ தான் அவ்வேத முதல் காரணன்' என்று புரிந்தது. 'யாரேனும் தான் ஆகுக'; போரிலிருந்து பின்வாங்குவதில்லை என்று முடிவு செய்தான். ஒரு சுத்த வீரன் அப்படித் தான் செய்யவேண்டும். கடைசியாக நிருதிப்படையை இராவணன் ஏவினான். தென்மேற்கில் நின்ற தெய்வத்தின் படை அது. செலுத்தப்பட்ட பின்னர் கொடிய நஞ்சைக் கக்கிக் கொண்டு நாகபாம்புகள் அதிலிருந்து வெளிப்பட்டு எல்லாரையும் கொல்லும் தன்மை கொண்டது. இராமபிரான் கருடாஸ்திரத்தை அதற்கு எதிராகவிட்டு அதனை அழித்தான்.

இராமபிரான் அம்புகளை ஏவி, இராவணனின் தலைகளை அறுப்பதும் கைகளை வெட்டுவதுமாகத் தன்வீரத்தைக் காட்டிக் கொண்டிருந்த போதே இராவணனின் தலைகளும் கைகளும் மீண்டும் மீண்டும் முளைத்துக் கொண்டே இருந்தன. ஒருநொடி இராமன் தளர்ந்து கூடப் போனான். பிரம்மாஸ்திரம் விட்டுத்தான்

இவனைக் கொல்ல வேண்டும் என முடிவு செய்தான்; உலகங்களை எல்லாம் படைத்த பெருமைக்குரியவன்; முதலில் தோன்றியவன்; அந்தணன் என்று உலகம் வணங்கும் கடவுள்; அந்தப் பிரம்மாவின் படையை எடுத்து அதற்குரிய மந்திரம் சொல்லி வழிபாடு செய்தபின் மந்திரமலை போன்ற தன் தோளாற்றல் முழுவதையும் பயன்படுத்தி வில்லை வளைத்து இராவணன் மார்பை நோக்கிச் செலுத்தினான். இராவணன் வீழ்ந்து விட்டான்.

அவனுடைய மூன்றரைக் கோடி ஆண்டு ஆயுள் முடிந்து விட்டது; யாராலும் நீ எப்போதும் வெல்லப்படமாட்டாய் என்று முன்னர்ச் சிவபெருமான் தந்த வரமும் அவனைக் காப்பாற்ற வில்லை. எட்டுத் திசைகளையும் வென்ற மாவீரனின் நெஞ்சத்துள் புகுந்து அவனுடைய உயிரைப் பருகிக் கொண்டு இராமனின் அம்பு போய்விட்டது. அந்த நேரத்தில் கூட இராவணன் முகங்கள் எப்பொழுதும் இருந்ததை விட மும்மடங்கு பொலிவுடன் இருந்தன என்று கம்பர் பாடுகிறார். வீழ்ந்தவன் அரக்கனே! ஆயினும் மாவீரன் என்பதை இராமனும் ஒப்புக்கொண்ட மேன்மையால் அவன் முகங்களில் சாவுக்களையோ, சவக்களையோ இல்லாமல் இன்பக்களிப்பே இருந்தது என்று அந்த அரக்கனுடைய இறப்பைக் கண்டு படிப்போரை அழவைக்கிறார் கம்பர். எவ்வளவு பேராற்றல்; எவ்வளவு பெருந்தவம்; எவ்வளவு கலைஞானம். எல்லாம் போயிற்றே.... எல்லாம் போயிற்றே என்று பதறவைக்கிறார் கம்பர்.

கணவன் இறந்தான் என்று கேள்விப்பட்டுப் போர்க் களம் வந்த மண்டோதரி, இராவணனின் பேருடலைத் தழுவிக் கொண்டு அழுத்தும் அரற்றியதும் தழுவியவாறே உயிர் நீத்ததுமான உணர்ச்சிப் பிழம்புகளைக் கம்பர் மட்டும் சொல்லவும் பாடவும் முடியும்.

வீடணன் வந்தான்: அழுது புலம்பினான். இராமனின் ஆணைப்படி தன் அண்ணனுக்குச் செய்யவேண்டிய இறுதிக் கடன்களைச் செய்து முடித்தான்.

## 24. மங்கல வாழ்த்து

வீடணன் அழுது வருந்துவதைக் கண்ட இராமன் அவனுக்கு ஆறுதல் கூறித் தேற்றினான். இலக்குவனை அழைத்து வானர வீரர்களுடன் சென்று வீடணனுக்கு முடிசூட்டப் பணித்தான். அவ்வாறே தேவர்கள் முடிசூட்டு விழாவுக்கன ஏற்பாடுகளைச் செய்து மிகவும் சிறப்பாக நிகழ்ச்சி நடந்தேறியது. உடனே இலங்கை மன்னனாகிய வீடணன் ஓடிவந்து இராமனின் தாள்களில் விழுந்து வணங்கினான். அவனுக்கு அரச நீதியை விரிவாக இராமன் போதித்தான்.

அடுத்து இராமபிரான் அனுமனை அழைத்து அதுவரை நடந்த செய்திகளை எல்லாம் சீதையிடம் போய்த் தெரிவிக்கும் படி அனுப்பினான். இதைவிட அனுமனுக்கு வேறு எந்தப்பணி மகிழ்ச்சியைத் தரும்? உடனேயே அசோகவனம் போய்ப் பாடினான்; பெருமானின் திருநாமங்களைத் திரும்பத் திரும்பப் பல முறைக் கூறிக்கொண்டே இடப்பக்கமும் வலப் பக்கமுமாக, குனிந்தும் நிமிர்ந்தும் இரண்டு கரங்களையும் கொட்டிக் கொட்டித் துள்ளினான். அந்தப் பாட்டைப் படியுங்கள்.

பாடினான் திருநாமங்கள் பன்முறை
கூடுசாரியில் குப்புற்றுக் கூத்து நின்று
ஆடி அங்கை இரண்டும் அலங்குறச்
சூடி நின்றனன் குன்றன்ன தோளினான்.

பிராட்டி பார்த்துக் கொண்டே நின்றாள். என்ன வந்தது இவனுக்கு? முகத்தைப் பார்த்தால் இன்பச் செய்தியைக் கொண்டு வந்தவனாகவே தென்பட்டான். அவனே சொல்லட்டும் என்று காத்திருந்தாள். அவன் சொன்னான்;

*"தேவியே! திருமகளே! உனக்கு மங்கலம்! ஏந்திழையே உனக்கு மங்கலம்! நீ பல்லாண்டு வாழ்வாயாக மங்கலம் ! மங்கலம் மங்கலம்! தீமைக்குணங்களின் உறைவிடமாக இருந்த அந்த அரக்கனாகிய இராவணனை, அறத்தின் நாயகனாகிய யானை - முகபடாம் போர்த்து*

வந்த வீரப் பெருயானையாகிய இராமன் துகைத்து அழித்து விட்டான். உனக்கு மங்கலம் பெருகட்டும்.

ஏழை சோபனம் ஏந்திழை சோபனம்
வாழி சோபனம் மங்கல சோபனம்
ஆழி யான அரக்கனை ஆரியச்
சூழி யானை துகைத்தது சோபனம்.

கேட்டவள் பூரித்தாள்; மகிழ்ச்சியால் பொங்கினாள். ஒன்றை நினைத்தாள்; வேறொன்றைப் பேசினாள். போதை ஏறிய மனநிலை; அது கள்ளின் களியாட்டம் போல. பிறகு அனுமனைப் பார்த்தாள். என்ன சொல்வது என்ற நினைவில்லாதவளாக அமைதியாக இருந்தாள்; இல்லறத்துக்கு வந்த மாசு இப்பொழுது நீக்கப்பட்டு விட்டதே! ஆதலால் மனம் சஞ்சலமற்று இருந்தது. அனுமனுக்கு ஒன்றும் புரியவில்லை; கேட்டான்.

"தேவியே! நான் சொன்னதைக் கேட்டும் அதற்கு மறுமொழி ஏதும் கூறாமல் இருக்கிறாயே. என்ன காரணம்? ஏதும் சொல்லத் தோன்றவில்லையா? அல்லது வரம்பு கடந்த மகிழ்ச்சியில் இருக்கின்றாயா? இந்தத் தூதுவன் சொன்னது பொய்யாக இருக்கக் கூடும் என்று சந்தேகப்படுகிறாயா?"

பிராட்டி சொன்னாள்.

"பெருந்தன்மை உடையவனே! தாங்க முடியாத இன்பமன நிலையில், இந்த நல்ல செய்தியைச் சொன்ன உனக்கு விடை கூறக் கூடத் தெரியவில்லை. அதைப்பற்றியே மீண்டும் மீண்டும் எண்ணிக் கொண்டிருக்கிறேன். நற்பேறு இப்படி வாய்க்கும் போது பித்துப் பிடித்த மனநிலையும் தோன்றுமா என்ன?

முதன் முறையாக்க கடல்கடந்து வந்து என்னை நீ பார்த்த போது 'உன்னை இந்தக் கொடுஞ்சிறையிலிந்து விடுவிப்பேன்' என்று சொன்னாய். அப்படியே செய்து முடித்துவிட்டாய். என் சிறைவாழ்வுக்கு விடுதலை; என்னைத் துன்புறுத்திய இராவணன் அழிந்தான் என்று வரிசையாக மகிழ்ச்சிகளையே சொன்னாயே, உனக்குக் கைம்மாறாக என்ன பேற்றை நான் தரமுடியும்? அதை எண்ணியே பேசமறந்து ஒன்றும் சொல்லாது இருந்தேன்.

பேரருளாள! நீ செய்த பேருதவிக்கு ஈடாக இந்த மூன்று உலகங்களைக் கூடக் கொடுக்கலாம். ஆனால் அவை அழிந்து போகும் தன்மை உடையவை. எந்த வகையிலும் உன்னுடைய

உதவிக்குச் சமம் ஆக முடியாது. ஆனால் ஒன்று செய்ய என்னால் முடியும். என்னுடைய தலையைத் தாழ்த்தி உன்னை வணங்க முடியும். அதுவே தகுதியானது.

உலகம் மூன்றும் உதவற்கு ஒரு தனி
விலை இலாமையும் உன்னினென் மேலவை
நிலையிலாமை நினைந்தெனன் நின்னை என்
தலையினால் தொழவே தகும் தன்மையோய்!.

இதுதான் என்னுடைய மனநிலை. உனக்கு ஏதேனும் தந்து உதவும் நிலையில் நான் இல்லை. அழகிய மணிக்கல் ஒன்றைச் சாணை பிடித்துத் தேய்த்துக் கழுவியது போன்ற பேரொளி மிக்க தூதனே! இனி, "உன்னிடமிருந்து என்ன சொல்லவேண்டுமோ அதைச் சொல்".

அற்புதமான சொற்களைப் பேசி முடித்தாள் பிராட்டி. 'வாயிறந்து மௌனமாகி' என்று ஒரு தொடர் தாயுமானவர் பாடலில் வரும். நிஷ்டை கூடும் உயர்ந்த பேரின்ப நிலை அது. பிராட்டியின் மனநிலை இப்பொழுது அப்படித் தான் இருந்தது போலும். வானிலிருந்து பெய்யும் மழைக்குத் திருப்பி நம்மால் என்ன நன்றி செய்யமுடியும்? மேலே பார்த்துக்கை கூப்பித் தொழலாம்; அவ்வளவே. பிராட்டி இப்பொழுது அதைத்தான் செய்தாள். மேல்நோக்கிக் கை கூப்பாமல் கீழ்சாய்ந்து தலை வணங்கி ஒரு தொண்டனுக்கு நன்றிக் கடனைத் தீர்த்துக் கொண்டாள்.

அனுமன் சீதையைப் பார்த்து,

"எம்பிராட்டி, நீ எனக்கு ஒரு வரம் அருளல் வேண்டும். மகிழ்ச்சிக் கடலில் இப்பொழுது திளைக்கிறாய். இந்த நிலையிலேயே உன்னைக் கொண்டு போய் இராமபிரானிடம் சேர்க்க வேண்டும். இதைவிட வேறு செயல் ஏதுண்டு?

இன்னொரு வரமும் எனக்கு நீ தரவேண்டும். ஒளி மிக்க மாணிக்கம் போன்று மலர்ந்த முகமும், களங்கமற்ற திருப் பொலிவும் உடைய திரிசடையைத் தவிர, தாயே! மற்ற எல்லாம் அரக்கியரையும் அழிக்க எனக்கு அனுமதி தரவேண்டும்".

ஏனெனில் அவர்கள் பிராட்டிக்கு அத்தனை கொடுமை செய்திருந்தார்கள். அனுமன் கேட்டதில் பிழை ஒன்றும் இல்லை. ஆனால் பிராட்டியின் அருள்மனம் அதற்கு இசையுமோ? அந்த

அரக்கியர்கள் தாமாக ஏதும் செய்யவில்லை; தங்கள் தலைவனின் கட்டளைக்குப் பணிந்தார்கள்; பயந்தார்கள்; அவ்வளவே! தான் செய்த தீவினைப் பயனால் இந்தத் துன்பங்கள் அவளைத் தேடிவந்தன. அவற்றை அனுபவித்துத் தான் தீர்க்கவேண்டும். கூனி செய்ததை விட இந்த அரக்கியர்கள் வேறு என்ன அதிகக் கொடுமை செய்துவிட்டார்கள்?

> "ஆதலால் தூய்மை உடையவனே! என்னுடைய தாயைவிடவும் அதிகமாக என்மீது அன்பு கொண்டவனே! மாருதி மைந்தனே! எனக்கு நீ ஒரு வரம் தரவேண்டும். தீவினைகள் தங்களிடம் இருப்பதைக் கூட அறியாத பேதைகள் இந்த அரக்கியர்கள். அவர்களுடைய மனம் நோகுமாறு நீ ஏதும் செய்யக் கூடாது"

என்று முடித்தாள்; அரக்கியர் பிழைத்தனர்.

"எனக்கு நீ அருள் இவ்வரம்" என்பன சீதையின் சொற்கள். தலையால் முன்னர்த் தொண்டனை வணங்கிய தேவி, இப்பொழுது பகைவர் நலனுக்காக வரம் கேட்டாள். பகைவனுக்கும் அருளும் நல்ல நெஞ்சம் அந்தத் திருமகளுக்கு இயற்கையிலே வாய்த்த நற்பேறு. அதனால் தான் 'கூனியில் கொடியார் அலரே இவர்' என்று கேட்டாள். 'இத்தனைக்கும் மூலகாரணமான கூனியையே மன்னித்தாயிற்று; இந்த அறிவில்லா அரக்கியர் என்னபாவம் செய்தார்கள். விட்டு விடு' என்ற தெளிந்த சிந்தனை பாடல்வரிகளில் புதைந்து கிடக்கிறது.

இராமன் வீடணனை அனுப்பிச் சீதையைக் கூட்டி வருமாறு பணித்தான். அங்கு சென்ற வீடணன்,

"இறைவி! நாம் எல்லாரும் விரும்பியபடி எதிரியைக் கொன்று முடித்தாயிற்று. வேதங்களை உணர்ந்த வேதியர்களும் வணங்கும் பெருமானாகிய இராமன் உன்னைக் காண விரும்புகிறான். தேவர்களும் காண்பதற்காகக் கூடி விட்டார்கள். உன்னுடைய மனத்துயரத்தை விட்டு விட்டு, அழகுபடப் புனைந்து நகைகளையும் போட்டுக் கொள்வாயாக! உன்னை அழைத்து வரும்படி என்னை இறைவன் பணித்துள்ளான்" என்று கூறினான். அதைக் கேட்ட சீதைக்கு மகிழ்ச்சிதான்; ஆனால் இதுவரை தான் சிறையில் இருந்த கோலத்தை இராமனும், முனிவரும், தேவரும் காணவேண்டும்; அப்படி வருவது தான் சிறப்பு என்று சொல்லி

மறுக்க, அது இராமன் ஆணை என்பதால் உடன்பட்டாள். அழகுபட, அணிகலன்கள் புனைந்து புஷ்பக விமானத்தில் அழைத்துப் போனார்கள்.

பலப்பல நாள்கள் கழித்துத் தலைவனைக் காணப் போகிறாள் சீதையாகிய தலைவி. அவளுடைய நெஞ்சில் எண்ண ஓட்டம் என்னவாக இருக்கும்? ஆனால் இந்த இடத்தில் அவளுக்கு முதலில் நினைவுக்கு வந்தது அனுமன் செய்த உதவியே ஆகும். நான்கு நிகழ்ச்சிகள் அனுமனால் நடந்து நிறைவேறி உள்ளன. "நான் ஒழுக்க நெறியில் இன்னும் உறுதியாக இருக்கிறேன் என்பதை என் கணவனாகிய இராமனிடம் சொல்லிக் கற்பின் திண்மையைப் பதித்தவன் அனுமன். இந்த உலகம் முழுவதுக்கும் இராமனுடைய வீரத்தன்மை இன்னது என்று காட்டும் வகையில் அவனுடைய சேவகனாக இருந்தவன் இந்த அனுமனே. சனகன் வயிற்றில் உதித்த நான், என்னுடைய குலப்பெருமை சிறிதும் குறையாமல் காத்தேன் என்பதை உலகறியச் சொன்னவனும் இந்த அனுமன் தான். இந்த மூன்றும் மிகவும் சிறந்தவை. அல்லாமல் இன்று இந்த ஞாலம் அழியாமல் இருக்கிறது மட்டுமே. என் கற்பு கனல்போல் தூய்மையானது என்றால் இந்தக் குரங்கினத் தலைவனுக்கு 'என்றும் வாழும்' பேற்றினை (சிரஞ்சீவித்தன்மையை) அது நல்கவேண்டும்'.

சீலமும் காட்டி என் கணவன் சேவகத்
கோலமும் காட்டி என்குலமும் காட்டி இஞ்
ஞாலமும் காட்டிய கவிக்கு நாள் அறாக்
காலமும் காட்டும் கொல் என்றன் கற்பு என்றாள்.

கண்டனள் கணவனை. இனிக்காணமுடியுமா என்று ஏங்கியிருந்த அவள் ஏக்கம் தீர்ந்தது. இறைவனைச் சேவிக்கும் புண்ணியத்தை இப்பொழுது பெற்றுவிட்டாள். இனி இறந்தால் கூட பெரிதில்லை. அவனும் பார்த்தான். 'அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்' என்பது அவர்கள் முன்பே அனுபவித்த இன்பம் தானே. ஆனால் இப்போது நிலைமை வேறு. பலமாதங்கள் கழித்து அன்பின் தலைவனாகிய இராமன் கற்பின் அரசியை, பெண்மையின் காப்பை, பொறப்பினுக்கு அழகை, புகழின் வாழ்க்கையை, தன்னைப்பிரிந்தும் தருமநெறி பிறழாத தலைவியைப் பார்த்தான். ஒருவரை ஒருவர் உணர்ந்து கொண்டார்கள். ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டார்கள்.

அன்பினத் தலைவனும் அமைய நோக்கினான்
பச்சிலை வண்ணமும் பவளவாயுமாய்க்
கைச்சிலை ஏந்தி நின்றதனைக் கண்ணுற்றாள்.

என்ற பாடல் வரிகளில் இந்தப் 'புரிதலும்' 'உணர்தலும்' நுட்பமாகச் சுட்டப்பட்டுள்ளன.

ஆனால் உலகம் என்ற ஒன்றுண்டே! அதனுடைய அலர்தூற்றும் வாய்க்குத் தீனி போடக் கூடாது என முடிவு செய்த இராமபிரான் பலவகையாக அவளை ஏசினான்; அவள் பிறந்ததால் பெண்குலமே பழியும் பாவமும் பட்டுத் தாழ்ந்து விட்டது எனக் கடுமையாகச் சாடினான். 'கற்பினுக்கு அரசினை, பெண்மைக் காப்பினை.....அமைய நோக்கிய தலைவன் தான் இப்படிச் சொல்லக்கூட, கனவில் கூட நினைக்கக் கூடாத சொற்களால் பிராட்டியைத் துளைத்து எடுத்தான். இதைவிட அவன் வில்லில் இருந்து கிளம்பும் அம்புகள் மென்மையானவை போலத் தோன்றிற்று.

சீதை வருந்தினாள். யார் வாயில் எதைக் கேட்கக் கூடாதோ அதைக் கேட்டு வருந்தினாள். உலகம் சொன்னாலும் அவன் ஒருவன் சொல்லக் கூடாது. ஆயினும் என்செய்ய? பால் நஞ்சாவதும் பழம் கசப்பதும் போல இதுவும் ஒன்று எனக் கொண்டு சீதை பேசினாள்.

"வள்ளலே! அசோகவனத்துக்கு வந்த அனுமன். பகை முடிந்தது; நீ இராமனிடம் வரவேண்டும் எனக் கேட்டதால் நான் இங்கு வந்தேன். அவன் சொற்கள் பொய்யாகாதே! உயிர் விடத்துணிந்திருந்த என்னுடைய சோக நிலைபற்றி அவன் சொல்லியிருக்க வேண்டுமே! அவன் ஒரு வேளை தூதுவனாக இருக்கும் தகுதி உடையவன் இல்லை போலும்!"

"யாரினும் மேன்மையான்" ஆகிய அனுமன் சொல்லியும் இராமன், தன்னை ஐயுறும்போது வாழ்வதில் பொருளில்லை என்று முடிவு செய்தாள். "சாதலில் சிறந்தது ஒன்றில்லை" எனக் கூறி இலக்குவனைக் கூப்பிட்டுத் தீ அமைக்குமாறு பணித்தாள்; இராமன் கண்பார்வையால் இலக்குவனிடன் இசைவு தெரிவித்தான். தீ எழுந்து சுடர்விட்டது. 'மனத்தினால் வாக்கினால்' நான் களங்கம் உடையவள் என்றால் தீயே என்னை நீ சுடுவாய் எனக்கூறி உள்புகுந்தாள். தீயில் அவள் வேகவில்லை. அவள் கற்புத் தீயால்

நெருப்புக் கடவுள் வெந்து போனான். இராமனிடம் சரணடைந்து காப்பாற்ற வேண்டினான். கூடவே பிராட்டியை அவனருகில் கொண்டு வந்து விட்டான். இது தான் அக்னிப் பரிசோதனை. கற்பு என்னும் பெருநெருப்பில் தீ என்னும் சிறுநெருப்பு வெந்து போன கதை.

இராமனுக்கு அவனுடைய பரம் பொருள் தன்மையைப் பிரமன் உணர்த்தினான். பதினான்கு பாடல்கள். திருமாலின் தெய்வத் தன்மை, திருமகளின்பேரருள் வல்லமை, எல்லாம் கடந்த பரத்துவ நிலை ஆகியவற்றை அழகுபட ஓவியமாக்குகின்றன. படித்து ஓதி வழிபடத்தக்கவை. இத்தனையையும் வானிலிருந்து பார்த்துக் கொண்டிருந்த சிவபெருமானும் இராமனிடம் அவனுடைய கடவுள் தன்மையைப் புலப்படுத்தினான். கூடவே மேலுலகத்திலிருந்த தயரதனை வரச் சொல்லி இராமன் துயரத்தை நீக்கச் சொன்னார்.

தயரதன் வந்தான். என்றோ எங்கோ பிரிந்த தன் மூத்த இளவரசனை, மானிடத் தெய்வத்தை, தெய்வ மானிடனை இராமனைக் கண்டான்; மகிழ்ந்து புகழ்ந்தான். சீதையருகில் சென்று அவளைத் தேற்றினான். இலக்குவனைத் தழுவிக்கொண்டான். தசரதன் இராமனுக்கு ஒரு வரம் தர விரும்புவதாகவும் அதைக் கேட்கும்படியும் சொன்னாள். அற்புதமான, மிகப்பெரிய இதுவரை உலகில் யாரும் கேட்காத ஒன்றை இராமன் கேட்டான்.

"தீயவள் என்று நீ வெறுத்துக் கைவிட்ட கைகேயியான
என் தெய்வமும், அவளுக்குப் பிறந்த ஒரே காரணத்தால்
பல இன்னலகளுக்கும் ஆளான பரதனும் எனக்கு மீண்டும்
தாயாகவும் தம்பியாகவும் முன்போலவே இருக்க, நீ
வரம் தர வேண்டும்" என்று சொல்லி அழகன் வணங்கினான்.

"தீயள் என்று நீ துறந்த என் தெய்வமும் மன்னும்
தாயும் தம்பியும் ஆம் வரம் தருக" எனத் தாழ்ந்தான்.

பிராட்டியின் மீட்பு முடிந்த பிறகு எஞ்சியிருந்தது இந்தத் துன்பங்களுக்கெல்லாம் காரணமாக இருந்தவை, கைகேயி தசரதனிடம் பெற்ற இரண்டு வரங்கள். "ஆழி சூழ் உலகம் எல்லாம் பரதன் ஆளவேண்டும்; இராமன் போய்ப் பதினான்கு ஆண்டுகள் காட்டில் வாழவேண்டும்" என்பன அவை. முன்னர் அவற்றைக்

கைகேயிக்குத் தந்து தானும் உயிர்துறந்த தசரதன் இப்போது இராமனுக்கு ஒருவரம் தந்து எல்லாருடைய மனத்திலும் இருந்த உறுத்தலைப் போக்கினான். அந்த உறுத்தல் இராமன் நெஞ்சில் இருந்து கொண்டே வந்திருந்தது - என்பதையும் கூர்ந்து காணவேண்டும். வரம் கிடைத்தது; உலகம் எல்லாம் உயிர் எல்லாம் மகிழ்ச்சிக் கடலில் பொங்கி ஆர்த்தன.

இராமன் தேவர்களிடம் வேண்டித் தனக்காகப் போரிட்டு இறந்த வானரர்களை மீண்டும் உயிர்பெற்று எழச்செய்தான். தேவர்கள் வானரர்கள் எல்லாரும் இராமனை வணங்கினர். அயோத்திக்கு விரைந்து செல்ல வேண்டுமே? ஊர்தி ஏதாவது கிடைக்குமா என வீடணனை இராமன் வினவ, விமானமே இருக்கிறது என்று அவன் விடை சொன்னான். புஷ்பக விமானம் வந்தது. இராமன், சீதை, இலக்குவன் ஆகிய மூவரும் ஏறி அதில் அமர்ந்தார்கள். எஞ்சிய எல்லாருக்கும் அங்கேயே விடை கொடுத்தான் இராமன். சுக்ரீவன், அங்கதன் உள்ளிட்டவர்கள் அயோத்தி வந்து இராமன் முடிசூடும் பெருவிழாவைக் காணவேண்டும் என்ற தங்கள் ஆசையைத் தெரிவித்தனர். அவனும் இசைவு தெரிவித்தான். அவர்களும் ஏறினர். வீடணன், சுக்ரீவன் எல்லாரும் இராமன் கட்டளைப்படி மானிட உருவம் தாங்கினர். அயோத்தி மக்கள் அஞ்சாமல் இருக்க வேண்டுமே அதற்காக.

விமானம் வடக்கு நோக்கிப் புறப்பட்டது. சென்ற வழிகளின் சிறப்பையும் ஆங்காங்கு தனக்கு ஏற்பட்ட அனுபவங்களையும் இராமன் சீதைக்கு விரிவாக எடுத்துரைத்தான். கிஷ்கிந்தையைத் தாண்டிய போது, சீதை, வானரமகளிரையும் அழைத்துச் செல்லவேண்டும் என்ற தன்னுடைய ஆவலைத் தெரிவித்தாள். ஒரு மாதரசி எவ்வளவு அன்புள்ளம் கொண்டவளாக இருந்தாள் என்பதைக் காட்டும் நிகழ்ச்சி அது. இராமன் இசைய, விமானம் இறங்கி அவர்களையும் ஏற்றிக் கொண்டு பறந்தது.

பரத்துவாச முனிவரின் ஆசிரமம் வந்தது. அங்கு விமானம் இறங்கியது. முனிவர் அவர்களை தக்கபடி உபசாரம் செய்தார். இராமன் அவரிடம் ஒரு வரத்தை வேண்டினான். "வாரைக் கூட்டம் செல்லுகின்ற வனங்கள் எல்லாம் மழை பெய்யும் காலத்தில் இருப்பது போலக் கனிகள் காய்கள், கிழங்குகள் இவை அதிகமாக விளையவேண்டும்; நல்ல நீரைத் தரும் பொய்கைகள் வேண்டும்;

சிறந்த தேன் மரங்களில் கிடைக்க வேண்டும்". இயற்கை வாழ்வு, இயற்கை அழகு, அங்கு வாழும் உயிரினங்கள் அமைதியாக இருக்கவேண்டும் என்ற அருள்நெஞ்சம் -இராமனுடைய சொற்களில் இவை ஊசலாடுகின்றன. வானரப் பெண்களைத் தன் விமானத்தில் ஏற்றிக் கொண்ட சீதையின் கேள்வன் இப்படிக் கேட்டதில் வியப்பில்லை. ஆசிரமத்தில் எல்லாரும் விருந்துண்டனர். அப்பொழுது இராமன் பரதனை எண்ணினான். நந்திக் கிராமத்தில் தனக்காகக் காத்துக் கொண்டிருப்பான்; தான் திரும்பிவரும் நாளை எண்ணி, தீவளர்த்து அதன் முன் உட்கார்ந்து கொண்டு இருப்பான். விரைவில் ஆளனுப்பி இங்கு நடந்தவற்றைச் சொல்லவேண்டும் என்றெல்லாம் எண்ணிய இராமன் அனுமனை அருகில் அழைத்துக் கூறினான்.

## 25. பரதனும் அனுமனும்

"நான் அயோத்தி நகருக்குத் திரும்ப வருவதற்கு முன்பே நீ விரைவாக எங்களுக்கு முன்சென்று, நந்திக்கிராமத்தில் உள்ள பரதனைக் காணவேண்டும். அவனிடம் எந்தத் தீங்கும் இல்லாமல் வெற்றியுடன் நாம் திரும்பிவரும் செய்தி கூறவேண்டும். ஒருவேளை சாகத் துணிந்து அவன் தீ வளர்த்தியிருந்தால் அதை அணைத்து விடவேண்டும். அப்படியே பரதனுடைய நிலைமை, அவன் மேற்கொண்டு ஒழுகும் நெறி இவற்றையும் ஆராய்ந்து அறிந்து எம்மிடம் மீண்டும் வா; அதுவே நல்லது. இந்த மோதிரத்தை அடையாளமாகக் கொள்க".

இதை விட அனுமனுக்கு வேறு மகிழ்ச்சி தரக்கூடிய பணி எதுவாக இருக்க முடியும்? இராமன் ஏவலுக்கு உட்பட்டு இலங்கை போனதும் சீதையைத் தேடியதும் இதே மோதிரத்தை அவளிடம் தந்ததும் யார் பெறக் கூடிய பேறுகள்? இப்பொழுது அதே போல, ஆனால் மாறுபட்ட சூழலில் பரதனிடம் போக வேண்டி நேர்ந்துள்ளது. அவன் செய்த பாக்கியம்.

உடனேயே வானில் பறந்தான், வேகத்துடன். எப்படிப்பட்ட வேகம்? தன் தந்தையாகிய காற்றின் வேகத்தை விடவும் அதிகமாக, தனது ஒப்பற்ற நாயகனாகிய இராமபிரானின் வில்லிலிருந்து புறப்படும் அம்புகளை விடவும் அதிகமாக- இவற்றை எல்லாம் விடத் தன்னுடைய மனம் கூடத் தொடர முடியாமல் பின்னால் வரும் அளவுவேகத்துடன் அனுமன் போனான். போன வழியில் கங்கைக் கரை வந்தது. தன் தலைவன் தன்னைப்பற்றி எல்லாம் கூறியிருப்பானே. ஆதலால் குகனுக்குச் செப்பருங்குணத்து இராமனின் வருகைபற்றித் தெரிவித்து மேலே போனான்.

தந்தை வேகமும் தனது நாயகன் தனிச் சிலையின்
முந்து சாயகக் கடுமையும் பிற்பட முடுகிச்
சிந்தை பின்வரச் செல்பவன் குகற்கும் அச்சேயோன்
வந்த வாசகம் கூறிமேல் வான்வழிப் போனான்.

அங்கு அப்போது அயோத்தியில் நிலைமை இன்பம் தருவதாக இல்லை. நந்திக்கிராமத்தில் பரதன், இராமனின் திருவடிகளை வைத்து

மூன்றுவேளை வழிபாடு செய்து, ஐம்புலன்களை அடக்கியவனாய் இருந்தான்; எப்பொழுதும் தென்திசையையே பார்த்துக் கொண்டிருந்தான். 'இராமன்' வரவில்லை; வருவதற்கான அறிகுறியும் காணோம். பரதன் மயங்கி விழுந்தான்.

மாலைப் பொழுதுக்குள் இராமன் வரவில்லை யென்றால், இறப்பதே மேல் என முடிவு செய்து சத்ருக்னனை அழைத்தான். அவனிடம்

"சொன்ன நாளில் இராகவன் தோன்றிலன்
மின்னு தீயிடை யான் இனி வீடுவன்
மன்னன் ஆகுதி"

(சொன்ன நாளில் அண்ணன் வரவில்லை; நெருப்பில் விழுந்து நான் சாவது உறுதி; நீ மன்னன் ஆகுவாய்) என்று சொன்னான். அதைக் கேட்டுக் கடைசித்தம்பி பட்டதுன்பம் கொஞ்சம் அன்று. ஆனாலும் பரதன் சொல்லை மீற முடியாது. தீ வளர்த்துக் கொடுத்தான். கோசலை அதைத் தடுப்பதற்காக ஓடோடி வந்தாள். பல நியாயங்களைச் சொல்லிப் பரதனிடம் வாதாடினாள்.

எண்ணில் கோடி இராமர்கள் என்னினும்
அண்ணல் நின்னருளுக்கு அருகாவரோ
புண்ணியம் என்னும் நின்னுயிர் போயினால்
மண்ணும் வானும் உயிர்களும் வாழுமோ

"கோடி இராமர்களும் உனக்கு, உன்னுடைய அருளுக்கு ஈடாக மாட்டார்கள். புண்ணியம் அனைத்தும் திரண்ட வடிவம் உன்னுடையது. நீ இறந்து விட்டால், இந்த நிலவுலகும் மேலுள்ள வானுலகும் அங்குள்ள உயிர்களும் பிழைத்து வாழுமோ? வேண்டாம். உன் முடிவை மாற்றிக் கொள்" என்றெல்லாம் அவனுக்குச் சொல்லி முறையிட்டாள். அவன் மறுத்து விட்டான். தாய்தந்தை சொல் கேட்டு நடத்தல், பாசமும் அன்பும் வைத்தாரை விட்டு நீங்குதல் ஆகிய இவை இராமனுக்குரியவை; தனக்கு ஒத்துவராது. தான் மாசற்றவன் என்பதை மாண்டு காட்டுவதாக உறுதியுடன் கூறி எரியின் முன்னால் போனான் பரதன்.

அந்த நிலையில் அங்கு கூடியிருந்தவர்களிடம் ஏற்பட்ட மனநிலை என்னவாக எப்படி இருந்திருக்கும் என்று நினைத்துக் கூடப் பார்க்க முடியவில்லை. யாரும் எதிர்பாராத விதமாக ஒரு மலை

தாவிக்குதித்து முன்னால் வந்து நின்றது போல அனுமன் வந்தான். யாரிடமும் எதுவும் பேசவில்லை.

“ஐயனாகிய தலைவன் வந்துவிட்டான்; யாவருக்கும் மேலான ஆரியன் வந்து விட்டான். எதற்காக நீ சாகத் துணிந்தாய்? வாய்மையே வடிவெடுத்து வந்தது போன்றவன் நீ! உன்னுடைய உயிர் போய்விட்ட பிறகும் இராமன் உயிர்வாழ்வான் என்று நீ எப்படிக் கணக்கு போட்டாய்?” யாரையும் கேட்காமல் உள்ளே புகுந்து கைகளை நீட்டி நீட்டித் தீயைப் பிசைந்து பிசைந்து அணைத்துக் கரியாக்கி விட்டான்.

ஐயன் வந்தனன் ஆரியன் வந்தனன்
மெய்யின் மெய்யன்ன நின்னுயிர் வீடினால்
உய்யுமே அவன் என்றுரைத்து உள்புகாக்
கையினால் எரியைக் கரி ஆக்கினான்.

ஒரு கணத்தில் நிலைமை மாறிவிட்டது “இதை வைத்துக் கொண்டு தானே சாகிறேன் என்கிறாய்; இதையே அனைத்து விட்டால் என்ன செய்வாய்?’ என்பது போன்ற விரைவில் செயல்பட்டு பரதனின் உயிரைக் காப்பாற்றினான் அனுமன். அசோகவனத்தில் பிராட்டி சாகத் துணிந்த போதும் இப்படியே செய்த அனுபவம் உண்டல்லவா! யார் யார் எல்லாம் சாக நினைக்கிறார்களோ, அவர்கள் எல்லாம் சாவே இல்லாத அனுமனை எண்ணி வழிபட்டால் போதும்; மீட்பு கிடைக்கும்

இன்ப அதிர்ச்சியிலிருந்து எல்லாரும் மீண்டனர். பரதனின் மலர் போன்ற திருவடிகள் தன் தலையில் படுமாறு குனிந்து தாங்கிக் கொண்டு, தன்னுடைய வாயைக் கையால் பொத்திக் கொண்டு பணிவுடனும் விநயமாகவும், “நான் இப்போது சொல்லும் சொற்களை உன்னுடைய மனத்தில் ஏற்றுக்கொள்ள வேண்டும்” எனக் கூறினான்.

“ஐயனே! நாயகன் திரும்ப வருவதாகச் சொன்ன நாள் இதுதான். ஆனால் அது இன்னும் முடிய வில்லையே! எண்ணைந்து நாழிகை (40 அல்லது13) மீதம் இருக்கிறது. அதற்குள் இராமபிரான் இங்கு வந்து சேரவில்லை என்றால், உனக்கும் முன்னால் இதே தீயில் நான் விழுந்து சாவது உறுதி. சற்றுப் பொறு. கீழ்த்திசையில் சூரியன் உதிப்பதற்கு முன்பே இராமன் வந்து விடுவான். ஏற்கெனவே அவன் பயணம் தொடங்கி விட்டது. வழியில் தம்முடைய ஆசிரமத்தில்

விருந்துண்டு போகவேண்டும் எனப் பரத்துவாச முனிவர் கேட்டுக் கொண்டதால் அங்கு சிறிது நேரம் தங்கி வருகிறான். இது தவிர, காலம் கழிவதற்கு வேறு காரணம் இல்லை.

இன்னொரு முக்கிய செய்தியும் உண்டு. இந்த மோதிரத்தைப் பார். தேவர்களுக்கும் தலைவனாகிய இராமன் அருள்கொண்டு அளித்தது. அதில் அடையாளமும் உண்டு. உன்னிடம் கொடுக்கவேண்டி ஆணை; நான் ஓடோடி அதைக் கொடுக்க வந்தேன். களங்மற்ற சிந்தனை உடையவனே! இதோ இப்போது வாங்கிக் கொள்".

என்று கூறிப் பரதனிடம் மோதிரத்தை அனுமன் சேர்ப்பித்தான். அதைப் பெற்ற பரதனின் மகிழ்ச்சிக்கும் எல்லை இல்லை; அங்கிருந்த மற்றவர்களின் உவகைக்கும் எல்லையில்லை. அழுத வாய்கள் ஆர்த்துச் சிரித்தன; சிந்திய துன்பக் கண்ணீர் இன்பக் கண்ணீர் ஆயிற்று, எல்லாருடைய கைகளும் உயர்ந்து அனுமனையே தொழுதன. பரதனோ உணர்ச்சிகளின் எல்லையில் நின்றான். பரவச நிலையில் என்ன செய்கிறோம் என்று கூடத் தெரியாமல் இருந்தான்.

அழுதான்; சிரித்தான்; மோதிரத்தைத் தாங்கிய கைகளைக் கூப்பி அனுமனைத் தொழுதான்; எழுந்தான்; நிமிர்ந்தான். தன்னுடைய பெரியகைகளைத் தட்டிக் கொட்டி ஆரவாரித்தான். சுற்றிப்பார்த்தான். கூப்பிய கரங்களுடன் தீயைவலம் வந்து சாகலாம் என்று இருந்தவன், இப்பொழுதும் சுற்றிவந்தான். வந்தபோது, வேதம் படித்த மேலோரைத் தொழுதான்; வேந்தர்களை வணங்கினான்; அரண்மனைப் பணிப் பெண்களைத் தொழுதான். யாரும் மீதம் இல்லை. தன்னைப் பார்த்தான். 'பரதா இராமன் வந்துவிட்டான்' என்று கூறித் தன்னையும் தொழுதான். என்ன செய்வது என்று உணரா நிலை அது.

வேதியர் தமைத் தொழும் வேந்தரைத் தொழும்
தாதியர் தமைத் தொழும் தன்னைத் தான் தொழும்
ஏதும் ஒன்று உணர்குறாது இருக்கும் நிற்குமால்
காதல் என்று அதுவும் ஓர் கள்ளின் தோற்றமே.

இவை எல்லாம் முடிந்த பிறகு தான் அனுமனைப் பார்த்து 'நீ யார்?' என்று பரதன் கேட்டான். "நீ இப்போது நின்று கொண்டிருக்கும் தோற்றம் அத்தணர் வடிவம் போலத்

தோன்றுகிறது. ஆனால் நீ முப்பெருங் கடவுள்களில் ஒருவனாகவே இருக்கவேண்டும் எனத் தோன்றுகிறது. சொல்லு, உன் வரலாற்றைச் சொல்லு" எனப் பரதன் வேண்டினான். அனுமன்,

"அரசே? உண்மையில் நான் ஒரு குரங்கு. காற்றுக் கடவுள் திருவருளால் கேசரி என்னும் வானர மன்னனின் மனைவி வயிற்றில் வந்து உதித்தேன். உன்னுடைய அண்ணனான இராம பிரானுக்கு மேம்பட்ட அடிமைத் தொழில் செய்யும் பணியாளன் நான். இப்பொழுது அந்தணவடிவில் இங்கு வந்துள்ளேன்.

அடிமையான என்னுடைய "நாய்போலக் கடைப்பட்ட இந்தக் குரங்கின் அற்ப உடம்பு இப்படிப் பட்டது என்று உன்னுடைய தாமரைக்கண்களால் காண்பாயாக" என்று சொல்லிக்கொண்டே பொய்யான தன்னுடைய மானிட அந்தண உருவத்தை மாற்றி, வானைத் தொடும் அளவு உயர்ந்த தன் பேருருவத்தைக் காட்டினான். அதைக் கண்டு எல்லாரும் அஞ்சினர்; அதிசயித்து நின்றனர். வசிட்ட மாமுனியும் வியந்து போனார். உருவத்தைச் சுருக்கிக் கொள்ளுமாறு பரதன் சொன்னதும், அப்படியே சிறுவடிவமாகிப் பரதனைத் தொழுதான் அனுமன். அவனுக்குப் பரதன் நிறையப் பரிசுகள் கொடுத்தான்.

அயோத்தியை அலங்காரம் செய்து இராமனை எதிர்கொள்ள ஆயத்தம் ஆகும்படி பரதன் சொல்லி அனுப்பினான். எல்லாரும் எல்லாமும் பெற்ற மகிழ்ச்சியில் திளைத்தார்கள். அப்போது பரதன் அதுவரை நடந்த இராமன் வரலாற்றைக் கூறுமாறு அனுமனிடம் கேட்டான். 28 பாடல்கள் சொல்லின் செல்வனாகிய மாருதியின் வாயில் மலர்ந்து அயோத்தியை விட்டு இராமன் புறப்பட்டது தொடங்கி, இப்போது மீண்டும் வந்து கொண்டிருக்கும் வரை சொல்லி முடித்தான். ஏறக்குறை இராமாயணக் கதையின் சுருக்கம் என்றே அதைச் சொல்ல வேண்டும். அதைக் கேட்டு மனம் உருகினான் பரதன். இத்தனை துன்பங்களை அண்ணன் அனுபவித்த போது, இலக்குவனும் அனுமனும் கூட இருந்து உதவி செய்யும் பேறு பெற்றார்கள். தனக்கு அப்படி ஒரு நல்வினை வாய்க்கவில்லையே என்று வருந்தினான்

வந்தது விமானம். தொலைவில் இருந்தே அனுமன் அதில் உள்ளவர்கள் யார் யார் என்று பரதனுக்குத் தெரிவித்தான். என்றோ ஊனுடல் விட்டுச் சொன்ன சொல்லைக் காப்பதற்காக இறந்து போன

தசரதன் மீண்டும் வந்தது போல இராமன் வரவு அவனுக்குத் தென்பட்டது. காட்டில் வாழச் சென்ற அந்தக் கமலக் கண்ணனை, தன்னுடைய உயிர் போன்றவனைப் பரதன் பார்த்துக் கண்கள் நீர் சிந்த, அவன் காலடியில் விழுந்து வணங்கினான.

அப்பொழுது அனுமன், "திருமகள் பொலியும் மார்பை உடையவனே! வெப்பம் மிக்க நெருப்பினில் குதிக்க முற்பட்ட பரதனைத் தடுத்து உன் வருகை பற்றிச் சொன்னேன். நாயேன் செய்தது அந்தச் சிறுபணி. ஆனால் அதனால் இந்த உலகங்கள் அழியாது இன்னும் இருக்கின்றன" என்று சொல்லித் தொழுதான்.

எவ்வளவு பெரிய செயல்! அரிய செயல் ! தம்பியின் உயிரை மட்டுமல்லாமல், அதன்பிறகு ஏற்பட இருந்த பேரழிவுகளிலிருந்து உலகையும் காப்பாற்றிய அனுமனை நேருக்குநேர் நெஞ்சில் நன்றியும் அன்பும் பெருக இராமன் பார்த்தான். பிறகு சொன்னான்;

> "வாய்மை தவறாத பேரருளாளா! தாயை விடவும் அன்பு கொண்டவனே! நாங்கள் முன்பிறவிகளில் பல தீவினைகளைச் செய்திருப்போம் போலும்! அவை எங்களைவிட்டு நீங்காமலும் அழிந்து போகாமலும் ஆகி மேலும் தொடர்ந்து வந்து எங்களுக்குத் துன்பம் தருகின்றன. அவற்றைத் துடைக்க நீ ஒருவனே எங்களுக்கு உற்ற துணையாக வந்து சேர்நதாய். நான் எண்ணிப் பார்த்தேன். முற்பிறவிப் பாவங்கள் தவிர, நாங்கள் நல்லனவும் - மாதவங்களும் - செய்திருக்கவேண்டும். அதனால் தான் உன்னுடைய தொடர்பு எங்களுக்குக் கிடைத்துள்ளது"

என்று சொல்லி இறுகத் தழுவிக் கொண்டான்.

தீவினை யாம்பல செய்யத் தீர்விலா
வீவிலை முறை முறை விளைவ மெய்ம்மை யாய்
நீ அவை துடைத்து நின்று அளிக்க நேர்ந்தனை
யாயினும் அன்பினாய் யாம்செய் மாதவம்

அடுத்த பாட்டு இன்னும் நயமானது. அனுமனைத் தழுவிக் கொண்டால் மட்டும் போதுமா? போன பிறவியில் பெரியதவம் செய்திருந்தால் தான் அனுமன் சேவகனாகத் தனக்கு வந்து வாய்க்கும் பேறு கிடைத்தது என்று சொன்னால் மட்டும் போதுமா? அவனுக்குரிய இடத்தைத் தரவேண்டும். அதைச் சொன்னான் இராமன்;

"ஒன்று கூறவேண்டும் அனுமனே! உனக்கும் என்னுடைய தந்தையாகிய மாமன்னன் தயரதனுக்கும் இனிய துணைவனாக என்னுடன் கூடவே இருக்கும் இளையவன் இலக்குவனுக்கும் என்னை ஈன்ற தாயாகிய கோசலைக்கும் சொற்களால் நன்றியோ புகழ்ச்சியோ கூறி நிறைவு செய்ய முடியுமா என்ன!"

என்று உரைத்து அனுமனை இறுகப் புல்லினான்
ஒன்று உரைத்து இறுப்பதுஎன்? உனக்கும் எந்தைக்கும்
இன்துணைத் தம்பிக்கும் யாய்க்கும் என்றனன்
குன்றுணை அன உயர் குவவுத் தோளினாள்

அனுமனின் இந்தத் தூய வரலாற்றில், தெய்வத்தின் மேன்மையைக் காட்டும் தொண்டு நெறியின் உச்சத்தில். "நீயே பரம்பொருள் வேறுஎதுவும் வேண்டாம்" என்ற பக்தி வைராக்கியத் திட்பத் திளைப்பில் இதுவே உயிரோவியப் பாட்டு என்று சொல்ல வேண்டும். மானுடவடிவம் தாங்கிய திருமால், சிவனின் தெய்வத் தன்மை பொருந்திய அனுமனைத் தன் தந்தைக்கும் தம்பிக்கும் தாய்க்கும் சமமாக வைத்துப் போற்றினான் என்றால் அதைவிட வேறு என்ன உயர்நிலையை அனுமன் அடையமுடியும்? வணங்கிய வாயினனாய், கூப்பிய கரங்களுடன் இராமனின் அருள் முகத்தையே எப்போதும் பார்த்துக் கொண்டிருக்கும் பேறுபெற்ற ஒரு 'கூனுடைக் குரங்கு' அடைந்த நற்கதியை இந்த 'ஈனமானிடர்கள்' பெறுவதற்கு முயற்சியாவது செய்வார்களா? தெரியவில்லை.

எல்லோரும் ஒன்றானார்கள். யார்காலில் யார் விழுந்து வணங்கினர் என்று சொல்ல முடியாது. அன்பும் அன்பும் பாசமும் பாசமும் கடல்கள் போலக் கலந்தன. யாரை எப்படி வணங்கவேண்டுமோ அந்த முறையில் இராமன், இலக்குவன் சீதை ஆகியோர் வசிட்டமாமுனி, தாய்மார்களைத் தொழுதார்கள்.

பரதன் அண்ணன் காலில் விழுந்தான். இராமன் அவனைத் தழுவிக் கொண்டான் என்று சொன்னால் போதாதே? இதுவரை இராமனின் சார்பாகத் தான் தாங்கிநின்ற, அண்ணனின் இரண்டு திருவடி நிலைகளையும் சிவந்த பாதங்களில் வைத்து, ஏதும் பேசாமல் விம்மினான்; அவனை ஏதும் பேசாமல் ஆவியை உடல் தழுவுவது போல இராமன் தழுவிக் கொண்டான் என்கிறார் கம்பர். பலவேளைகளில் அன்பின் ஆழ்ந்த வெளிப்பாடு பேச்சற்ற மௌன நிலையே என்பதை இப்படிக் குறிக்கிறார் கம்பர்.

## 26. பெற்றனன் விடை

அயோத்தி மாநகரம் விழாக் கோலம் பூண்டு இருந்தது. இராமன் மணிமுடி சூடும் நாள். நீராடவேண்டிய புண்ணிய தீர்த்தங்களை - நான்கு கடல், எழுவகைப் பெருங்கடல், புனித ஆறுகள் - என்று இவற்றிலிருந்தெல்லாம் ஒரே நாளில் அனுமன் கொண்டு வந்து சேர்த்தான். இராமனுக்கும் பிராட்டிக்கும் பளிங்கு மாடப் பீடத்தில் புண்ணிய முழுக்கு நடத்தப்பட்டது. பிறகு அரியணையில் அவர்களை வீற்றிருக்கச் செய்து குலகுருவாகிய வசிட்டமாமுனி இராமனுக்கு முடிசூட்டினார். அப்போது அந்த அரியணையைத் தாங்கிப் பிடித்தவன் அனுமன். அரசவாளைக் கையில் ஏந்தி அருகில் நின்றவன் அங்கதன். வெண் கொற்றக்குடையைப் பிடித்து நின்றவன் பரதன்; இலக்குவனும் சத்ருக்னனும் கவரிவீசிக் கொண்டிருந்தனர்; வாழ்ந்து நிறைந்த சான்றோர்கள் மணிமுடியை எடுத்து வசிட்டனிடம் கொடுக்க, அவர் சூட்டினார் என்று படிப்போர் கண்ணின் முன்னால் மெய்யாகவே அது தெரிவது போலப் பாடும் கம்பசித்திரம் இது;

அரியணை அனுமன் தாங்க அங்கதன் உடைவாள் பற்றப்
பரதன் வெண்குடை கவிக்க இருவரும் கவரிவீச
விரைசெறி கமலத் தாள்சேர் வெண்ணெய்மன் சடையன் தங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி

அயோத்தி இருந்தது வடக்கில், தொலைவில். அந்தமுடி சூட்டுவிழாவில் தமிழகத்துத் திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளலின் பரம்பரையில் வந்தவர்கள் மகுடத்தை எடுத்துக் கொடுத்தார்கள் என்று தாய்நாட்டுப் பற்றுடன் கம்பர் விம்மிதம் அடைகிறார்.

முடிசூட்டு விழா இனிதாக நடந்து முடிந்தது. கோசல நாட்டு மாமன்னன் ஆனான் இராமன்; பேரரசியாகப் பிராட்டி முடிசூடிக் கொண்டாள். இளவரசனாகப் பொறுப்பு ஏற்றான் பரதன். எல்லாருக்கும் மகிழ்ச்சி தான். தேவர்களும் முனிவர்கள் மக்களும் கூடி ஆடியும் பாடியும் திளைத்தனர். இரண்டு மாதங்கள் இப்படிக்

கழிந்தன. வந்தவர்கள் எல்லாம் அவரவர் நாடு திரும்பித் தத்தம் கடமைகளைச் செய்யவேண்டும்! வரிசையாக எல்லாரையும் அழைத்து, பரிசுகள் வெகுமதிகள் தந்து இராமன் அவர்களுக்கு விடை கொடுத்தான்.

சுக்ரீவனுக்குக் கொடுத்தாயிற்று; கூடவே அங்கதனும் பரிசு பெற்றான். அடுத்து அந்த வரிசையில் அனுமன் வந்தான். என்ன பரிசைத் தருவது? பிறகு சொன்னான்;

> "அழகிய பசும்பொன்னால் ஆகிய அணிகளை அணிந்தவனே அந்த அணிகளைப் பூண்டு கொண்டு வல்லமையான தோள்களால் போர்க்களத்தில் எனக்கு வெற்றியைத் தேடித் தந்தவனே! உதவி செய்வதில் உனக்குச் சமமானவர் என்று யாரைக் குறிப்பிட முடியும்? **அன்று நீ எனக்குச் செய்த** பேருதவிக்கு ஈடாக நான் எதையும் உனக்குத் திருப்பிச் செய்ய முடியாது. அனுமனே! வா. வந்து என்னை இறுகக் கட்டி அணைத்துக் கொள்."

மாருதி தன்னை ஐயன் மகிழ்ந்து இனிது அருளின் நோக்கி
ஆர் உதவிடுதற்கு ஒத்தார் நீ அலால்; அன்று செய்த
பேருதவிக்கு யான்செய் செயல் பிறிதில்லை; பைம்பூண்
போர் உதவிய திண் தோளாய் பொருந்துறப் புல்லுக என்றான்.

இதைக் கேட்டு அனுமன் நாணம் அடைந்தான். யார் யர்ரை எப்படிப் புகழ்வது? கோசலப் பேரரசன் ஒரு குரங்கைப் பார்த்து வசிட்டர் போன்ற முனிவர்களும், அரசர்களும், தேவர்களும், அமைச்சர்களும் கூடியிருந்த சபையில் எல்லார் முன்பாக "வா!வந்து என்னை இறுகத் தழுவிக் கொள்" என்கிறானே. இதைக்கேட்டு அனுமனுக்கு ஒருசேர உணர்ச்சிகள் குமுறின; வணங்கினான்; வாய் புதைத்தான்; நாணம் அடைந்தான் என்கிறார் கம்பர். யாரும் அடைய முடியாத இந்தத் திருமேனியைத் தழுவும் பாக்கியத்தைப் பெருமான் அனுமனுக்கு அருளினான். அது அவன் செய்த தவம்.

இத்துடன் இராமன் நின்று விடவில்லை, தன் அருகில் அரியணையில் வீற்றிருந்த பேரரசி சீதாப் பிராட்டியைப் பார்த்தான். செந்தாமரையை விட்டு நீங்கிய திருமகள்; பொன் மதில் உடைய அயோத்தி மாநகரத்தையே அழகு செய்யும் திருமகள்; மிதிலையில் பூத்து மலர்ந்த செங்கமலம். பகைவரிடமும் தேன்போன்ற இனிய சொற்களையே பேசும் சீதை. அவளிடம் முன்னர் ஒருமுறை கலைமகள் கொடுத்திருந்த அழகிய, பெரிய முத்து மாலையை

அனுமனுக்குத் தரச் சொன்னான். தன்னுடைய துன்பத்தை அறிந்து காலத்தினால் செய்தும், செய்யாமல் செய்தும், பயன்தூக்காமல் செய்தும் அனுமன் ஆற்றிய உதவிக்கு ஈடு எதைச் சொல்ல முடியும்? ஆனாலும் அன்புப் பரிசாக ஏதேனும் கொடுக்க வேண்டும் என்று கருதி முத்துமாலையைக் கொடுத்தாள்.

பூமலர்த் தவிசை நீத்துப் பொன்மதில் மிதிலை பூத்த
தேமொழித் திருவை ஐயன் திருவருள் முகந்து நோக்கி
பாமறைக் கிழத்தி ஈந்த பருமுத்தம் மாலை கைக்கொண்டு
ஏமுறக் கொடுத்தாள் அன்னாள் இடரறிந்து உதவினாற்கே.

விடைகொடுத்த இந்தப்பகுதியில் இராமபிரானிடம் மட்டுமே எல்லோரும்- சுக்ரீவன், அங்கதன், நீலன், சாம்பவான், குகன் உட்பட - பரிசும் வெகுமதியும் பெற்றார்கள். அனுமன் ஒருவன் தான் பிராட்டியிடமிருந்தும் பாராட்டுதலும் ஏற்பளிப்பும் பெற்றான். இந்த நிகழ்வின் மூலம் அவர்கள் இருவரும் அனுமன் மீது தங்கள் உள்ளத்தில் எவ்வளவு அன்பு வைத்திருந்தார்கள் என்பதை அறிய முடியகிறது. தவிர, வாய்ப்பு வெளிப்படும் போது அதை மற்றவர் அறியக் காட்டவும் வேண்டும் என்பதையும் உணரலாம்.

பிரிந்து தானே ஆகவேண்டும்! அவரவர் நாடு, ஊர், மக்கள் என்று பொறுப்புகளைத் தவறாது நிறைவேற்ற வேண்டுமே! இராமனே எல்லாரையும் கூப்பிட்டு "எங்களைப் பிரிந்து செல்லுங்கள் என்று உம்மைப் பார்த்துச் சொல்வதை நினைக்கவும் முடியவில்லை. ஆனாலும் நாட்டுப் பொறுப்பு இருக்கிறதே. ஆதலால் நீங்கள் போய் உங்கள் கடமைகளைச் செய்யுங்கள் இது என் ஏவல்". அனைவரும் போயினர்; அனுமனும் போயினன்.

## 27. நிறைவாக

### அன்றும் இன்றும் என்றும் வாழ்பவன்

அனுமனும் போயினன். எங்கு? இராமனை விட்டு எப்படிப் போகமுடியும்? எங்கெல்லாம் இராமநாமம் ஒலிக்கிறதோ அங்கெல்லாம் அனுமன் தன் இயல்புப் படி, வாய்மூடி வணங்கிய உருவுடன் நின்று கேட்பான் என்பது மக்களின் நம்பிக்கை அல்லவா? இராமனின் திருப்பெயர் உலவும் காலம் வரை அனுமனும் இருப்பான். சரி.

"அன்று செய்த பேருதவிக்கு யான் செய் செயல் பிறிதில்லை" என்று இராமன் பாராட்டிக் கூறித் தன்னைத் தழுவிக் கொள்ளுமாறு அனுமனை வேண்டினானே. இந்த வரியில் "அன்று" என்பது எதைக் குறிக்கும்? பொதுவாக ஒரு காலப்பகுதியைக் காட்டும் சொல்; அப்பொழுது எனப் பொருள்படும். அப்பொழுது நீ செய்த பேருதவி என வருகிறது. தெளிவற்றது போல இது அமைந்திருக்கிறது.

ரிசியமூக மலையில் முதல் முதலாகப் பார்த்த அன்றா; பிராட்டியைக் கண்டு வா என்று அடையாளம் எல்லாம் சொல்லிக் கணையாழி கொடுத்த அன்றா; அசோகவனத்தில் பிராட்டி சாகத்துணிந்த போது தடுத்து நிறுத்திய அன்றா; சீதையிடமிருந்து சூடாமணி கொண்டுவந்து வணங்கிய நாளா; போர் தொடங்கிய பின்னர் பல நிலைகளிலும் இலக்குவன் உள்ளிட்டோரைக் காப்பதற்காக அனுமன் செய்த பலப்பல உதவிகள் நடந்த நாள்களா; (மருத்துமலை கொண்டு வந்தது உட்பட) பரதனைக் காப்பதற்காக முன்னதாகவே போய்த் தீயை அணைத்த நாளா இப்படியே அனுமன் வரலாற்றில் பல 'அன்று'கள் வருகின்றன. அதனால் இந்தச் சொல் ஒரே ஒரு நாளைமட்டும் குறிப்பதாகக் கொள்ளாமல் அன்றிலிருந்து செய்த பேருதவிக்கு எனப் பொருள் கொண்டால் மிகவும் இசைவாக இருக்கும்.

தமிழ் இலக்கணத்தில் வேற்றுமைத் தொகை என ஒன்றுண்டு.

பாடல்களில் சில சொற்கள் மறைந்து வரும். பொருள் கொள்ளும் போது அவற்றை விரித்துக் கூட்டிக் கொள்ள வேண்டும். "அன்று செய்த" என்னும் இரண்டு சொற்களுக்கு இடையே 'இல் இருந்து' என்ற இரண்டு சொற்களைச் சேர்த்தால் அன்றிலிருந்து செய்த எனத் தெளிவு கிடைக்கும். முதன் முதலாக அனுமனைக் கண்ட நாள்தொடங்கித் திருமுடி சூடிய நாள் வரை அனுமன் வரும் இடங்களுக்கும் காலத்துக்கும் இந்த "அன்று" பொருந்துகிறது. பிராட்டியின் வரமாகிய திருவருளைப் பெற்றவன் அல்லவா?

மண்ணும் விண்ணும் அழிந்தாலும் அழியாத பேறு பெற்றவனுக்கு - காலம் கடந்தும் இராமனின் திருப்பெயரை உரக்க ஒலித்தும் உள்ளே தியானித்தும் உருகும் கடைசிப் பக்தன் இருக்கும் வரையிலும், அதற்குப் பின்னும் அனுமன் இருப்பான். ஏனெனில், அனுமன் ஒரு வானரம் அல்ல. அந்த உருவில் வந்த ஒரு ஞானி, பக்தன். அறிவு ஆராய்ச்சியில் ஈடுபடுவது, எதையும் நம்பாதது; பக்தியோ எளிமையானது, எதையும் நம்புவது. இரண்டையும் இணைத்துக் கொண்ட தெய்வமேன்மையின் வடிவம் தான் அனுமன். இது மெய்தான் என்பது இதுவரை கண்டு வந்த வரலாற்றிலிருந்து தெளிவாகும்.

இந்த நூலைத் தொடங்கிய போது 'யார்' இந்த அனுமன்? என்று ஒரு கேள்வியை எழுப்பிக் கொண்டு, சாம்பவான் கூறிய கருத்துக்களை முதலில் வைத்தோம். பதினொரு பாடல்களில் அனுமனின் தன்வரலாறு செய்திகள் புதைந்து கிடக்கின்றன என்று சொன்னோம். அவற்றை எல்லாம் சுருக்கிப் பத்துப் பண்புகளில் அனுமனின் ஆளுமையைக் குறித்தோம். ஏறக்குறைய 250 பக்கங்களைத் தாண்டி, இப்போது வரலாறு நிறைவுக்கு வரும்போது முதலில் சொன்ன அவையெல்லாம் உண்மைதாம் என்று படிப்போருக்குத் தானே புலப்படும் வகையில் கம்பர் காப்பியத்தை அமைத்திருப்பது கவிதைக் கலையின் மணிமுடி எனல் வேண்டும். மீண்டும் ஒருமுறை அவற்றைப் படித்து உய்தி பெறுவோம்.

காலம் கடந்தும் வாழ்பவன்; ஞானநூல்களைக் கற்றுத் தெளிந்தவன்; அவற்றின் நுட்பங்களை எளிதாகவும் விநயமாகவும் சொல்பவன்; தனக்கு வீரத்தாலும் பிறரை உவமை சொல்ல முடியாதவன்; சீர்தூக்கி, பின்னால் வருவனவற்றையும் ஆராய்ந்து பேசவும் செயல்படவும் தெரிந்தவன்; தூயவன்; ஒழுக்கத்தின்

உறைவிடம்; வாய்மையின் வடிவமாக இருந்தவன்; புண்ணியம் ஒன்றே நிலைக்கும் என்று உறுதியாக நம்பியவன்; ஒரு சான்றோன்; அவனைப் பார்த்து அதுபோல வாழவேண்டும் என்ற சிந்தனையைப் பிறருக்கு ஊட்டுபவன்; இராமபிரான் மீது அன்பும் பக்தியும் கொண்டவர்களில் அனுமனின் மேலானவர் யாரும் இல்லை. 'உண்ணும் உணவும் தின்னும் வெற்றிலையும் பருகும் நீரும்' இராமனே என்ற உணர்வு உடையவன்.

இவையெல்லாம் அரிதினும் அரிதாக ஒருவன் பெற்றிருக்கக் கூடிய மேன்மைப் பண்புகள். இத்தனை இருந்தும் அனுமன் பெற்றிருந்த அடக்கமே வியக்க வைக்கிறது. 'வா வந்து என்னைத் தழுவிக் கொள்' என்று இராமன் கூப்பிட்டபோதும், நாணித் தொழுதான் என்ற குறிப்பில் பெருக்கத்து வேண்டும் பணிதல் என்ற குறளின் முழுமையையும் உணரமுடிகிறது.

இப்படி எழுதிக் கொண்டே போகலாம். அவைஎல்லாம் நாம் ஏற்றிச் சொல்வன ஆகிவிடும். கம்பர் காட்டிய அனுமன் என்ற அளவில் நிற்போம். பின்னாளில் புனையப்பட்டும் வந்து ஏறியுமாக இருக்கின்ற ஆஞ்சநேயன் பற்றிப் பலப்பல கட்டுக்கதைகளைப் படித்து மனம் திரியக் கூடாது. தொண்டு நெறியில் நிற்பவர்களுக்குக் கவனச் சிதைவும் வேண்டாம். 'எந்தை போற்றி இராமா போற்றி' என்று அனுமன் வழியில் நின்று சொல்வதும் வாழ்வதுமே உண்மை வாழ்வும் ஆகும். அன்பர்கள் சிந்திக்கட்டும்.

"வாழ்க சீர் அடியார் எல்லாம்"



மும்மையாம் உலகம் தந்த முதல்வற்கு முதல்வன் தூதாய்ச்
செம்மையால் உயிர் தந்தாய்க்குச் செயல் என்னால் எளியதுண்டே
அம்மையாய் அப்பனாய அத்தனே அருளின் வாழ்வே
இம்மையே மறுமை தானும் நல்கினை இசையோடு என்றாள்.

- சீதை அனுமனிடம் கூறியது

இருகூர் கிருஷ்ணன் சுப்பிரமணியன் (ஐ.கே.எஸ்.) 10.06.1940இல் கோவையருகில் பிறந்தார். உள்ளூர்ப் பள்ளியில் படித்த பின்னர், கோவை அரசு கலைக் கல்லூரியில் இளநிலை அறிவியல் (பி.எஸ்ஸி-தாவரவியல்) 1962, கோவை பெரியநாயக்கன்பாளையம் ஸ்ரீ இராமகிருஷ்ணா வித்யாலயம் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் இளநிலைக் கற்பிப்போர் (பி.டி.) 1964 பட்டங்கள் பெற்றார். 1964-67 முடிய மூன்றாண்டுகள் சென்னையில் தமிழ்க்கலைக் களஞ்சியத்தில் துணைப்பதிப்பாசிரியராகவும், 1967-72 முடிய ஐந்தாண்டுகள் வதம்பச்சேரி மேல்நிலைப்பள்ளியில் அறிவியல் ஆசிரியராகவும் பணிபுரிந்தார். 1971இல் தமிழில் முதுகலைப் பட்டம் (எம்.ஏ.) பெற்று 1972 முதல் 1998 முடிய அரசுக் கலைக் கல்லூரிகளில் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றிக் கோவை அரசுக் கலைக் கல்லூரியில் இணைப் பேராசிரியராக ஓய்வு பெற்றார். எட்டு ஆண்டுகள் கோவை கற்பகம் கலை அறிவியல் கல்லூரியில் பன்னிரு திருமுறை ஆய்வுமையப் பொறுப்பாளராகச் செயல்பட்டார்.

வள்ளலார் ஒரு மறுமலர்ச்சியாளர் என்னும் தலைப்பில் செய்த ஆய்வுக்காகச் சென்னைப் பல்கலைக்கழகம் 1985 இல் முனைவர் பட்டம் நல்கியது. பின்னால் இந்த ஆய்வேடு “நீர்மேல் மலர்ந்த நெருப்பு” என்னும் பெயரில் நூலாக வெளிவந்துள்ளது. இராமலிங்கரையும் இராமகிருஷ்ணரையும் ஒப்பிட்டு மேலாய்வு செய்து "The Sun and the Moon" என்னும் ஆங்கில நூலை எழுதினார். பல்கலைக்கழக மானியக் குழுவின் திட்டத்தில் உருவான இந்நூல் பல அறிஞர்களின் பாராட்டுப் பெற்றது. திருமந்திரத்தில் 108 பாடல்களைத் தேர்ந்தெடுத்து எல்லாருக்கும் புரியும் வண்ணம் எளிய உரை எழுதி “உள்ளம் பெருங்கோயில்” என்ற ஒரு நூலை வெளியிட்டார். படிப்போரை ஈர்க்கும் வண்ணம் பரவலாக அந்த நூல் சென்றடைந்தது. இவை தவிர “சிவநெறியே சன்மார்க்கம்”, “திருத்துழாய் மாலை”, “கருடாழ்வார் துதி“, “திருவாசகம் ஓர் அறிமுகம்“, “சேரமான் பெருமாள்”, “விராடன் துதி”, “நம்மைப் பேணும் அம்மை” “அந்தி விளக்கு” என்ற நூல்களும் இவருடைய படைப்புத் திறனை வெளிப்படுத்தின.

2002 இல் இந்நூலாசிரியரால் தொடங்கப்பட்ட “ஆதிரை பதிப்பகம்” தரமான நூல்களை வெளியிட்டுத் தமிழ்ச் சமயத்துக்கும் தமிழுக்கும் தன்னால் இயன்றவற்றைச் செய்து வருகிறது. இந்தத் தமிழ்ப் பணியில் சில அன்பர்களும் தங்களை இணைத்துக் கொள்வது பதிப்பகத்தின் செயல்பாட்டுக்குச் சான்றாகும்.


**ஆதிரை பதிப்பகம்**

இராமநாதபுரம், கோவை - 641045.